# நாஞ்சில் நாடன் நாவல்கள் – மதிப்பீடு

பெரியார் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக
அளிக்கப் பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்
**ந.கண்ணகி, எம்.ஏ., பி.எட்., எம்.ஃபில்.,**
(Ref.No: PU/COE/RD4/Ph.D/1779/2011/02.08.2011)
(பகுதிநேர ஆய்வாளர்)

நெறியாளர்
முனைவர் **அ. குபேந்திரன்,** எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி.,
உதவிப்பேராசிரியர்
தமிழ்த்துறை
சேலம் சௌடேசுவரி கல்லூரி,
சேலம்–636 010.






**தமிழ்த்துறை**
**சேலம் சௌடேசுவரி கல்லூரி**
**சேலம் – 636 010**


**ஜூலை – 2018**

**முனைவர் அ. குபேந்திரன்,** **எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி.,**
உதவிப்பேராசிரியர்
தமிழ்த்துறை
சேலம் சௌடேசுவரி கல்லூரி
சேலம் – 10.

# நெறியாளர் சான்றிதழ்

2011 – 2018 ஆம் கல்வியாண்டில் முனைவர் பட்டத்திற்காக **'நாஞ்சில் நாடன் நாவல்கள் – மதிப்பீடு'** என்னும் தலைப்பில் எனது நெறிகாட்டுதலின் கீழ் ஆய்வு நிகழ்த்தி ந.கண்ணகி அவர்கள் அளித்துள்ள இந்த ஆய்வேடு ஆய்வாளரால் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இது வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் வழங்கப்படவில்லை என்றும் சான்றளிக்கப்படுகிறது.

இடம் : சேலம் – 10 நெறியாளர்

நாள் : (முனைவர் அ. குபேந்திரன்)

தமிழ்த்துறைத் தலைவர் முதல்வர்

**ந.கண்ணகி, எம்.ஏ., பி.எட்., எம்.ஃபில்.,**
(Ref.No: PU/COE/RD4/Ph.D/1779/2011/02.08.2011)
முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதி நேரம்)
தமிழ்த்துறை
சேலம் சௌடேஸ்வரி கல்லூரி
சேலம் – 10.

# ஆய்வாளர் உறுதிமொழி

2011 – 2018 ஆம் கல்வியாண்டில் முனைவர் பட்டப் பேற்றிற்காக **'நாஞ்சில் நாடன் நாவல்கள் – மதிப்பீடு'** என்னும் ஆய்வு முனைவர் அ.குபேந்திரன் அவர்களின் நெறிகாட்டுதலின் கீழ் என்னால் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இது வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் வழங்கப்படவில்லை என்றும் உறுதி கூறுகிறேன்.

இடம் : சேலம் – 10 ஆய்வாளர்

நாள் : (ந. கண்ணகி)

(முனைவர் அ. குபேந்திரன்)

ஆய்வு நெறியாளர்

# நன்றியுரை

**‘நாஞ்சில் நாடன் நாவல்கள் – மதிப்பீடு’** என்னும் தலைப்பில் ஆய்வு செய்ய அனுமதி அளித்த பெரியார் பல்கலைக்கழகத்திற்கும் சேலம் சௌடேஸ்வரி கல்லூரி முதல்வர் அவர்களுக்கும், நிர்வாகத்திற்கும், **திரு J.K.A குமாரராஜா** அவர்களுக்கும் கல்லூரி தாளாளர் அம்மா கண்ணம்மாள் அங்கப்பன் செட்டியார் அவர்களுக்கும் முதல்வர் முனைவர் வி. பாலாஜி அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வைச் சிறப்பாக நிகழ்த்துவதற்கு ஆலோசனை வழங்கி வழிகாட்டி வந்த அன்பிற்குரிய நெறியாளர் தமிழ்த்துறைத் உதவிப்பேராசிரியர் **முனைவர் அ.குபேந்திரன் எம்.ஏ., எம்ஃபில்., பி.எச்.டி.,** அவர்களுக்கு உள்ளங்கனிந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

நான் முனைவர்பட்ட ஆய்வை செய்வதற்கு அனுமதிகேட்டபோது என் **பள்ளி தலைமையாசிரியர்,** சேலம் **முதன்மை கல்வி அலுவலர்** அவர்களுக்கு பரிந்துரை செய்தார். அதன் பொருட்டு **தமிழ்நாடு பள்ளிக்கல்வி இணை இயக்குநர்** (பணியாளர் தொகுதி) சென்னை–6 அனுமதி வழங்கினார். அனைவருக்கும் நன்றி கூறுகிறேன்.

ஆராய்ச்சியின் போது பல நிலைகளில் ஆலோசனைகளைக் கூறி உதவிய சேலம் சௌடேஸ்வா கல்லூரி தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் பி.குருசந்தர் பி.எச்.டி.** அவர்களுக்கும், **பேரா.டி.கண்ணன், முனைவர் ந.கலைச்செல்வன்** அவர்களுக்கும் என் இதயம் கலந்த நன்றியைத் தெரிவிப்பதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

என் ஆய்விற்கு நூல்கள் நல்கிய சேலம் சௌடேஸ்வரி கல்லூரி நூலகர், சென்னை கன்னிமாரா நூலகம், உலகத்தமிழாராய்ச்சி நிறுவன நூலகம், பெரியார் பல்கலைக்கழக நூலகம் ஆகியவற்றின் நூலகர்களுக்கு நன்றி.

இவ்வாய்வு படிப்பை நிறைவு செய்ய ஊக்கப்படுத்திய என் கணவர் **திரு. தி.இராசு, பி.இ.,** மேனாள் துணை தலைமை பொறியாளர், நெடுஞ்சாலை துறை, நபார்டு மற்றும் கிராமச் சாலைகள் அலகு, சென்னை–25, என் அன்புச் செல்வங்கள் **இரா.கோகிலபிரியதர்ஷினி, எம்.இ.,** EKR **ஹரிஅக்ஷயா பி.இ., KR.கார்த்திக் ராம் நாராயணன்,** தந்தை தெய்வத்திரு **வெ.நஞ்சன், ந.சீரங்காயி,** தம்பிகள் **என்.பழனிசாமி, என்.சிவக்குமார்,** சகோதரிகள் **ந.தங்கப்பொன்னு, ந.ஜெயலட்சுமி** நன்றி.

இவ்வாய்வு சிறப்புற தட்டச்சு செய்த நிறுவனத்திற்கும் பல்லாற்றானும் துணைநின்ற நல்உள்ளங்களுக்கு நெஞ்சார்ந்த நன்றி.

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| மேலது | – | மேல் குறித்த நூல் |
| வ.எ. | – | வரிசை எண் |
| ஆசிரியர் | – | நாஞ்சில் நாடன் |
| நூ.ஆ. | – | நூலாசிரியர் |
| புதினம். | – | என்ற 'நாவல்' என ஆய்வில் பயன்படுத்தப்பட்டுள்ளது. |

# பொருளடக்கம்

# முன்னுரை

இலக்கியங்கள் காலத்தின் கண்ணாடியாகும். தமிழினத்தின் தொன்மையையும் அவர்களின் கலாச்சார, பண்பாட்டு வாழ்வியல் நெறிமுறைகளையும் அறிந்து கொள்வதற்கு பெரிதும் துணை செய்வன இலக்கியங்களே ஆகும். அத்தகைய உயிர்ப்பும், துடிப்பும் உள்ள வரலாற்றினை எடுத்தியம்பும் தமிழிலக்கியங்கள் பல்வேறு வகையின ஆகும். அவ்வக்கால வாழ்வியலுக்குத் தக்கவாறு எழுந்த இலக்கியங்கள் கலைத்திறம் நிறைந்ததாகவும் காலம் கடந்து நிற்பதுமாகவும் இருக்கின்றன.

காதல், வீரம், அறம், காதை, பக்தி என நீண்ட அந்த வரலாற்றின் தொடர்ச்சியாக 'சொல் புதிது பொருள் புதிது' என புத்திலக்கிய வகைமைகள் எழத் தொடங்கின. மேலை நாட்டினரின் கொடையாகத் திகழக் கூடிய இந்தப் புதிய வடிவங்கள் தமிழிலக்கியச் சூழலில் புத்தொளியோடு ஒளிரத் தொடங்கின. இந்த வகைமைகளுள் புதின இலக்கியம் தனிச்சிறப்போடு மக்கள் மனதில் இடம் பிடித்தது. மாயூரம் வேநாயகம் அவர்களால் அறிமுகப்படுத்தப்பட்டு நூறாண்டுகளைக் கடந்தும் இன்றைக்குத் தமிழ்ப் படைப்பாளர்களால் மிகுந்த ஈடுபாட்டுன் படைக்கப்படுகின்ற இலக்கிய வடிவமாக இந்தப் புதின வகைமைத் திகழ்கின்றது. தற்கால புதின எழுத்தாளர்களில் நாஞ்சில் நாடன் முத்திரைப் பதிக்கும் எழுத்தாளராகத் திகழ்கிறார்.

**ஆய்வுத் தலைப்பு**

**'நாஞ்சில் நாடன் நாவல்கள் – மதிப்பீடு'** என்னும் பொருண்மையில் ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

**ஆய்வு நோக்கம்**

மேலை நாட்டில் தோன்றிய இலக்கிய வகையான புதினம் தமிழகத்தில் மாபெரும் வளர்ச்சி பெற்றுத் திகழ்கின்றது. தனித்த நூல்களாகவும் இதழ் வழித் தொடர்களாகவும் பல்வேறு படைப்பாளர்களால் புதினங்கள் படைக்கப் பெற்றுப் புகழ் பெற்று விளங்குகின்றது. அத்தகைய புதின எழுத்தாளர்களில் நாஞ்சில் நாடன் புதினங்கள் படைப்பதில் புதிய போக்கும் நோக்கும் கொண்டவராகத் திகழ்கின்றார்.

எனவே அவரின் கதைக்களமாகவும் மாந்தர் புனைவும் கதை சொல்லும் உத்தியையும் ஆராய்வதே இந்த ஆய்வின் நோக்கமாக உள்ளது.

**ஆய்வு எல்லை**

நாஞ்சில்நாடன் புதினம், சிறுகதை, கட்டுரை என்று பல தளங்களில் இயங்கி வந்தாலும் அவரின் புதினங்கள் (நாவல்) மட்டுமே ஆய்வின் எல்லையாக அமைகின்றன.

**ஆய்வின் கருதுகோள்**

தமிழ்ப் புதின உலகில் எண்ணற்ற எழுத்தாளர்கள் உள்ளனர். புதினங்கள் எழுதத் தொடங்கிய காலம் முதல் இன்றைய காலம் வரையிலும் கருப்பொருளிலும் கதை சொல்லும் முறையிலும் புதிய புதிய உத்திகளைக் கையாண்ட புகழ் பெற்ற புதின ஆசிரியர்கள் உள்ளனர். அவர்களுள் நாஞ்சில் நாடன் புதினங்கள் மனித மனங்களின் உணர்வுகளைக் கிளர்ந்தெழச் செய்யும் வலிமை மிக்கவை. மக்கள் சமூகத்தின் பல்வேறு உணர்வுகளை மகிழ்ச்சி, சோகம், துன்பம், சமூகச்சிக்கல், தனிமனித வாழ்வியல் சிக்கல்கள் போன்ற நுண்ணிய உணர்வுகளைத் தம் கதைகளில் இழையோட விட்டுள்ளார். கதையானது நாவலுக்குரிய கட்டமைப்புடன் எழுதப்பட்டிருந்தாலும் அதன் ஒட்டுமொத்தச் செய்தியும் மனித சமூகத்திற்கு பயன்படத்தக்க வகையிலேயே கதைச் சொல்லப்பட்டிருக்கும். கதைச் சொல்வதில் புதிய கோணமும் எளிய நடையும் கொண்ட இவரின் எழுத்துக்கள் ஆழமும் பொருளும் நிறைந்த கருத்துக் கருவூலங்களாகத் திகழ்கின்றன. மனிதகுலம் பின்பற்ற வேண்டிய அறநெறிச் சாரங்களால் தொகுக்கப் பெற்ற எழுத்துக் கோலங்களாக இவரின் நாவல்கள் திகழ்கின்றன. எனவே அவரின் படைப்புகளில் வெளிப்படும் மனித சமூகம் பற்றிய மதிப்பீட்டை ஆய்வதே ஆய்வின் கருதுகோளாக அமைகின்றது. நாஞ்சில் நாடன், கதைக் கரு, கதையமைப்பு, மொழிநடை என்று தனித்துவத்துடன் திகழும் எழுத்தாளராகத் திகழ்கின்றார்.

**ஆய்வுக்குரிய சான்றுகள்**

ஆய்வுக்குரிய சான்றாதாரங்கள் முதன்மைச் சான்றுகள், துணைமைச் சான்றுகள் எனஇரண்டு நிலையாகும்.

**முதன்மைச் சான்றுகள்**

ஆய்வு எல்லை என்னும் தலைப்பில் குறிப்பிடப்பட்டுள்ள ஆசிரியரின் நூல்கள் மட்டுமே முதன்மைச் சான்றுகளாக கொள்ளப்பெறுகின்றன.

1. தலைகீழ் விகிதங்கள்
2. மாமிசப் படைப்பு
3. மிதவை
4. சதுரங்கக் குதிரை
5. என்பிலதனை வெயில் காயும்
6. எட்டுத்திக்கும் மதயானை

**துணைமைச் சான்றுகள்**

புதினங்கள் தொடர்பான ஆய்வு நூல்களும், ஆய்வேடுகளும் நாஞ்சில் நாடன் நூல்கள் குறித்த விமர்சன நூல்களும், பிற துறைச் சார்ந்த நூல்களும் நாஞ்சில் நாடனின் படைப்பாளுமை, சமகாலப் படைப்பாளர்களின் சிந்தனைகள், சமூக வாழ்வியல் பற்றி நூல்கள், அகராதிகள், இலக்கியச் சிற்றிதழ்கள் முதலானவை துணைமைச் சான்றுகளாக கொள்ளப் பெறுகின்றன.

**ஆய்வின் முன்னோடிகள்**

தமிழில் படைக்கப்பட்ட புனைகதை வடிவங்களில் புதின வடிவம் தான் ஆய்வுக் களத்தில் பெரிதும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப் பெறுகின்றன. நாஞ்சில் நாடனின் படைப்புகள் பலவும் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டிருந்தாலும், ஒரு சில புதினங்கள் ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்டாலும், அவரின் ஆறு புதினங்களும் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டு நாஞ்சில் நாடன் நாவல்கள் – மதிப்பீடு என்னும் தலைப்பில் எழுதப்பெறும் முதல் ஆய்வாக இதனைக் கொள்ளலாம்.

புதினம் தொடர்பான ஆய்வு நூல்களும் ஆய்வேடுகளும் பல வெளிவந்துள்ளன. இவற்றின் ஆசிரியர்களே இவ்ஆய்வின் முன்னோடிகளாவர். அவர்களது படைப்புகள் கீழ் வருமாறு.

1. கி.வா. ஜெகநாதன், தமிழ் நாவல் தோற்றமும் வளர்ச்சியும் – 1972.
2. த.வே. வீராசாமி, தமிழ் நாவல் முன்னோட்டம், 1973.
3. தி. பாக்கியமுத்து, விடுதலைக்குப் பின் தமிழ் நாவல்கள் – 1976.
4. இரா. தண்டாயுதம், சமூக நாவல்கள் – 1975.
5. கா. சிவத்தம்பி, நாவலும் வாழ்க்கையும் – 1978.
6. க. கைலாசபதி, தமிழ் நாவல் இலக்கியம் – 1968.
7. கோ.வே. கீதா, தமிழ் நாவல்கள் ஓர் அறிமுகம் – 1979.
8. மா. இராமலிங்கம், நாவல் இலக்கியம் – 1972.

மேற்குறித்த ஆசிரியர்கள் இந்த ஆய்வின் முன்னோடிகள் ஆவர். இவர்களை அடியொற்றி நாஞ்சில்நாடன் நாவல்களின் பன்முகச் சிறப்பு ஆராயப்படுகின்றது.

**ஆய்வின் அணுகுமுறைகள்**

பன்முகப் பார்வையில் நாஞ்சில் நாடன் புதினங்கள் ஆய்விற்கு உட்படுத்தப்படுவதால் மதிப்பீட்டு முறை திறனாய்வு விளக்கமுறை திறனாய்வு பகுப்பு முறை திறனாய்வு பயன்படுத்தப்பட்டுள்ளன.

**ஆய்வேட்டின் அமைப்பு முறை**

இவ்ஆய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

முன்னுரை

இயல் 1 : கதை நுவல் திறன்

இயல் 2 : மாந்தர் புனைவு

இயல் 3 : நனவோடை உத்தி

இயல் 4 : நடைத்திறன்

இயல் 5 : வாழ்வியல் கூறுகள்

முடிவுரை

துணைநூற்பட்டியல்

பின்னிணைப்பு

**ஆய்வேட்டின் இயல் விளக்கம்**

**இயல் 1 – கதை நுவல் திறன்**

நாஞ்சில் நாடனின் கதை சொல்லும் திறனை ஆராயும் விதமாக இந்த இயல் அமைக்கப்பட்டுள்ளது. அதன் அடிப்படையில் கதை சொல்லும் முறை, கருப்பொருள், கதைப்பின்னல், நிகழ்விடங்கள், காலம், தொடக்கமும் முடிவும், உள்ளதை உள்ளவாறு கூறுதல், நிகழ்வுகளின் உண்மைத் தன்மை, காரண காரியங்களோடு விளக்குதல், நோக்குநிலை, எதார்த்த நிலை, நடப்பு நிகழ்வுகளைச் சித்தரித்தல், கருத்துக்களை வெளிப்படுத்தும் பாங்கு, சமூகப் பிரதிபலிப்பு, கற்பனை உத்தி ஆகிய உட்தலைப்புகளின் இந்த இயல் ஆராயப் பெறுகின்றது. நாவல் இலக்கியத்தில் நாஞ்சில்நாடனின் கதை உணர்த்தும் சிறப்பிடம் காதலைக் கூறுவதில் அவருக்கேற்ற நில சிறப்பிடம், அவரது கொள்கைகள் ஆராயப் பெற்றுள்ளன.

**இயல் 2 – மாந்தர் புனைவு**

நாஞ்சில் நாடனின் கதை மாந்தர் புனைவு திறனை அறியும் நோக்கில் இந்த இயல் அமைக்கப்பட்டுள்ளது. எனவே கதை மாந்தர், மாந்தர் வகைப்பாடு, தலைமை மாந்தர், துணைமை மாந்தர் சார்பு, பிற மாந்தர் மாந்தர் படைக்கும் முறை, மாந்தர் சிறப்பு, மாந்தர் அறிமுகம், கதை மாந்தர் பெறுமிடம், தலைமை மாந்தரின் பண்பு நலன்கள், மாந்தர் வளர்ச்சி, துணைமை மாந்தர், துணைமை மாந்தர் பண்பு நலன்கள் ஆகிய உட்தலைப்புகள் அமைக்கப்பெற்று இந்த இயல் ஆராயப் பெறுகின்றது. ஆறு நாவல்களிலும் இடம் பெற்றுள்ள தலைமை மாந்தர், துணைமை மாந்தர் மற்றும் பிற மாந்தர்களின் பெயர்களும் பட்டியலிடப்பட்டுள்ளன. நாவல்களில் இடம் பெற்றுள்ள மாந்தர்களின் பண்பு நலன்கள் ஆராயப்பெற்றுள்ளன.

**இயல் 3 – நனவோடை உத்தி**

நாஞ்சில் நாடனின் புதினங்களில் நனவோடை என்னும் உளவியல் சார்ந்த பதிவு குறித்து ஆராயும் விதமாக நனவோடை விளக்கம் – குறியீடு, படிமம், உருவம், வருணனைக் குறியீடு, நினைவு கற்பனை, காட்சி, சொல், மனக்கண் தோற்றம், கனவு, கனவின் இன்பம், உளவியல் தொடர்பு, தத்துவப் பார்வை ஆள் நினைவூட்டல் –

நிகழ்வு நனவோடை காலம் – பாத்திரப்படைப்பு – சுடலைப்பாண்டி – பெரியசாமி – சமூக இழிவு – சம்பவ நினைவு – உயிர்வள – ஞாபகத்தொடர். இவ்வியலில் நாஞ்சில் நாடன் ஆகச் சிறந்த படைப்பாளியாக உருமாற்றம் அடைவதற்கு அவருடைய நினைவாற்றலே காரணமாகும். படைப்பாளருக்கு எங்கோ, ஏதோ ஒரு இடத்தில் நிகழ்ந்த சமூக நிகழ்வுகள் தாக்கத்தை ஏற்படுத்தி மனதில் பதிந்து விடுகின்றது. அவர் அந்த சம்பவங்களை நினைவு கூர்ந்து தம் நாவல்களின் கதைமாந்தர்கள் வழியாக விவரிக்கும் பங்கு இவ்இயலில் ஆராயப் பெற்றுள்ளது.

**இயல் 4 – நடைத்திறன்**

புனைவிலக்கியம் புகழ்பெற்று விளங்குவதற்கு நடைத்திறன் முக்கியப் பங்காற்றுகின்றது. நாஞ்சில் நாட்டிற்கேயுரிய தனித்த மொழிநடை நாவல்களில் கையாளப்பட்டிருப்பது நாஞ்சில் நாட்டின் மொழிப்பாங்கை, அதன் உணர்வு வெளிப்பாட்டை உலகறியச் செய்யும் முயற்சியாகக் கொள்ளப்பெற்று நாஞ்சில் நாடனின் மொழிநடைத்திறன் இவ்இயலில் ஆராயப்பெறுகின்றது.

நாஞ்சில் நாடனின் நடைத்திறன் குறித்து ஆராயும் விதமாக இந்த இயல் அமைக்கப்பட்டுள்ளது. இதில் நடை, நடைவிளக்கம், நடை வகைகள், கிராமிய நடை, சூழலை விளக்கும் நடை, வட்டார வழக்கு, உணர்ச்சி நடை, இலக்கிய அழகு, இயற்கை வருணனை, நிகழ்ச்சி வருணனை, பழமொழி, உவமை நடை, உருவகம், வினா விடை, நடை அகமன வெளிப்பாடு, ஊர் வருணனை, கள வருணனை, இட வருணணை, கால்நடை வருணனை, பிறமொழி கலப்பு உணர்வு நடை, நகைச்சுவை, பயண நடை ஆகிய உட்தலைப்புகள் இந்த இயலில் ஆராயப் பெறுகின்றது.

**இயல் – 5 வாழ்வியல் கூறுகள்**

புதினங்களில் இடம் பெற்றுள்ள சமூக வாழ்வியல் கூறுகள் ஆராய்வதாக இந்த இயல் அமைக்கப்பட்டுள்ளது. சமூகம் என்பது மக்கள் கூடி வாழும் இடம், சமயச் சடங்குகள், கல்வி, மொழி பொருளாதார அமைப்பும் ஆகும். அந்த வகையில் சமூகம், சமூக வரையறை, கிராமியச் சூழல், கிராமத்து மக்களின் மனநிலை, கல்வி பெற்றுள்ள இளைய தலைமுறை, வேலையில்லாத் திண்டாட்டம், வேலை தேடி அலையும் அவலம்,

பொருளியல் சூழல், விவசாய நிலங்களை நம்பிய வாழ்க்கை, உணவுமுறை, திருவிழாக்கள், நாஞ்சில்நாடன் நாவல்களில் இடம் பெற்றுள்ள மக்களின் வாழ்வியல், வாழ்வியல் நிலை, நாஞ்சில் நாட்டு மக்களுக்கேயுரிய தனிச்சிறப்புகள் கலாச்சார, பண்பாட்டு விழுமியங்கள், அவற்றை அவர்கள் பேணி காக்கும் முறைமைகள் ஆகியவை இவ்இயலில் ஆராயப்பெற்று வன்மை – மென்மைகள் உரைக்கப்பட்டுள்ளன.

**முடிவுரை**

ஆய்வின் இறுதிப் பகுதியாக அமைந்துள்ள முடிவுரையில் ஐந்து இயல்களின் வாயிலாக அறியப்பட்டுள்ள ஆய்வின் முடிவுகளும் குறிப்பிடத்தக்க நிகழ்வுகளும் இந்த ஆய்வுத் தளத்தில் மேலாய்வு செய்வதற்குரிய சிந்தனைகளும் குறிப்பிடப்பெற்றுள்ளன. இறுதியாக ஆய்விற்குத் துணைப் புரிந்துள்ள நூல்கள், ஆய்வேடுகள், வார, மாத நாளிதழ்கள், ஆராய்ச்சிக் கட்டுரைகள் துணைநூற்பட்டியலாக இணைக்கப்பட்டுள்ளன.

**துணைநூற்பட்டியல்**

முடிவுரைக்கு அடுத்து அமைந்துள்ள துணைநூல் பட்டியல் என்னும் தலைப்பில் ஆய்விற்குப் பயன்பட்ட முதன்மை நூல்கள் மற்றும் துணைமைச் சான்றுகள் இடம் பெற்றுள்ளன. ஆய்வுக்குத் துணைபுரிந்த இலக்கிய நூல்கள், ஆராய்ச்சி நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள் துணைநூற்பட்டியலில் இடம்பெறுகின்றன.

**பின்னிணைப்பு**

நாஞ்சில் நாடனின் நிழற்படம், பெற்ற விருதுகள், படைப்புகள், நூல் விமர்சனங்கள், தன் விவரக்குறிப்புகள் ஆய்வாளரால் எழுதப்பட்ட ஆராய்ச்சிக் கட்டுரைகள் ஆகியவை இடம் பெற்றுள்ளன.

# இயல் ஒன்று

# கதை நுவல் திறன்

**நுவலுதல் விளக்கம்**

நுவலுதல் என்பது சொல்லுதல், விளம்புதல், சுவைபடக் கூறுதல் எனப் பொருள்படும். ஒன்றை மனிதர்கள் மனம் கொள்ளும்படி திறம்பட உரைப்பதாகும். கதை நுவலுதல் என்பது தன் மனதில் உதித்தக் காட்சியை, ஒரு நிகழ்வைத் திருப்பங்களோடு விளம்புதல் என்பதாகும். எல்லா மனிதருக்குள்ளும் ஒரு கதை இருக்கிறது. அந்தக் கதையை உணர்த்தும் திறனைப் பொறுத்தே அந்தக் கதையின் உயிர்ப்பும் வாழ்வும் இருக்கின்றன. சொல்லப்பட்ட எல்லாக் கதைகளும் நீண்ட ஆயுளோடு வாழ்ந்ததில்லை. கதையும் அது உணர்த்தும் நீதியும் மனிதகுலத்தின் எண்ணத்தைத் தேவையைப் பூர்த்தி செய்யும் அதன் பாங்குமே அந்தக் கதையின் இருப்பை உறுதி செய்கிறது.

தமிழ்ச் சமூகத்திடையே கதை கேட்டல் என்பது நீண்ட நெடுங்காலமாக நடைபெற்று வரும் ஒரு உயிர்ப்பான பயணமாகும். கேட்டலின் கூட்டம் அதிகமாக அதிகமாக கதைக் சொல்லிகளும் வளர்ந்து கொண்டே வந்தார்கள்.

> **“கரிசலில் எத்தனையோ கதை சொல்லிகள் உண்டு. கரிசல் வெளியில் ஆடுகளை மேயவிட்டு கருவேல மரத்தடியில் குந்தி அமர்ந்து கதை சொல்லுவார்கள். சாவடியில் கல்திருணையில் படுத்துக் கொண்டு கதை சொல்வார்கள். தூக்கம் வராத இருளில் விழித்துக் கிடந்து கதை சொல்வார்கள். எளிய சாமானிய மக்களுக்கும் கூடக் கதைகள் உள்ளன. ஒவ்வொரு வாழ்க்கையிலும் கதை உள்ளது. எல்லாமே கதை தான். வாழ்க்கை என்று எடுத்துச் சொல்லப்பட்டால் கதைதான்”[1]**

எனக் கூறுகிறார் ஜெயமோகன்.

தமிழகத்தின் கரிசல் மண்ணில் கதைச் சொல்லிகள் வாழ்ந்து வந்த வரலாற்றினை அறிய முடிகிறது. இவ்வாறு தமிழகத்தின் பல்வேறு பகுதியிலும் பல

தரப்பட்ட கதை சொல்லிகள் வாழ்ந்து கொண்டே இருந்தார்களா. தமிழகத்தின் பல பகுதியிலும் பல்வகையான மொழி நடையின் மூலம் தமிழ்மொழி புதிய அணிகலனை அணிந்து பொலிவுற்றுத் திகழ்ந்தது. நாஞ்சில் நாட்டின் மொழி நடையை தங்கள் புனைவிலக்கியங்கள் மூலம் அறிமுகப்படுத்தினார் நாஞ்சில் நாடன். அத்தகைய நாட்டின் நாஞ்சில் மொழி நடையின் மூலம் நாஞ்சில்நாடனின் கதை சொல்லும் முறையினை ஆராய்வதாக இந்த இயல் அமைகிறது.

நாஞ்சில் நாடன் கதையினை எதார்த்த நடையில் விளங்கியுள்ளார். கதைக்காக அவர் கற்பனையில் மூழ்காமல் தான் கண்ட, கேட்ட, உய்த்துணர்ந்த, வாழ்ந்த வாழ்க்கையினையே படைக்கின்றார். அந்தப் படைப்பு காண்பவர் மனதில் தன் வாழ்க்கையைத் திரும்பிப் பார்க்கும் ஒரு போக்கினை உருவாக்கி விடுகிறது. ஒரு கதாசிரியனுக்குரிய அடிப்படைத் தகுதிகளை இவ்வாறு விவரிக்கிறார் நாஞ்சில் நாடன்.

> **“எந்த நாவலாசிரியனுக்கும் வாழ்க்கையின் சம்பவங்கள் நாவல் எழுதுவதற்கான வசதிகளுடனும் வரிசைக் கிராமங்களிலும் நடப்பதில்லை. நாவல் எழுதுவதற்கான சூழ்நிலையை, சம்பவத்தை, பின்புலத்தை, கதாபாத்திரங்களைத் தேடி நடப்பவன் எந்தக் காலத்திலும் நல்ல நாவல் எழுத முடிந்ததில்லை. இரண்டு மாதங்கள் நாகாலாந்தில் போய்த் தங்கியிருந்து யாரும் நல்ல நாவலை அந்தப் பின்னணியில் படைத்து விட முடியாது. பயணக் கட்டுரை வேண்டுமானால் எழுதலாம். அப்படிச் செய்யப்பட்ட நாவல்கள் நல்ல நாவல்களாக நிலைத்ததில்லை. பிலோ இருதயநாத் போல அந்தப் பகுதியில் சில ஆண்டுகள் வாழ நேர்ந்தது. அந்த வாழ்க்கை அவனுள் படிந்து, அந்த வாழ்க்கை அவனைப் பாதித்து ஒரு உத்வேகம் கிளம்பினால் அது சாத்தியமாகலாம். அப்படித்தான் சாத்தியமாகி இருக்கிறது. எந்த நாவலுக்கும் செழிப்பான, ஆழமான அனுபவப் படிமானம் வேண்டும். கூர்மையாக பாரபட்சமற்ற பார்வை வேண்டும். கைவசமான மொழி வேண்டும். உத்தி, வடிவம் பற்றிய போதம்**

**வேண்டும். இவற்றையெல்லாம் சேர்த்து கலையாக்கும் வித்தை வேண்டும். இவை அடிப்படைத் தகுதிகள்''[2]**

என தன் எழுத்தைப் பதிவு செய்கிறார்.

நாவல் எழுதுவதற்கும், மக்களிடையே அவற்றினைக் கொண்டு செல்வதற்கும் ஆழ்ந்து அகன்ற அனுபவம் இருத்தல் வேண்டும் என்று புலனாகின்றது. இதன்படியே நாஞ்சில் நாடன் தன் ஒவ்வொரு கதைகளையும் படைத்திருக்கிறார்.

**கருப்பொருள்**

நீண்ட நெடிய கதையின் சுருக்கமே கருப்பொருள் எனப்படும். கதைக் கருவின் தன்மையிலேயே அந்தக் கதையின் நீட்சியும் சிறப்பும் அடங்கியிருக்கிறது. ''கங்கை, கதை முதலியவற்றின் மூலக் கருத்தை கரு என அகராதி சுட்டும்'', மேலும் கதைக்கரு இயற்கையாக அமைதல் வேண்டும். ஆசிரியர் பாடுபட்டு வலிந்து அமைப்பதாக இருத்தல் ஆகாது. நடக்கக் கூடியதே என்று நம்புகிற வகையில் இயல்பாக அமையும். கருவே கதைக்குக் கவர்ச்சி தருவதாகும்'' என்பது ஈண்டு எண்ணத்தக்கதாகும். எனவே கரு என்பது இயல்பாகவும் நம்பும் படியாகவும் இருத்தல் வேண்டும்.

**''நாவலுக்கான கரு இயல்பாகவும் நம்பகத்தன்மை உடையதாகவும் இருத்தல் அவசியம். இயல்பு என்றால் என்ன? சாதாரணமாக வாழ்க்கையில் உள்ளதை உள்ளபடி கூறுதல் என்பதாகும். இதனை வேறு விதமாகக் குறிப்பிட்டால் யதார்த்தம் என்று குறிப்பிடலாம். தனிமனித யதார்த்தமும் சமூக யதார்த்தமும் இதில் அடங்கும்''[3]**

என கருப்பொருள் பற்றி கருத்துரைக்கிறார் இரா.பாலசுப்பிரமணியன். மேலும் அவர் நாவலின் கருப்பொருள் தனித்துவப் பண்புகள் நிறைந்ததாகவும் இருத்தல் வேண்டும் எனக் குறிப்பிடுகிறார்.

**"மற்ற இலக்கிய வகைகளை விட நாவல் இலக்கியத்திற்குரிய தனித்தன்மைகளில் தலையாயது, "நாவலின் உலகப் பொதுவான தனித்துவப் பண்புகளாகும். அவையாவன**

**அ) அவ்விலக்கிய வடிவத்தின் அடிநாதமாக அலையும் யதார்த்தமும் (ரியலிசம்)**

**ஆ) அதன் தோற்றத்திற்கும் தொழில் பாட்டிற்கும் முக்கியமாக அமையும் தனிமனித தத்துவமுமாகும்"** [4]

என்று கூறுகிறார்.இத்தகைய சிறப்புகள் அடங்கிய கதைக் கருவினைத் தாங்கிய நாவலே கலையுலகில் நிலைத்து நிற்பதாக உள்ளது.

**"கருவிற்கான வாயில்கள் பல திறத்தன. எழுத்தாளரின் அனுபவ வாயில் முதன்மையாக அமையும். அனுபவம் சொந்த அனுபவமாகவும் இருக்கலாம். பார்க்கும் அல்லது கேட்கும் அனுபவமாகவும் அமையலாம். சொந்த அனுபவத்தில் குடும்பச் சூழலைச் சார்ந்த அனுபவமும் கருத்திற் கொள்ளப் பெறும். பார்க்கும் அல்லது கேட்கும் அனுபவங்கள் சமூகச் சூழலுடன் தொடர்பு பெறும் வாழ்க்கையை அகப்பார்வையுடனும் எழுதலாம். புறப்பார்வையுடனும் எழுதலாம். புறப்பார்வை சமூகவயமானது. அகப்பார்வையின் ஆன்மிகமும், தத்துவமும் இயைந்திருக்கும் அகப்பார்வையில் உளவியலுக்கும் தொடர்புண்டு. சமூகத்திலிருந்து கருவிற்கான வாயில்களைப் பெறுவது போல வரலாற்றிலிருந்தும் புராணங்களிலிருந்தும் பழங்கதைகளிலிருந்தும் கருக்களைப் பெறலாம். எழுத்தாளரின் ஆளுமையைப் பொறுத்து முற்குறிப்பிட்ட கருத்துக்களுடன் கொள்கை விளக்கங்களும் இலட்சியச் சார்புகளும் இணையலாம். ஆனால் எல்லாவற்றிற்கும் அடிப்படை உண்மைதான். உண்மையில் தரிசனத்தை உணர்ந்த எழுத்தாளர் எழுத்துகளில் வடித்துக் கொடுக்கும் போது நாவல் போன்ற இலக்கியங்கள் உருவாகின்றன.** [5]

எனவே வாழ்வினூடாக தாம் பெற்ற உண்மைத்தன்மை நிறைந்த அனுபவங்களைக் கொண்ட கருவினையே ஒரு படைப்பாளன் படைப்பாக்க முன் வர வேண்டும்.

**கதைப்பின்னணி**

ஒரு கதையின் கூறுகளில் அதன் பின்னணி முக்கிய இடம் பெறுகிறது.

> **“ஒரு பொருளின் அழகும் நிலையும் தெளிவுறத் துவங்க வேண்டுமானால் அதற்கேற்ற ஒரு பின்னணி தேவை. எடுத்துக் காட்டாக ஒன்று காண்போம். நாம் ‘நாடகம் பார்க்கிறோம். நடிகர் பல்வேறு விதமான ஒப்பனைக் கோலத்துடன் அரங்கில் தோன்றி நம்முன் பேசுகிறார். ஆடுகிறார். பாடுகிறார். நாமும் அவர்களை அரசர்களாகவும் அரசியாகவும் ஆடு மகளாகவும் புலவனாகவும் பித்தனாகவும் பாவித்துக் கொண்டு அவர்களுடைய நடிப்பைக் கண்டு களிக்கிறோம். அவர்களை அரசன் என்றே நம்புகிறோம். எதிரே நடப்பது மந்திராலோசனையே என்று உறுதியாக நினைக்கிறோம். இப்படியெல்லாம் நம்மை நம்ப வைப்பது எது? அவர்களது ஒப்பனையும் பேச்சும் மட்டுமா? அல்ல பின் எது? அவர்களுக்குப் பின்னே தொங்கவிடப்பட்டிருக்கும் வேலைப்பாடுகள் நிறைந்த வண்ணத் திரைச் சீலைகளும் அமைக்கப்பட்டிருக்கும் சிறு சிறு காட்சி ஜோடனைகளும் தான்”** [6]

எனவே ஒரு கதையின் நம்பகத் தன்மைக்கும் வெற்றிக்கும் கதைப் பின்னணி என்று இன்றியமையாததாகின்றது என்கிறார் மா.ராமலிங்கம்.

மேலும், நாவலில் படைப்பாளர்களைப் பற்றிய பார்வையாக

> **“டாக்டர் மு.வ.வின் நாவல்கள் பெரும்பாலும் சென்னை நகரத்தையே பின்னணியாகக் கொண்டவை. தி. ஜானகிராமனின் படைப்புக்கள் தஞ்சை மாவட்டத்தையும் ஆர். சண்முக சுந்தரத்தின் கதைகள் கொங்கு நாட்டையும் பின்னணியாகக் கொண்டவை. டாக்டர் மு.வ.வின் கதைகளை கொங்கு நாட்டுப் பின்னணியிலும் ஜானகிராமனின் கதைகளை நெல்லை**

**பின்னணியிலும் சொல்ல முடியுமா? சொல்ல முயன்றால் என்ன ஆகும் என்பதை எண்ணிப் பாருங்கள். எனவே ஒரு குறிப்பிட்ட மாந்தர்களின் கதையைச் சொல்லும் போது, அவர்கள் வாழும் அவர்களுக்கேயுரிய பின்னணியில் தான் சொல்ல முடியும். ஏனெனின் மனித வாழ்க்கை அந்த அளவுக்கு அவர்கள் வாழும் மண்ணிலேயே வேர் கொண்டிருக்கிறது. மண்ணின் மணமே நாவலின் பின்னணியாய் நின்று படிப்போரை ஈர்க்கிறது"[7]**

என்னும் கருத்து நோக்கத்தக்கது.

ஒரு குறிப்பிட்ட கதையை அதற்குத் தக்க பின்னணியில் தான் சொல்ல முடியும். அந்த வகையில் நாஞ்சில் நாடன் தமது கதைகளை நாஞ்சில் நாட்டின் பின்னணியிலேயே விளக்கியுள்ளார். தான் வாழ்ந்து, வளர்ந்து, உண்டு, உயிர்த்த வீரநாராயணமங்கலமே பெரும்பகுதி கதையினை வழி நடத்திச் செல்கிறது. நாவலில் இடம் (Place) மிக மிக முக்கியம். இடமாவது கதை நிகழும் களம். களமே யார், எவர், என்ன நடந்தது என்பதைப் புரிந்து கொள்ள உதவுவது.

**"நாவலாசிரியர்கள் தாம் வாழும் நாட்டையோ, அல்லது தனக்கு நன்கு தெரிந்த ஊரையோ தான் பின்னணியாகக் கொள்ள வேண்டும். தனக்குத் தெரிந்த இடத்தை விடுத்து முற்றிலும் புதிதாக வேற்றூரில் கதை நிகழ்வதாகக் காட்ட முயல்வது தவறு. அங்ஙனம் செய்தால் அப்படைப்பில் மெய்ம்மைத் தன்மை தோன்றாது. ஆனால் ஒரு குறிப்பிட்ட நகரத்தை மட்டுமே பின்னணியாகக் கொள்வதிலும் குறைபாடு ஏற்படுவதுண்டு"[8]**

என்னும் கருத்து எண்ணத்தக்கதாக உள்ளது.

**நிகழ்விடங்கள்**

கதை நிகழும் நிலவியற் பின்னணியை, பூகோளப் பின்னணியை நிகழ்விடம் எனக் கூறுகின்றோம்.

**“மலையும், குன்றும், கடலும், காடும், நதியும், புனலும், நாடும், நகரமும் அனைத்தும் இதனுள் அடங்கும். பழைய தமிழ்க் காவியங்களில் இவற்றைப் பற்றிய வருணனையைத் தொடக்கத்திலேயே கூறி விடுவார்கள். ஆரம்ப கால நாவல்களிலும் இந்தப் போக்கு ஓரளவுக்கு இருந்தது. இவ்வருணனை கதையோடு ஒட்டாமல் தன்னந்தனியாய் பிரிந்திருப்பது சிறப்பன்று. கதைப் போக்கோடு பிணைந்து, நிகழ்ச்சிகளையும் கதை மாந்தர்களையும் ஒளி பாய்ச்சி விளக்கும் வகையில் உள்ளடங்கி இழையோட வேண்டும்” [9]**

என்னும் கருத்து ஒரு கதைக்கு அதன் நிகழ்விடம் எத்துணை அருமை சேர்ப்பதாக உள்ளது என்பதை உணர்த்துகின்றது. நாவலின் இடப் பின்னணி ஐந்து காரணிகளோடு விளக்கப்படுவதாக குறிப்பிடுகிறார் மா. இராமலிங்கம்.

**“1) பாத்திரப் பண்பை உருவாக்குவது என்ற முறையில், 2) மனித வாழ்வையே நிர்ணயிப்பது என்ற வகையிலும், இடப்பின்னணியைக் கையாளப்படுவதனுடைய வாழ்வும் பண்பும் அவர்கள் வாழும் மண்ணிலேயே வேர் கொண்டுள்ளது என்று முன்னர் கூறப்பட்டது. குறிஞ்சி நிலத்தில் வாழும் வேடன் வேட்டையாடும் தொழிலை மேற்கொண்டு கொடியவனாக வாழ்வதற்கும் மருத நிலத்து உழவன் வேளாண்மை புரிந்து விருந்தோம்பும் பண்பினால் விளங்குவதற்கு காரணம் என்ன? அவர்கள் வாழும் இடமல்லவா? எனவே இடமே பண்பை உருவாக்குகிறது. இடமே வாழ்க்கை நெறியை நிர்ணயிக்கிறது என்பது உண்மையாகிறது. இவ்விரண்டும் அடிப்படையில் நாவலாசிரியர்கள் பின்னணியைத் திறம்படத் தீட்டிச் செல்வதுண்டு மேலும். 3) எடுத்துரைக்கும் கூறு என்ற வகை............ (as a narrative element) பின்னணி இடம் பெறும். நிகழ்ச்சிகளின் இயக்கம் காட்சி நிலையில் பொன்னெனப் புலனாகும் பொருட்டு இவ்வகைப் பின்னணி கையாளப்படும், 4) கதை நிகழும் காலத்தை எடுத்துக் காட்டும் நோக்கிலும் பின்னணி அமையும். இறுதியாக 5) கதைப் போக்கில்**

**இடையினில் ஏற்படுத்தும் திரை போலவும் (Place as back drop) பின்னணி கையாளப்படுவதுண்டு'' [10]**

எனவே கதையின் நம்பகத்தன்மைக்கும் உயிரோட்டத்திற்கும் பின்னணி என்பது முக்கியமானதாக விளங்குகின்றது. இதன் அடிப்படையில் நாஞ்சில் நாடன் தமது நாவல்களில் பின்னணியைத் தெளிவுற விவரித்துச் செல்கிறார்.'' என்பிலதனை வெயில் காயும் நாவலில் கதை நிகழும் இடமான சூரங் குளத்தை அதன் அளவை நீள அகல பரிமாணத்தைத் தெளிவுற விவரிக்கிறார்.

> **''வீட்டின் மேற்கே சூரங்குளத்தின் ஆரம்பப் பள்ளி, ஆரம்பப் பள்ளியோடு ஊரின் மேற்கெல்லையும் வடக்கு எல்லையும் முடிந்து ரோடு மாத்திரம் போகும் இறிச்குளத்துக்கு வலப்புறம் ஆறு. ஆற்றைத் தாண்டி வயல்வெளிகள் – வடக்குப் பத்து. பள்ளிக்கு மேற்கே ஒரு பர்லாங் தூரத்தில் பழையாற்றில் இருந்து கிளையாறு பால் கொள்ளும் சந்தி. சந்தியின் மேல் ரோட்டை இணைக்க ஒரு பாலம். கிளையாற்றுக்குத் தண்ணீர் பிரிக்க ஒரு சீப்பு. அதன் மேல் பாலக் கலுங்கு. பாலக் கலுங்கில் போய் உட்கார்ந்தான் சுடலையாண்டி'' [11]**

என்று கதைத் தலைவனின் செயல்பாட்டினை உணர்த்துவதோடு அந்த ஊரின் தன்மையை அழகாக ஆறு, வயல், சாலை எனக் கதையினை நுகர்வோர் மனதில் சித்திரமாய்ப் பதியும் அளவில் எழுத்தில் உரைக்கிறார். இனி கதையின் போக்கில் சூரங் குளம், இறச்சகுளம் வரும் போதெல்லாம் அந்த ஊரின் சுற்றுப்புறம் பன்முறைப் பார்த்ததைப் போன்று நினைவிற்கு வரும் வகையில் உள்ளது. மேலும் வேளாண் சூழலை மய்யமாகக் கொண்ட கதையான 'மாமிசப்படைப்பு' நாவலில், வயலும் வயல் சார்ந்த சூழலையும் அறுவடை முடிந்த வயல்களில் ஆநிரைகளின் கொண்டாட்டத்தையும் ஒரு கிராமத்து வயல் வரப்பினையும் கண்முன் நிறுத்துகிறார்.

> **''கோடை அறுவடை முடியும் காலம். பத்துக் காடெங்கும் மாடுகளை மேய்ச்சலுக்கு அவிழ்த்துப் பத்தியிருந்ததால் எங்கோ ஆநிரை கவர்தல் நடக்கும் காட்சியோ என்றொரு மயக்கம். வெள்ளையும் மயிலையும்**

**செவலையும் தனியாகவும் சுட்டிகளோடும் விதவிதமான கொம்புகளுடனும் நின்று, நடந்து, மேயும் காட்சி, வெயிலைச் சட்டை செய்யாமல் மேயும் எருமைக் கடாக்கள். வெயிலுக்கு தற்காலிக நிவாரணியாய் வாங்களிலும் வாய்க்கால்களிலும் தேங்கி நிற்கும் சேற்றில் புரண்டு, சந்தனம் குளிரக் குளிரப் பூசிப் பண்ணையார் நுகர்கிற இன்பத்தை நுகரும் எருமைகள்''** [12]

என்று கதையின் கிராமிய, விவசாயச் சூழலை அதன் பின்னணியை விளக்குவதாக உள்ளது.

**நிகழ்விடங்கள்**

நாஞ்சில் நாடன் புதினங்களில் கிராமியச் சூழலில் நகரத்துச் சூழலும் என இரண்டும் விரவியிருப்பதைக் காண முடிகிறது. அவர் வாழ்ந்து வளர்ந்த பார்த்துப் பழகிய இடங்களையே கதை நிகழும் இடமாகக் கையாண்டுள்ளார். நாஞ்சில் நாட்டின் கிராமப் புறங்கள் மட்டுமல்லாது, வட இந்தியாவின் நகர்ப்புறமும் கதை நிகழும் இடங்களாக உள்ளன.

'தலைகீழ் விகிதங்கள்' புதினத்தில் சுசீந்திரம் கதை நிகழும் முக்கிய இடமாக விளங்குகிறது. கதையின் தலைவன் சிவதாணு திருமணமாகி வீட்டோடு மாப்பிள்ளையாக வரும் ஊராக சுசீந்திரம் இருக்கிறது. சுசீந்திரத்தில் சொக்கலிங்கம் பிள்ளையின் வீடு கதையின் பெரும்பகுதி நடைபெறும் இடமாக உள்ளது.

**''சுசீந்திரத்தின் தெற்கு ரத வீதி, வீதியின் ஓரத்தில் கோயிலின் பல வகைப்படும். வாகனங்களும் பென்னம் பெரிய பாத்திர பண்டங்களும் வைத்துப் பூட்டப்படும் கோயில் மடம். தானுமாலயசாமி கோயிலின் சாமான்னெல்லாம் அங்கே நிறைந்து கால் மாடு தலைமாடாகக் கிடக்கும். மடத்தின் முகப்பில் நாலு தாயக்கட்டமும் எட்டு நாயும் புலியும் இரண்டு சீட்டுக் கச்சேரிகளும் ஒரே சமயத்தில் நடைபெற முடியும். அவ்வளவு நீள அகலமுள்ள முகப்புத் திண்ணை''** [13]

என கதை நிகழும் இடத்தினைத் தெளிவுற மனதில் பதியும் படியாக விவரித்துச் செல்கிறார்.

'மாமிசப் படைப்பு' புதினம் 'மாங்கோணம்' என்னும் நாஞ்சில் நாட்டில் உள்ள ஒரு கிராமத்தில் நடக்கிறது. "மாங்கோணம்" நாஞ்சில் நாட்டின் நடுப்பகுதியில் அமைந்த சிற்றூர், நாஞ்சில் நாடு வாய்ப்பானது.

> **"மேற்குப் பக்கம் மஞ்சள் பாறை மலை. வட மேற்கே கிடார ஊத்து மலை, முக்கூடல் மலை, கிழக்குத் தொடர்ச்சி மலையின் துண்டுகளான அசம்பு மலை, தாடக மலை, வடக்கே அது தொடர்ந்து மருந்து வாழ் மலை வரை நீளும். வடக்கு மலையின் உலக்கை அருவியில் மழைக் காலத்தில் 'சோ' வென்று வெள்ளம் கொட்டும். கோடை காலத்தில் நாசி அடைப்புக்காரனின் மூக்குப் போல ஒழுகும். எட்டு, பத்து மைல் தொலைவில் இருந்து பார்த்தால் நீளமான வெள்ளிக்கல் போல் அருவி தெரியும். ஆனால் மூன்று மழைக்கு குறைவில்லை. வடக்கு மலையில் மழை விழுந்தால் சில மணி நேரத்தில் இறுப்பாற்றில் செல்வர் புரளும்"** [14]

என 'மாமிசப் படைப்பு' புதினத்தின் நிகழ்வினை 'மாங்கோணம்' தெள்ளத் தெளிவாகப் பதிவாக்குகிறது.

**கதைப்பின்னல்**

கதையின் இனிமை அதிகரிக்க கதைப்பின்னல் அவசியமாகின்றது. கதைப் பின்னல் சிறந்த நாவல்களில் இழுப்பு விசை (Tension) அறியும் ஆர்வ நாட்டம் (curiosity) எதிர்ப்பார்ப்பு முறை (suspense), குறிப்பு முரண் (Irony) முதலியன அமைந்திருக்கும். இவையனைத்தும் கதைப்பின்னலை முன்னோக்கி இயக்கும் போது தான் நாவல் அழகு பெறுகிறது என்று கூறுகிறார் மா. இராமலிங்கம், அந்த வகையில் நாவலின் அழகிற்கும் சுவைக்கும் காரணமாக இருக்கின்ற கதைப்பின்னல் நாஞ்சில் நாடனின் புதினங்கள் எங்கும் விரவியிருப்பதைக் காண முடிகிறது.

'தலைகீழ் விகிதங்கள்' புதினத்தில் கதையின் தலைவனான சிவதாணு ஒரு பணக்காரர் குடும்பத்தின் பெண்ணைத் திருமணம் செய்வதன் மூலமாகப் படித்துப் பட்டம் பெற்று, நீண்ட நாள் வேலை கிடைக்காமல் அலையும் இந்த இழிநிலைக்கு விடிவு காண்பதோடு தன் குடும்பத்தின் வறுமையையும் துடைத்தெறியலாம் என

நம்புகின்றான். ஆனால் பெண்ணின் தகப்பனார் சொக்கலிங்கப்பிள்ளை வீட்டோட மாப்பிள்ளை என்ற பெயரில் ஒரு சம்பளமில்லா வேலைக்காரனைப் பிடித்துள்ளதாக மகிழ்ச்சியடைகிறார். இவ்வாறான முரண்பட்ட இரு கதை மாந்தர்களின் போக்கில் 'தலைகீழ் விகிதங்கள்' கதை பயணிக்கிறது. எனவே திருப்பங்கள் நிறைந்த கதைப் பின்னலோடு புதினம் திகழ்கிறது.

பணக்காரச் சம்பந்தம் கிடைத்ததும் சிவதாணுவின் தந்தை சிதம்பரம் பிள்ளையின் மகிழ்ச்சிக்கு அளவில்லை. தன் மனைவியிடம் அவர் ஆவலோடு வினவுகிறார்.

> **"இன்ன பாரு.... ஒண்ணும் முண்ணும் ஆகதுக்குள்ளேயே நீ தடி வெட்டிப் போடாதே. நானும் எல்லாம் விசாரிச்சுப் பார்த்துத்தான் சொல்லுகேன். சொக்கலிங்கம் பிள்ளைக்கு தேரூர் பக்கத்திலே ஆறு கோட்டை விதைப்பாடு இருக்கு... அக்கரையிலே பெரிய தென்னந்தோப்பு – வெட்டுக்கு ஆயிரங்காய்க்குக் குறைவில்லை. சுசீந்திரத்திலேயே பெரிய காப்பிக்கடை அவருக்குத்தான். மனுசன் இன்னும் சம்பாதிச்சுக்கிட்டு இருக்காரு.... ரெண்டே பொம்பிளைப் பிள்ளைங்க. இவன் வீட்டுக்கு மூத்த மருமகனாப் போறதுக்குக் குடுத்து வச்சிருக்கணும் தெரியுமா? அந்தப் பயலுக்கு ஒரு நல்ல காலம்னா நமக்கு நல்லது தானே. அவ்வோ நினைச்சா பணத்தைப் பார்க்காம இவனுக்கு ஒரு வேலையும் வாங்கிக் குடுத்திர முடியும்"[15]**

என்று தன் மனைவியிடம் கூறும் போது சிவதாணுவின் அம்மா செண்பகா

> **"அதெல்லாம் சரிதான். எம் பிள்ளைக்கு ஒரு வேலை மட்டும் பொசுக்குண்ணு கிடைச்சதுன்னா இதை விடப் பெரிய இடம் கூடத் தானா வரும்! ஆனா நம்ம வீட்டிலே அஞ்சாறு கண்ணுங் கயந்தலைக்க கூட இப்பிடியொரு பணக்கார வீட்டுப் பொண்ணு வந்து குடித்தனம் நடத்துமா"[16]**

என்று தன் பயத்தினை வெளிப்படுத்துகிறாள். அதற்கு சிதம்பரம் பிள்ளை,

**"எல்லாம் நடத்தும். நீ சும்மா அமத்திக்கிட்டுக் கிடந்தா போகும்... பொருந்தி வரட்டும் பார்ப்போம். அதுக்கு முன்னே நீ ஊரு பூரா தண்டோரா அடிச்சிராத... பொல்லாத முடிவானுக! அப்படி ஏதாவது நடக்கும்னா கூட அதைக் கலைக்கறதுக்குண்ணு கெட்டிச் சோத்தையும் கெட்டிக்கிட்டுப் புறப்பட்டிருவானுக"**[17]

என்று தன் மனைவியின் பயத்தினைப் போக்குகிறார். ஆனால் அதற்கு நேர்மாறானக் காட்சியினை எதிர்புறத்தில் கதைப் பின்னலாக அமைக்கிறார் நாஞ்சில் நாடன். கதை மாந்தர்களின் எண்ணங்கள் இயல்பாக ஈடேறுவதைத் தடுப்பதன் மூலம் கதையின் எதிர்விசைக் கூடி எதிர்பார்ப்பினை உருவாக்குகிறது. மாப்பிள்ளையின் தாய் தந்தையர் தன் உள்ளக் கிடக்கையை இவ்வாறு தெரிவிக்க, மணமகளின் தாய் தந்தையர் அதற்கு எதிர்புறமாக சிந்திக்கின்றனர். கதையின் தலைவியான பார்வதியின் தந்தை, மனைவி நீலங்பிள்ளையிடத்தில் சிவதாணுவைப் பற்றி கேட்க, நானும் விசாரிக்காமல் நீங்கள் மாப்பிள்ளை பார்க்க மாட்டீர்கள்.

**"அதெல்லாம் உங்க இஷ்டம். ஆனால், ஒண்ணுமாத்திரம் முன் கூட்டியே சொல்லிப் போடுவேன்.. அந்தப் பட்டிக்காட்டிலே போய், அந்தச் சனப் பண்ணைக்குப் பொங்கிப் போட்டுக்கிட்டிருக்க நம்ம பிள்ளையை முடியாது. பையனை உங்களுக்குப் புடிச்சிருக்குண்ணா கலியாணத்தை முடிச்சிடுவோம்... ஆனா பையனை இங்கே கொண்டு வச்சிக்கிடுவோம்னு கறாலாச் சொல்லிப் போளிங்க... ஆமா"**[18]

என்று தன் எண்ணத்தை வெளிப்படுத்துகிறார். மேலும்,

**"ஆமா.... அந்தப் பையனுக்குக் கலியாண வயசிலே ஒரு தங்கச்சி இருக்காமே... அப்பா சொன்னா... மகனுக்குக் கலியாணம் கழிச்சு, மருமக உருப்படியைக் கழத்தில் போட்டு மகளைத் தள்ளி விட்டிரலாம்னு அந்த மனுசன்**

**சொப்பனங் காணப்போறாரு... அப்பா மெச்சுப் போட்டுக்கிட்ருந்தா அந்த நெனைப்பையெல்லாம் தூரக்கட்டி வச்சிரச் சொல்லுங்கோ! எம்**

**பொண்ணுக்கு உருப்படி ஒரு பொடி தொடப்பிடாது.... ஆமா... சொல்லில் போட்டேன்'' [19]**

என்று கனலோடு பேசுகிறார். இப்படி முரண்பட்ட மன ஒட்டங்களை உடைய கதை மாந்தர்கள் மூலம் அவிழ்க்க முடியாத பின்னலோடு கதை நிகழ்கிறது.

**காலம்**

புதின ஆசிரியரின் கருப்பொருள், கதைப்பின்னணி, இடப்பின்னணி, கதை மாந்தர் படைப்பு இவற்றின் ஊடாக கதையின் காலப்பின்னணியை ஆராய வேண்டியுள்ளது. நாஞ்சில் நாடன் சமகாலத்துச் சூழலில் எழும் பிரச்சினைகளையும் அதற்கானத் தீர்வுகளையும் தம் படைப்பின் மூலம் வெளிக் கொணர்ந்தவர். இவரின் கதைகள் நுண்ணிய பார்வையைக் கொண்டு உணரத்தக்க வகையில் அமைந்துள்ளன. கதைகளில் காலப்பின்னணி தொடர்ச்சியோடு சொல்லப்பட்டுள்ளன. 'மிதவை' புதினத்தில் படித்துப் பட்டம் பெற்று வேலையில்லாமல் அலையும் ஒரு இளைஞன் ஒரு நாள் பொழுதைக் கழிப்பதற்காகப் படும் பாட்டினை துயரோடு விவரிக்கிறார். ஒவ்வொரு நொடியும் ஒரு நாளாய் நீளும் அந்தத் துன்பம் சண்முகம் என்னும் இளைஞன் வாயிலாக விவரிக்கப்படுகிறது.

**"பகல்பொழுதில் அந்த ஊரில் பொழுது போக்க மூன்று மையங்களே உண்டு. ஒன்று திருஞானத்தின் சுக்குக்காப்பிக் கடை கையில் பத்து பைசா இருந்தால் ஒரு பருப்பு வடையும் தின்று சுக்குக்காப்பியும் குடித்த பின்பு ஒன்றரை இரண்டு மணி நேரம் உட்கார்ந்து இருக்கலாம். அப்படி ஹரிபிரியான வியாபாரம் இல்லையாதலால் அங்கே உட்கார்ந்து கிடப்பதைத் திருஞானம் பொருட்படுத்துவது கிடையாது....**

**திருஞானத்தின் கடையை விட்டால் சண்முகத்துக்கு அடுத்த இலக்கு தமிழர் நூல் நிலையம். அங்கு மாலை ஐந்து முதல் ஒன்பது வரை தான் குமுதம், விகடன், கதிர், ராணி எல்லாம் படிக்க வெளியே எடுத்துப் போடுவார்கள். பகல் பொழுதெல்லாம் தினமலர், தினத்தந்தி, தினமணி,**

**அமெரிக்கன் ரிப்போர்ட்டர், வஞ்சி நாடு, கன்னியாகுமரி, சோவியத் நாடு ஆகியவை கிடைக்கும்.**

**இந்த மூன்று இடங்களில் ஒன்றில்தான் உட்கார்ந்து, படுத்து, வம்பு பேசி, சண்முகத்துக்குப் பொழுதை ஓட்ட வேண்டும். வீட்டில் இருந்தால் ஒரே வெக்கை, வெளி வெக்கை போதாது என்று உள்வெக்கை"**[20]

என இளைஞர்கள் காலத்தைக் கழிக்கும் போக்கினை எடுத்துரைக்கிறார். ஒரு புதினத்தின் கதைப் போக்கில் காலத்தின் இருப்பு அவசியமாகின்றது. கதை திருமணத்தில் தொடங்கினால் அதன் கால வளர்ச்சியில் குழந்தை பிறக்க வேண்டும். குழந்தை பிறக்க வில்லையானால் அதன் காரண காரியங்கள் அலசி ஆராயப்பட வேண்டும். படிக்கச் சென்றிருந்தால் படிப்பு முடிந்திருக்க வேண்டும். வேலைக்கு அலைய வேண்டும் என கதையின் உயிரிழையாக காலம் உறைந்திருக்கும்.

நாஞ்சில் நாடனின் புதினங்கள் காலத்தின் அருமை கருதி எழுதப்பட்டப் புதினங்களாகவே இருக்கின்றன. 'சதுரங்கக் குதிரை' புதினத்தில் கதையின் தலைவன் நாராயணன் மும்பையில் வேலை பார்க்கிறான். சொந்த ஊர் நாகர்கோவில். அப்பா இறந்து விட்டதாக தந்தி வருகிறது. நாராயணன் தாதர் – சென்னை தொடர் வண்டியில் பயணமாகிறான். மும்பையிலிருந்து நாகர்கோவில் அருகிலுள்ள மாங்குண்டு கிராமத்திற்கு வருவதற்கு இரண்டு நாட்களுக்கு மேல் ஆகும் பயண நேரத்தினை கதையினூடாக துல்லியமாக விவரிக்கிறார்.

**"அறைக்குப் போய் பெட்டியைத் தூக்கிக் கொண்டு தாதர் ஸ்டேஷனுக்கு வரும் போது ஒன்றரை மணி. மாயக்கூத்தன் ஐந்நூறு ரூபாய் தந்தார். ஆறுமுகம் ரிசர்வேஷன் கிடைக்கவில்லை என்று சொல்லி, நாகர்கோவில் வரை கரண்ட் டிக்கெட் வாங்கி வைத்திருந்தான். தாமோதரன் ஒரு பாக்கெட் மேரி பிஸ்கட்டும் ஆறு பச்சை வாழைப்பழங்களும் வாங்கி வைத்திருந்தான்..**

**பிற்பகல் இரண்டரை மணிக்குப் புறப்படும் வண்டி மறு நாள் மாலை ஐந்தரைக்குச் சென்னை சென்ட்ரல் போகும். மாலை ஆறே முக்காலுக்கு**

**எழும்பூரில் இருந்து நெல்லை எக்ஸ்பிரஸ். காலை ஒன்று மணிக்குத் திருநெல்வேலி. அங்கிருந்து அவுட் ஏஜென்ஸி பஸ்களில் ஒன்றைப் பிடித்து நாகர்கோவில் இறங்கி, அங்கிருந்து டவுன் பஸ்ஸில் மாங்குண்டு போகப் பன்னிரண்டரை ஆகி விடும்'' [21]**

என மும்பையிலிருந்து மாங்குண்டு கிராமத்திற்கு வருவதற்கு இயல்பில் எத்தனை நாட்களாகும் என்பதனை உண்மையில் கணக்கிட்டு புனைவாக இல்லாமல் கால நேரங்களை உள்ளவாறு பதிவு செய்திருப்பது எக்காலத்திற்கும் பொருந்தக் கூடியதாக உள்ளது. எனவே ஒரு புதின படைப்பில் காலத்தின் அருமை இன்றியமையாததாகின்றது. புதினத்தில் கால வேகம் குறித்து இ.எம்.பாஸ்டர் கூறியதாக மா. இராமலிங்கம் கூறும் கருத்து இங்கு நோக்கத்தக்கது.

**''மனிதன் இரண்டு விதமான வாழ்க்கை வாழ்கிறான். ஒன்று காலத்தால் வாழும் வாழ்க்கை; மற்றொன்று உள்ளத்தால் வாழும் செயற்றகவு மிக்க மதிப்பு வாழ்க்கை (the life in time and the life by values) இதையே வேறு வார்த்தைகளில் சொன்னால் நாம் கடிகாரங்கள் ஒடிக் கொண்டிருப்பதைக் காண்கிறோம். ஒன்று காலத்தைத் திட்பமாக அளந்து காட்டும் மணிப் பொறி மற்றொன்று தனிப்போக்குடைய உணர்ச்சிப் பொறி. இதனை ஒரு உதாரணத்தால் காண்போம்.**

**அவன் அவளுக்காக அரைமணி நேரம் தான் காத்துக் கொண்டிருந்தான்; ஆனால் அது ஊழிக் காலமாய்த் தெரிந்தது.**

**இங்கு முப்பது நிமிடங்கள் என்பது தான் உண்மை நேரம். ஊழிக்காலம் என்பது பயன் மதிப்பு நேரம். நேரடியாக எடுத்துரைக்கும் உத்தி உண்மைக் காலத்தைச் சுருக்கிக் காட்டுகிறது. விவரிக்கப்பட்ட காட்சிகளோ பயன் மதிப்புக் காலத்தைக் காட்டுகிறது. எனவே நாவலாசிரியர் எழுதத் தொடங்கும் முன்பே உண்மைக் காலத்தைக் கதை அர்த்தம் பெறும் அளவுக்குக் கணித்துக் கொள்ள வேண்டும். அது மட்டுமின்றி, அவரது உணர்த்த விழையும் அர்த்தம், பயன் மதிப்புக் காலத்தோடு**

**இணக்கமுற்றுப் போகும் வகையிலும் அழுத்தம் கொடுத்தாக வேண்டும். இதற்கு அடிப்படை வாழ்வின் பயன் மதிப்பை நாவலாசிரியர் நன்கு உணர்ந்திருக்க வேண்டும் என்பதேயாகும்''**[22]

இந்த வகையில் புதின ஆசிரியர் கதையின் போக்கிற்கும் கதை அமைப்பிற்கும் தக்கவாறு காலம் கணிக்கப்பட்டிருக்க வேண்டும் என்று புலனாகின்றது.

**தனிமனிதக் கொள்கை**

கதை சொல்லும் முறைமையில் நாஞ்சில் நாடன் தனக்கெனத் தனித்த கொள்கையுடையவராகத் திகழ்கிறார். நடைமுறைக்கு ஒவ்வாத கருப்பொருளை அவர் கதைகளில் கையாளவில்லை. தான் வாழ்ந்த வாழ்க்கையையும் தன் முன்னோர் வாழ்க்கையையுமே அவர் படைப்பாக்க முன் வந்துள்ளார். வாழ்க்கையைக் கலையாகப் படைப்பதே தன் நோக்கம் என அவர் வரையறை செய்கிறார்.

**''முதலில் நாவல் எழுத ஆரம்பித்த போது நாவல் இலக்கியத்தின் உருவம், உள்ளடக்கம், உத்தி பற்றி எல்லாம் எனக்கு தீவிரமான முன் வரைவுகள் இருந்ததில்லை. சுந்தர ராமசாமியின் 'ஒரு புளியமரத்தின் கதை'யும் நீல பத்மனாபனின் 'தலைமுறையிலும் என்னை வெகுவாகக் கவர்ந்திருந்தன, பாதித்திருந்தன, தூண்டுதலாக இருந்தன.**

**இந்தப் பின்னணியில் 1976 இல் நாவல் எழுத அமர்ந்த போது, வாழும் இடமாக பம்பாய் இருந்த போதும், அந்த மாநகரின் நெரிசலில் சிக்குண்டு அலைக்கழிந்துக் கொண்டிருந்த போதும், கண் முன்னால் விரிந்து கிடந்தது. நான் 'மூக்குச் சிந்தத் தெரியாத' நாள் முதலாய் அறிந்திருந்த கிராமப் பகுதிகளும் அதன் அழகுகளும் ஆபாசங்களும் மேன்மையான வாழ்க்கைப் போக்குகளும் இருண்மையில் அமிழ்ந்திருந்த துன்பங்களும். எனது கிராமத்தை, உணர ஆரம்பித்திருந்த வாழ்க்கையை, சீரழிவுகளைச் சிறப்புகளைப் பற்றி எனக்குச் சொல்ல நிறைய இருந்தன. நாவல் என்று கதை சொல்வதல்ல என்று அறிவிருந்தது. நன்றாக உணர்ந்திருந்த**

**வாழ்க்கையைக் கலையாகப் படைக்க முயற்சி செய்து கொண்டிருக்கும் போது அந்த வாழ்க்கையின் சகல சாராம்சங்களையும் சொல்லிவிடுவது எனக்கு அவசியமாக இருந்தது”**[23]

என்று தன் படைப்பாக்கம் குறித்து கருத்துரைக்கிறார் நாஞ்சில் நாடன். மேலும்,

**“தமிழ் நாவல்கள் தமிழரின் சமூக வாழ்க்கையையும், சமய நலத்தையும், ஆசிரியர் முறையையும், பண்டைப் பெருமையினையும் விளக்கிக் காட்டுவனவாய் எழுதப்பட வேண்டும். இக்காலத்தில் சாமானிய மக்களிடையில் கல்வியறிவையும் உலகியல் ஞானத்தையும் பகுத்தறிவையும் விரைவில் பரவச் செய்வதற்கு நாவல்களே ஏற்ற எளிய கருவிகளை என்பதை யாரோ மறுப்பார்? ஆதலின் நாவலாசிரியர்களின் பொறுப்பு மிகவும் கவனிக்கத்தக்கதோர்”**[24]

என்ற கூற்றிற்கிணங்கவும் நாஞ்சில் நாடன் தம் கதைகளை முன் வைத்தார்.

**“எனக்குத் தெரிந்த வாழ்க்கையைப் பாசாங்குகள் அற்றுச் சொல்ல விரும்பிய எனக்கு பாசாங்குகள் அற்ற மொழி தேவையாக இருந்தது. சாதாரணமாக வாழ்க்கை அனுபவத்தை மொழியில் வசப்படுத்த முயலும் போது ஓர் இடைவெளி ஏற்பட்டுப் போகும். படைப்பாளியால் வெற்றி கொள்ள முடியாத சிக்கல் இது. இந்த இடைவெளியைக் கடந்து படைப்பாளியின் அனுபவத்தை மொழியினூடாக வாசகனுக்குச் சாத்தியமாக்கும் நிலை தான் படைப்பு. அனுபவத்துக்கும் வெளிபாட்டுக்கும் இடையிலான இடைவெளியைக் குறைத்துக் கொள்ள எனக்குத் தென்பட்ட வழி, படைப்பின் மொழியாகப் படைப்பு முன் வைக்கும் வாழ்வின் மொழியையே தேர்ந்தெடுத்துக் கொள்வது என்பது”**[25]

என்று வாழ்க்கையும் வாழ்வின் மொழியையுமே தம் புனைவின் கொள்கையாகக் கொண்டுள்ளார்.

**“தமிழ்நாட்டில் நன்னெறி போதிக்கும் உயர்ந்த தத்துவார்த்தத்தை விளக்குவதான நூல்கள், ஞானோதயம் பெற்ற மகான்களால் கோடானுகோடி இயற்றப்பட்டுள்ளவாயினும், இயற்கையை ஒட்டி பலவகைப்படும் மனிதர்களின் மனோ நிலைமையை நன்குணர்த்திக் கூறுவதாக ‘நாவல்’ என்னும் புதிய வழியை மனசரிந்து எழுதப்பட்ட புத்தகங்கள் மிகச் சிலவேயுள்ளன. அவற்றிலும் பொருட்சுவை, நடையழகு, இயற்கையனுபவம் இவை மூன்றும் சேர்ந்து காணப்படும் ‘நாவல்கள்’ பின்னும் குறைவுபடும். இவ்வகையான புத்தகங்கள் மற்றப் பாஷைகளில் விட ஆங்கிலத்தில் பெரும்பாலும் நாம் காணலாம். இயல்புக்கு விரோதமாய் அதிகநீதி மிகுந்து நின்ற கவிகள், கதாசிரியர்கள், அப்போதைக்கப் போது தங்கள் குற்றம் குறைவுகள் வெளிப்படையாயெடுத்துப் பேசிக் கண்டனம் செய்யப்படுகின்றமையால், உலக நீதி சற்றும் பிசகாமல், படிக்கப் படிக்க அதிக ஆச்சரியகரமான விஷயங்கள் புலப்படக் கூடிய வண்ணம் கதா ரூபமாய் வெளியிட்ட நூல்கள் அங்கு அநேகமிருக்கின்றன. கேவலம் கற்பனா சக்தியின் மேன்மையினால் புனையப்பட்டுக் கட்டுக் கதைகளான வெளிவரும் புத்தகங்கள், ஜனங்களுக்கு நல்லறிவை ஊட்டும் தெய்வீகப் பான்மையுள்ள அகில கிரந்தங்களிற் சேர்ந்தனவாய் இலங்குவதில்லை. இயற்கையின் விசேஷங்களையும், வாழ்நாளிலுள்ள உண்மையான அனுபவங்களையும் தமது சொல்வன்மையினால் கண்ணாடி கொண்டு காட்டுவது போல் எடுத்துரைக்க வல்லவரோ நூலறிஞரென்னும் சிறந்த பெயருக்குரியவரென அங்கு மதிக்கப்படுவர்”**[26]

என்ற கொள்கை அடிப்படையில் நாஞ்சில் நாடன் புதினங்கள் படைத்திருப்பதை அறிய முடிகிறது.

**எதார்த்தநிலை**

வாழ்க்கையை அதன் இயல்பு குன்றாமல் உண்மைக்கு நெருக்கமாய் எதார்த்தநிலையோடு புனைவது அவசியமாகும். அந்நிகழ்வு ஒரு புதினத்தை புனைவாக அணுகாமல் வாழ்க்கையின் பதிவாக அணுகும் மனநிறைவை உருவாக்கும்.

அந்த வகையில் நாஞ்சில் நாடன் தம் புதினங்களை எதார்த்த நிலையோடு படைத்துள்ளார். எதார்த்த நிலையின் தன்மைகளாகச் சொல்லும் சில குறிக்கோள்களை முன் வைக்கிறார்.

1. உண்மை உலகினை பிரதிபலிப்பதோடு மக்கள் புரிந்து கொள்ளும் மொழி நடையினைக் கலைப் படைப்பில் பயன்படுத்த வேண்டும்.
2. படைப்பாளன் சமுதாயத்தை முன்னேற்றம் பெறச் செய்வதற்கு இதனைக் கருவியாகக் கொள்ள வேண்டும்.
3. உலகில் மெய்ம்மைகளை அறிந்து அதன்படி மக்களின் வாழ்வை மாற்றி அமைத்திட வேண்டிய வழிகளை உணர்த்த வேண்டும்.
4. புதியனவற்றை கலைப் படைப்பின் மூலம் சித்தரித்து மனித உணர்வுகளையும் உள்ளங்களையும் நல்வழிப்படுத்துதல் வேண்டும்'' [27]

என்று கூறுகிறார். மேலும் எதார்த்தம் குறித்து எஸ்.தோதாத்ரி கூறுவதும் எண்ணத்தக்கதாகும்.

> **“எதார்த்தத்தைக் கலைஞன் அவனுடைய அகவயமான விளக்கத்தோடு பிரதிபலிக்கும் முயற்சி கலையாகும். ஒரு கலைஞன் புறவயமான எதார்த்தத்தைப் புரிந்து கொள்ள முயற்சிக்கிறான். அவனுடைய மனதிற்கு வெளியே காணப்படும் நிகழ்ச்சிகளைத் தன் வயப்படுத்திக் கொள்கிறான். இவற்றை மற்றொரு எதார்த்தமாகப் படைத்துக் காட்டுகிறார். இந்தப் புதிய எதார்த்தம் புறவயமான உலகத்தில் இருந்து வேறுபட்டும் இருக்கிறது. அதே சமயத்தில் அதைப் போலவும் இருக்கிறது. இத்தகைய கலைப்படைப்பு முறையில் பாரம்பரியம் கலாச்சாரம் போன்ற பல்வேறு அம்சங்களால் கலைஞனது அகவயப் பண்பு நிலைநிறுத்தப்படுகிறது. இந்தக் காரணிகளைப் பொறுத்து ஆய்வு முறையானது மேல் போக்காகவோ அல்லது மிக ஆழமாகவோ இடம் பெறலாம்'' [28]**

என்ற கருத்தோடு எதார்த்தம் குறித்துப் பார்ப்பது அவசியமாகின்றது. நாஞ்சில் நாடனின் புதினங்கள் ஒவ்வொன்றும் எதார்த்த நிலையில் புனைவிற்கு இடமில்லாமல் வாழ்வின் அனுபவத் தொகுப்பாகவே உள்ளது.

**உள்ளவாறு கூறுதல்**

ஒரு புதினம் கற்பனையின் உச்சத்தில் படைக்கப் பெறாமல் சமூகத்தில் நிலவும் உண்மைகளை உள்ளவாறு கூறுவது முக்கியமாகும்.

> **"இலக்கியம் வாழ்வின் விளக்கம் என்பது வெளிப்படை. எனவே வாழ்க்கைப் போக்கை விளக்கிக் காட்டும் வகையில் நாஞ்சில் நாடன் ஒரு 'கற்பனை கொண்ட உண்மை உலகத்தையே நாவலில் படைத்துக் காட்டுகிறார். நடப்பியலை அப்படியே எழுதினால் அது வரலாறு போல் ஆகி விடும். நடைமுறைக்கு ஒவ்வாத கற்பனையாக எழுதினாலும் அது கட்டுக்கதையாக மாறி விடும். நடப்பியலின் அடிப்படையில் உருவாகும் கற்பனையின் விளைவே கற்பனை கொண்ட உண்மை உலகம். இதே கருத்தை வேறு வகையாகச் சொன்னால், உலகம் எவ்வாறு உள்ளது என்பதைக் காட்டுவதே நாவலாசிரியரின் நோக்கம் எனலாம். இதைத் தவிர உலகம் எவ்வாறு இருக்க வேண்டும் என்றும் எங்ஙனம் இருக்கக் கூடாது என்றும் நேரடியாகப் பேசுவது முதல் நோக்கத் தன்று"**[29]

என்று உலகின் நடப்பியலை உண்மையாகப் பதிவு செய்வது நாவலின் நோக்கம் என்று கூறுகிறார் மா.இராமலிங்கம் அந்த வகையில் நாஞ்சில் நாடன் தனது ஆறு புதினங்களையும் வாழ்வில் உணர்ந்தவாறு பதிவு செய்துள்ளார்.

**தலைகீழ் விகிதங்களில் எதார்த்த நிலை**

'தலைகீழ் விகிதங்கள்' புதினம் நாஞ்சில் நாடனின் முதலாவது புதினமாகும். இந்தக் கதை சமூகத்தில் நிலவும் நடப்புச் செய்திகளைக் கலையாக்கிய முயற்சியாகவே உள்ளது. ஒரு குடும்பத்தின் மூத்த மகனாக படித்து, பட்டம் பெற்ற இளைஞன் வேலையில்லாமல் திண்டாடும் போது அவன் எவ்விதமான மன உளைச்சலுக்கெல்லாம் ஆளாகிறான் என்ற உளப்பதிவாக கதை புனையப்பட்டுள்ளது.

வேலை கிடைக்காமல் அலையும் இந்தக் கீழ் நிலையில் பணக்கார வீட்டின் மாப்பிள்ளையாவது அதனினும் கொடுமையானது என்பதை புதினம் நெடுகிலும் காண முடிகிறது. சிவதாணு என்ற வேலையற்ற இளைஞன், அதே நேரத்தில் பண்பும் சமூக ஒழுக்கமும் அன்பும் பரந்த நோக்கமும் சுயமரியாதை உணர்வும் கொண்ட அந்த இளைஞன், சொக்கலிங்கம் பிள்ளை என்ற ஒரு பணக்காரரின் மருமகனாக ஆன பிறகு அவன் படும் துயரமும் மனவலியும் புதினத்தின் உயிராக விளங்குவது சமூக எதார்த்தத்தின் உண்மை வெளிப்பாடாகவே உள்ளது.

கதை இயல்பிலேயே நாஞ்சில் நாடனின் சொந்த கிராமமான 'வீர நாராயண மங்கலம்' என்ற ஊரிலேயே தொடங்குகிறது. சிவதாணுவின் ஊராக இந்த ஊர் காட்டப் பெறுகிறது. அந்த ஊரில் தான் அனுபவித்த வாழ்க்கையை அவர் பல இடங்களில் பதிவு செய்திருப்பது கதைக்கு உயிரூட்டுகிறது. சிவதாணு 'வீட்டோட மாப்பிள்ளையாக' பார்வதியின் வீட்டிற்குச் சென்ற பிறகு அவன் படும் மான, அவமானங்கள் அவன் சுயமரியாதை உணர்விற்கு ஊறுவிளைவிக்கின்றன. மாமனார் உணவு விடுதியில் வேலை செய்து அதில் கிடைக்கும் மாத ஊதியத்தை தன் வீட்டிற்கு கொடுப்பதை மரியாதை குறைவாக நினைக்கும் சிவதாணு 'நகர்புறத்திலேயே ஒரு புத்தகக் கடை வைக்க (Stationery Mart) மாமனாரிடத்திலே கடன் பெற நினைக்கிறான். அதுவும் முடியாமல் போக மனைவியின் நகையினை அடமானம் வைத்து காசு பெற நினைக்கிறான். அதற்கு பார்வதியின் தாயார் நீலாப்பிள்ளை கோலத்தில் பேசுகிறாள்.

> **"ஒகோ.... அவ்வளவு தூரத்துக்கு வந்தாச்சா? அவாளுக்கு வித்துத் திங்கதுக்கா உருப்படி செய்து போட்டிருக்கேன். நல்லாருக்கே நியாயம்! அதெல்லாம் ஒரு பொது தொடப்பிடாது மாப்பிள்ளைக்கும் பொண்டாட்டிக்கும் சாப்பாடு போட்டு துணிமணியும் எடுத்துக் கொடுத்து, போராதலுக்குச் சொளை சொளையா மாசம் நூத்தம்பது ரூவாயும் தாறது போராதா? உருப்பாயும் வேறு வேணுமோவ்? நாம் அப்பமே சொன்னனே.... இது இப்பாத்தான் போகும்ணு.... சனங்களுக்கு ஆசை பெருத்துத்தான்**

**போச்சு... கப்பல்லே பொண்ணு வருகுண்ணா, எனக்கொன்று எங்க அப்பாவுக்கு ஒண்ணுங்கிற கதையால்லா இருக்கு''[30]**

என்ற பேச்சு சிவதாணுவின் மனதினில் காயத்தை உருவாக்கியது. 'வீட்டோட மாப்பிள்ளையாக' வந்த ஒரு பட்டதாரி இளைஞனின் மனவலி நிரம்பிய வாழ்வின் எதார்த்தப் பதிவாகவே இந்த உரையாடல் இருந்தது. நீலாப்பிள்ளையில் எரிச்சலூட்டும் இந்தப் பேச்சு சிவதாணுவின் வாழ்வில் மிகப்பெரிய கேள்வியை எழுப்பியது.

**''இதை யாரிடம் வாய்விட்டுச் சொல்ல முடியும்? பூமியில் படுத்துக் கொண்டு ஆகாயத்தை நோக்கி எச்சில் உமிழ்வதைப் போன்று, யாரை நோக முடியும்? இதயத்தில் பூச்சி முள்ளைப் புதைந்து வைத்ததைப் போல, எண்ணங்கள் அதில் பதியும் போதெல்லாம் அவனுக்குச் 'சுருக் சுருக்' சென்று வலித்தது. ஊற்றென எழுகின்ற கண்ணீரை உறைய வைப்பதற்காக அவன் சிரமப்பட்டான். ஆழமாகக் காயம்பட்டு, நெடுநாள் புண்பட்டு பின்பு ஆறித் தழும்பேறிப் போன வடுவின் மீது, மீண்டும் கத்தியால் கீறியதைப் போன்று வதைக்கின்ற வலி.....**

**வருத்தத்தையும், வியப்பையும் தொடர்ந்து தன் கையாலாகாத்தனத்தின் மீது அவனுக்கு வந்த கோபம்... தன்னைத் தவிர உலகத்தில் எல்லோரும் நிம்மதியாக இருக்கும் போது, தனக்கு மட்டும் ஏனிந்தச் சஞ்சலமும் அவமானமும் அவமதிப்புக்களும்? தன்னையே அழித்துக் கொள்கிற கோபவெறி அவனுள் மூண்டெழுந்தது.**

**ஆனால், யதார்த்தம் அவன் கால்களைப் பிடித்துப் பின்னிழுத்தது. ஆனது ஆயிற்று! இனிமேலாவது கூடிய விரைவில் இதற்கொரு வழி உண்டாக வேண்டும்''[31]**

என்று சிவதாணுவின் வாழ்க்கை எதார்த்தங்கள் மூலம் புதினம் புனையப்பட்டிருப்பது உண்மை வெளிப்பாடாகவே உள்ளது.

**என்பிலதனை வெயில் காயும் எதார்த்த நிலை**

'சுடலையாண்டி' என்னும் இளைஞனின் வாழ்க்கையே இந்தப் புதினத்தின் கதையாக உள்ளது. சுடலையாண்டியும் படித்துப் பட்டம் பெற்று வேலையில்லாமல் அலைகிறான். ஆனால் இவன் வாழ்க்கைச் சூழலும் வறுமை நிலையும் வேறு விதமானது. தாய் தந்தையை இழந்து வயது முதிர்ந்த தாத்தா பாட்டியிடம் வாழும் இவன் வாழ்க்கை எண்ணற்ற தமிழக இளைஞர்களின் உளப்பதிவாகவே உள்ளது. இந்தக் கதையின் சம்பவங்கள் நம் வாழ்விலும், நம் அருகில் வாழும் ஒரு இளைஞனின் வாழ்விலும் நடந்த நிகழ்வாகவே உள்ளது. அந்த வகையில் எதார்த்தம் நிறைந்த நிகழ்ச்சிகள் கோர்வையாக்கப்பட்டுள்ளன.

சுடலையாண்டி பட்டம் பெற்று ஆண்டாகியது. ஆனால் வேலை ஒன்றும் கிடைக்கவில்லை. எங்கு தேடியும் வேலைக் கிடைக்காத அவன், சொந்தமாக, கிழங்கு வியாபாரம் செய்யலாம் என்று நினைக்கிறான். கையால் காசில்லாமல் கடனுக்குப் போராடியும் கிடைக்காமல் தவிக்கிறான். பள்ளி இறுதி வகுப்பில் முதல் மாணவனாகத் தேறியதற்காகக் கிடைத்த தங்க மெடலை தாத்தா, பாட்டிக்குத் தெரியாமல் விற்கத் துணிகிறான். இந்தச் சூழல் தமிழகத்தில் உலவும் எண்ணற்ற படித்த பட்டதாரிகளின் நிலையை எதார்த்தமாக எடுத்துரைப்பதாகவே உள்ளது. குற்றாலம் பணிக்கரிடம் சுடலையாண்டி,

> **"நாலைஞ்சு நாளா வேலை ஒண்ணும் இல்ல, பாட்டி... தாத்தாக்கும் சோலி இல்லை.**
> **கிழங்கு யாவாரத்துக்குப் போலாம்ணு பாக்கேன். பாட்டா, ஒரு பத்து ரூவா தந்தேருண்ணா ஏழெட்டு நாள்ளே தந்திடுவேன்"**[32]

என்று கெஞ்சுகிறான். ஆனால் அவரோ பல்வேறு காரணங்களைக் கூறி கடன் தர மறுக்கிறார்.

> **"இரவு படுக்கும் போது இது பற்றி யோசித்தான். எண்ணம் ஒன்று மனதில் சில்லிட்டது. ஐந்து ஆண்டுகளுக்கு முன்னால், பள்ளி இறுதி வகுப்பில் பள்ளியிலேயே முதல்வனாகத் தேறியதற்காக, அந்தப் புண்ணியவான்**

**தாழக்குடி சின்னத்தம்பியா பிள்ளை அறக்கொடை காரணமாய் கிடைத்த தங்க மெடல் அலமாரியில் தாத்தாவின் பணப் பெட்டியாக முன்பொரு காலத்தில் பயன்பட்ட மரப்பெட்டியில் கிடந்தது. அலுந்த வெள்ளி அரைஞாண் கொடி நசுங்கிய தாயத்து, செல்லாத பழைய திருவிதாங்கூர் மகாராஜா நாணயங்கள் இவற்றுடன் சிவந்த சருகுத் துண்டுத் தாளில் பொதிந்து பத்திரப்படுத்தியிருந்த மெடல் மனம் ஒரு புறம் மறுக்கடி கொண்டாலும் ஒரு தற்காலிக ஆசுவாசம் நாற்பத்தாறு ரூபாய் – மரச்சீனிக் கிழங்கு வியாபாரத்துக்காகப் பத்து ரூபாய் வைத்துக் கொண்டு, மீதியை ஆத்தாவிடம் கொடுத்தான்''** [33]

இப்படியாக சுடலையாண்டியின் வாழ்வு தொடர்கிறது. இந்த இளைஞனின் வாழ்வு எதார்த்த நிலையில் படைக்கப்பட்டிருப்பது. நாஞ்சில் நாடனின் எழுத்துகள் எதார்த்ததின் படப்பிடிப்பாகவே உள்ளது. ஒரு படைப்பு அவ்வக் காலத்தில் நிலவும் சமூகச் சூழல்களை எடுத்துரைப்பதாக இருக்க வேண்டும் என்பதை மா. இராமலிங்கத்தின் கூற்றின் வழி அறியலாம்.

**''நாவல் காலத்தின் படப்பிடிப்பு; அது எழுந்த காலம் எதுவோ அந்தக் காலத்தின் நிலையை ஆடி போல் காட்ட வல்லது. காலத்திற்குக் காலம் மனித வாழ்க்கை மாறிக் கொண்டே போகிறது. இக்கால மாற்றமும் மக்களின் வாழ்க்கை மாற்றமும் நாவலின் ரசனையைக் குறைப்பது உண்டு. ஒரு நூற்றாண்டில் எழுதப்பட்ட நாவலை, அடுத்த நூற்றாண்டில் வாழும் மக்கள் விரும்பிப் போற்ற முடிவதில்லை. ஆயினும் சில நாவல்கள் நூற்றாண்டுகளைக் கடந்துப் பசுமையோடு திகழும். காலத்தின் படைப்பான நாவலில் காலம் கடந்த பண்பும் ஒன்றி நிற்கும். நாம் அதனை இனம் கண்டு கொண்டால் அது தலையாய நாவல் என்ற முடிவுக்கு வர முடியும்.** [34]

இந்த வகையில் நாஞ்சில் நாடனின் எதார்த்தப் புனைவு காலம் கடந்து நிற்கும் உன்னதப் படைப்பாகவே உள்ளது.

**மாமிசப் படைப்பின் எதார்த்தநிலை**

முதல் இரண்டு நாவல்களைப் படித்த பட்டதாரிகள் எதிர்கொள்ளும் வேலையில்லாத் திண்டாட்டங்கள், சமூக இழிவுகள், பல்வேறு இன்னல்கள் என இளைஞர்கள் குறித்தக் கவலைகளை வெளிப்படுத்திய நாஞ்சில் நாடன் 'மாமிசப் படைப்பு' என்னும் நாவலில் நாஞ்சில் நாட்டில் வாழும் வேளாண் குடி மக்களை, அவர்கள் வாழ்வில் எழும் சிக்கல்களை, முரண்பாடுகளை, விரோதங்களை அதனால் எழும் விபரீதங்களை எதார்த்த நிலையில் படைத்துள்ளார்.

> **"கிட்டதட்ட 10 ஆண்டுகளாக பம்பாயில் வாழ்ந்து வரும் நாஞ்சில் நாடன் இதுவரையில் பம்பாயின் பின்னணியில் ஒரு கதையாவது எழுதியிருக்கிறாரா என்று தேடித்தான் பார்க்க வேண்டும். தனது கதைக் கருவின் ஆன்மாவை அறிந்திருந்தாலன்றி, அது பற்றி எழுதத் துணியாத ஓர் இலக்கிய நேர்மை அவரிடம் உண்டு. இதனால் தான் இந்த நாவலைப் படித்துச் செல்கிற போது நாம் நாஞ்சில் மண்ணிலேயே வயலும் வயல் சார்ந்த மருத நிலத்தில் ஒரு வாழ்க்கை வாழ்ந்து விடுகிறோம். நாஞ்சில் நாடன் இந்த நாவலின் படைப்பாளியா அல்லது பங்காளியா என்ற சந்தேகம் நமக்கு வந்து விடுகிறது. சாமியாடி கண்டதாக இவர் வர்ணிக்கும் கனவைக் கூட உண்மையிலேயே நாஞ்சில் நாடன் தான் கண்டிருப்பாரோ என எண்ணத் தூண்டும் எழுத்தும்"**[35]

என்று 'மாமிசப் படைப்பு' என்ற புதினத்தில் இந்திரன் எழுதியிருக்கும். முன்னுரையின் மூலமாக நாஞ்சில் நாடனின் எழுத்துகள் எந்த அளவிற்கு உண்மையும் நேர்மையும் எதார்த்தமும் வாழ்ந்த வாழ்க்கையின் எதிரொலியாகவும் இருக்கிறது என்பதற்கு சான்றாக உள்ளது.

'மாமிசப் படைப்பு' கதை நாஞ்சில் நாட்டில் வாழும் எண்ணற்ற ஏழை விவசாயிகளின் ஏக்கங்களையும் உழைக்காமல் உண்டு கொழுக்கும் பண்ணையார்களின் குரோத மனப்பான்மையையும் எதார்த்த நிலையில் சுட்டிக் காட்டுவதாக உள்ளது. 'கூறுவது கந்தையா' என்னும் ஒரு பாட்டாளியின், கூலி

விவசாயியின் வாழ்வின் ஊடாக கதை நகர்கிறது. கந்தையா ஒரு நல்ல விவசாயி. கடும் உழைப்பாளி, கிராமப்புறங்களில் பல கந்தையாக்களை நம்மால் இப்படி காண முடியும். எனவே தான் கந்தையாவின் மீது நம் கவனம் ஒன்றிவிடுகிறது. எத்தனை நாளைக்கு கூலிக்கு வேலை செய்து வாழ்க்கையில் ஒன்றும் இல்லாமல் போவது என்று கருதி கந்தையா தம் 'கூட்டாளிகளை' அழைத்து தம் ஊருக்கு அருகில் இருக்கும் காடு நிறைந்த சுடுகாட்டு மேட்டினை திருத்தி நிலமாய் மாற்றி கீரை, வெண்டை, கத்திரி, மிளகாய், அவரை என்று விளைவிக்கிறார்.

ஊரின் பண்ணையார்களான கங்காதரம் பிள்ளை விக்ரமசிங்கம் பிள்ளைக்கு கந்தையாவின் இந்த செயல் பொறாமையை உருவாக்குகிறது. காலம் காலமாக நம் கையை எதிர்பார்த்து வாழ வேண்டியவர்கள். தங்கள் உழைப்பின் மூலம் உயர்ந்து நிற்கிறார்களே என கோபப்படுகிறார்கள். அவன் உழைப்பினை அழித்துவிடத் துடிக்கிறார்கள். அன்று மாலை வயலில் ஓர் ஓட்டி முடித்து, மாடுகளை வீட்டிற்கு ஓட்டி வரும் சூழலில், விக்ரமசிங்கம் பிள்ளை, கந்தையா தன் உழைப்பு முழுவதையும் கொட்டி வளர்த்திருக்கிற தோட்டத்திற்குள் மாடுகளை விரட்டினான்.

> **“நொடியில் நாசம் துவங்கியது / கரும்பிஞ்சாய்த் தொங்கிய கத்திரிக்குலைகள் / பெண்விரலாய்ப் பதமான வெண்டைப் பிஞ்சுகள் / பச்சைப் பாம்பாய் இறங்கிய புடலைகள் / மிளகாய்ச் செடிகள், வழுதுணை, அவரை, பீர்க்கு / இளம்பிள்ளையின் குரல்வளையை முறித்தது போல / கோழிமுட்டையின் மேல் எருமை அடியெடுத்து வைத்தது / போல் செடிகள் முறிந்து துவைந்தன. கொடிகள் அறுந்து நான்றன.... / வேருடன் நாற்றுகள் பறித்துப் புரண்டன.”[36]**

கந்தையாவின் உழைப்பு நொடிப் பொழுதில் வீணடிக்கப்பட்டது. தன் சொந்தக் காலில் நிற்கத் துடிக்கும் பாட்டாளிகளின் உழைப்பினை பண்ணையார்கள் நாசம் செய்வதை இவ்வாறு இயல்பும் எதார்த்தமும் நிறைந்ததாக நாஞ்சில் நாடன் படைத்துள்ளார்.

கந்தையா, ஊர்ப் பெரியவரான கங்காதரம் பிள்ளையிடம் நியாயம் கேட்கிறார். அவரோ தன் மைத்துனர் விக்ரமசிங்கம் பிள்ளைக்கு ஆதரவாக நிற்கிறார்.

> **“அது முடியாது டே கந்தையா.... நிலம் புறம்போக்கு பாத்தியா அதிலே மாடு விளுந்திட்டுண்ணா ஊருக்கூட்டம் கூட்ட முடியாது பாத்துக்கோ... இப்ப யாராம் பாட்டாமோ சொந்தமோ பயிரு செய்ய தோட்டம்ணா கேக்கலாம். இதை யாருகிட்டே கேக்க? கேட்டா பொறம் போக்கு நிலம்.... ஊருக்கு கேக்கதுக்கு அதியாரம் கெடையாதும்மான்....”** [37]

கங்காதரம் பிள்ளையின் இந்தப் பேச்சு காலம் காலமாக பாட்டாளிகளின் உழைப்பினைச் சுரண்டிக் கொழுக்கும் பண்ணையார்களின் பேச்சாகவே உள்ளது. இதற்கு கந்தையா,

> **“அப்பிடியா? ஆனா இதை எந்த செலுக்கிவிள்ளை செய்திருந்தாலும் சரி... நான் ஒரு அப்பனுக்குத்தான் பொறந்தவனா இருந்தா இப்படி வஞ்சம் வச்சு செய்த தாயோளிக்கு குடலை வகுத்து மாலை போடாம விடப்போறதில்லே.... அப்பம் ஊரு என்ன செய்யிண்ணு பார்த்திருவோம்”** [38]

என்று கொந்தளிக்கிறான். சாதாரண உழைக்கும் வர்க்கமான கூலி விவசாயிகளின் கோபம், எதிர்வினை பண்ணையார்களை ஒன்றுமே செய்ய முடிவதில்லை என்ற எதார்த்த நிலை புதினம் முழுவதும் இழையோடுகிறது. இறுதியில் கந்தையா என்ற பாட்டாளி பண்ணையார்களின் துரோகத்தால் வெட்டிச் சாய்க்கப்படுவதாக கதை முடிகிறது. பல்லாண்டு காலமாக பொருளாதாரத்தில் திரண்டு வளர்ந்திருக்கிற பண்ணையார்களை உழைப்பாளிகளின் கூட்டு முயற்சியால் மட்டுமே வெல்ல முடியும் என்ற கொள்கை தாங்கிய முடிவினை புதினம் எதார்த்த நிலையில் முன் வைக்கிறது.

**சதுரங்கக் குதிரையில் எதார்த்த நிலை**

படித்து முடித்து ஊர் துறந்து, உறவு மறந்து வெளி மாநிலங்களில் குறைவான ஊதியத்தில் வேலை பார்க்கும் ஒரு இளைஞன், தன் வாழ்க்கையில் தன் தேவைகளில் எவற்றையும் நிறைவேற்றிக் கொள்ள இயலாமல் திண்டாடும் எதார்த்த நிலை

**‘சதுரங்கக் குதிரை’** என்னும் புதினத்தின் வாயிலாகப் புனையப்பட்டுள்ளது. நாராயணன் என்னும் இளைஞன் கதையின் தலைவனாக வருகிறான். இவன் தாயின் கருவறையின் உருவான விதமும் தந்தையின் மரணமும் ஒரு சேர நிகழ தாயும் மகனுமாக சமூகத்தை எதிர்கொள்ளும் நிலமை எதார்த்த நிலையில் எழுதப்பட்டுள்ளது.

> **“அப்பா இறந்து போவதற்கு முன்பாக ஒரு நாள் பின்னிரவில் கொண்ட உடலுறவின் தற்செயல் விளைவு. அம்மாவின் மாதவிலக்கு நின்று போவதற்கான அறிகுறிகள் தோன்றிய போது கொண்ட சூல். அதுவரை வாய்க்காத மணி வயிறு ரிஷி வரம் போல் ஏன் வாய்த்தது என்று தெரியவில்லை. நாராயணின் சொந்தக்காரர்கள் பலருக்கும் அவன் அப்பா யாரென்பதில் நெடுநாட்கள் தர்க்கம் இருந்திருக்கலாம். ஒருவேளை அவன் பிறந்த பின் அப்பா இறந்து போயிருந்தால் தர்க்கத்தின் வேர்கள் பட்டுப் போயிருக்கலாம்”** [39]

என நாராயணனின் பிறப்பு சுட்டிக் காட்டப்படுகிறது. படிப்பு முடித்த நாராயணனுக்கு பம்பாயில் வேலை கிடைத்தது. தாயின் பக்கத்தில் இருந்து அவர்களைப் பாதுகாக்க முடியாத வேலை. வேலைனா உதறவும் முடியவில்லை. வேலையில் ஒன்றவும் முடியவில்லை. பிறப்பு முதல் வாழ்வின் ஒவ்வொரு அடியும் வலி நிறைந்த பயணமாகவே இருக்கும் வாழ்க்கை, நாட்டில் உலவும் எண்ணற்ற இளைஞர்களின் உளப்பதிவாகவே உள்ளது. அம்மா இறந்த பிறகு அருகிலிருந்து சடங்குகள் கூட செய்ய இயலாத கடைசி நேரத்தில் அந்த முகத்தைக் கூட பார்க்க முடியாத இளைஞனாகவே அந்த நாராயணன் பாத்திரம் படைக்கப்பட்டுள்ளது. நாராயணனுக்கு,

> **“அம்மாவின் முகமே கிழவியின் முகமாகத்தான் நினைவில் நின்றது. கையில் வளையல்கள் அற்று, காதில் கம்மல் அற்று, வெள்ளைப் புடவையும் வெள்ளை ரவிக்கையும் கொண்டையும் மாறிப் போன முகமாக”** [40]

அம்மாவை ஒரு மகனால் இப்படித்தான் நினைவு கூற முடிகிறது. அம்மா இறந்து விட்டாள் என்று அவனுக்கு தந்தி வர,

**“கையில் நாற்பத்தாறு ரூபாயும் சில்லறைகளும் கிடந்தன. வங்கிக் கணக்கில் இருபது ரூபாய்க்கும் கீழே தான் இருக்கும். உடன் வாழும் எல்லோரும் தன்னைப் போல மாதச் சம்பளக்காரர்கள். அங்கும் இங்குமாக ஐந்து பத்து கைமாத்து வாங்குபவர்கள். எவரிடம் உடனடியாகப் புரட்ட முடியும்?.... காலை பத்தரை மணிக்குப் பம்பாய் – திருவனந்தபுரம் விமானம் இருப்பதாகச் சொன்னான் ஜெகதீசன். தந்தியைக் காட்டினால் டிக்கெட் கிடைக்குமாம். பன்னிரண்டரை மணிக்குப் போகும். அங்கிருந்து கார் ஏற்பாடு செய்து கொண்டு போனாலும் கிராமம் போய்ச் சேர இரண்டரை மணி ஆகிவிடும். தகவல் அனுப்ப முடியுமானால் அதுவரை பிரேதம் எடுக்காமல் போட்டிருப்பார்கள். விமானக் கட்டணம் நானூற்றைம்பது ரூபாய் என்றனர். கார் வாடகை நூறு ரூபாய். அறுநூறு ரூபாய் உடனடியாகக் கைவசம் வேண்டும். இருநூற்றைம்பது ரூபாய் பிடித்தம் போக வரும் சம்பளத்தில், மூன்று மாதம் சாப்பிடாமல் பட்டினிக் கிடந்தால், கடனடைக்க மூன்று மாதம் ஆகும். அரை வயறு சாப்பிட்டுக் கிடந்தால் ஆறு மாதம் ஆகும்”**[41]

என பெற்ற தாயின் இறுதி சடங்கிற்குச் செல்ல பணமுடைகளையும் இத்தனைத் தடைகளையும் வெல்ல வேண்டும் என்பது இந்த இளைஞனின் நிலையாக இருந்தது. வாழ்வைக் கடத்த வெளி மாநிலத்திற்கு வரும் இளைஞர்கள் எத்தகைய இன்னல்களை எதிர்கொள்கிறார்கள் என்பதற்கு இந்தப் புதினம் ஒரு எடுத்துக் காட்டாகவே உள்ளது. நாஞ்சில் நாடனின் சொந்த வாழ்வின் அனுபவ வெளிப்பாடாகவே இந்தப் புதினம் உள்ளது. இவரின்

“உள்ளத்திலிருந்து ஊற்றாக வரும் எண்ணங்கள் ஆத்மார்த்தமானவை. உண்மையுடனும் சத்தியத்தோடும் அவ்வெண்ணங்கள் தொடர்பு பெற்றிருக்கும். எழுத்தாளர் வடிக்கும் இலக்கியத்தில் அவ்வுண்மைகள் கருப்பொருளாகிவிடும். உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின் வார்த்தையிலும் ஒளி உண்டாகும் என்பது உண்மையாகும்”[42]

என்ற கருத்தோடு ஒப்புமைபடுத்தத் தக்க வகையில் இந்தப் புதினம் படைக்கப்பட்டுள்ளது.

**'மிதவை' புதினத்தின் எதார்த்த நிலை**

படித்து முடித்துப் பட்டம் பெற்று வேலை தேடி அலையும் தமிழக இளைஞர்களில் ஒருவனாகவே இந்தப் புதினத்தில் வரும் சண்முகம் திகழ்கிறான். தன் தந்தைக்கு இருக்கும் ஏழு பிள்ளைகளில் ஒருவன் ஆனால் குடும்பத்தின் மூத்த மகனாகப் பிறந்ததால் எதிர்கொள்ளும் பிரச்சினைகள் தனி விதமானவை. சண்முகத்தின் குடும்பச் சூழ்நிலையை நாஞ்சில் நாடன் இயல்பு நிலையிலேயே புனைகிறார்.

> **"சூரங் குளத்தில் ஒரு சம்சாரிக்கு சொந்தமாக இரண்டு ஏக்கர் நஞ்சை நிலமும் கறிக்குத் தேங்காயும் இருந்தால் ஒரு சிறிய குடும்பம் விருந்து எழுந்து நடக்கும். சண்முகத்தின் தகப்பனாருக்கு இரண்டு ஏக்கர் பாட்ட நிலமும் இரண்டு பால் மாடுகளும் இரண்டிரண்டு வயது வித்தியாசத்தில் ஏழு பிள்ளைகளும் குடும்பம் கொண்டு போவது புரந்தரனார் பெருந்தவம்.... இந்த இலட்சணத்தில் மூத்த மகன் பி.ஏ. படித்து விட்டு வேலையும் கிடைக்காமல் சுற்றித் திரிந்தால் எப்படி இருக்கும்? சண்முகத்தின் சம்பள வரவு கொண்டு தூர்க்கப்படக் காத்திருந்த பள்ளங்கள் ஏராளம். பள்ளங்களைப் பார்க்கப் பார்க்க அப்பாவுக்கு அடிவயிற்றில் திகில் பரவியது. எரியும் கூரையின் சில தெறிப்புகள் சண்முகத்தின் மீது எப்போதும் விழுந்த வாறிருந்தன"** [43]

என்று சண்முகத்தின் நிலை குறிப்பிடப்படும் போது தமிழகத்தின் எண்ணற்றக் குடும்பங்களும், இளைஞர்களும் நினைவிற்கு வந்து செல்கிறார்கள். வேலையும் வேலை தேடும் படலும் என நீளுவதே தமிழக இளைஞர்களின் வேலை. நம்பிக்கையோடு வேலை கிடைக்கும் என்ற நோக்கோடு இங்கு படிக்க முடிவதில்லை. தமிழகத்தில் கல்வி என்பது அறிவைப் பெறும் கருவி மட்டுமல்ல. அது குடும்பத்தின் நீண்ட கால வறுமையைப் போக்கும் கருவியுமாகும். ஆனால் படித்த இளைஞர்களின்

மாபெரும் சக்தியைப் பயன்படுத்திக்கொள்ள இயலாத ஒரு நாடாகவே தமிழகம் விளங்குவதை புதினம் எதார்த்த நிலையோடு பதிவு செய்கிறது. பத்தாம் வகுப்பு முடித்த பிறகு ஒரு மாணவனின் வேலை தேடும் படலம் தொடங்கும் என்பதை நாஞ்சில் நாடன் இயல்பாக பதிவு செய்கிறார்.

**“மூன்று முறை எஸ்.எஸ்.எல்.சி., நிலையில் பப்ளிக் சர்வீஸ் கமிஷன் எழுதிப் பார்த்தாயிற்று.**
**இரண்டு முறை ரயில்வே சர்வீஸ் கமிஷன்,**
**எலக்ட்ரிசிடி போர்டு கிளர்க் – கேஷியர் வேலைக்கு ஒரு முறை, தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகளின் தேர்வில் இரண்டு தரம், எம்ப்ளாய்மெண்ட் எக்சேஞ்ச் மூலமாக வந்த போக்குவரத்துக் கழக கண்டக்டர், தேவஸ்தம் போர்டு குமாஸ்தா எனச் சில...**
**ஒரு பி.ஏ., படித்தவன் வேறு என்ன தான் செய்ய முடியும்”** [44]

என்ற ஏக்கப் பெருமூச்சோடு இந்த வினாவினை முன் வைக்கிறார். ஒரு பணியிடத்திற்கு ஆயிரம் மடங்கு இலட்சம் மடங்கு என்று போட்டிக்கு வரும் போது ‘வலியது எஞ்சும்’ என்ற கூற்றின்படி எந்தெந்த வகையிலோ பணியிடங்கள் நிரப்பப்படுகின்றது. இந்தச் சூழலில் சண்முகம் போன்ற சாமானியர்களால் என்ன செய்ய முடியும் என்ற கேள்வியும் எழுந்து கொண்டே இருக்கிறது. மேலும் ஒரு பணியிடத்திற்கு விண்ணப்பதில் நிலவும் நடைமுறைச் சிக்கல்களை மிகத் தெளிவாக அதே நேரத்தில் இயல்பு மாறாது எடுத்துரைக்கிறார் நாஞ்சில் நாடன்.

**“சர்டிபிகேட் அட்டெஸ்ட் பண்ணித்தர ஜூனியர் என்ஜினியருக்கு ஐந்து ரூபாய் என்று சேப் ஆகிவிட்டது. சர்க்கார் ஆஸ்பத்திரிக்குப் போனாலும் போஸ்டாபீசுக்குப் போனாலும் இதுதான் கதை.**
**வருமான சர்டிபிகேட்டுக்கோ, கம்யூனிடி சர்பிபிகேட்டுக்கோ வில்லேக் ஆபீசுக்குப் போனால் அங்கே வேறு கதை.... / “தம்பி எந்தூரு?” / “குறுங்குளம்” / அப்பா பேரு என்னா? / “ராமசாமி”/ “என்னவாலம் தந்து விட்டாவா” / “............................... சரி... போயி கடுப்பங்கூட்டி**

**ரெண்டு சாயா... நாலு ஓமப்பொடி வாங்கீட்டுவா... எளுதி வச்சிருக்கேன்.... வரத்திலே, அங்கு விலாஸ் போயிலை வச்சு ரெண்டு தரத்துக்கு வெத்திலை வாங்கிக்கோ''** [45]

என்று அரசு அலுவலகங்களில் ஒவ்வொரு சான்றிதழ் பெறுவதற்கும் எத்துணைப் போராட்டங்களை நடத்த வேண்டியுள்ளது என்பதை எதார்த்த நிலையில் விவரித்துள்ளார். தமிழகத்தில் மட்டுமல்ல இந்தியாவில் பிறந்த ஒவ்வொரு இளைஞனும் படித்த பட்டதாரிகளும் வேலை வேண்டி அலைவதையே தங்கள் வாழ்க்கையாக வாழ்ந்து வருகிறார்கள். மனித சக்தியை பயன்படுத்த தெரியாத ஒரு நாடாகவே இது நாள் வரையிலும் இந்தியா இருந்து வருகிறது. அதில் தமிழ்நாடு விதிவிலக்கல்ல. படித்தப் படிப்பிற்கு வேலை கிடைக்க வில்லையானால் அந்தப் படிப்பு எதற்கு? கல்வியைத் தரத்துடிக்கும் ஒரு நாடு அந்தக் கல்விக்கேற்ற வேலையையும் தர வேண்டும். இல்லையேல் வேலை வாய்ப்புக்கேற்ற கல்வியாக அதனை மாற்றியமைக்க வேண்டும். அப்படித் தர இயலாத காரணத்தினால் தான் இல்லையேல் சண்முகம் போன்ற இளைஞாகள் வேலை தேடி அலைந்து திரிந்து தன்னையும் காப்பாற்றிக் கொள்ள முடியாமல் தன் குடும்பத்திற்கும் உதவ முடியாமல் வேறு வழியைத் தேடிக் கொள்வதாக முடியும் என மிதவை ஒரு எச்சரிக்கை உணர்வை எதார்த்தமாய் கற்பிக்கிறது.

**'எட்டுத்திக்கும் மதயானை' எதார்த்த நிலை**

பூலிங்கம் என்னும் இளைஞனின் வாழ்வினூடாக எட்டுத்திக்கும் மதயானை' புதினம் நகர்கிறது. மறைதொழில் புரிந்து வாழும் ஒவ்வொருவரின் வாழ்க்கையும் மறை பொருளாகவே தொடர்கிறது. பூலிங்கம், செண்பகம், கோமதி போன்றோரின் வாழ்க்கையை 'கடவுள் எழுதியதாக' எடுத்துக் கொள்ள முடியாது. திருமணத்திற்குப் பிறரும் காதல் வருமா? வரும் என்கிறது. செண்பகத்தின் வாழ்க்கை. கணவன் இல்லற வாழ்க்கைக்கு ஏற்றவனாக இல்லாத போது 'கல்லானாலும் கணவன், 'புல்லானாலும் புருஷன்' என்ற செல்லரித்துப் போன பழங்கதைளையெல்லாம் தூக்கியெறிந்து விட்டு புதிய வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வழி காட்டுகிறது. இந்தப் புதினம் சாதி

மறுப்புத் திருமணத்தையும், ஆதரித்துக் கொடியசைக்கிறது. பூலிங்கம் செண்பகத்தின் சாதியைக் கூறி,

> **“உனக்கு கஷ்டமாட்டு இருக்குமணா வேண்டாம். நீ வெள்ளாச்சி. வசணி உள்ளது. நான் கொசவன் பாவப்பட்டவன். ஊரு உவகத்தைப் பத்தி எல்லாம் யோசிச்சா மனுசன் சநதோசமா வாழ முடியாது. ஆனா நான் உண்ண நிர்ப்பந்தப் படுத்தல்லே. என்னை நம்புனா நம்பு. எனக்கே இதெல்லாம் இப்பத்தான் தோணுகு. எங்கூட வந்தா இனி ஒரு நாளும் அழ வேண்டியது இருக்காது. அதுக்கு நானாச்சு”** [46]

என்று பூலிங்கம் கூறும் போது, செண்பகம் தன்னைப் பிணைத்திருக்கும் சாதி, பெண்ணடிமை, பழைய மரபு என்ற அனைத்து சங்கிலியையும் அறுத்தெறிந்து, வெறி கொண்ட விடுதலை வேட்கையோடு அவள் பூலிங்கத்துடன் சென்று வாழ முற்படுகிறாள். எழுத்தின் நோக்கம் நாட்டில் நிலவும் சமூகக் கொடுமைகளை அடையாளம் காட்டுவதோடு நின்று விடக் கூடாது. அதற்கு தக்கவாறு வழிகாட்ட வேண்டும். எட்டுத்திக்கும் மதயானை சமூகத்தைப் பீடித்திருக்கும் அனைத்து நோய்களுக்கும் ஒற்றை நிவாரணியாகக் செயல்படத் துடிக்கிறது.

**தொடக்கமும் முடிவும்**

கதைச் சொல்லுதலில் தொடக்கமும் முடிவும் சிறப்பானதாக அமைதல் வேண்டும். ஒரு கதை தொடங்கும் போதே அது தன்னளவில் எத்தகைய சிறப்பினை பெற்றுள்ளது என அடையாளம் கண்டுவிட முடியும். கதாசிரியருக்குக் கதாசிரியர் புதினத்திற்குப் புதினம் கதை வேறுபட்டுத் திகழ்ந்தாலும் அதன் தொடக்கமும் முடிவும் சீரானதாக இருத்தல் வேண்டும். இந்தக் கதைச் சொல்லும் உத்தி காலத்திற்கு காலம் மாறுபட்டும் வேறுபட்டும் வந்துள்ளது.

> **“ஆரம்ப காலத்தில் நாவலின் தொடக்கம், ‘ஒரே ஒரு ராஜா அந்த ராஜாவுக்கு ஒரே ஒரு ராணி’ எனத் தொடங்கியது. பின்னர் ‘முன்னொரு காலத்திலே’ என மாறியது. அப்போது அமைந்தது. ஆனால் இன்று நாவல் முக்காலத்தையும் நம்முன் படம் பிடித்துக் காட்டுகிறது. தொடக்கம் புதுமை**

**பெற்று விட்டது. நாவலின் தொடக்கம் மாறி விட்டது. நாவலின் தொடக்கம் சரிவர அமைய வேண்டும். தொடக்கம் விறுவிறுப்பாக அமையும் போது நாவல் சிறக்கிறது. முதல் கோணல் முற்றும் கோணல்; எனவே நாவலின் ஆன தொடக்கம் செம்மையாக அமைய எழுத்தாளன் கவனம் செலுத்த வேண்டும்'' [47]**

என்ற கீதாவின் கருத்து இங்கு நோக்கத்தக்கதாகும். ஆனால் முன்பெல்லாம் இருந்த ஒரு புதினத்தின் தொடக்க முறை இப்போது இல்லை. இப்போது ஒரு புதினத்தின் கதை எப்படி வேண்டுமானாலும் தொடங்கப்படுகிறது. கதை எங்கிருந்து வேண்டுமானாலும் தொடங்கலாம் என்ற நிலை உருவாகியுள்ளது. இதனை கோ.வே.கீதா,

**``ஒரு நாவலில் அதன் தொடக்கத்தில் தான் கதை தொடங்கப்பட வேண்டும் என்ற நியதி இல்லை. சில நாவல்கள் கதையின் முடிவிலே ஆரம்பமாகலாம். பின்னர் நினைவோட்டமாக கதை தொகுத்துரைக்கப் படலாம். இம்முறை பல வேலைகளில் பயனுள்ளதாக அமைகிறது. வாசகரின் ஆர்வத்தைத் தூண்டும் வகையில் அமைகிறது''[48]**

என்று கூறுகிறார். ஆனால் நாஞ்சில் நாடன் தம் கதை சொல்லும் முறையில் பழைய மரபையே பின்பற்றி இருக்கிறார். கதையை ஒரு நிலையில் தொடங்கி ஆர்ப்பாட்டம் இல்லாமல் ஆற்றொழுக்காக கதையினை நகர்த்திச் செல்கிறார். தாம் இதுவரையிலும் எழுதியுள்ள ஆறு புதினங்களின் கதையையும் நேர்க்கோட்டில் சொல்லியிருக்கிறார். தொடக்கம் இயல்பாக இருந்தாலும் கதையின் மீது ஓர் ஆர்வத்தூண்டலை ஏற்படுத்தி விடுகிறது. புதினங்களின் கதைகள் முற்றிலும் புனைவாக இல்லாமல் வாழ்க்கை அனுபவத்தின் வெளிப்பாடாக இருப்பதால் கதைச் சொல்லல் முறையில் புதிய புதிய உத்திகளைக் கையாள வேண்டிய அவசியம் ஏற்படாமல் போனது. நாஞ்சில் நாடன் படித்துப் பட்டம் பெற்றவராகவும் வேலை தேடி பல்வேறு இன்னல்களை அடைந்தவராகவும் இருப்பதால், அந்த வாழ்வின் எதிரொலி புதினங்களில் இடம் பெறும் கதையமைப்புகளில் காண முடிகிறது.

தலைகீழ் விகிதங்கள், 'என்பிலதனை வெயில் காயும்', 'மிதவை' ஆகிய புதினங்கள் இன்றைய இளைஞர்கள் எதிர்கொள்ளும் வேலையில்லாத் திண்டாட்டம் போன்ற சிக்கல்களை முன் வைக்கிறது. வேலையில்லாத அந்தக் கடுஞ்சூழலைக் கடந்து செல்ல பட்டதாரிகள் படும் துயரினை ஒவ்வொரு புதினமும் எடுத்த எடுப்பிலேயே வெளிப்படுத்துகிறது.

**"மார்கழி மாதத்துப் பனிவெயில். காலையில் சுகமாக இருந்த அதே வெயில், இப்போது மூன்று மணிக்குச் சுள்ளென்று தாக்கியது. இதமான காற்று தென்னை மடல்களின் ஓலைகளின் வழியே சலசலத்துக் குலவிக் கொண்டிருந்தது.**

**தண்ணீர் மந்தமாக ஓடிக் கொண்டிருந்தது. அதன் தோலைச் சூரியன் மௌனமாக உரித்துக் கொண்டிந்தான். காற்று அதை அள்ளிக் கொண்டு வந்து, திறந்திருந்த சன்னல் வழியாக வீட்டினுள் உதறியது.**

**சிவதாணுவுக்கு நல்ல தூக்கம். அந்த ஓட்டு வீட்டின் பின்கட்டு பங்களாவின் மேலிருந்த தட்டுதான் அவன் வாசஸ்தலம்..."** [49]

என்று தன் முதல் புதினமான தலைகீழ் விகிதங்களின் கதையை இப்படித் தொடங்குகிறார். பகல் மூன்று மணிக்கு எந்த வேலையுமில்லாமல் வீட்டின் மேல் ஒரு இளைஞன் தூங்கிக் கொண்டிருப்பதாக கதையைத் தொடங்குகிறார். அடுத்தப் பக்கத்திலேயே அவன் மொத்தச் சூழலையும் அறிமுகப்படுத்தி விடுகிறார். அவன் வீட்டிற்கு வந்திருக்கும் ஒரு புதிய நபரின் கேள்வியின் மூலம் நமக்கு அறிமுகமாகத் தொடங்குகிறான் சிவதாணு,

**"உனக்கு பி.எஸ்.சி.யிலே எந்த கிளாசுப்பா...?**

**ஹை செகண்ட் கிளாஸ்....**

**என்ன மெயின்**

**மேத்ஸ் ஃபிஸிகிஸ், ஸ்டாடிஸ்டிகீஸ் சப்ஸிடரி**

**ரெண்டு வருசமா சும்மா இருக்குயாமே.... ஓடிண்டையும் எழுதிப் போல்லிய்யா"[50] (த.வி., ப.11)**

இந்தக் கேள்வி – பதில்கள் மூலம் ஒரு வேலைற்ற பட்டதாரியின் நிலை விளக்கப்படுகிறது. ஆனால் இந்தக் கேள்விகளுக்கு சிவதாணுவின் தந்தை அளிக்கும் பதில்கள் மூலம், குடும்பச் சூழலும் கதை எதை நோக்கிப் பயணிக்கிறது என்ற நிலையையும் சுட்டிக்காட்டி விடுகிறது.

> **“எழுதிப் போடாம என்னா...? கெடைக்காண்டாமா....? நமக்கென்ன சிபாரிசுக்கு ஆளும் பேருமா இருக்கு.... இல்ல நாலாயிரம் ஐயாயிரம்னு கைக்கூலி கொடுக்கப் பணம் இருக்கே... ரெண்டுமில்லே.... அவனும் ரெண்டு வருசமா அலையத்தான் செய்யான்... கெடைக்கும் காலம் வந்தா...”** [51]

என்ற பதிலின் மூலம் தேரில் பூட்டப்பட்ட குதிரையின் ஓட்டமாய் கதை தொடங்கி விடுகிறது.

> **“பெரும்பாலான குடும்பக் கதைகள் உரையாடலுடனே தொடங்குகின்றன”** [52]

என்ற விதி இந்தக் கதைக்குப் பொருந்தியே வருகிறது. இந்த நாவலின் தொடக்கம் பல்வேறு வினாக்களுடன் தொடங்கினாலும் நல்லதொரு விடையைக் கண்டடைந்ததாக கதை முடிகிறது.

> **“நாவலின் தொடக்கத்தைப் போலவே முடிவும் முக்கியமானது. நாவலின் முதலை விட முடிவிற்குத் தனிச்சிறப்பு ஒன்றுண்டு. நாவலின் முதலைப் போலல்லாது முடிவில் வாசகனும் கருத்து கொள்கிறான். முடிவு நாவலின் வெற்றிக்கு அடிகோலுகிறது. நாவலை முழுமையடையச் செய்கிறது எனலாம்”** [53]

என்ற கீதாவின் கருத்துப்படி தலைகீழ் விகிதங்கள் முடிவு புதினத்தின் வெற்றிக்கு முக்கியக் காரணியாய் இருந்துள்ளது.

> **“நில்லுங்கோ”**
>
> **யார் இது?**

**எங்கிருந்து இந்தக் குரல்?**

**சிவதாணு திரும்பிப் பார்த்தான். அவனை எட்டிப் பிடித்து விடுகிற வேகத்தில், ஓட்டமும் நடையுமாகப் பார்வதி தெருவைக் கடந்து அவனை நெருங்கினாள்....**

**மடிமீது விழுந்து குலுங்கி அழுத பார்வதியின் முதுமை, அவன் இடது கை ஆதரவாகத் தடவிக் கொடுத்தது"** [54]

என்று கதை முடிவடைகிறது. கதையின் தொடக்கத்தில் வேலையில்லாமல் அமைந்த அந்த இளைஞனுக்குத் திருமணமாகி ஒரு குழந்தைப் பிறந்துள்ளது. பல்வேறு குடும்பச் சூழ்நிலை இன்னல்கள் காரணமாகப் பிரிந்து வாழ்ந்த அந்த இளைஞன் இறுதியாக மனைவி மக்களோடு ஒன்று சேர்ந்து தன் வாழ்க்கைப் பயணத்தைத் தொடங்குகிறான் என்பதாக புதினம் நிறைவடைகிறது.

புதினத்தின் தொடக்கத்தைப் போலவே அதன் முடிவும் மிக இன்றியமையாததாகும். புதினத்தின் தொடக்கத்தைக் காட்டிலும் முடிவிற்கு ஒரு தனித்த சிறப்பு உண்டு.

**"கதையின் முடிவை அமைப்பது தான் மிகச் சிரமமான வேலை என்று"** [55]

ஜார்ஜ் எலியட் கூறுவார்

ஒரு புதினத்தின் முடிவு தாக்கத்தை ஏற்படுத்தும் வகையில் இருக்க வேண்டும். நன்மையோ, தீமையோ, இன்பியலோ, துன்பியலோ எப்படி இருந்தாலும் அது அந்த நாவலின் உயிர்ப்பை மெய்ப்பிப்பதாக இருக்க வேண்டும். அந்த வகையில் தலைகீழ் விகிதங்கள் புதினம் தொடக்கமும் முடிவும் நல்லதொரு தாக்கத்தை ஏற்படுத்துவதாகவே உள்ளது.

**மாந்தர் அறிமுகத் தொடக்கம்**

புதினத்தின் முக்கிய மாந்தர் ஒருவரின் அறிமுகத்தைக் கொண்டு கதை தொடங்கப்படுவது மாந்தர் அறிமுகத் தொடக்கம் என்பதாகும். இடம், சூழல், களம்

என்று எந்த வருணனைக்கும் செல்லாமல் 'என்பிலதனை வெயில் காயும்' புதினம் இயல்பாய் தொடங்குகிறது.

> **"கல்லூரி விட்டு வீட்டுக்கு வந்ததும் முகத்தைக் கழுவித் துடைத்துவிட்டு அடுக்களையினுள் எட்டிப் பார்த்தான். சுடலையாண்டி பப்படம் வறுக்கும் வாசனை, ஆத்தாவுக்கு என்ன ஆயிற்று......**
> **அம்மாவுக்கும் அப்பாவுக்கும் இன்று வைத்துக் கொடுக்கிறார்கள் என்று தெரிந்தது சுடலையாண்டிக்கும் ஆண்டுக்கு ஒரு முறை இது வழக்கம் செத்துப் போனவர்களின் நினைவாக"** [56]

என்ற கதையின் தொடக்கம், கதையின் நாயகன் தாய் தந்தையரை இழந்தவன் என்பதும் தாத்தா பாட்டியின் அரவணைப்பில் வாழ்ந்து வருகிறான் என்பதையும் சுட்டிக் காட்டுகிறது. சிறிய வயதிலேயே தாய் தந்தையரை இழந்திருக்கிறான் என்றால், அதற்கான காரணம் என்ன என்பதை கண்டறிய வேண்டிய ஆர்வத் தூண்டலை கதை உருவாக்குகிறது. இவ்வாறு மாந்தரின் அறிமுகத்தைக் கொண்டு அந்தக் கதை மாந்தரின் செயலின் ஊடாக கதையை சிறிது சிறிதாக நகர்த்திச் செல்வதென்பது ஒரு வகை தொடக்க உத்தியாகும்.

**நிகழ்வுகளின் உண்மைத் தன்மை**

புதினங்களின் கரு, கதைக்களன், நிகழ்வுகளில் நம்பத்தகுந்த உண்மைத்தன்மை இருக்க வேண்டும். இதனையே ஆங்கிலத்தில் (Realism) ரியலிசம் எனக் கூறுகின்றனர். இதனை க.கைலாசபதி.

> **"நாவலில் அமையும் நிகழ்ச்சிகள் நிகழத் தக்கவையாக இருத்தல் வேண்டும் என்ற முறைமையே 'ரியலிசம்' எனப்படும் யதார்த்தவாதம் தோன்றக் காரணமாயிற்று. காப்பிய மரபிலிருந்து முற்று முழுதாக மாறுபட்ட நாவல் வடிவம் அங்குத் தோன்றியமையாய் நாவலுக்குத் தனிச் சிறப்பான யதார்த்தப் பண்பு சிறந்து விளங்கியது. அதற்கு அடிப்படையாக ஐரோப்பாவிலே நிலமானியச் சமுதாயத்தின் வீழ்ச்சியும் பூர்ஷிவாக்களின்**

**எழுச்சியும் திட்டவட்டமாக நிகழ்ந்தன. இந்தியாவில் அத்தனைத் தெளிவாக இம்மாற்றம் ஏற்படவில்லை.”** [57]

அதனால் தொடக்ககால தமிழ்ப் புதினங்களின் எதார்த்த ...... பண்பு குறைந்து காணப்பட்டது. ஆனால் தற்போது புதினங்கள் படைத்து வரும் எழுத்தாளர்கள் பெரும்பான்மையும் நடப்பு நிகழ்வுகளை எதார்த்தம் குறையாது படைத்து வருகின்றனர். அவர்களுள் நாஞ்சில் நாடன் படைப்புகள் உண்மைத் தன்மை நிறைந்ததாக உள்ளது. அதற்கு காரணம் சமுதாயத்தின் விளை பொருளாக இலக்கியம் திகழ வேண்டும் என்ற எண்ணமே காரணம் ஆகும். சமுதாயம் இலக்கியத்தையும் இலக்கியம் சமுதாயத்தையும் பாதிக்கின்றன என்ற கருத்து இங்கு எண்ணத்தக்கதாகும்.

**“சமுதாயத்தின் விளை பொருளே இலக்கியம். இலக்கியம் சமுதாயத்தையும் சமுதாயம் இலக்கியத்தையும் பாதித்தே வளர்ந்துள்ளன. எழுத்தாளன் சமுதாயத்தைச் சேர்ந்தவன். தான் வாழும் இடத்தைச் சுற்றியே, அவனுடைய எண்ணங்கள் படர்கின்றன. இதனால் சமுதாயத்திலுள்ள சீர் கேடுகளே பெரும்பாலும் அவனது எண்ணத்தைத் தைக்கின்றன. விடுதலைக்குப் பின்தான் தமிழ் நாவல் சீரான வளர்ச்சியடைந்துள்ளது. இதற்கு அடிப்படை காரணம் சமுதாயத்தை நாவல் பிரதிபலிக்கத் தொடங்கியதே எனலாம்”** [58]

என்ற கருத்து தற்போதுள்ள எழுத்தாளர்களின் இயல்புத் தன்மையையும், எதார்த்த நிலையையும் சுட்டுகிறது. இந்த வகையில் நாஞ்சில் நாடனின் புதினங்கள் உண்மையான சமூக நடப்புகளைக் கொண்டு புனையப்பட்டுள்ளதை அறிய முடிகிறது. எதார்த்தம் இல்லாத முற்ற முழுக் கற்பனையான எழுத்துகளை அவர் முன் வைக்கவே இல்லை. ஒவ்வொரு புதினத்தின் கதைக்களம் சமூகத்தின் பிரதிபலிப்பாகவே உள்ளது. பிரச்சினைகளை விவாதிப்பதையும் அதற்குத் தீர்வு காண்பதையும் விரும்பாமல் நழுவிச் செல்லும் போக்கு புனைவியல் போக்கில் உண்டு என்பதால் நாஞ்சில் நாடன் தம் கதைகளில் புனைவினை விடுத்து உண்மைத் தன்மைக்கு இடமளித்துள்ளார்.

**“கற்பனாவாத நாவல்களான ரொமான்ஸ் யதார்த்தவாதத்திலிருந்து வேறுபடும் இடம் எதுவென்றால் அவை சித்தரிக்கும் உலகு நிஜ உலகுடன் தொடர்பில்லாமல் இருப்பது. ரொமான்ஸ் நாவல் சுய நிறைவைத் தரும் சிந்தனைகளின் மீதும் வாழ்வின் கடினமான உண்மைகளிலிருந்து தப்பித்தலிலும் கட்டப்படுகிறது”** [58]

என்ற கூற்றிலிருந்து புனைவு என்பது வாழ்வின் கடினமான உண்மைகளிலிருந்து தப்பித்துச் செல்கிறது என்பதால் நாஞ்சில் நாடன் தம் புதினங்களின் உண்மைத் தன்மைகளிலிருந்து விலகாமல் படைத்துள்ளார்.

**“ஒரு புத்தகம், ஒரு நாவல் அல்லது கவிதை வெற்றிடத்தில் படைக்கப்பட்டு அதிலேயே பதுக்கப்படுவதில்லை. அதற்கு ஒரு சரித்திர ரீதியான பின்னணி இருக்கிறது. இலக்கியம் வாழ்க்கையின் ஒரு பகுதி. ஆகையால் அது தொடர்புப்படுத்தும் வாழ்க்கையை வைத்தே மதிப்பிடப்படுதல் வேண்டும். நம்மையும் இலக்கியத்தையும் அரூப ஒருமைகளாகப் பார்க்காமல் வரலாற்றில் வைத்தே பார்க்க வேண்டும்”**[59]

**என்ற பிரம்ம ராஜனின் கருத்து இங்கு ஏற்கத் தக்கதாக உள்ளது.**

**சி.சு.செல்லப்பா இக்கருத்தை ஒத்தே கூறுகின்றார்.**

**“நிஜமான நடப்பு வாழ்க்கையை அனுசரித்துப் படைத்தல், எந்தவித லட்சிய உயர்த்தல் தொனியும் ஏற்றாமல் இருப்பதை, நடப்பதை, பார்ப்பதை அப்படியே சிறிதும் மிகைப்படுத்தாமல் வாழ்வுக்கு ஒட்டியதாகவே சித்தரித்தல் என்ற கொள்கையானது”** [60]

என்ற சி.சு. செல்லப்பாவின் கருத்தும் ஏற்கத்தக்கதாக உள்ளது.

**காரண காரியங்களோடு விளக்குதல்**

புதினங்கள் எதார்த்த நிலையோடு உண்மையாக விளக்கப்படுதலோடு அதற்கானக் காரண காரியங்களை விளக்குதல் என்பது முக்கிமானதாகும். இதனை

**"ஒவ்வொரு சமூக நிகழ்ச்சியையும் காரண காரியத் தொடர்புடன் புரிந்து கொள்வது எதார்த்தவாதத்தின் ஒரு முக்கிய அம்சம்"**[61]

என்ற எஸ். தோதாத்திரியின் கூற்றின் மூலம் அறியலாம். அவரே வேறோரிடத்தில்

**"எதார்த்தவாதத்தில் எந்த ஒரு நிகழ்ச்சியையும் தனித்துப் பாராமல் மொத்தமான வாழ்வுச் சூழ்நிலையில் காண்கிறார்கள். அந்தச் சூழ்நிலையில் இடம் பெறும் காரண காரியத் தொடர்புடன் அதைப் பொருந்திக் காண்கின்றனர். அதைச் சமூக ஆய்வு என்றழைக்கிறார்கள். யதார்த்தவாதிகள்" என்று கூறுகின்றார்.** [62]

இவ்வாறு காரண – காரியத்துடன் நிகழ்வுகள் அடுக்கிச் செல்வது புதினத்தின் உண்மைத் தன்மைக்கு வலுவூட்டுவதாக அமையும் என்பது புலனாகின்றது. நாஞ்சில் நாடன் தமது புதினங்களின் எதார்த்த நிலைக்கு அடுத்து நிகர்வுகளைக் காரண காரியங்களுடன் விளக்குகிறார்.

'தலைகீழ் விகிதங்க'ளில் சிவதாணுவின் எண்ணம் ஒரு பணக்கார வீட்டின் மாப்பிள்ளையாகி மகிழ்ச்சியோடு வாழ்வதல்ல. மாறாக அவன் ஒட்டுமொத்தக் குடும்பத்தின் எதிர்கால வாழ்வினைக் கணிக்கிறான். தனக்கு வேலையில்லை, விவசாய செழிப்பின்மை, குடும்பத்தின் வறுமை நிலை, தம்பி, தங்கையின் எதிர்கால நிலை என்று அத்தனையையும் மனதிற் கொண்டே அவன் ஒரு பணக்கார வீட்டின் வீட்டோட மாப்பிள்ளையாகச் செல்வதற்குச் சம்மதிக்கிறான்.

சுயமரியாதையும் தன்மான உணர்வும் கொண்ட ஒரு இளைஞன் ஒரு பணக்கார வீட்டில் வாழச் செல்வதற்கான சூழலை அவர் காரண காரியங்களோடு விளக்குகிறார். முதன் முதலில் சொக்கலிங்கம் பிள்ளை தன்னை மாப்பிள்ளை பார்க்க வரும் சூழலை அவன் மனம் ஏற்கவில்லை.

**"நம்மை விலை பேசுவதற்காக வந்த கூட்டம்" இது என்று அவனுக்குப் புரிந்து போயிற்று. சந்தையில் மாடு பிடிக்க வருகிறவர்களைப் போல, இப்போது இவர்கள் 'மாட்டைப்' பார்த்து விட்டுப் போக வந்துள்ளார்கள். இனிமேல் தரகர்கள் மூலம் துவர்த்தினுள் (துண்டு) கை போட்டு பேரம்**

**பேசுவார்கள். பேரம் படிந்தால் இந்த மாடு, அவர்கள் வீட்டுக் கிடாரியின் கழுத்தில் தாலிக் கயிற்றைக் கட்டும் அவனுக்கு அருவருப்பில் உடல் சிலிர்த்தது"** [63]

இவ்வாறு சிவதாணுவின் மனநிலையை எண்ண ஓட்டத்தை நன்றாக விவாத்துக் கூறும் நாஞ்சில் நாடன், இந்த சுயமரியாதை உள்ள இளைஞனை கதைச் சூழலுக்குத் தக்கவாறு காரண – காரியங்களோடு வளைக்கிறார்.

"இரண்டு வருடமாக வேலை தேடி எனக்கே நம்பிக்கைகள் நச்சரவுகள் தீண்டி நசித்தப் போகும் போது, தன் மகன் வேலைக்குப் போவான்; வீட்டின் கஷ்டத்துக்கு விடிவு பிறக்கும் என்று எண்ணி இருந்த அம்மாவின் எதிர்பார்ப்புகள் இடிந்து நொறுங்கிப் போவதில் என்ன ஆச்சரியம் இருக்க முடியும்?

தன் தோளிலிருக்கும் சுமையில் ஒரு பகுதியை இவன் தாங்கிக் கொள்ள மாட்டானா? ஒத்தியிலிருக்கும் பனையடித்துண்டத்தைத் திருப்ப முடியாதா? மக்களாத் தட்டில் ஓடுகள் பிரிந்து ஒழுகுகின்றன. பனங்கைகளை மாற்றிப் புதிய கைகள் போட்டு, புது ஓடு பரப்ப முடியாதா? சுமாராக ஒரு பையனைப் பார்த்து லட்சுமியைத் தள்ளிவிட்டு விடலாகாதா? என்றெல்லாம் அப்பாவின் நியாயமான கனவுகள் நிர்மூலமாகிப் போனதில் குற்றம் சொல்ல என்ன இருக்கிறது?

**இந்த எண்ணங்களெல்லாம் ஒன்றின் மேல் ஒன்றாக எழுந்து அவன் உள்ளத்தை அழுத்தியது. இந்த நிலையில் பாலைவனத்தின் நடுவில் பசுஞ்சோலை தென்படுவதைப் போல, பெண் வீட்டுக்காரர்கள் நாடி வருகின்ற போது, வேலையும் அவர்களே வாங்கித் தருவதாக உறுதி சொல்லுகின்ற போது, அதைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற ஆசை அது பேராசையாகத்தான் இருக்கட்டும், எழுவதில் நியாமில்லை என்று சொல்லிவிட முடியுமா?** [64]

என்ற கேள்விகளோடு சிவதாணு தன் மான உணர்வினை விட்டுக் கீழிறங்கி தாய் தந்தையரின் இந்தத் திருமண ஏற்பாட்டிற்குச் சம்மதிப்பதற்கான எண்ண ஓட்டத்தினை

அவர் காரண – காரியங்களோடு விளக்குகிறார். இவை முற்றிலும் புனைவாக இல்லாமல் எதார்த்தத்தின் வெளிப்பாடாகவே உள்ளது.

**நோக்கு நிலை**

எழுத்தாளர் காணும் கோணமே' நோக்குநிலை எனப்படும். புதினத்தின் முக்கியமானக் கூறுகளில் ஒன்று இந்த நோக்கு நிலையாகும். 'ஒரு கதையை யாருடைய விழி வழியாகப் பார்க்கிறோம் என்பது தான் நோக்கு நிலையின் பிரச்சனை'

'கதை கூறும் முறை என்றும் இதைக் கூறலாம்' என்கிறார் கோ.வே. கீதா.

> **"ஆசிரியனுக்குக் கதையை யாரைக் கொண்டு கூற வைப்பது என்பதில் முழுச் சுதந்திரம் உண்டு. கதையைக் கூற அவர் பயன்படுத்தப் பல வழிமுறைகள் உள. தேர்வு அவருடையதே. அரிஸ்டாட்டில் கூறுவது போல, யார் கூறினால் கதை அமைப்பு சிறக்கும், வெற்றி பெறும் என்பதைச் சிந்தித்துச் செயலாற்ற வேண்டியது ஆசிரியனின் கடமை. கதை கூறும் கோணம் மாற்றப்படாது ஒரே சீராகச் செல்ல வேண்டும். இல்லையெனில் இயற்கையான அமைப்பையும் உணர்ச்சிகளையும் அது இழந்து விடக் கூடும். மேலும் கதையின் போக்குத் தடைப்படவும் நேரிடலாம்" என்று கூறுகிறார். [65]**

என்ற கூற்றுகளின் மூலம் எழுத்தாளருக்கு கதை கூறுவதில் நோக்கு நிலை முக்கியமானது என்பது உணரப்படுகிறது. புதினத்தில் இந்த நோக்குநிலை பற்றி முதன் முதலில் தெரிவித்தவர் லுபெக் (Lubbock) என்பவர் ஆவார். பின்னர் பாஸ்டர், பில்லிஸ் பென்ட்லி போன்றோர் விரிவாக ஆராய்ச்சி செய்து விவரித்துள்ளனர்.

எழுத்தாளர் ஒரு புதினத்தில் கதையைக் கூறுபவராகவும் கதையைக் காட்டுபவராகவும் என இரு நிலைகளில் செயல்படுகிறார். இதனை மா. இராமலிங்கம்,

> **"நாவற்கலையின் இருபெரும் கூறுகள் 'சொல்லுவதும்' காட்டுவதும் ஆம். நாவலாசிரியர் சில வேளைகளில் 'டேப்ரெக்கார்டர்' போலவும், சில வேளைகளில் 'கேமரா' போலவும் இயங்க வேண்டியிருக்கிறது. இரண்டுமாக மாறி மாறி அமையும் போதே நாவலின் இழைவமைதி**

**(Texture) சீர்படுகிறது. நாவலாசிரியர் தன் கதையைச் சொல்லவும் வேண்டும். இடையிடையே நிகழ்ச்சிகளை வாசகர் மனத்தில் பதியுமாறு காட்டவும் வேண்டும். இவ்வகையில் தொகையுரையும் (Summary) காட்சியுமே (Scene) அவருக்குப் பயன்படுகின்றன. தொகுத்தும் சுருக்கியும் சொல்லப்படுவது தொகையுரை, உள்ள உணர்வுகளை மெல்லத் தடவும் வகையில், எதிரே நடப்பது போல் காட்டப்படுவது காட்சி" ஆகும்.** [66]

இந்த வகையில் நாஞ்சில் நாடன் தம் கதைகளை வாசகனுக்கு படைத்து அளித்துள்ளார். நாஞ்சில்நாடன் புதினங்கள் அனைத்தும் இவருடையப் புதினங்கள் அனைத்தும் சொல்வதற்கும் கேட்பதற்கும் எளியனவாகவும் காட்சிப் பூர்வமாக காண்பதற்கு இனியனவாகவும் உள்ளன. ஒரு திரைப்படத்திற்கான அத்தனை தன்மைகளையும் கூறுகளையும் இவருடைய கதைகள் பெற்றுள்ளன. அந்த அடிப்படையிலேயே இவருடைய முதல் புதினமான 'தலைகீழ் விகிதங்கள்', 'திரைப்படமாக எடுக்கப்பட்டுள்ளது. மற்றப் புதினங்களும் அந்தத் தகுதியை நிரம்பப் பெற்றுள்ளதாகவே இருக்கின்றன. எனவே புதின உத்திகளில் முதன்மையானதும் முக்கியமானதுமாக இந்த நோக்கு நிலை திகழ்கிறது. இதனை மா. இராமலிங்கம்,

**"நாவற் கலையில் வேறு எதனையும் விட முதன்மையானது கதை கூறுவோர் எந்தக் கோணத்தில் நின்று கதையைச் சொல்கிறார் என்று காட்டும் 'நோக்குநிலையே' (View Point) ஆம். தான் சொல்ல விழையும் ஒன்றனை விளக்குவதற்கும், தெளிவு படுத்துவதற்கும், அதற்கும் மேலாக அதை நம்பத்தக்க விதத்தில் காட்டுவதற்கும் நாவலாசிரியருக்குத் தக்கதொரு 'நோக்குநிலை' தேவைப்படுகிறது. எனவே கதையை உருவாக்கிக் கொள்ளும் போதே நோக்கு நிலையையும் நிர்ணயம் செய்து கொள்ள வேண்டியவர் ஆகிறார் என்று கூறுகிறார்.** [67]

எனவே புதின ஆசிரியருக்கு நோக்கு நிலை என்பது கதை சொல்வதற்கான முக்கியக் காரணிகளில் ஒன்றாக உள்ளது.

# தொகுப்புரை

- நுவலுதல் என்பது சொல்லுதல், விளம்புதல், சுவைபடக் கூறுதல் எனப் பொருள்படும். ஒன்றை மனிதர்கள் மனம் கொள்ளும்படி திறம்பட உரைப்பதாகும். கதை நுவலுதல் என்பது தன் மனதில் உதித்தக் காட்சியை, ஒரு நிகழ்வைத் திருப்பங்களோடு விளம்புதல் என்பதாகும். எல்லா மனிதருக்குள்ளும் ஒரு கதை இருக்கிறது. அந்தக் கதையை உணர்த்தும் திறனைப் பொறுத்தே அந்தக் கதையின் உயிர்ப்பும் வாழ்வும் இருக்கின்றன. சொல்லப்பட்ட எல்லாக் கதைகளும் நீண்ட ஆயுளோடு வாழ்ந்ததில்லை. கதையும் அது உணர்த்தும் நீதியும் மனிதகுலத்தின் எண்ணத்தைத் தேவையைப் பூர்த்தி செய்யும் அதன் பாங்குமே அந்தக் கதையின் இருப்பை உறுதி செய்கிறது.
- கதையின் இனிமை அதிகரிக்க கதைப்பின்னல் அவசியமாகின்றது. கதைப் பின்னல் சிறந்த நாவல்களில் இழுப்பு விசை (Tension) அறியும் ஆர்வ நாட்டம் (curiosity) எதிர்ப்பார்ப்பு முறை (suspense), குறிப்பு முரண் (Irony) முதலியன அமைந்திருக்கும். இவையனைத்தும் கதைப்பின்னலை முன்னோக்கி இயக்கும் போது தான் நாவல் அழகு பெறுகிறது என்று கூறுகிறார் மா. இராமலிங்கம், அந்த வகையில் நாவலின் அழகிற்கும் சுவைக்கும் காரணமாக இருக்கின்ற கதைப்பின்னல் நாஞ்சில் நாடனின் புதினங்கள் எங்கும் விரவியிருப்பதைக் காண முடிகிறது.
- முதல் இரண்டு நாவல்களைப் படித்த பட்டதாரிகள் எதிர்கொள்ளும் வேலையில்லாத் திண்டாட்டங்கள், சமூக இழிவுகள், பல்வேறு இன்னல்கள் என இளைஞர்கள் குறித்தக் கவலைகளை வெளிப்படுத்திய நாஞ்சில் நாடன் 'மாமிசப் படைப்பு' என்னும் நாவலில் நாஞ்சில் நாட்டில் வாழும் வேளாண் குடி மக்களை, அவர்கள் வாழ்வில் எழும் சிக்கல்களை, முரண்பாடுகளை, விரோதங்களை அதனால் எழும் விபரீதங்களை எதார்த்த நிலையில் படைத்துள்ளார்.

- ❖ நாஞ்சில் நாடன் சமகாலத்துச் சூழலில் எழும் பிரச்சினைகளையும் அதற்கானத் தீர்வுகளையும் தம் படைப்பின் மூலம் வெளிக் கொணர்ந்தவர். இவரின் கதைகள் நுண்ணிய பார்வையைக் கொண்டு உணரத்தக்க வகையில் அமைந்துள்ளன. கதைகளில் காலப்பின்னணி தொடர்ச்சியோடு சொல்லப்பட்டுள்ளன.

- ❖ நாஞ்சில் நாடனின் புதினங்கள் காலத்தின் அருமை கருதி எழுதப்பட்டப் புதினங்களாகவே இருக்கின்றன. ‘சதுரங்கக் குதிரை’ புதினத்தில் கதையின் தலைவன் நாராயணன் மும்பையில் வேலை பார்க்கிறான்.

- ❖ கதை சொல்லும் முறைமையில் நாஞ்சில் நாடன் தனக்கெனத் தனித்த கொள்கையுடையவராகத் திகழ்கிறார். நடைமுறைக்கு ஒவ்வாத கருப்பொருளை அவர் கதைகளில் கையாளவில்லை. தான் வாழ்ந்த வாழ்க்கையையும் தன் முன்னோர் வாழ்க்கையையுமே அவர் படைப்பாக்க முன் வந்துள்ளார்.

- ❖ எனக்குத் தெரிந்த வாழ்க்கையைப் பாசாங்குகள் அற்றுச் சொல்ல விரும்பிய எனக்கு பாசாங்குகள் அற்ற மொழி தேவையாக இருந்தது. சாதாரணமாக வாழ்க்கை அனுபவத்தை மொழியில் வசப்படுத்த முயலும் போது ஓர் இடைவெளி ஏற்பட்டுப் போகும். படைப்பாளியால் வெற்றி கொள்ள முடியாத சிக்கல் இது. இந்த இடைவெளியைக் கடந்து படைப்பாளியின் அனுபவத்தை மொழியினூடாக வாசகனுக்குச் சாத்தியமாக்கும் நிலை தான் படைப்பு.

- ❖ அனுபவத்துக்கும் வெளிபாட்டுக்கும் இடையிலான இடைவெளியைக் குறைத்துக் கொள்ள எனக்குத் தென்பட்ட வழி, படைப்பின் மொழியாகப் படைப்பு என தன்னுடைய நாவல்கனின் வழி மனிதன் தொடக்க நிலையில் வாழ்வை தொடங்குவதிலிருந்து பல்வேறு சமூகச்சிக்கல்களை எதிர்கொள்ளுவது வரை நிகழ்வுகளின் நினைவோட்டமாகவே படைத்தளித்துள்ளார்.

# அடிக்குறிப்புகள்

1. ஜெயமோகன், பூக்கும் கருவேலம், ப.33
2. நாஞ்சில் நாடன், நஞ்சென்றும் அமுதென்றும் ஒன்று, ப.22
3. இரா. பாலசுப்பிரமணியம், நாஞ்சில் கலையியல், ப.
4. மேலது, ப.23, 25
5. மேலது, ப.24
6. மா.இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.107
7. மேலது, ப.110
8. மேலது, ப.111
9. மேலது, ப.110
10. மேலது. ப.114
11. நாஞ்சில் நாடான், என்பிலதனை வெயில் காயும், ப.10
12. நாஞ்சில் நாடன், மாமிசப் படைப்பு, ப.10
13. நாஞ்சில் நாடன், தலைகீழ் விகிதங்கள், ப.23
14. நாஞ்சில் நாடன், மாமிசப் படைப்பு, ப.29
15. தலைகீழ் விகிதங்கள், ப.19
16. மேலது, ப.19
17. மேலது, ப.20
18. மேலது, ப.25
19. மேலது, ப.27
20. நாஞ்சில், மிதவை, பக்.11, 12
21. நாஞ்சில் நாடன்,சதுரங்கக் குதிரை, பக்.24, 25
22. மா. இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.142
23. நாஞ்சில் நாடன், நஞ்சென்றும் அமுதென்றும் ஒன்று, ப.24
24. ஆ.இரா. வேங்கடாசலபதி, நாவலும் வாசிப்பும், ப.114
25. நாஞ்சில் நாடன், நஞ்சென்றும் அமுதென்றும் ஒன்று, ப.30

26. ஆ.இரா. வேங்கடாசலபதி, ப.115, நாவலும் வாசிப்பும், ப.115
27. பெ. செல்வதுரை, தமிழ்நாவல்களில் எதார்த்தவாதமும் நாஞ்சில்நாடனும் நோக்கு இதழ், ப.137
28. எஸ். தோதாத்ரி, தமிழ் நாவல்கள், சில ஆய்வுகள், ப.37
29. மா. இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.26
30. நாஞ்சில் நாடன், தலைகீழ் விகிதங்கள், ப.143
31. மேலது, பக்.143, 144
32. நாஞ்சில் நாடன், என்பிலதனை வெயில் காயும், ப.185
33. மேலது, ப.186
34. மா. இராமலிங்கம் நாவல் இலக்கியம், ப.167
35. நாஞ்சில் நாடன், மாமிசப் படைப்பு, முன்னுரை
36. மேலது, ப.64
37. மேலது, ப.66
38. மேலது, ப.67
39. நாஞ்சில் நாடன், சதுரங்கக் குதிரை, ப.18
40. மேலது, ப.18
41. மேலது, ப.23
42. இரா. பாலசுப்பிரமணியன், நாவல் கலையியல், ப.24
43. நாஞ்சில் நாடன், மிதவை, ப.13
44. மேலது, ப.14
45. மேலது, ப.14,15
46. நாஞ்சில் நாடன், எட்டுத்திக்கும் மத யானை, ப.265
47. கோ.வே.கீதா, தமிழ் நாவல்கள், ப.34
48. மேலது, ப.35
49. நாஞ்சில் நாடன், தலைகீழ் விகிதங்கள், ப.9
50. மேலது, ப.12
51. கோ.வே.கீதா, தமிழ் நாவல்கள், ப.39

52. மேலது, ப.39

53. நாஞ்சில் நாடன், தலைகீழ் விகிதங்கள், ப.294

54. கி.வா. ஜெகந்நாதன், தமிழ் நாவலின் தோற்றமும் வளர்ச்சியும், ப.34

55. நாஞ்சில் நாடன், என்பிலதனை வெயில் காயும், ப.6

56. க.கைலாசபதி, நாவல் இலக்கியம், ப.

57. கோ.வே.கீதா, தமிழ் நாவல்கள், ப.58

58. பிரம்மராஜன், எதார்த்த வாதமும் தமிழ் நாவல்களும் கருத்தரங்கக் கட்டுரைகள் பக்.33–34

59. சி.சு.செல்லப்பா, நடப்பியல், சுபமங்களா, செப். 1992, ப.5–7

60. எஸ்.தோதாத்திரி, தமிழ் நாவல், சில அடிப்படைகள், ப.8

61. நாஞ்சில் நாடன், தலைகீழ் விகிதங்கள், ப.13

62. மேலது, ப.32

63. கோ.வே. கீதா, தமிழ் நாவல்கள், ப.120

64. மா. இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.135

65. மா. இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.124

66. மேலது, ப.128.

67. மேலது, ப.132.

## இயல் இரண்டு

# மாந்தர் புனைவு

தற்கால இலக்கிய வடிவங்களில் புதினமும் ஒன்று ஆகும். புதினம் நெகிழ்வுத் தன்மை உடையதாகவும், ஆற்றல் மிக்கதாகவும் மக்கள் போற்றும் மகத்தானதாகவும் திகழ்கிறது. எந்த ஓர் இலக்கியமாக இருந்தாலும் ஏதோ ஒரு கருத்தை உணர்த்துவதாக அமையும். அவ்வாறு சொல்லவரும் கருத்தைச் சில பாத்திரங்களின் மூலம் வெளிப்படுத்துவர். தான் கண்ட உண்மைகளைப் பிறிதோர் வடிவத்தில் உருவாக்கிக் காட்டும் போது வாழ்க்கையின் உண்மைகளைப் பற்றி ஓரளவு அறிந்து கொண்ட உணர்வு ஏற்படுகிறது.

புதினக் கூறுகளுள் முதன்மையான ஒன்றாகத் திகழ்வது கதைமாந்தர் படைப்பு ஆகும். கதை மாந்தரைப் படைக்கின்ற போது, நேரில் காண்பதுபோன்று படைத்தல் படைப்பின் சிறப்பு ஆகும். வாழ்க்கையில் காணும் மாந்தர்களைப் போன்று புதினத்தில் படைப்பது அப்புதின ஆசிரியரின் திறனாகும். கதைமாந்தர்களை ஆதாரமாகக் கொண்டே ஒரு புதினம் வெற்றி பெறுகின்றது. இஃது ஆசிரியரின் படைப்பாற்றலைக் காட்டுகிறது. அந்த வகையில் நாஞ்சில் நாடனின் கதைமாந்தர் புனைவுத்திறன் இவ்வியலில் ஆராயப்பெறுகின்றது.

**கதைமாந்தர்**

கதைமாந்தர் புனைவு கதையில் சிறப்பாக அமைய வேண்டும். கதையின் இயல்பும் தனித்தன்மையும் அளவாக ஒருங்கிணைந்த பாத்திரப்படைப்பே கதைக்குச் சிறப்பளிக்கும் கதை நிகழ்வினைத் தரமுடையதாகவும் பயனுடையதாகவும் செய்வது பாத்திரப் படைப்பைப் பொறுத்தே அமைகிறது. நாளடைவில் கதை மறந்தாலும் அதன் பாத்திரங்கள் நம் நெஞ்சில் நீங்கா வண்ணம் இருக்கும்.

> **“புதினத்தில் உறுப்புகளில் பெரிதும் நோக்க வேண்டியது பாத்திரங்களாகும். புதினத்தில் வரும் பாத்திரங்கள் நடமாடித் திரியலாம்,**

**பேசலாம். ஆனால் அது பல சமயங்களில் உயிருடன் நம் போல இருப்பதாக தம்மால் நினைக்க முடிவதில்லை.”** [1]

பாத்திரங்கள் கற்பனையானதாக இருக்கலாம். ஆனால், உண்மைப் பாத்திரம் போல் படிப்பவரின் மனதில் பதிய வேண்டும். அவ்வாறு பாத்திரம் அமைந்தால் அது சிறப்பானதாகும்.

**“நாவலின் கதைக் கருவைவிட இன்றியமையாதது கதைமாந்தர் படைப்பே ஆகும். அதுவே கதைக்கருவுக்குப் பொருளும், உயிர்ப்பும் தரக்கூடியதாகும்.”** [2]

கதை என்ற உடலுக்கு மாந்தர் உயிர்போன்றது. அவ்வாறு மாந்தர் அமைந்தால் புதினத்தின் தலைவிதியை நிர்ணயிக்கும்.

**“ஒரு நாவலுக்குக் கரு இன்றியமையாததே. ஆனால், அது கதையின் எலும்பே ஆகும். கருவின் சிறப்பு வாய்ந்த ஒன்று – கருவுக்குப் பொருளையும், பொருண்மையும் உயிரையும் தரவல்ல ஒன்று உண்டு அது பாத்திரமாகும்.”** [3]

எனவே, புதின இலக்கியத்திற்குக் கதைமாந்தர். மிக முக்கியமானது. கதை மாந்தரின்றி புதினம் இயங்க முடியாது என்பதை அறிஞர்களும் திறனாய்வாளர்களும் தெரிவிக்கின்றனர்.

**பாத்திரப் படைப்பின் சிறப்பு**

பாத்திரப் படைப்பு புதினங்களுக்கு இலக்கிய மதிப்புத்தேடித் தரும் கருவியாகும். கதை மாந்தர் இலக்கிய ஆசிரியரின் ஆற்றலுக்கும் கற்பனைக்கும் தக்கச் சான்றாகும். பாத்திரம் கதைக் கோப்பை உருவாக்க, கதைக்கோப்பு பாத்திரத்தின் விளைவாகவும் அதனைச் சார்ந்ததாகவும் அமைகிறது. நாவலின் கூறுகளுள் சிறப்புடையது பாத்திரப் படைப்பாகும்.

அறிவு, உணர்ச்சி, மனம், சுயசிந்தனை, குணம் பண்புகள், காலச்சூழ்நிலைகள் ஆகியவற்றினைக் கூர்ந்து அறிந்து அனுபவமாக வெளிப்படுத்தப்படுவதே பாத்திரப்படைப்பாகும்.

> **“ஒரு நாவலின் கருவுக்கு உயிரும் உணர்ச்சி மிக்க வாழ்வும் கொண்டு வாழும் ஒரு நாவல் கூறு பாத்திரப் படைப்பே ஆகும். நாவலின் ஏனைய கூறுகளுக்கு இந்தச் சிறப்பு இல்லை”** [4]

என்ற இரா.மோகன் கூற்றில் பாத்திரப் படைப்பின் சிறப்பை அறியலாம்.”

> **“புதினம் என்ற ஒரு முழுவடிவத்தில் கதைமாந்தர் படைப்பு ஒரு கூறாகும். இருப்பினும், அஃது இன்றியமையாத பகுதி என்பதும இப்படைப்புத் தன்மையைக் கொண்ட பிற பகுதிகள் விளக்கம் பெற வேண்டும் என்பதும் தெளிவாகும்.”** [5]

தலை சிறந்த உலகத்துப் பெரும் புதினங்களையெல்லாம் நினைக்கிற போது முதலில் நினைவுக்கு வருவது கதைமாந்தர்களேயாகும்.

**“1. மிகக்குறைந்த அழுத்தமே பாத்திரத்தின் தோற்றத்திற்கு தருதல்**

**2. அதற்கு அடுத்தபடி கூடுதல் அழுத்தம் பாத்திரத்தின் செயல்களுக்குத் தருதல்**

**3. அதனையும் விட அதிக அழுத்தம் பாத்திரங்களின் எண்ணங்களுக்குத் தருதல்.”** [6]

என்று திறனாய்வாளர்கள் கருதுகின்றனர். கதைமாந்தர் கதையின் உயிரோட்டமாகவே திகழ்கின்றனர் எனலாம்.

**கதைமாந்தரைப் படைக்கும் முறை**

கதை மாந்தர்களைப் படைக்கும்பொழுது ஊன்றிப் படைக்க வேண்டும். அப்படிப் படைக்கப்படும் மாந்தர் படைப்பு படிப்பவர் மனதில் ஒரு நிலையான இடத்தைப் பிடிக்கும். கதைக்கு வெளியில் இருந்து உண்மை மாந்தர்களின் எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் புதின ஆசிரியர் கதைமாந்தர் வடிவத்தில் வெளிப்படுத்தும் முறை இருவகைப்படும். நேர்முறை முறை (Direct Method) அல்லது பாகுபாட்டுமுறை

(Analytical Method) நேர்முகமில்லாத முறை (Indirect Method) என்ற இரண்டு விதமான முறைகளில் மாந்தரைப் படைக்க வேண்டும். ஆசிரியர் திட்டமிட்ட ஒரு மாந்தரைப் படைப்பதில்லை. கதைக்கேறப்க் கற்பனையில் ஊறியதையே மாந்தராய்ப் படைக்கின்றனர்.

**“பாத்திரங்களை ஒரு தன்மை பாத்திரம் (Flat character) மாறும் தன்மையுள்ள பாத்திரம் (Round character) எனத் திறனாய்வாளர் இருவகைப் படுத்துவர்”**[7]

மாந்தர் இருவகையால் செயல்பாடுகளைச் செய்ய வேண்டும். இதனால், அம்மாந்தரின் தனிப்பண்புகள் வெளிப்பட்டு கவனத்தை ஈர்க்கும்.

கதை மாந்தரின்றிக் கதைகள் நடைபெறுவதற்கு வழியில்லை. கதை நிகழ்ச்சிகளை வழி நடத்துவோர் கதை மாந்தர்களேயாவர். கதை மாந்தரைப் படைக்கும்போது இரு வகையாய்த் தம்முடைய கதை மாந்தரைப் புதினப் படைப்பாளர்கள் படைக்கின்றனர்.

**“ஒன்று நேரடி முறை, மற்றொன்று நாடகமுறை, முதல் முறையில் ஆசிரியரே பாத்திரத்தைச் சித்தரிப்பார். அதன் எண்ணங்கள், உணர்வுகள், செயல்கள், விழைவுகள் ஆகியவற்றை அவரே விளக்குவார். நாடக முறையிலான பாத்திரப்படைப்பு, ஒரு பாத்திரத்தின் பேச்சு, நடத்தை, எண்ணம் இவற்றிலிருந்து கற்போரே அதன் அருமை மனப்போக்கு, பிற மாந்தர்களுடனான அதன் உறவு ஆகியவற்றை உணரும் வண்ணம் அமையும்.”** [8]

எனும் கூற்றுப்படி நாஞ்சில் நாடன் தம் நாவல்களில் நேரடி முறை, நாடகமுறை ஆகிய இவ்விரண்டு முறைகளையும் கையாண்டுள்ளார்.

### புதினங்களில் கதை மாந்தர் பெறும் இடம்

வாழ்க்கையைச் சித்தரிக்கும் இலக்கிய வகைகளில் நாவலும் ஒன்றாகும். வாழ்க்கையில் காணக்கூடிய பாத்திரங்களையும் அவர்களுக்கு நேரக்கூடிய

நிகழ்ச்சிகளையும் கொண்டு ஆசிரியர் நம் கண் முன் வாழ்ககை நடப்பது போன்ற அரிய படைப்பைச் செய்கிறார்.

**“நாவல் இலக்கியம் நடைமுறைச் சமுதாயத்தின் எல்லா மூலைகளையும் படம் பிடித்துக் காட்டி, மக்கள் மனதில் புதிய திருப்பங்களை, புதிய எண்ணங்களை ஏற்படுத்தி, படிப்போரின் உலக அறிவை விரிவடையச் செய்யும் மக்கள் இலக்கியமாகத் திகழ்கிறது”** [9]

என்பார் சா.சோமசுந்தரம். சமூகத்தைப் பற்றி எடுத்துரைக்கும் சமூக நாவல்களில் பாத்திரப்படைப்புப் புகழ் பெற்று விளங்கும்

புதினங்களுக்கு உயிர்ப்பும், பொருண்மையும் தரக்கூடியது கதைமாந்தர் என்பதை இக்கருத்துக்கள் தெளிவுறுத்துகின்றன.

**“சிறந்த புதின ஆசிரியர்கள் படைத்த புதினங்களை நாம் படிக்கும்போது அவற்றின் பாத்திரங்கள் தம் கற்பனையில் உயிருள்ளவர் போல் இயங்கும். இவ்வாறு உயிருள்ளவை போலத் தோன்றும் பாத்திரப் படைப்புடைய புதினமே சிறப்புடையதாய் மதிக்கப்பெறும்.”** [10]

என்று தா.ஏ.ஞானமூர்த்தி குறிப்பிடுவது நோக்கத்தக்கது. புதினத்தின் பாத்திரங்கள் சமுதயாத்தின் கூறுகள் என்பதை,

**“சமூகப் புதினங்களில் கதைமாந்தர் படைப்பாளரின் இரக்கத்திலிருந்தும் உயிர் மூச்சிலிருந்தும், இதயத் துடிப்பிலிருந்தும், பிறந்தவர்களாகவே காணப்படுகின்றனர். புதினம் என்பது சமுதாயச் சார்புடையது. சமுதாயம் மக்களைக் கொண்ட ஒரு நிறுவனம். நடப்பியல் நிலையில் சமுதாய வாழ்க்கையைச் சித்தரிக்க முயலும் புதிய ஆசிரியர் யாராக இருந்தாலும் சமுதயாத்தைச் சீல்குலைக்கும் கொடிய நோய்களுக்கு மருந்தாகக் கருத்துகள் சிலவற்றை வெளிப்படுத்தாமல் இருக்க இயலாது”** [11]

எனலாம்.

பாமர மக்களின் உணர்வுகளை வாழ்வியல் கூறுகளைப் புதினங்களில் கதைமாந்தர்கள் வெளிப்படுத்துகின்றார். கதாபாத்திரங்களில் ஊடாகச் சமுதாய மக்களக்குக் கருத்துகளைத் தெரிவிக்கின்றனர்.

ஆகவே, புதினப் படைப்பாளர் தாம் கூற விழையும் கருத்துத் தாங்கிகளாகவே தம் கதை மாந்தரைப் படைக்கின்றனர். சில படைப்பாளர் தம் கருத்துகளைத் தெளிவுபடுத்துவதற்கென்றே சில மாந்தரைப் படைத்துக் கதையில் உலவ விடுவதுண்டு.

**படைப்பாளரின் வெற்றி**

புதினப் படைப்பில் கதை மாந்தர் தெரிவும் கட்டமைப்பும் ஆசிரியரின் திறனையொட்டி அமைகின்றது. மாந்தர்களின் செயல்பாடுகளை ஆசிரியர் கூறும்போது நுட்பமான முறையில் அறிமுகம் செய்வதால் அம்மாந்தர் படைப்பு கதையில் வெற்றிதரும். அதனை வருணிக்கும் ஆற்றல் ஆசிரியர் திறனைப் பொறுத்து அமைகிறது. ஒரு புதினம் வெற்றி பெறுவதற்கு கதை மட்டும் காரணமில்லை. கதை மாந்தர்களும் காரணமாகின்றனர். மாந்தர்களின் வெற்றியே படைப்பாளியின் வெற்றியாகும்.

பாத்திரப்படைப்பில் ஒரு புதிய ஆசிரியரின் வெற்றி நுட்பமாக வருணிக்கும் அவர்தம் திறனையொட்டி உள்ளது. இவ்வகையில் ஆசிரியர் சிறந்த மாந்தர்களைப் படைத்துத் தனக்கென்று ஒரு தனித்துவம் பெற்று வெற்றி கண்டுள்ளார். இஃது ஆசிரியரின் திறனைக் காட்டுகிறது. இதனால், இப்புதினம் சிறந்து விளங்குவதற்கும் காரணமாகவும் அமைந்துள்ளது.

இப்பாத்திரங்களைப் படைக்கும் ஆற்றல் வாய்ந்தவர்களாலேயே அவை படைக்கப்பெறும் முறையை விளக்க இயலாது மாந்தர் என்பது கதைக்கு மிகவும் இன்றியமையாத ஒன்றாகிவிட்ட நிலையில் அம்மாந்தர்களைப் படைத்த முறையினை ஆசிரியரே கூற முடியாது. ஏனெனில் திட்டமிட்ட ஒரு மாந்தரைப் படைப்பதில்லை. வாசகனின் மனதில் பதிய வேண்டும் என்ற கருத்திலேயே படைக்கின்றனர்.

இதில் சிலர் தோல்வியும், பலர் வெற்றியும் கண்டுள்ளனர். புதினம் தோன்றிய காலங்களில் வந்த புதினங்களில் பல மாந்தர்களைப் படைத்து வெற்றியும் பெற்றனர். ஆனால், தற்போது அப்படியில்லை, குறைவான மாந்தர்களே இடம் பெறுகின்றனர். சொல்லப் போனால் மாந்தரே இல்லாமலும் கதைகள் வருகின்றன. அவை, வெற்றி பெறுவது படைப்பாளியின் திறன் கூறுகளைக் கொண்டே அமைகிறது.

**சிவதாணு**

'தலைகீழ் விகிதங்கள்' புதினத்தில் தலைமை மாந்தராக வருபவர் சிவதாணு. படித்துப் பட்டம் பெற்றும் வேலை கிடைக்காத சூழ்நிலையில் ஒரு பணக்கார வீட்டிற்கு வீட்டோட மாப்பிள்ளையாகச் செல்லும் சூழ்நிலை ஏற்படுகிறது. வீட்டோட மாப்பிள்ளை என்பது பணக்கார மாமனார் வீட்டின் சம்பளமில்லாத வேலைக்காரன் என்பதை உணர்ந்து கொள்கிறான். மானமும் சுயமரியாதையும் மிக்க இளைஞனால் இத்தகை "கட்டுக்குள் அடங்க முடியாது என்பதை உணர்த்தும் விதமான கதை மாந்தராகவே சிவதாணு வருகிறார்.

சொக்கலிங்கம் பிள்ளை தன் மகள் பார்வதிக்கு திருமணம் முடிக்க சிவதாணுவை பார்த்தபோதே அவருக்குப் பிடித்துப் போயிற்று, ஆனால், சிவதாணு திருமணத்திற்கு ஒத்திசைவாக தன் கருத்தைத் தெரிவிக்காமல் இருந்தது, அவனுடைய தன்மானத்தை அடையாளம் காட்டும் விதமாக இருந்தது. சண்முகம் பிள்ளை சிவதாணுவைப் பற்றி பேசும் போது

> **"பையனை பார்த்தேண்ணா உனக்கு இந்தக் கேள்வியே வராது இருவத்திமூணு வயசுதான் ஆச்சு! ஆனா பய நல்ல எடுப்பா இருக்கான்! ஒரு மூச்சு ஆளு... ஓரணை ஏரு கெதியா அடிப்பாண்ணா, அதுக்கு மேலே என்னாண்ணேன்? முதல்லே கல்யாணத்துக்கே அவன் உடை குடுக்கல்லே... என்னை வித்துப் போடலாம்னு பார்க்கேளா அப்படீண்ணு பெத்தவனைப் பார்த்துக் கேட்டாண்ணு அவ எங்கிட்ட சொல்லுகா... பொறகுகதான் எல்லாத்தையும் சொல்லி அவனை மனசிலாக்கியிருக்கா... பய சொரணையிலே கூடிவைனாக்கும்! சொல்லுகா.."** [12]

என்று சிவதாணுனைப் பற்றி பேசுவதிலிருந்தே அவன் மான உணர்வு வெளிப்படும் வகையில் உள்ளது. இத்தகைய சுயமரியாதை உணர்வோடு இருக்கும் ஒருவன் குடும்பச் சூழ்நிலையின் காரணமாக பெற்றோரின் வற்புறுத்தலுக்கிணங்க பணக்கார வீட்டுப் பெண்ணைத் திருமணம் செய்து கொள்வதன் விளைவாக, எத்தகைய மோசமானச் சூழ்நிலைக்குள் தள்ளப்படுகிறான் என்பது உணர்த்தப்படுகிறது.

சிவதாணுவின் மாந்தர் படைப்பை உணர்த்த வரும் நாஞ்சில் நாடன், சமகாலத்தில் நிலவும் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பவனாக அவற்றைச் புறந்தள்ளாதவனாக உணர்த்திக் காட்டுகிறார்.

> **“கெடுதல் செய்ய வேண்டும் என்ற நோக்கம் சிவதாணுக்குவுக்குக் கிடையாது. ஆனால், தெரிந்தே குற்றம் செய்கின்ற இந்த ஒட்டுண்ணிகளுக்குப் பதிலுக்குப் பதில் செய்துதான் தீர வேண்டும் என்பதில் அவன் உறுதியாக இருந்தான். இடது கன்னத்தில் அறைந்தால் வலது கன்னத்தைக் காட்டு என்ற கொள்கையில் அவனுக்கு நம்பிக்கை இல்லை அதுகோழைத்தனமான ஒரு சமூகத்தை உருவாக்குகிறது என்று நம்பினான். எனவே, இடது கன்னத்தில் அறைந்தவனின் இரண்டு கன்னத்திலும் அறைய வேண்டும் என்பதே அவனது சிந்தாந்தமாக உருவெடுந்திருந்தது.”** [13]

இத்தகைய சித்தாந்தப் போக்கினை மனதில் வரித்துக் கொண்ட ஓரிளைஞன் தன் வாழ்வின் எல்லா நிலைகளிலும் அந்தத் தன்மையிலிருந்து வழுவாமல் அந்த செல்வதை சிவதாணு கதைமாந்தர் படைப்பு தெள்ளியப் படமாக விவரித்துக் செல்கிறது.

**சிவதாணுவின் எண்ணம்**

பார்வதியை திருமணம் செய்துகொண்ட சிவதாணு எந்த வேலையும் இல்லாமல், வருவாய்க்கு எந்த வழியில்லாமல் இத்தகைய நிலைக்குத் தள்ளப்பட்டு விட்டோமே என்று வருந்துகிறான். பார்வதியின் தந்தை சொக்கலிங்கம் பிள்ளை வேலை கிடைக்கும் வரை அவர் நடத்தும் கடைகளைப் பார்த்துக்கொள்ள

வற்புறுத்துகிறார். ஆனால் சிவதாணுவின் மனம் அதற்குத் துளியும் உடன்படவில்லை. அதனால் சிவதாணு பார்வதியிடம்

> **“பார்வதி! உனக்கு அப்பா சொல்லுகபடி வேலை கிடைக்கதுரை நீயும் நானும் சுசீந்திரத்திலேயே இருக்கதுங்கது எனக்குச் சரியாத் தோணல்லே.. நேரம் போகல்லியோண்ணு நான் காப்பிக் கடையிலேயே உக்காந்து மேல் பார்க்கேண் வச்சுக்கோ... இல்லே நான் மாத்திரம் மூணு வேளையும் மூக்குப்பிடிக்கச் சாப்பிட்டுக் கிட்டு சொகமா இருந்துகிட்டா, என் கையை எதிர்பார்த்து அங்கே இருக்கவா என்ன கெதியாவா”** [14]

என்று தன் நிலையை விளங்குகிறான். திட்டம் போட்டு இந்தத் திருமணத்தை நடத்தி முடித்திருக்கிறார்கள் என்பதனை எண்ணி சிவதாணு உள்ளத்திற்குள் மருகுகிறார். தான் பெற்றிருக்கும் பட்டம் ஒரு பணக்காரப் பெண்ணிற்கு மாப்பிள்ளையாவதற்கான தகுதியா! என்று தனக்குள் கேள்வி எழுப்புகிறான். இன்றைக்கு சமூகத்தில் ஒவ்வொரு படிப்பிற்கும் ஒரு விலை இருப்பதை எண்ணிப் பார்க்கிறான்.

> **“இல்லாமல் என்ன? யார் ஒத்துக்கொண்டாலும் கொள்ளாவிட்டாலும் பெண் வீட்டின் பணம் பறிப்பதற்காகத்தான் படிப்பு பயன்படுத்தப்பட்டு வருகிறது என்ற உண்மை மறைந்துபோய் விடுமா என்ன? எம்.பி.பி.எஸ்–க்கு இவ்வளவு ரொக்கம். இத்தனை ஏக்கர் நிலம், நகை இவ்வளவு கார் அல்லது ஸ்கூட்டர் என்றும், இன்ஜினியருக்கு இவையிவை என்றும், பட்டதாரி கிளார்க்குக்கு இன்னின்ன என்றும், பரிதாபத்திற்கரிய பள்ளி ஆசிரியனுக்கு இத்தனை என்றும், சந்தை விலை வைத்திருக்கின்ற சமுதாயச் சீரழிவுகளில் படித்தவன் பண்டமாற்றாக மாறுவதில் என்ன வியப்பு இருக்க முடியுமா?”** [15]

பட்டம் முடித்தது மாமனார் காபி கடையில் வேலை பார்க்கவா! என்று மன உலைச்சலடைந்த சிவதாணு பல்வேறு இடங்களுக்கும் வேலை தேடி அலைந்தான்.

> **“ஆறுமுகநேரியில், சாரங்கா கெமிக்கல்லில் சிவதாணுவைப் பேட்டிக்கு அழைத்திருந்தார்கள். புள்ளி இயல் பிரிவில் உதவியாளன் வேலைக்கு.**

**அவனே விண்ணப்பித்திருந்தது. கணிதத்துடன் புள்ளி இயலையும் பட்டப்படிப்புக்கு எடுத்துக் கொண்ட புத்திசாலித்தனத்தை நினைக்கும் வாய்ப்பு. இத்தனை வருடங்களில் இன்றுதான் அவனுக்குக் கிட்டியது.**

**நாளை காலை பத்து மணிக்குப் பேட்டி இன்று இரவே போய்விடுவது நல்லது. நாகர்கோயிலில் இருந்து திருச்செந்தூருக்குப் பஸ் இருந்தது. ஆறு மணிக்குப் பஸ் பிடித்தால் எட்டரை மணிக்குப் போய்விட முடியும். அங்கு ஏதாவதொரு லாட்ஜில் இரவு தங்கிவிட்டுக் காலையில் அங்கிருந்து ஆறுமுகநேரிக்குப் போகலாம் என்று நினைத்தான்.''** [16]

ஒரு வேலை கிடைத்துவிட்டால் தன்னுடைய பிரச்சினைகளுக்கு ஒரு தீர்வினைக் கண்டுவிடலாம் என்று எண்ணினான். அப்போதுதான் தன் மனைவியின் மனதில் குடிகொண்டிருக்கும் இயற்கையான அந்தப் பிடிவாத குணத்தை வீட்டிலேயே தங்கிவிடவேண்டுமென்ற அந்த ஒட்டுண்ணி வாழ்க்கையை விடுவாள் என்று எண்ணினான்.

**''இப்போதுகூட ஒன்றும் குடிமுழுகிவிடவில்லை. எங்காவது ஒரு வேலை கிடைக்குமானால் இந்தச் சூழ்நிலையிலிருந்து பிய்த்துக்கொண்டு போய்விடலாம். தன்னுடன் தனிமையில் தன் சம்பாத்தியத்தில் குடும்பத்தின் பொறுப்பை ஏற்று வாழத் தொடங்கினால், பார்வதியின் இயற்கைக் குணத்தைப் பிடித்திருக்கும் இந்தப் பாசி அகன்று விடாதா? தன்மானக் குற்றம் இல்லாமல் வரும் சம்பளத்தில் தன் குடும்பச் செலவைச் சிறுகச் செய்து, முடிந்த அளவுக்கு வீட்டுக்கும் உதவலாம்.** [17]

என்று எண்ணினான். ஆனால் இதையெல்லாம் கற்றுக்கொண்டான்.

**சிவதாணு – பார்வதி முரண்பாடு**

சிவதாணு நினைத்தபடி ஆறுமுக நேரியில் வேலை கிடைத்தது. திருமணத்திற்கு முன்பும் பின்பும் சிவதாணு அடைந்த துன்பங்களுக்கெல்லாம் ஒரு வலிநிவாரணியாக அந்த வேலை அமைந்தது. வேலை கிடைத்ததும் மனைவி பார்வதி தன்னுடன் வாழ்க்கை நடத்த வராதது அவனுக்கு வலியைத் தந்தது.

**“இது என்ன பிடிவாதம்? இரண்டு மூன்று மாதங்கள் தன்னுடன் வந்து பார்வதிக்குத் தங்கினால் என்ன? என்ன குறைந்து போகும்? குழந்தை உண்டாகிற பெண்கள் எல்லாரும் அம்மா வீட்டிலேயே அசையாமல் உட்கார்ந்து விடுகிறார்களா? இந்தத் தனிமையும் அதன் கொடுமையும் அவனைத் தவிக்க வைத்தன. மனம் திறந்து பேசுவதற்கு மனிதர்களே இல்லாத அந்தகாரத்தில் உட்கார்ந்து சிந்தித்து சிந்தித்து அதனுள்ளேயே மூழ்கி, முக்குளி போட்டு நினைத்தாலும் வெளியே வர முடியாத ஆழத்தில் அமிழ்ந்து.”** [18]

என்று பார்வதியை நினைத்து உடைந்து போனான் சிவதாணு. கணவன் என்ற பெயரில் தன் வீட்டு வேலைக்காரனாக இருக்க வேண்டும் என்று மனைவியே நினைப்பது எத்தகைய மனநிலைக்குப் பணக்காரப் பெண்கள் தள்ளப்பட்டிருக்கிறார்கள் என்பதை பார்வதியின் படைப்பு அடையாளம் காட்டுகிறது.

**பார்வதி**

‘தலைகீழ் விகிதங்கள்’ புதினத்தில் பார்வதி முதன்மை மாந்தராகப் படைக்கப்பட்டிருக்கிறார். சிவதாணுவின் மனைவியாக வரும் பார்வதி மேட்டிமையின் அடையாளமாகத் திகழ்கிறார். கணவனின் சூழலைப் புரிந்து தலைவனுக்கு ஆறுதலளிக்காத, தந்தையின் பணக்கார வாழ்வையைத் தொடர வேண்டும் என எண்ணும் கதைமாந்தராக வருகிறாள்.

சிவதாணுவின் குடும்பம் மிகவும் வறுமையில் வாடும் குடும்பம். சிவதாணுவின் பட்டப்படிப்பு ஒன்றே அவர்களுக்கான ஆறுதல், சிவதாணு வேலை கிடைத்து இந்தக் குடும்பத்தைக் கரைச்சேர்க்க வேண்டும் என்ற நிலையில் பார்வதியை திருமணம் செய்துகொள்ள வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. தன் சொந்தச் செலவிற்குக் கூட பணமில்லாமல் தவிப்பது சிவதாணுவை துன்பத்தில் ஆழ்த்தியது. அப்போது

**“சிவதாணுவின் பக்கத்திலிருந்து எழுந்த பார்வதி. பெட்டியைத் திறந்தாள். சாரி, ஜாக்கெட் இவற்றை வெளியே எடுத்து வைத்தாள். அவன் சட்டை,**

**வேட்டியையும் எடுதது கொக்கியில் மாட்டினாள். திடீரென நினைத்துக் கொண்டவளைப் போன்று, பெட்டியின் அடியில் கிடந்த மணிப்பர்சைத் திறந்து, அதியீலருந்து இரண்டு ஐந்து ரூபாய் நோட்டுக்களை எடுத்துக் கையில் வைத்துக்கொண்டு, காலிபர்சை பெட்டியிலேயே போட்டாள். பணத்தை எடுத்துக் கொண்டு அவள் பக்கத்தில் வந்து மீண்டும் அமர்ந்தாள். அவன் எண்ணங்களைப் படித்து விட்டவளைப் போல''** [19]

இந்தச் சூழ்நிலை சிவதாணுவில் சகித்துக் கொள்ள முடியவில்லை. அதனால்அவன் பார்வதியைப் பார்க்க, அவள்

**''இன்னும் என்னதான் முகத்திலே பார்க்கிகோ? சில்லறை சில்லறையா எங்கிட்டே நூத்திருவது ரூவா இருந்தது. அப்பப்போ யாராவது குடுத்தது. அம்மாகிட்ட குடுத்ததுக்கு எங்கிட்டேயே இருக்கட்டும்ணுட்டா. அதிலேதான் ஒரு கொட்டை நெல்லு வாங்கதுக்கு நேத்தைக்கி அத்தையிட்ட நூத்திப்பத்து ரூவா குடுத்தேன்.''** [20]

என்று பேசியது சிவதாணுவிற்கு வலியை ஏற்படுத்தியது. இந்த நிலையை எப்படி கடக்கப் போகிறோம் என்று எண்ணிப் பார்த்தான்.

சிவதாணுவிற்கு வேலை கிடைத்து, பார்வதியை அழைத்துச்செல்ல முயற்சித்தபோது அவள் துளியும் அசைந்து கொடுக்கவில்லை. மனைவி கருவுற்றிருக்கும் சூழலில் உடன் வைத்துப் பார்த்துக் கொள்ள வேண்டுமென்ற சிவதாணுவின் எண்ணம் நொறுங்கிப் போனது

**''சிவதாணுவின் உற்சாகமெல்லாம் வற்றிப் போயிற்று. பார்வதியின் கண்களில் தெரிந்த துவேஷம் அவனைத் திடுக்குறச் செய்தது. அவள் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான். அங்கே வெறுப்பும் அலட்சியமும் அளவிட முடியாததாக... நீ எத்தனை தரம் கூப்பிட்டாலும் சரி! நான் இங்கிருந்து அசையப் போவதில்லை. என்ற துர்மானம் அதில் தொனித்தது. கன்னத்தில் இரண்டு அறை கொடுத்து கையைப் பிடித்துக் கரகரவென்று**

**இழுத்துக்கொண்டு போயிவிடலாமா என்று அவனுக்கு ஆவேசம் வந்தது.''**[21]

இவ்வாறு பார்வதி சிவதாணுவிற்கு துன்பம் தருபவளாக, மனம் நொந்து போகும்படி செல்பவளாகவே நடந்து கொண்டதால், கணவனின் சுயமரியாதையுள்ள வாழ்வில் பங்கெடுத்துக் கொள்ளாமல் தந்தையின் வசதியை வாழ்வில் தன்னைத் தக்க வைத்துக் கொள்ள விருப்பம் தெரிவிப்பவளாகவே பார்வதி கதையில் வருகிறார்.

**சொக்கலிங்கம்பிள்ளை**

சொக்கலிங்கம் பிள்ளை பார்வதியின் தந்தையாக வருகிறார். வீம்பும், பிடிவாதமும், முன்கோபமும் கொண்டவராகத் திகழ்கிறார். அந்த முன்கோபம் பார்வதியின் வாழ்வில் மிகப்பெரிய பாதிப்பை, உருவாக்கி அவளை வாழாவெட்டியாக்குகிறது. இந்த வேதனை அவரை வாட்டி வதைத்தது. மனைவி நீலாப்பிள்ளையின் கோபத்தைக் கண்டுஅவர் செய்வதறியாது திகைத்தார்.

**''அந்த வேதனை சொக்கலிங்கம் பிள்ளைக்கு இல்லையா? பிடிவாதமும் வெறுப்பும் இருந்தபோதிலும், கரையற்று, கண்கலங்கி பார்வதி கண்ணில் படுகின்றபோதெல்லாம் எதையோ பறிகொடுத்த வேதனை உள்ளத்தைப் பிசைந்தது.''** [22]

ஆனாலும் மாப்பிள்ளை சிவதாணுவை அடித்து வீட்டை விட்டுத் துரத்தியது. அவரை மேலும் மேலும் துன்பத்தில் ஆழ்ந்தியது, மனைவி நீலாப்பிள்ளை அவரை மாப்பிள்ளையை அழைத்து வருமாறு வற்புறுத்த, அதற்கு சொக்கலிங்கம்பிள்ளை

**''அதுக்கு இப்ப என்னை என்ன செய்யச் சொல்லுகே? மாப்பிள்ளைக்காரன் கால்லே போயி விழச் சொல்லுகியா? என் முன்னாள் போட்டு தடித்தனமா அடிச்சதுக்கு நான் நாலு வார்த்தை சொல்லிவிட்டேன். அதுக்காச் சுட்டி? நீ இப்பம் இப்படிப் பேசுகே... அப்போது நீ மட்டும் நின்ன நிலையா நிண்ணே? வெயிலு, பிள்ளை கறுத்துப் போகும்... பச்சைப் பிள்ளையையும் போட்டுக்கிட்டு எப்படிக் குடும்பம் நடத்தம்ணு செல்லம் குடுத்து அந்தப்**

**பிள்ளையை நல்லா உருவேத்தின...இப்போ அம்மாடி ஆத்தாடிண்ணா யாரு என்ன செய்யது?"** [23]

என்று எதிர்கேள்வி எழுப்பினார். நடந்த பிரச்சினைகளுக்கு தான் மட்டும் காரணம் இல்லை என்றும் மனைவி நீலாப்பிள்ளையின் செயலும் இதற்குக் காரணம் என்பதை எடுத்துரைத்தார்.

**நீலாப்பிள்ளை**

நீலாப்பிள்ளை பார்வதியின் தாய் ஆவார். ஆணவமும் பணக்காரத் திமிரும் மிக்க கதைமாந்தராக வருகிறார். சிவதாணுவை தன் மகளுக்கு மாப்பிள்ளையாக முடிவு செய்தபோது, சிவதாணுவின் குடும்பம் கிராம வாழ்க்கை, போன்றவற்றைக் அறிந்து கொண்டபோது நீலாப்பிள்ளை,

**"அதெல்லாம் உங்க இஷ்டம். ஆனால், ஒண்ணுமாத்திரம் முன்கூட்டியே சொல்லிப் போடுகேள்...அந்தப் பட்டிக்காட்டிலே போய், அந்தச் சனப் பண்ணைக்குப் பொங்கிப் போட்டுக்கிட்டிருக்க நம்ம பிள்ளையாலே முடியாது. பையனை உங்களுக்குப் புடிச்சிருக்குண்ணா கலியாணத்தை முடிச்சிருவோம். ஆனா பையனை இங்கே கொண்டு வச்சிக்கிடுவோம்னு கறாலாச் சொல்லிப் போடுங்க... ஆமா"** [24]

என்று கண்டிப்புடன் தெரிவித்தாள். மேலும், அவள்,

**"ஆமா அந்தப் பையனுக்குக் கலியாண வசயிலே ஒரே தங்கச்சி இருக்காமே. அப்பா சொன்னா... மகனுக்குக் கலியாணம் கழிச்சு, மருமக உருப்படியைக் கழத்திப் போட்டு மகனைத் தள்ளி விட்டிரலாம்னு அந்த மனுசன் சொப்பனங்காணப் போறாரு... அப்படி மெச்சுப் போட்டுக்கிட்டிருந்தா அந்த நெனைப்பையெல்லாம் தூரக்கட்டி வச்சிறச் சொல்லுங்கோ.. எம் பொண்ணுக்கு உருப்படி ஒருபொடி தொடப்பிடாது... ஆமா.. சொல்லிப் போட்டேன்"** [25]

என்று தெரிவிக்கிறாள். மாப்பிள்ளை வீடு எந்தச் சூழ்நிலையில் இருந்தாலும் அதற்குத் தக்கவாறு குடும்பம் நடந்த வேண்டும் என்று, மகளுக்கு அறிவுரை கூறியதால்

மாப்பிள்ளையை, அழைத்து வந்து வீட்டுடன் வைத்துக் கொள்ள வேண்டும் என்று யோசனை கூறுவதும், தன் பெண்ணுடையதை மாப்பிள்ளை, வீட்டார் தொடக்கூடாது என்று கட்டளை போடுவதும் அந்தக் கதைமாந்தரின் குணத்தைக் காட்டுவதாக உள்ளது. தாயின் இந்தக் குணம்தான் பெண்ணைக் கணவனோடு, அன்போடு வாழவிடாமல் தடுத்து நிறுத்துகிறது. பெற்றோரின் குணம்தான் பிள்ளைகளைப் பாதிக்கும் என்பதற்கு நீலாப்பிள்ளை எடுத்துக்காட்டாக வருகிறாள்.

பார்வதி, சிவதாணுவுடன் தன் வீட்டிற்கு புறப்படத் தயாராகும் போது நீலாப்பிள்ளை பார்வதிக்குச் சொல்லும் அறிவுரை கடைசியில் வாழ்வின் சீரழிவிற்குக் காரணமாக அமைந்தது. நீலாப்பிள்ளை பார்வதியிடம்,

> **“பிள்ளை கொஞ்சத்தான் செய்யி, ரொம்பயுங் கொஞ்சீராதே! அவுரு கூப்பிடத்தான் செய்வாரு.. இப்போ அங்கே போயி என்ன செய்யப் போறியோ? அங்கேயே விலைக்கு அரிசி வாங்கித் திங்கிறாண்ணு வேற சொல்லுகே... பொறகு நீயும் போயி இருந்துகிட்டு பத்துத் தண்ணியிலே பங்கு போடவா? சும்மா இங்கிணே இரிங்கோ ரொம்ப விஞ்சிக்கிட்டா எப்படி? அப்பா சொல்லுக மாதிரி, இங்கே கடையையும் கொஞ்சம் கவனிச்சுக்கிட்டு இருக்கதுக்கு என்ன கொள்ளை? வேலை கிடைக்கிற காலத்திலே கிடைக்கட்டுமே! நூறு ரூவா வேணும்ணா மாசம் எடுத்துக் கிடட்டும்ணுதானே சொல்லுகா நானும் கண்டேன் கேட்டேன்மா... இப்பிடியும் உண்டா உலகத்திலே?”** [26]

என்று கூறுகிறாள். திருமணம் செய்து கொடுத்த மகள் அவள் வீட்டிற்குச் சென்று அந்தக் குடும்பத்தின் சூழ்நிலைக்குத் தக்கவாறு வாழ்வதுதான் ஒரு பெண்ணிற்கு அழகு. ஆனால் நீலாப்பிள்ளை தன் மகளைத் திசைமாற்றி வளர்க்க, அதுவே அவள் வாழ்வு சிதைந்து போவதற்கான காரணமாக அமைந்தது.

சிவதாணு சூழல் காரணமாக பெண் வீட்டில் தனக்குப் போட்டிருந்த மோதிரத்தை வைத்து அந்தச் சூழலைச் சமாளிக்க, அதனைத் தெரிந்துகொண்ட நீலாப்பிள்ளை,

**“ஓகோ... அவ்வளவு தூரத்துக்கு வந்தாச்சா? அவாளுக்கு வித்துத் திங்கத்துக்கா உருபபடி செய்து போட்டிருக்கேன். நல்லாருக்கே நியாயம்! அதெல்லாம் ஒரு பொடி தொடப்பிடாது. மாப்பிள்ளைக்கும் பொண்டாட்டிக்கும் சாப்பாடு போட்டு துணிமணியும் எடுத்துக் கொடுத்து, போராததுக்குச் சொளை சொளையா மாசம் நூத்தம்பது ரூவாயும் நாறது போராதா? உருப்படியும் வேற வேணுமோவ்? நான் அப்பமே சொன்னனே. இது இப்படித்தான் போகும்ணு... சனங்களுக்கு ஆசை பெருத்துத்தான் போச்சு. கப்பல்லே பொண்ணு வருகுண்ணா, எனக்கொண்ணு எங்க அப்பாவுக்கு ஒண்ணுங்கிற கதையால்லா இருக்கு”** [27]

என்று சிவதாணுவை மோசமான நிலையில் விமரிசனம் செய்கிறார். மாப்பிள்ளை என்ற எந்தக் கருணையும் இல்லாமல் சிவதாணுவின் சூழல் குறித்துக் கேட்டறியாமல் நகையின் மீதும் பணத்தின் மீதும் அக்கறையுள்ள ஒரு பெண்மணியாகவே நீலாப்பிள்ளை வருகிறார்.

**பவானி**

சொக்கலிங்கப்பிள்ளை – நீலாப்பிள்ளை தம்பதியரின் இரண்டாவது மகள். பார்வதியின் தங்கை. பவானி பார்வதியைப் போல் இல்ாமல் அன்பும், அரவணைப்பும், பண்பும் கொண்ட கதைமாந்தராக வருகிறார். சிறுமியாக இருந்தாலும், குடும்பச் சூழ்நிலை, அப்பா, அம்மாவின் போக்கு அக்கா – மாமாவின் முரண்பாடு ஆகியவற்றை உணர்ந்து, செயல்படக்கூடிய பெண்ணாக இருக்கிறார். சிவதாணு பார்வதியைத் திருமணம் செய்து அந்த வீட்டிற்குள் நுழைந்த நாள் முதல் அவனிடம் அன்பு செலுத்தும் அவள் சூழல் புரிந்து கெண்டு நடக்கும் அளவிற்கு பவானி பக்குவத்தோடு இருந்தாள் இந்தச் சூழலை,

**“பவானி ஒருத்திதான் அவனிடம் கள்ளமில்லாமல் பழகுகிறாள். கபடமற்ற நட்பைக் காட்டுகிறாள். அதுகூட தினமும் மாலையில் கணக்கும் ஆங்கிலமும், சொல்லித் தருவதன் காரணமாகவோ? சேச்சே! இருக்காது! அவளுடன் பேசிக் கொண்டிருக்கும்போது மனதுக்கு இதமாக**

**இருப்பானேன்? அத்தான் என்ற முறையில், அவள் செய்யும் கேலிகள் கூட புண்பட்ட அவன் நெஞ்சை மருந்திட்டு ஆற்றுவதைப் போல் உணர்ந்தான்"** [28]

பவானியின் இந்தத் தன்மைதான் சிவதாணுவை எந்தச் சூழ்நிலையிலும் அந்தக் குடும்பத்தை விட்டுப் பிரியாத ஒரு நிலையை உருவாக்கியது. பார்வதி தன்னோடு முரண்படும் சூழலிலெல்லாம் பவானி சிவதாணுவை அணுகி அந்தச் சூழலைச் சமாளிப்பாள். சிவதாணுவிற்கு சில வேலையில் பவானியைக் கொஞ்ச வேண்டும் போல் தோன்றும்.

பவானியின் குணமும் செயலும் அந்தக் குடும்பத்தை ஒருபடி உயர்த்திக்காட்டியது. சிவதாணுவின் மனைவி பவானிக்குப் பல நேரங்களில் அவன் மருந்தாகவே பயன்பட்டான், சிறுமியாக இருக்கும்போது இருந்து அவளின் துள்ளலும் எள்ளலும் பருவமடைந்த பிறகு எங்கே? காணாமல் போய்விடுமோ என்று ஐயப்பட்டான் சிவதாணு.

**"தினமும் பவானியைக் காலையில் பார்ப்பதும், ஒன்றும் பேசத் தோன்றாமலும் முடியாமலும சிரிப்பதும், எப்போதும் அவனைக் கண்டு வாயாடுகின்ற அவளும் அவனைக் கண்டு வெட்கப்படுவதும் வழக்கமாகி – என்றும் மாலைகளில் கலகலப்பாக கழிந்த அந்த நாட்களுக்காக அவனை ஏங்க வைத்தன. ஆயிற்று, இனி சடங்கு என்ற ஒன்றும் முடிந்துவிட்டால், அவ்ள் பாட்டுக்குச் சுற்றித் திரிவாள். பழைய குறும்பும், துள்ளலும், வெடுக்கும் இனியும் இருக்குமா? இல்லை சிறுமிப் பருவத்தோடு அவையும் கழன்று விழுந்துவிடுமா?** [29]

என்ற சிவதாணு வருந்தினான். பவானி பருவமெய்தினால் இதே உள்ளன்போடு தன்னுடன் பழகுவாளா? என்ற எதிர்பார்ப்பு சிவதாணுவிடம் எழுந்தது. அவளின் பேச்சும் செயலும் சிவதாணுவிற்குக் காயம்பட்ட இதயத்திற்கு மருந்திடுவதாக அமைந்தது. ஆனால் பவானி சிவதாணு நினைத்தது மாதிரியே.

**“பெரியவளான பிறகு பவானியின் பேச்சில் பழைய துள்ளலும் துடுக்கும் இல்லை. இருக்கும் என்று எதிர்பபார்ககவும் முடியாது. இருந்தாலும் கூர்ந்து, ஆழ்ந்து அவள் அவனைப் பார்க்கின்றபோது நெஞ்சைத்தொட்டு நீவிவிடுகிற ஆறுதல், சொற்கள் சுருங்கிப் போனாலும், சுடர்போன்ற அவள் புன்னகைகள் அவனுக்காகப் பூத்துச் சொரிந்து நிற்கையில், இந்த வீட்டில் தன்னைப் புரிந்துகொண்ட உள்ளன்போடு உபசரிக்கின்ற உயிர் இது. ஒன்றுதானோ என்றுகூட அவனுக்குத் தோன்றும்”** [30]

ஆனால் பவானி பெரியவளான பிறகு மாறித்தான் போனாள். பழைய அன்பும் குறிப்பும் அவனிடத்தில் காணாமல் போய்க் இனி பழைய பவானியைப் பார்க்க முடியாது என்பதை சிவதாணு உணர்ந்து கொண்டான். அந்த அளவிற்கு பவானி அந்தக் கடுமையாக சூழலை இனிமையாக்கி இருந்தான்.

**என்பிலதனை வெயில் காயும்**

‘என்பிலதனை வெயில் காயும்’ புதினத்தில் முதன்மை மாந்தராக வருபவர் சுடலையாண்டி. சுடலையாண்டியின் வாழ்க்கை தாய், தந்தையார் இல்லாத சூழ்நிலையில் தாத்தா, பாட்டியின் அரவணைப்பில் வாழும் எளிய வாழ்க்கை, வறுமையில் உழலும் வாழ்க்கை. கல்வி பயில்வதில் எழும் சிக்கல், படித்து முடித்து பட்டம் பெற்றும் வேலை வாய்ப்பில்லாத சூழல் எனச் சுடலையாண்டியின் வாழ்க்கை முழுவதும் பிரச்சினைகளை எதிர்கொண்ட வாழ்வாகவே நாஞ்சில் நாடனால் பதிவு செய்யப்பட்டுள்ளது. எந்த வறுமையிலும் அவன் கல்வி பயில்வதைக் கைவிடுவதாக இல்லை. மாதாந்திர பயணச்சீட்டு பெற்று பேருந்தில் பயணம் செல்லப் பணமில்லாத சூழலில் சுடலையாண்டி நடந்தே கல்லுரிக்குச் சென்றான் இதனை.

சுடலையாண்டி நடக்க ஆரம்பித்தான். கல்லூரி இருக்கும் நாகர்கோயிலில் இருந்து சூரங்குளம் ஐந்து மைல் குறுக்குப் பாதையில், பஸ்சிலும் போகலாம். தேரூர் – தாழக்குடி பஸ் சூரங்குளம் வழியாகவே போகிறது. ஆனால் முக்கால்மணி நேரம் காத்து நிற்க வேண்டும. கூட்டமோ எண்ணி முடியாது. மாதா மாதம் சலுகையின்

மாதாந்திர பயணச்சீட்டு பெற்றுக் கொள்ளவும் பணம் வேண்டும். எனவே சுடலையாண்டி நடந்தேதான் கல்லுரிக்குப் போய் வந்தான்.

> **“ஒழுகினசேரிப் பாலம் கடந்து, வயல் வரப்புல இறங்கி, எடுக்கா மரம் வளர்ந்து உட்கவிந்து நிற்கும் குளந்தங்கரை வழியாகப் பொதேரி ஊரைக் குறுக்கு வெட்டி, மீண்டும் வயல் வரப்பு வழியாகத் திருப்திசாரம் தெற்கு மூலையில் ஏறுவான். தெற்குத் தெருவைக் கடந்து, சித்திரைத் திருநாள் மகாராஜாவின் கொட்டாரம் பக்கம் ரோட்டில் ஏறி, மேலும் வடக்கு நோக்கி நடப்பான் சுடலையாண்டி”** [31]

இவ்வாறு கல்லூரி நடைபெறும் காலந்தோறும் நடந்து சென்றே தன் கல்லூரிக் கல்வியை முடித்தான். உடன் பயில்பவர் பலரும் பேருந்திலும் தனி வண்டியிலும் பயணம் செய்யும் சூழ்நிலையில் தனக்கு மட்டும் வாழ்க்கை இத்தகைய தண்டனையை வழங்கியது ஏன்? என்று தனக்குள் கேள்வி எழுப்பிக் கொள்வான். ஆனாலும் அவன் ஒரு போதும் இதற்கு வருந்தியது இல்லை.

> **“சுடலையாண்டி கல்லூரி தொடங்கும் நேரம் காலை பத்து மணி, எட்டரை மணிக்கு வீட்டிலிருந்து புறப்படுவான். சூரங் குளத்திலிருந்து புறப்பட்டு, திருப்திசாரம், பொதேரி வழியாக ஒழுகினசேரி பாலம் சேர்ந்த பிறகு, டவுனுக்குள், புகுந்து மீனாட்சிபுரம், கோட்டாறு, செட்டிகுளம் ஜங்ஷன் கடந்து, கல்லூரிக்குப் போக வேண்டும். காகம் பறக்கும் நேர்கோடு மாதிரி இல்லா விட்டாலும் அதிகபட்சக் குறுக்கு வழியை உபயோகத்தால் ஐந்து கல்நடந்து கடக்க வேண்டும்”** [32]

என்று நடப்பதிலும் அவன் பல்வேறு உத்திகளைக் கையாள்வான். எவ்வளவு வறுமையிலும், வாழ்க்கை இடர்பாடுகளிலும் முயன்றால் முடியாதது எதுவுமில்லை என்பதற்கு எடுத்துக்காட்டான கதைமாந்தராக சுடலையாண்டி வருகிறான். சுடலையாண்டி அடிக்கடி நினைத்துக் கொள்வான். ஒரு பழைய சைக்கிள் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும். வீட்டிலிருந்து ஒன்பது மணிக்குப் புறப்பட்டால் போதும். மாலையில் ஆறு மணிக்கெல்லாம் வீட்டிற்குத் திரும்பி விடலாம்.

சுடலையாண்டியின் பிறப்பு குறித்து சூரங்குளத்தில் கேலி பேசுவதுண்டு. அந்தக் கேலியைப் பொருட்படுத்தாமல் வளர்ந்து வந்தாலும் ஒவ்வொரு சூழ்நிலையிலும் அது பின் தொடர்ந்து வந்து துன்புறுத்துவதை நினைத்து உள்ளூர வருந்தியிருக்கிறான். அவன் படித்து நல்ல மதிப்பெண் வாங்கினாலும் அதுவும் அவன் பிறப்போடு தொடர்பு படுத்தப்பட்டிருக்கிறது.

சுடலையாண்டியின் உடன் பயிலுபவர்கள் அவன் கணிதத்தில் அதிக மதிப்பெண் எடுத்தற்கு அவன் பிறப்புதான் காரணம் என்று தூற்றுகிறார்கள். மனித மனங்கள் ஒருவனின் வெற்றியை எப்படியாவது குறைத்து மதிப்பிட்டு அதனை இழிபுபடுத்துவதையே நோக்கமாகக் கொண்டுள்ளன.

**தேர்வு முடிவு**

குடும்பச் சூழலையும் தாத்தா பாட்டியின் நிலையையும் உணர்ந்து சுடலையாண்டி நன்றாகப் படித்துப் பட்டப்படிப்பில் முதல் வகுப்பில் தேர்ச்சியடைகிறான். அறுபத்து நான்கு பேர் பயிலும் வகுப்பில் பத்தாண்டுகள் பிறர் வகுப்பில் தேர்சசியடைந்துள்ளனர். அதில் தானும் சுற்று என்பது சுடலையாண்டிக்கு மகிழ்ச்சியளித்தது.

> **“முதல் வகுப்புக்குப் பழுது வரவில்லை. அறுபத்து நான்கு பேர் கொண்ட கணிதப் பிரிவில், பதினான்கு முதல் வகுப்புகள் ஆவுடையம்மாளும் ஒருத்தி, பதினெட்டு இரண்டாம் வகுப்புக்குள். இருபது மூன்றாம் வகுப்புகள், சான்றிதழ் வாங்கக் கல்லூரிக்குப் போன அன்று ஒரே கும்மாளி போட்டது மனது மார்க்லிஸ்ட் வாங்கிப் பார்த்துவிட்டு, பேராசிரியர்களிடம் சொல்லி விட்டு வரலாம் என்று கணிதப் பிரிவில் போனபோது அங்கு ஏற்கனவே ஆவுடையம்மாளும் சிவகாமியும் இருந்தனர். வகுப்பில் ‘அக்கா’ குடியிருக்கும் முகம் காட்டும் பேராசிரியர் முகத்தில்கூடகளை இருந்தது அன்று. சுடலையாண்டி வா… என்ன கிரேடு? ஏ பிளஸ் ஸார்…”** [33]

என்று பதிலளித்தான். மேலும் படிக்கவேண்டும். முதுகலையில் சேர்ந்து பட்டம் பெற வேண்டும் என்று சுடலையாண்டி நினைத்தாலும் அதற்கு அவன் பொருளாதாரம் இடம் தரவில்லை.

எவ்வளவு சிறப்பாகப் படித்துப் பட்டம் பெற்றாலும் வேலை வாய்ப்பு என்பது இந்நாட்டில் முயற்கொம்பாகவே உள்ளது. சுடலையாண்டி பட்டப்படிப்பில் முதல் வகுப்பில் தேர்ச்சியடைந்திருந்தாலும் அவனால் ஒரு நல்ல வேலையை அடைய முடியவில்லை. மேலும் படிக்கவும் முடியாத குடும்ப வறுமை, படித்த படிப்பிற்கு நல்ல வேலையைப் பெறமுடியாத நாட்டு நிலைமை இத்தகையச் சூழலில் ஒரு தமிழகத்து இளைஞனின் வாழ்வு நகர்ந்து செல்வதை சுடலையாண்டியின் மாந்தர் படைப்பு எடுத்துரைக்கின்றது. வேலைக்கிடைக்காத சூழ்நிலையில் சுடலையாண்டி குடும்பத்து வறுமையைச் சமாளிக்க முடியாமல் திணறுகிறான்.

> **“படித்து முடித்த உடன் யாரும் தட்டில் பூ பழம், தேங்காயோடு வேலையையும் வைத்து நீட்டப் போவதில்லை என்று சுடலையாண்டிக்குத் தெரியும். சன்னல் கம்பிகளை வருடிக் கொண்டு, வானத்து நீலவெளியில் இருந்து இறங்கப் போகும் கணவன் வரவை எதிர் நோக்கும் மருமகளைப் போல், வேலைக்கான ஒரு ஒற்றைக்கால் தவம் வாலிபர்களுக்கு ஏற்பட்டு வருவதை அவன் உணர்ந்தான். ஆறுமாதம், ஓராண்டு, இரண்டாண்டு, அதற்கு மேலுமான தக்கநீட்சிகள், முதல் வகுப்பில் சிறப்புடன் தேறிய தனக்கு எப்படி யாவினும் ஒரு வேலை கிடைக்கும் என்ற நம்பிக்கை நையவில்லை. ஆனால் எப்போது?”**[34]

என்ற கேள்வி சுடலையாண்டியின் கேள்வி மட்டுமல்ல. தமிழகத்தில் படித்து முடித்துப் பட்டம் பெற்றிருக்கிற எண்ணற்ற இளைஞர்களின் கேள்வியாகவே உள்ளது. உயிரைத்தந்து உடலுறுப்புகளைச் செயல் இழிக்கச் செய்யும் பெற்றுப் பட்டமாக இந்தப் படிப்புகள் இருக்கும் வரையிலும் எந்தப் பயனும் இல்லை என்பதைச் சுடலையாண்டிகள் உணரவே செய்திருக்கிறார்கள்.

குடும்ப பாரத்தைச் சுமக்க நினைக்கும் சுடலையாண்டி வேறுவழியில்லாமல் தன் தந்தை செய்த, தன் அப்பாசெய்த கூலி விவசாய வேலைக்குத் தன்னை ஈடுபடுத்திக்கொள்ள முனைந்திருக்கின்றான். தோட்டத்தைக் கொத்திக் கொடுத்தும், தென்னம்பிள்ளைக்கு பண்ணை பிடித்தும் பிழைப்பு நடத்தத் தொடங்கினான்.

> **“தோட்டத்தை ஆறு மாதத்துக்கு ஒருமுறை கொத்திக் கொடுத்து தென்னம்பிள்ளைத் தூர்களில் பண்ணை பிடித்து, மாட்டுச் சாணியின் செமித்த உரம், மட்கிய இலை தழைகள், சாம்பல், உப்பு, உமி என்று மூட்டில் இட்டு, மண் பொதித்து – கொண்டைகள் கறுத்துக் கவிழ்ந்திருந்தன. பாரம் தாங்காமல் குலைகள் மட்டை மேல் ஓய்வு கொண்டன. பிள்ளையின் கொண்டையில் ஆறு மாதத்துக்கு ஒரு தரம், சேர்ந்திருந்த பதவல்களை நீக்கி, முற்றிய ஓலை மடல்களைக் கழித்து, கவிந்து வரும் பச்சை மடல்களைச் ‘சமுண்டி’ விட்டு, ஊப்புப் பரல்களை இடுக்குகளில்தூவி, கரிச்சான் பாய்ந்து விடாமல் காபந்து செய்த**

மறுநாள் காலை

> **சுடலையாண்டியும் குற்றாலம் பணிக்கருமாகத் தோப்பில் நுழைந்தும், தோள் முண்டினை எடுத்துத் தலையில் வட்டக் கட்டாக இறுக்கிக் கட்டி விட்டு, வேட்டியைத் தார் பாய்சிச்க் கொண்டு மண்வெட்டியைக் கையில் எடுத்தான்.”**[35]

இவ்வாறு விவசாய வேலைகளில் இறங்கினாலும் அந்த வேலையும் எப்போதும் கிடைப்பதில்லை. சேமித்து வைத்து வாழ முடியாத அன்றாடங் காய்சிகளுக்கு அன்றாடம் வேலை தேவைப்படுகிறது. விவசாய வேலைகளும் கிடைப்பதில் திண்டாடும் சுடலையாண்டி ஒரு முடிவெடுக்கிறார். பள்ளி இறுதி வகுப்பில் மாணவனாகத் தேர்ச்சி பெற்றதற்காகக் கிடைத்த தங்க மெடலை விற்று கிழங்கு வியாபாரம் செய்து பிழைக்கலாம் என்று முடிவெடுக்கிறான். நாட்டு நடப்பை, தமிழகத்தில் எண்ணற்ற பட்டதாரிகளின் நிலைகயை இதன் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.

**“நேரமாகிப் போனாலும்கூட., அன்றைய வியாபாரம் சுடலையாண்டிக்கு மோசமாக இல்லை. கரணை கரணையாகத் திரண்டு உருண்ட கிழங்கின் பொலிவும், பாளம் பாளமாய் உரிந்த தொலியும், முறித்துப் பார்த்தால் தெரிந்த மாச் செறிவும் நொடிப பொழுதில் கிழங்கு ஓடிவிட்டது. வீட்டுக்குத் திரும்புகையில், சாக்கில் ஒரு ராத்தல் கிழங்கு மீதம் இருந்தது. ஆத்தாவிடம் சொல்லிக் கிழங்குக் கறி வைக்கச் சொல்ல வேண்டும். கூடவை கருவாட்டுக் குழம்பு, ஏனத்தில் இரண்டு அகப்பை கிழங்குக் கறி வைத்து, நடுவில் குழித்துப் பண்ணை பிடித்து, கருவாட்டுப் புளி முனம் ஊற்றி – நாக்குச் சுரந்தது. பசி தனது இருப்பைச் சத்தம் போட்டுக் காட்டியது. மத்தியானம் எதுவும் சாப்பிடாததும், அவசர அவசரமான ஓட்டமும் களைப்பைக் கூட்டியிருந்தன. தலையிலிருந்த தலைமுண்டை அவிழ்த்து உதறித் தோளில் போடக்கூடத் தெம்பின்றித் தேரேகால் ஆற்றில் கரையாக இருந்த சாலையில் நடந்தான்.”** [36]

இதுவே சுடலையாண்டியின் வாழ்க்கையாகிப் போனது. ஒரு வெள்ளாள கிழப் பெண்மணிக்குப் மகனாகப் பிறந்தவன். இந்தக் கலப்பு அவன் வாழ்வில் எவ்வளவோ பின்விளைவுகளை ஏற்படுத்தியிருக்கிறது. அதையெல்லாம் கடந்து அவன் வாழ்ந்து வந்திருக்கிறான். இந்தச் சூழ்நிலையில் தாத்தாவின் அன்புக் கட்டளையாய் அவன் அம்மாவின் உடன்பிறந்த தன் தாய்மாமனை வேலையின் பொருட்டு சந்திக்கிறான். அவன் தன்னை தங்கம்மையின் மகன் என்று தன்னை அறிமுகப்படுத்திக்கொண்ட போதும் அவரிடத்தில் எந்த அன்பையும் அரவணைப்பையும் அவனால் காணமுடியவில்லை. கருணையும் கனிவு மற்ற ஒரு சமூகமாக மனித சமூகமாக மாறிவிடுவதை சுடலையாண்டி அவரின் மூலம் அறிந்துகொள்கிறான்.

**ஆவுடையம்மாள்**

‘என்பிலதனை வெயில் காயும்’ புதினத்தில் சுடலையாண்டியின் உடன்பயிலும் மாணவியராக ஆவுடையம்மாள் வருகிறாள். ஊர் பெரிய மனிதர் பலவேசம் பிள்ளையின் மகள். பணக்காரத் தோரணையைக் காட்டாவிட்டாலும் எல்லோரிடமும்

அன்பாகப் பேசும் ஒரு கதைமாந்தராகவும வரவில்லை. ஆனால், அவள் சுடலையாண்டியிடம் சிறுமியாக இருக்கும்போது காட்டிய அன்பு இப்போது இல்லை,

> **"ஆவுடையம்மாள் முன்பெல்லாம் நட்போடு தான் இருந்தாள். ஐந்தாவது வகுப்புவரை உள்ளூரில் படித்தார்கள். பிறகு உயர்நிலைப் பள்ளிக்குத்தாழக்குடி செல்ல வேண்டியதாயிற்று. அப்போதெல்லாம் அவள் மற்ற மாணவிகளுடன் நடந்து வருவாள் 'வளவள' வென்று வழிநெடுகப் பேசிக் கொண்டு... கால்வாயின் கிடக்கும் கடக்குகளைப் பறித்து, கசக்கி, சோற்றையும் நீரையும் வெளியேற்றி அது நைந்து எண்ணெய் பூசியது போல் மினுங்கும் போது வாயில் வைத்து ஊதி,"[37]**

இவ்வாறு சுடலை நினைத்துப் பார்க்கிறான். ஒரு தனித்த அடையாளமும், குணமும் இல்லாத கதைமாந்தராகவே வருகிறான். சுடலையாண்டியிடம் ஆவுடையம்மாள் ஓரளவு நட்போடு நடந்துகொண்டாள். ஆனாலும் இந்த நட்பு சுடலையாண்டியின் வாழ்விற்கு வலுவூட்டுவதாக அமையவில்லை. என்பிலதனை வெயில் காயும் தமிழகத்தில் சுடலையாண்டியின் கதை மாந்தர் படைப்பு தவிர மற்ற மாந்தர்கள் வலுவற்றவர்களாகப் பதிவு செய்யப்படட்டிருக்கிறார்கள். தாத்தா, பாட்டி என்று இருவரும் அவனுடன் பயணிக்கும் உறவுகளாகவும் வறுமையில் வாடினாலும் குறுக்கே நிற்காமல் துணை நின்றிருக்கிறார்கள். வயதான அவர்கள் தங்களுக்குள் முரண்பாடுகள் எழுந்தாலும் பேரனின் வளர்ப்பில் அக்கறையோடு இருப்பவர்களாக வாழ்ந்துள்ளார்கள்.

**மாமிசப் படைப்பு**

நாஞ்சில் நாடன் கிராமத்தைக் கதைகளமாகக் கொண்டு எழுதிய புதினம் மாமிசப் படைப்பாகும். கூலி விவசாயிகளும் அவர்களின் போராட்டங்களும் பண்ணையாளர்களின் சுரண்டலும் அவர்களின் குரோத மனப்பான்மையும் இந்தப் புதினத்தில் தெளிவுறப் பதிவு செய்யப்பட்டுள்ளது கிராமத்தில் உண்மையான மாந்தர்கள் இந்தப் புதினத்தில் இடம்பெற்றுள்ளார்கள் என்பதற்குச் சான்றாக நாஞ்சில் நாடன், நோபல் பரிசுபெற்ற சிங்கரின் மேற்கோளை முன் வைக்கிறார்.

**“உண்மையான கதாபாத்திரங்கள் உண்மையான மக்களிடமிருந்தே பிறக்கின்றன. உண்மையான மக்களுக்கு ஆழமான வேர் உண்டு. வெறுமனே ஒரு பொதுவான மனிதனைப் பற்றி ஒரு நாவல் கைவிட முடியாது. அதற்காக தனக்கென ஒரு முகவரி உள்ள ஓர் ஓசையையோ, சொற்களையோ தேர்ந்தெடுக்க வேண்டும். இதனால்தான், உண்மையான எழுத்தாளர்கள் தங்களுக்குச் சொந்தமான சூழலிலே, தங்களுக்குச் சொந்தமான குறைகளாவே தங்கிவிடுகின்றார்கள்.”**[38]

என்ற கூற்றிற்கிணங்க உலகின் எந்த மூலைக்குச் சென்றாலும் தன்னோடு பிறந்த மனிதர்களே தான் படைக்கும் படைப்புகளுக்கு உரம் சேர்க்கின்றார்கள். அந்த வகையில் நாஞ்சில் நாடனின் இரத்த நாளங்களில் கலந்தவர்களாக இந்த கூறுவடி கந்தையா போன்றவர்கள் திகழ்கின்றார்கள்.

**கூறுவடி கந்தையா**

கூறுவடி கந்தையா மாமிசப் படைப்பின் முதன்மை மாந்தராக வருகின்றார். கூலி விவசாயியாக வரும் இவர், விவசாய வேலைகளை அனைத்தையும் நன்கு கற்றறிந்தவராக வருகிறார். பண்ணையாளர்களிடம் எதையும் இலவசமாகப் பெறாமல், தம் உழைப்பையும் வீணாகச் செலுத்தாமல், உழைப்பு அதற்கேற்ற கூலி என்ற வகையில் சரியாக வாழ்ந்து வரும் உடல் உரம் படைத்த நல்ல பாட்டாளி.

**“நெட்டான் நெட்டான் என்று ஊடு மண்வெட்டிக் கைபோல் ஒரு மூச்சு வளர்த்தி, பலகைபோல் விரிந்த உறுதியான மார்பு பூவரசமர வைரத்தில் செய்த கோடிக் கலப்பை போல் அழுத்தமான உடம்பு. நாற்பத்தைந்து வயதுதோன்றாத கயிற்று உடல்வாகு. சாமர்த்தியமானதோர் கூறுவடியாக கந்தையாக இருந்தான்.”** [39]

என்று நாஞ்சில்நாடன் கூறுவடி கந்தையாவை உருவகப்படுத்துகின்றார். ஊரில் கூலிக்கு வேலை செய்தாலும் தன்னுடன் இருபத்து மூன்று பாட்டாளியை உடன் வைத்துக்கொண்டு ஒரு குழுவாகப் பயணித்து உழவு, கதிரறுப்பு, களத்தடிப்பு என்று

விவசாய வேலைகளில் ஈடுபட்டு, சரியான கல்லைப் பெற்று அவர்களுக்கு பகிர்ந்தளித்திருந்தார்.

**"கூறுவடி கந்தையாவின் அறுப்படிப்புக் கூட்டத்தில் மொத்தம் இருபத்து மூன்று பேர் பதினான்கு முழு ஆளங்கொத்துக் காரர்களும் எட்டு முக்கால் ஆளங்கொத்துக்காரர்களும் கூறுவடி கந்தையாவுமாக தலை முண்டினை இறுக்கி வட்டக்கட்டாக தலைப்பாகை கட்டி, வேட்டியை வரிந்து தார் பாய்ச்சி, கீழ வரப்புக்கும் மேல வரப்புக்குமாக ஓடிக் கொண்டிருந்தான் கந்தையா."** [40]

மேலும் கந்தையா கதிரறுப்புக் காலங்களில் தனித்த பலம் பெற்று ஓரளவு அனைத்து வேலைகளிலும் ஈடுபட்டு அனைவருக்கும் உதவி செய்த படி அலைந்து திரிவான்.

**"நான்கு நடை களத்தில் கொண்டு போட்டுவிட்டு வந்து ஐந்தாம் நடை கட்டிக் கொண்டிருந்தார்கள். பிந்திப் போன பங்குக்காரனுக்கு படை வாரிக் கொடுத்துக் கொண்டு, நல்லப்பப் படையை கண் மறைக்காமல் மடித்துக் கட்டத் தெரியாத முககால் கூறுக்காரனுக்கு மடித்துக் கொடுத்து, இன்னும் ஒரு படை வைத்து இறுக்கலாம் என்ற யோசனையுடன் பார்ப்பவனுக்கு நாரை அவிழ்த்துக் கொடுத்து, சமைத்த கட்டுகளைக் தூக்கிவிட்டு... கூறுவடி கந்தையா சுறுசுறுப்பாய் இருந்தான்."** [42]

இவ்வாறு, கூறுவடி கந்தையாவை நம்முன் காட்சிப்படுத்துகிறார். மேலும்,

**"உரம் சுமப்பு, மண் வைப்பு, கூரைக்கு ஓலை கட்டு, குழை அரக்க, வரப்பு வெட்டு என்று மதிப்பு வேலைகள், அறுத்தடிப்புக் காலங்களில் அறுத்துக் கட்டவோ, சூடடிக்கவோ, குழுக்கள் திரட்டி அதற்குச் கூறுவடியாக... கந்தையாவுக்கு என்று எத்தனையோ வேலைகள் இருந்தன.**

**இந்த வேலைகள் தவிர ஜாதகம் பார்ப்பது கந்தையாவுக்குப் பொழுதுபோக்கு. ஆண்டு மாதம் தேதியும் நேரமும் கொண்டு நட்சத்திரம் பார்த்து ஜாதகம் கணிப்பதும், ஏற்கனவே கணிக்கப்பட்டிருந்த**

**ஜாதகத்தைப் பார்த்து பலன் சொல்லவும் நிச்சயதாம்பூலத்துக்கு சார்த்து எழுதி வாசிக்கவும், மற்று எல்லாஇந்துச் சடங்குகளுக்கும் நாள்நேரம் பார்த்துக் சொல்லவும் அவனால் முடியும்.''** [42]

இவ்வாறு கூறுவடி கந்தையா அனைத்து தொழில்களிலும் வல்லுவனாக இருந்தான். கிராமப்புறங்களில் பலரும் கந்தையாவைப் போல் வாழ்வதுண்டு. யாரையும் எதிர்பார்த்திராமல் பண்ணையாரின் பாதம் பணியாமல் தன் உழைப்பைக் கொடு சுயமரியாதையோடு வாழ்ந்திடும் இவர்களால்தான் கிராமங்கள் பொருள் பொதிந்ததாக விளங்குகின்றன.

**கந்தையாவின் திறமை**

விவசாய வேலைகளில் ஈடுபடும்போது, பண்ணையாளர்கள் விவசாயிகளை நன்றாகத் தூண்டிவிட்டு சாமர்த்தியமாகத் தங்கள் வேலைகளை முடித்துக் கொள்வதுண்டு. அப்படித்தான் பண்ணையின் கங்காதரம்பிள்ளை என் வயலில் கந்தையாவின் ஆட்கள் கதிரறுப்பில் ஈடுபட்டபோது ஒரு சவால்விடுகிறான். களத்திற்கு எடுத்து வரும் கட்டில் பன்னிரெண்டு மரக்காவாவது நெல் இருக்கவேண்டும் என்று கூறுகிறார். அதற்கு சாதாரணமாகக் கட்டப்பட்டிருக்கும் கட்டுகளில் மூன்று கட்டுகளை ஒன்று சேர்ந்தால்தான் முடியும். கந்தையாவால் முடியும் என்று கங்காதரம் பிள்ளைக்குத் தெரியும். அதனால்தான் அவர் அப்பா ஒரு சவாலை விடுகிறார். கந்தையா அந்த சவாலுக்குத் தயாராகிறான்.

**''நல்லப்பப் படையைக் கொண்டு வந்து தலைக் கமடுக்குத் தோதாக கதிர்க்குலை தாளின் உட்புறம் வரும்படியாய் மடித்துக் கட்டினான் நமச்சிவாயம் ஒவ்வொருவனும் அரியரியாய்ச் சேர்ந்து படை திரட்டிக் கொண்டு கொடுக்க, இரண்டிரண்டு படையாக அடுக்கிச் சேர்த்து இறுக்கலானான் கந்தையா. நான்குபேர் வாரிக் கொடுக்க, கந்தையா இறுக்க... கதிர்க் கட்டு கந்தையாவின் மார்புக்கு மேல் உயர்ந்து நின்றது.''** [43]

இவ்வாறு உனக்கு நின்ற கட்டைப் பார்த்து அனைவரும் மூச்சடைத்துப் போகிறார்கள். பண்ணையார்களுக்காக இப்படி சவால் விட்டு தங்கள் காரியத்தை

முடித்துத் தள்ளுவார்கள். ஆனால், தினந்தோறும் உழைக்க வேண்டியவர்கள் என்று முணுமுணுத்தார்கள். கந்தையாவிடம் இது குறித்து பேசவும் செய்தார்கள். ஆனால் கந்தையா மனதளவில் ஒன்றை நினைத்துக் கொண்டான் என்றால் அதனைச் சாதிக்காமல் விடமாட்டான்.

> **"பின்னே என்னதான் நினைச்சுப் போட்டேரு? ஒண்ணை ஏத்துகிட்டு அதை நடத்திக் காட்டாட்டா அதைவிட செத்திரலாமே.. கந்தையா திராணியுள்ள அப்பனுக்குத்தான் பொறந்திருக்கான். ஏ! ஏளெட்டு பேரு முதல்லே கெட்டை எடுங்கோ... பாக்கிப் பேரு என் கெட்டைத் துக்கி விட்டுக்கிட்டு பொறத்தால கெட்டை எடுத்துகிட்டு வாருங்கோ... சரி... தூக்குங்கோ... ஏழெட்டு முககால் கட்டுகள் முந்தி தூக்கப்பட்டு நின்றன. பீமசேனன் மாதிரி தன் கட்டுக்கு முன்னால் நின்றான் கந்தையா. சாதாரணமாக நான்கு பேர் சேர்ந்து ஓர் கட்டைத் தூக்கி வெட்டி உயர்த்தி தலைக்குமேல் வைப்பார்கள். கந்தையா கட்டைச் சுற்றி பத்துப்பேர், கதிர் கட்டைத் தொட்டுக் கும்பிட்டு குனிந்து கட்டின் அடிப்பகுதித் தாள்களைப் பற்றித் துக்கி வெட்டி உயர்த்தி... கந்தையா தலைக்குமேல் ஏறிய கதிர்க்கட்டு, கோபுரம் போல் உயர்ந்து தோன்றியது. ஒரே தூணில் நிற்கும் கோபுரம், மருத்துவாழ் மலையைப் பிடுங்கிய அனுமார்போல் நின்று மற்றகட்டெல்லாம் தூக்கப்படுவதைப் பார்த்தான் கந்தையா."** [44]

இப்படி தண்டு விடப்படும் சவால்களை மிகச் சாதாரணமாகக் கடந்து, செல்லும் ஆற்றலும் திறமையும் கொண்டவனாக கந்தையா விளங்கினாள். விவசாய வேலைகள் மட்டுமல்லாமல், சோதிடம் பார்ப்பது, சாதகம் எழுதுவது என்று பல்வேறு பணிகளைச் செய்வான்.

**கந்தையாவின் குணநலன்**

கந்தையா மனைவி மக்களிடத்தில் அன்பும் கனிவும் கொண்டவனாக விளங்கினான். அவனுக்கு மகன் இருவரும் மகள் இருவரும் என நான்கு பிள்ளைகள். முதலில் பிறந்த மூன்று பிள்ளைகள் இறந்தே பிறந்ததால் இந்தப் பிள்ளைகளிடத்தில்

அவனுக்குப் பாசம் அதிகம். பிள்ளைகளை நேசிப்பதைப் போன்றே அவன் தன்னிடத்தில் வேலை செய்யும் ஆட்கள் மீதும் அன்பு கொண்டவதாக விளங்கினான். அவன் பணக்காரன் இல்லை என்றாலும் தன்னிடமுள்ள வேலையாட்கள் உதவி கேட்டு வந்தால் அதைத் தட்டாமல் செய்வது அவன் குணமாக இருந்தது. இதனை

> **“கூறுவடி கந்தையா குபேரன் அல்ல. ஆனால் அவன் கூட்டத்தைச் சேர்ந்த வேலையாட்கள் ஒவ்வொரு பூவின் ஒறுவிணைக் காலத்திலும் முட்டைச் சொறிந்து, பல்லைக்காட்டி, கடன் கேட்கும்போது அவனால் பொறுக்க முடிவதில்லை. பெண்டாட்டியின் தாலிச்செயினைப் பணயம் வைத்து அவர்களுக்கு கடன் கொடுத்த காலங்கள் உண்டு. அப்படியும் அவர்கள் கேட்ட கடன் வாங்குவதை அவனால் தடுக்க முடியவில்லை.”**[45]

என்பதன் மூலம் அறியமுடிகிறது. எந்த அளவிற்கு பிறரிடம் அன்பும் மரியாதையும் உள்ளவதாக விளங்குகின்றதோ அந்த அளவிற்கு சுயமரியாதையும் உள்ளதான இருந்தான். குற்றம் எங்கே நடந்தாலும் அதனைத் தட்டிக் கேட்பதாகவும் விளங்கினான். ஊர்க்கூட்டத்தில் வரி அதிகமாக வசூலிப்பதாக முடிவாக அதனை எதிர்த்துக்குரல் கொடுத்தான்.

பண்ணையார்கள் விதிக்கும் வரியினை கொடுக்கத் திராணியற்று இருக்கும் சூழலில் அதனை எதிர்த்துக் குரல் எழுப்புவான். கந்தையாவின் இந்த எதிர்ப்புக் குரல் பண்ணையாளர்களுக்குக் கோபத்தை ஏற்படுத்த கந்தையாவை கொலைசெய்யத் திட்டம் தீட்டுகின்றனர்.

ஊருக்குள் கோயில் திருவிழா நடந்துகொண்டிருக்க தன்னுடைய வாழைத்தோப்புக்குக் காவலுக்குச் சென்றான் கந்தையா. வாழைக்குலை திருட வருபவர்கள் போல அடியாட்கள் வாழைத்தோப்புக்குள் நுழைந்தார்கள்.

> **“தோட்டத்தினுள் யாரோ புகுத்திருக்கிறார்கள். என்பது கந்தையாவுக்கும் நிச்சயமாயிற்று. சடாரென எழுந்தான். ஓசை ஏற்படுத்தாமல் சரசரப்பு விட்டு விட்டுக் கேட்டுக் கொண்டிருந்த இடத்தை நோக்கி நடந்தான். சொத் தென்று வாழைக்குலையின் தடித்த தண்டில் வெட்டிரிவாள் பாயும்**

**ஓசை. டார்ச்சோ, வெட்டுக்குத்தியோ எடுத்து வராத முட்டாள் தனத்தை உணர்ந்தான் கந்தையா, என்றாலும் அனக்கம் காட்டாமல் பின்பக்கமாய், போய் வளைந்துப் பிடித்துவிடலாம் என்ற உறுதியில், நம்பிக்கையில், பையப் பைய காலடி வைத்து நடந்தான். மனித வாடையைக் கவனியாதவன் போல், வெட்டிய குலையை மூட்டில் வைத்து விட்டு அடுத்த வாழையின் பக்கம் போய் கையைத் தடையால் ஒதுக்கிய உருவத்தை இருள் வடிவாய்க் கண்டான் கந்தையா, மிதமாய்த் தனக்குள் சிரித்துக் கொண்டான்.**

**வெட்டுபவனின் பின்புறமாய் நெருங்கி, குரல்வளையில் கைகொடுத்து, வளைக்க எண்ணி கந்தையா கையைத் தூக்குகையில் பின்புறமிருந்து சரக்கென்று கத்தி ஒன்று கந்தையாவின் தோள்பட்டையில் இறங்கியது. சதி கையில் சரியாகச் சிக்கிக் கொண்டோம் என்றுணர்ந்து மூர்க்கமாய்த் திரும்புகையில், வெல்லத்தை விரல் கிழிப்பது போல் வயிற்றைக் கிழித்தது கத்தி. கோயிலினுள் ஒரே நிசப்தம். மக்களுக்கும், தெய்வங்களுக்கும் இடையே திரைபிடித்து, வாய்கட்டி, மூச்சடக்கி, சூலைப் பிடாரிக்கும், சந்தனமாரிக்கும் மாமிசப்படைப்பு போடுகையில் எழுந்த மணம் கோயில் முழுவதும் நிறைந்தது.”** [46]

இவ்வாறு பண்ணையார்களின் நிலச்சுவான்தார்களின் சதியை எதிர்த்து சுயமரியாதையோடு தன் உழைப்பில் வாழ முற்பட்ட ஒரு பாட்டளியை வெட்டிச்சாய்த்து வஞ்சம் தீர்த்துக் கொண்டார்கள். கந்தையா நல்ல உழைப்பாளி, திறமைசாலி ஆனால் பணக்காரர்களின் கோபங்களுக்கு அடிபணியாதவன். பணக்காரர்களின் நயவஞ்சகத் தனத்தைத் தெரிந்துகொள்ளாமல், புரிந்து கொள்ளாமல் இருப்பது கந்தையா போன்ற பாட்டாளிகளின் வீழ்ச்சிக்கு காரணமாக அமையும்.

**கங்காதரம்பிள்ளை**

மாங்கோணம் கிராமத்தில் பண்ணயைார் கங்காதரம் பிள்ளை சுரண்டல் எண்ணம் கொண்ட கங்காரதரம் பிள்ளை கந்தையா போன்ற பாட்டாளிகளின் கடின உழைப்பாளிகளின் உழைப்பை உறிஞ்சி வாழ்வதில் தனின்திறன் கொண்டவர்.

**“நடுவயலில் நின்று, குடையைத் தலைக்கு மேல் தூக்கிப் பிடித்துக் கொண்டு, புவியிலைக்கரை இரட்டை வேட்டியை மடித்துக் கட்டி, நெடுநீளமாக, வெளுத்த முறுக்கு நூல் துவர்த்து தோளில் துவண்டுகிடக்க, கதிர் வாரிக் கட்டுவதை மேற்பார்வை பார்த்துக் கொண்டிருந்தார் கங்காதரம்பிள்ளை.**

**ஐந்தேகாலடி உயரம், நீர்யானை போல் எண்ணெய் மினுக்கம் கொண்டு எலும்பே தெரியாத உடம்பு. பேன் வைத்து செடக்கென்று குத்தலாம் போல் திம்மென்று புடைத்த குடவண்டி வயிறு. குடையைப் பிடித்திருந்தாலும் சுற்றுப்புறத்தின் சூடு காரணமாய் சவரம் செய்யப்பட்ட கட்கங்களிலிருந்து அழுக்கான வியர்வை வரியாய் வடிந்து விலாவில் இறங்கிக் கொண்டிருந்தது. நெற்றியில் இலக்கிய சந்தன வரையில் குங்குமம் படர்ந்து பரவிக் கொண்டிருந்தது.”[47]**

என கங்காதரம்பிள்ளையின் தோற்றம் அறிமுகம் செய்யப் படுகின்றது. வயல்வெளிகளில் கதிரறுப்பு வேகவேகமாக நடந்து கொண்டிந்துாலும் மேலும் துரிதப்படுத்தும் போக்கோடுதான் அன்றைக்கு கந்தையாவிடம் அவர் சபதமிட்டார். நல்ல வேலைக்காரனின் நெல்கட்டில் குறைந்து, பன்னிரெண்டு மரக்காலாவது நெல் இருக்க வேண்டும் என்று சதபமிட்டு கந்தையா பத்தொன்பது மரக்கானும் ஆறுபடி நெய்யையும் ஒரேஒரு களத்திற்குக் கொண்டு வந்து சேர்க்க, ஒரு கட்டு நெல்லையும் அப்படியே தந்துவிடுகிறேன் என்று போட்டியிட்டுப் போட்டியில் தோல்வி அப்படியே தோல்வியடைந்ததுப் பின்வாங்குகிறான். மனப்பான்மை கொண்ட பண்ணையார்களுக்கு கங்காதரப்பிள்ளை எடுத்துக்காட்டாகத் திகழ்கிறார்.

**விக்கிரமசிங்கம் பிள்ளை**

விக்கிரமசிங்கம் பிள்ளை கங்காதரம்பிள்ளையின் மைத்துனன் ஆவான். விக்கிரமசிங்கம் பிள்ளையின் அக்காவைத்தான் கங்காதரம்பிள்ளை திருமணம் செய்துள்ளார். மாமன் மைத்துனருக்கு ஊரில் நிலபுலம் அதிகமிருந்ததால், ஊரையே தன் கட்டுபபாட்டிற்குள் வைத்திருக்க முயற்சிக்கிறார்கள். இவர்களைப் போன்ற

பண்ணையாளர்கள்தான் கந்தையா போன்ற பாட்டாளியை வாழவிடாமல் செய்கிறார்கள்.

> **“விக்கிரமசிங்கம் பிள்ளை தகப்பன் வழி சொத்து உள்ளவர். விதத்தில் வந்த நான்கு ஏக்கர் தவிரவும் பிள்ளை இல்லாத பூதப்பாண்டி பெரியம்மாள் முத்தாச்சி செத்தபோது வந்த சொம்மு இரண்டு ஏக்கர் பெண்டாட்டி வழியாக வீரவநல்லூர் புரலில் மூன்று ஏக்கர் சொந்தமாக சமீபத்தில் புதுப்பித்த மட்டுப்பா போட்ட வீடு, மாடு கன்றுகள், தொழு, அறுத்தடிப்படி களம், மாங்கோணத்தில் இரண்டு ஏக்கர் நன்செய் சொந்தமாக இருந்தால் நான்கு குழந்தைகள் உள்ள குடும்பம் வசதியாக வாழலாம். நான்கு ஏக்கர் இருந்தால் கொஞ்சம் தானமானம் கூடச் செய்யலாம். இந்த நிரக்கில் வைத்துப் பார்த்தால் விக்கிரமசிங்கம் பிள்ளை வசதியுள்ள புள்ளி, ஏகதேசம் ஐம்பது வயது ஆகீயவர்.”**[48]

ஊரில் இவ்வளவு வழியும் வாய்ப்பும் உள்ளவர், எந்த சக்தியையும் முறியடிக்கும் ஆற்றல் வாய்ந்தவானாக உள்ளார், விக்கிரமசிங்கப் பிள்ளை. இவருடைய மகன் சோனாசலம் மோசமான குணமுள்ளவனாகவும் பெண்களிடம் இழிவாக நடந்துகொள்ளும் போக்குள்ளவனவாகவும் இருக்கிறான். சோனாசலத்தினால் கந்தையாவிடம் ஏற்படும் பகைமை, கந்தையைக் கொலை செய்யும் அளவிற்கு வளர்ந்து செல்கிறது.

**சண்முகம்**

நாஞ்சில் நாடன் தனது கதாபாத்திரங்களை மிகவும் உணர்ச்சிபூர்வமான கதாபாத்திரமாகவே படைக்கின்றார். சோகம், அவலம், ஏமாற்றம், எதிர்பார்ப்பு என்று எல்லாவித உணர்ச்சிகளையும் கொட்டித் தீர்க்கும் கதாபாத்திரங்களாகவே உள்ளன.

‘மிதவை’ புதினத்தில் வரும் சண்முகம் கதாபாத்திரம் இளைஞர்களின் மனக் குமுறலை வெளிப்படுத்தும் விதமாக சித்தரிக்கப்பட்டுள்ளது. பட்டம், படித்துவிட்டு வேலை இல்லாமல் வேதனைப்படும் கதாபாத்திரமாக சண்முகத்தைப் படைத்துள்ளார். காசில்லாமல் சண்முகம் படும் வேதனையே அலாதி,

**“அப்பா எப்போதும் முறைத்த பார்வை. அம்மாவுக்கானால் எந்த நேரமும் புறுபுறுப்பு சோப்பு வாங்க நாலணா கேட்டுவிடப்பிடாது. போச்சு இங்க என்ன கெட்டியா வச்சிருக்கு?இல்ல பாட்டனாரு சேத்து வச்ச சொத்து கெடக்கா? தடிமாடு கெணக்க வளந்திருக்கான் ஒரு வேலையைப் பாத்துக்கிட்டுப் போகத் துப்பிலே. தெருவை அளந்துகிட்டு நடக்கான். எல்லாரும் சாப்பிட்ட பிறகுதான் சாப்பிடப் போவது கொஞ்சம் முந்திப்போனால். வந்திட்டாரு. இப்பம் சாப்பிட்டுக்கிட்டு ஆபீசுக்குப் போகாண்டாமா? கொஞ்சம் பிந்தி விட்டான். இங்க என்ன சம்பள ஆளா வச்சிருக்கு? தொரை வாற நேரத்துக்கு ஆசரா நின்னு ஊயீததி வெளம்பதுக்கு? சாப்பிட்டுககிட்டுப் போ... சில நாளில் புளிக்கறி மட்டும் இருக்கும். சில நாளில் யாரும் தின்னாத கொடுப்பைக் கீரைக் துவரன் இருக்கும். மோர் ஒரு நாளும் இருக்காது. காலைக் காப்பியும் இந்த மேளம்தான் வழித்துவிட்ட மாவில் நாலு இட்டிலியோ பிய்ந்து சுருண்ட இரண்டு மூன்று தோசைகளோ! சில சமயம் அதற்கு சட்டினியும் இல்லாமல் மிளகாய்ப் பொடியும் இல்லாமல் பச்சை மிளகாயும் உப்புப்பரனும் புளிச்சுளையும் பூண்டுப் பரலும் வைத்து நுணுக்கி இரண்டு சொட்டு எண்ணெய் விட்டு வாயெரிய நாவெரியத் தின்ன வேண்டும்.”** [49]

கல்லூரியில் படிக்கும்போது சண்முகத்திற்குக் கிடைத்த வசதி வரவேற்புகள் வேலை இல்லாமல் இருக்கும் பொழுது கிடைக்காமல் போனதால் உச்சகட்ட வேதனை.

மேலும் நாஞ்சில் நாடன் சண்முகம் கதாபாத்திரத்தின் துடிப்பையும் உறுதியையும் உணர்த்துகின்றார். எவ்வளவு வேதனைகள் இருந்தாலும் வேலையினைப் பெற்றே தீருவேன் என்று சபதம் ஏற்கிறான்.

**“என்ன சண்முகம்? இன்னிக்கு லேட்டாயிடுச்சா? / ஆமா... ரிசல்ட் போட்டிருந்தா / நம்பா இருக்குதா? /செகின்ட் கிளாஸ் /கன்கிராஜுலேஷன்ஸ் அதென்ன மெயிஷா மேல கொண்டு வா... / வீட்டினுள் எல்லோரும் இருந்தார்கள் பெரியப்பா, பெரியம்மா, கல்லூரியில்**

**இருந்து ஏற்கெனவே வந்திருந்த அக்கா, தங்கச்சி. /பெரியப்பாவிடம் சேதியைச் சொன்னான். எல்லோரும் சந்தோஷம் கொண்டனர். நீ தாம்பா நம்ம குடும்பத்திலே முதல் பட்டதாரி என்றார் பெரியப்பா மிட்டாய் டப்பாவைத் திறந்து சாக்லேட் கொடுத்தார். பெரியம்மா கொண்டு தந்த காப்பியைக் குடித்துக் கொண்டு இருக்கையில் ஏதோ வேலையாக மதனி கீழே இறங்கி வந்தாள். / வாரத்திற்கு மூன்று நான்குமுறை ஐயரை வீட்டில் சென்று பார்ப்பதில் குறைவில்லை டிபனும் தின்று காப்பியும் குடித்து கையில் அறிமுகக் கடிதங்களோடும் முகவரிகளோடும் ரயில்வே ஸ்டேஷனுக்கு நடக்கையில் வான வெளியைப் பார்த்து ஏமாற்றத்தைத் தொண்டைக் குழியில் இருந்து கீழே இறக்க முயல்கையில் எதோ பேச்சு வாக்கில் சுந்தரண்ணனிடம் சொன்னான் சண்முகம் நா வேலை இல்லாமத் திரும்பிப் போமாட்டண்ணேன். இந்த அரபிக்கடல்லே விழுந்து செத்தாலும் சரிதான்."**[50]

ஆசிரியர் சண்முகத்தின் பிடிவாதத்தை உணர்த்துகிறார். வெளிமாநிலம் சென்றாவது வேலை வாப்பினைத் பெற்றே தீருவேன் என்று சண்முகம் கூறுவதாக ஆசிரியர் அக்கதாபாத்திரத்தை உருவாக்கியுள்ளார். வேலையில்லாமல் அலையும் பட்டதாரிகள் எந்த வேலைக்கும் எந்த இடத்திற்கும் தயாராக இருக்க வேண்டும் என்று உணர்த்துகின்றார்.

**ஐயர்**

'மிதவை' புதினத்தில் படைக்கப்பட்டுள்ள ஐயர் கதாபாத்திரம் மிகவும் சாதுரியமானதாக உள்ளது. மேல்சாதிக்காரர்களுக்கே உள்ள நுட்பமான அறிவும் சுரண்டல் மனப்பான்மையும் ஐயர் கதாபாத்திரத்திற்கும் உள்ளதாகவே நாஞ்சில் நாடன் உருவாக்கி உள்ளார். ஐயர் சண்முகத்திற்கு மும்மைபில் வேலை வாங்கித்தர முயற்சி செய்வதாக ஆசிரியர் கூறுகின்றார். சண்முகத்தின் குடும்பத்தோடு பழகிய காரணத்தால் ஐயர் இதனைக் கூறினாலும் பட்டும் படாமலேயே சண்முகத்தியும் உரைக்கின்றார்.

**“அன்று கிறிஸ்துமஸ் விடுமுறை எல்லோருக்கும் லீவு எனவே ஐயரின் வீட்டுக்குப் போனான் சண்முகம்.**

**வாடா எப்படி இருக்கிறாய்? அன்று ஐயர் பேச்சில் ஒரு உற்சாகம் காணக் கிடைத்தது. உனக்கு ஒரு வழி பண்ணியாச்சுடா... ரே ரோடு தெரியுமா உனக்கு? வீட்டிலிருந்து ஆர்பர் பிராஞ்சு ட்ரெயின் பிடிக்கணும். ஒண்ணாம் நம்பர் அல்லது ரெண்டாம் நம்பர் பிளாட்பாரத்திலே குர்லா, மான்கூர்டு பாந்தரா அல்லது செம்பூர் வண்டி இருக்கும். மஸ்ஜீத் பந்தர், சென்டர்ஸ் ரோடு, டாக்யார்ட் ரோடு, ரோரோடு நாலாமந்த ஸ்டேசன் இறங்கி வெளியே ரோட்டுப் பக்கம்வா வந்து அட்லஸ் மில்ஸ் காம்பவுன்ட்டுண்ணு கேளு. அதுக்கு உள்ளே ஆர்.எச்.தாம்சன் அண்ட் கம்பனி லிமிடெட் இருக்கும். ஆமா உள்ளே போயி டிக்மாளிண்ணு ஒருத்தர் – ஒர்க்ஸ் மேனேஜர் இருப்பார். அவர் கிட்டே இந்த லெட்டரைக் குடு.. சம்பளம் நீ ஒன்னும் கேக்காண்டாம். கேட்டா சாமிகிட்டே பேசிக்கிடுங்கோண்ணு சொல்லு... இந்த வாரம் போகாதே.... ஒண்ணாந்தேதி சண்டே திங்கட்கிழமை போ... ஆமா...**

**ஐயர் தந்த கவரை வாங்கிப் பத்திரப் படுத்திக் கொண்டான் முகவரியை மனதில் நன்றாகப் பதித்துக் கொண்டான். கொஞ்சம் உற்சாகம் தோன்றியது. கூடவே ஒரு அவநம்பிக்கையும் நிறையத்தரம் இப்படிப் போய்ப் பார்த்து ஏமாந்தது உண்டு.”** [51]

மும்பையில் வசிக்கும் ஐயர் சண்முகத்திடம் மும்பையைப் பற்றி விளக்குகிறார். முகவரி, நபர், கடிதம் என்று எல்லாவற்றையும் சொல்லிவிட்டு சம்பளத்தை மட்டும் ஐயரிடம் பேசிக் கொள்வதாகக் கூறுவதுதான் ஐயரின் கதாபாத்திரத்தன்மை என ஆசிரியர் உரைக்கின்றார்.

**தேசியம்**

நாஞ்சில் நாடன் சண்முகம் கதாபாத்திரத்தின் படைப்போடு தேசியத்தையும் உணர்த்துகின்றார். மும்பையில் வேலை பார்க்கும் தொழிற்சாலையில், சண்முகத்திற்கு மேலே ஆச்சாரியா வேலை பார்த்தான். சண்முகம் தமிழ்நாட்டுக்காரன் என்பதாலும்

கல்வித் தகுதியுடன் இருப்பதாலும் ஆச்சாரியா அவனுக்கு எந்தத் தொழில்நுட்பத்யைும் கற்றுத் தராமல் இருந்ததாக ஆசிரியர் எழுதுகிறார். மங்களூர்க்காரனான ஆச்சாரியா தமிழ் நாட்டுக்காரனான சண்முகத்தைத் தொழில் ரீதியாக முன்னேற விடாமல் முட்டுக்கட்டை போடுகிறேன் என்று ஆசிரியர் கூறுகின்றார்.

> **“சண்முகம் வந்தது முதலே ஆச்சாரியாவுக்கு ஒரு கவலை ஏற்பட்டிருக்க வேண்டும். முதற்காரணம் இவன் இரண்டாவது தென்னிந்தியன். இரண்டாவது இவன் கல்வித்தகுதிகள் மூன்றாவது இவனும் அக்கறை எடுத்துக் கொண்டு வேலை செய்தான்.**
>
> **தேவைக்குமேல் சண்முகத்துககுத் தெரிய வேண்டியதில்லை. என்பதில் எச்சரிக்கையுடன் இருந்தான். இதைப்பார்த்து இதில் எழுது என்பானே தவிர சமாச்சாரம் என்ன என்று தெளிவாகச் சொல்வதில்லை. சில வேலைகளைத் தானே செய்வான். அவன் செய்யும் போது கிட்டே போனால் மூடி வைத்துவிட்டு என்ன என்பான். மற்றவர்களுக்கு இதில் ஒன்றும் அக்கறைகள் இல்லை. மேற்கொண்டு வேலை சொல்லாமல் இருந்தால் சரி என்று மனோபாவம் அப்படியொன்றும். பிறர் புரிந்து கொள்ள முடியாத அட்டாமிக் ஃபிஸிக்ஸ் சமாச்சாரங்கள் அல்ல அவை. எனவே, இரண்டு முன்று மாதங்களில் வேலைகளின் அமைப்புப் புரிந்துவிட்டது.”** [52]

தேசிய நீரோட்டத்தில், வெவ்வேறு மாநிலங்களில் வெவ்வேறு மாநிலத்தவர் வேலை செய்ய வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டாலும் மாநில உணர்வே மிகுகின்றது எனப் பூடகமாக ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

**சண்முகம்**

தொழிற்சாலையில், சண்முகத்தின் கதாபாத்திரம் மூலம் ஆச்சாரியா பற்றி ஆசிரியர் விவரிக்கின்றார். விடுமுறையே எடுக்காமல் தொடர்ந்து வேலை பார்க்கும் ஆச்சாரியா சண்முகத்திற்குத் தடை போடுகிறான். மொத்தமாக இருமாத

விடுமுறையில் சென்றால் தனது இடம் பறிபோய்விடுமே என்று பரிதவிப்பதாக ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

**“சண்முகத்தை ஆச்சரியா அண்டையில் நாடவிடுவதில்லை. மற்றவர்களைப்பற்றி அவனுக்கு அவ்வளவு அச்சம் இல்லை. அதனால்தானோ என்னவோ அவன் விடுமுறையே எடுப்பதில்லை. அலுவலகத்தில் முதலில் வருவதும் கடைசியில் போவதும் ஆச்சாரியாதான். அவன் லேட்டாக வந்து சண்முகம் பார்த்ததே இல்லை. ஊருக்கு ஆச்சார்யா போய் வந்து மூன்றாண்டுகள் ஆகின்றன. அறுபத்தி மூன்று நாட்கள் பிரிவ்லெஜ் லீவ் அவன் கணக்கில் சேர்ந்திருந்தது. லீவில் போனால் இரண்டு மாதங்களாவது எடுப்பான். ஆனால் அந்த இரண்டு மாதங்களில் வேறு யாராவது அவன் வேலையைப் பார்க்க வேண்டியது வரும். அதனால் அவனுக்கு ஒரு ஸ்தானம் கிடைத்து விடும் என்பது ஆச்சாரியாவின் அச்சமாக இருக்கலாம்.”** [53]

தமிழர்கள் கல்வியிலும் தொழிலிலும் சிறந்து விளங்குவதால் தமிழர்களை எந்தவிதத்திலும் முன்னேறவிட மாட்டார்கள் என்பதனை ஆச்சாரியா கதாபாத்திரம் மூலம் ஆசிரியர் தெரியப்படுத்துகின்றார்.

சண்முகம் வெளிமாநிலத்திலும் புகழடைகிறான் என்பதனை நாஞ்சில் நாடன் குறிப்பிடுகின்றார். எந்த இடத்திற்குச் சென்றாலும் தமிழர்கள் தங்கள் புத்திசாலித்தனத்தைக் காட்டிக் பேரைப் பெற்றுவிடுகிறார்கள் என்று சண்முகம் கதாபாத்திரம் மூலம் ஆசிரியர் உணர்த்துகிறார்.

**“சண்முகம் அதுவரை கடிதங்கள் டிராஃப்ட செய்ததில்லை; இதில் தனது ஆங்கிலப்புலமை வெளிப்பட வேண்டும் என்ற முனைப்பில் யோசிக்க ஆரம்பித்தான். முதலில் ரெபரன்ஸ் எண் கொடுக்க வேண்டும். அசெம்பளி யீவஷன் என்பதைக் குறிக்க ஏ.டி. என்று எழுதி ஸ்ட்ரோக் போட்டான் தனது இனிஷியல்களைக் குறிக்க ஆர் எஸ் என்று எழுதி ஸ்ட்ரோக், பிறகு வரிசை எண், தேதி பலவித மாற்றங்கள் செய்து முதல் கடிதம் வரைந்து,**

**முடிக்க இரண்டு மணிக்கூர் ஆகியது. இதே ரீதியில் ஆறு கடிதங்கள் எழுதி டைப் செய்யக் கொடுத்தான். நான்கு நாட்கள் ஆகியும் கடிதங்கள் டைப் ஆகவில்லை. ஆச்சாரியா சொல்லி இருக்கலாம். பிறகுதானே தட்டுத் தட்டு என்று தெரிந்திருந்த ரீதியில் டைப் செய்து, சரி பார்த்து கையெழுத்துக்குக் கொடுத்தான். பத்து நாட்கள் பொறுத்துப் பதில்கள் வர ஆரம்பித்தன. அந்தத் தொடர்புக் காகிதங்களில் டிக்மானி சிவப்புமையால் அடையாளம் செய்து அவனுக்கு அனுப்பிய போது பெருமையாக இருந்தது.**" [54]

எந்த இடத்திலும் தமிழர்கள் உண்மையாக உழைப்பார்கள் என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். எதையும் கூடினமாக உழைத்துக் கருத்தூன்றிக் கற்றுப் பெருமை கொள்ளும் இனம் தமிழினம் என்று ஆசிரியர் சண்முகத்தின் தன்மை மூலம் தெரியப்படுத்துகின்றார்.

மேலும் சண்முகத்தின் வேலையையும் ஒழுக்கத்தையும் ஆசிரியர் சுட்டிக் காட்டுகின்றார். சண்முகம் கேளிக்கைகளில் ஈடுபடாமல், தனது தொழிலிலேயே கவனம் செலுத்தினான் என்று அவனது கதாபாத்திரத்தை ஆசிரியர் நேர்த்தியாகப் படைத்துக் காட்டுகின்றார்.

**"பெரும்பாலும் சாப்பிட்ட பின் இருக்கையிலே அமர்ந்து ஏதும் படிப்பான் சண்முகம், அல்லது உள்ளே போய் ரம்மி விளையாடுவதைப் பார்த்துக் கொண்டு நிற்பான். பென்கர் மத்தியானம் சாப்பிடுவதில்லை. காலையில் சாப்பிட்டு விட்டு வந்தால் பிறகு மாலை வீட்டுக்குப் போய் தான் சாப்பாடு, இடைவேளையில் வெளியே சென்று ஒரு சிகரெட் பிடித்து விட்டு, பான் போட்டு வருவார். அபூர்வமாய்ச் சில நாட்களில் இரண்டு வாழைப்பழம் வாங்கித் திண்பார்.**" [56]

வேலையில்லாத் திண்டாட்டத்தில் அலைந்த சண்முகம் வேற்று மாநிலத்தில் பொறுப்புணர்ச்சியோடு செயல்படுகிறான் என்று ஆசிரியர் உணர்த்துகின்றான். சண்முகத்தின் கதாபாத்திரத்தை இன்னும் கூர் தீட்டுகிறார் ஆசியிரியர். சண்முகம்

தெளிவில்லாமல் வேலை தேடும் பணியில் ஈடுபட்டாலும் போதுமான சம்பளம் கிடைக்காமல் போனது என்று ஆசிரியர் உணர்த்துகின்றார். வேலை இல்லாத் திண்டாடத்தில் அலையும் சண்முகம் தமது படிப்பிற்கேற்ற தகுந்த வேலைக்காகக் காத்திருந்தான் என்று நாஞ்சில் நாடன் கூறுகிறார்.

> **“சண்முகம் வேலை தேட ஆரம்பித்தான். டைம்ஸ் ஆஃப் இந்தியா பார்த்து தினமும் ஏழெட்டு விண்ணப்பங்கள் எழுதி வி.டி. போய் அதற்கென வைத்திருக்கும் பெட்டியில் போட்டுவிட்டு வந்தான். ஒன்றிரண்டு கம்பனிகள் பேட்டிக்கு அழைத்தன. பெரும்பாலும் பின்னால் தெரியப்படுத்துவதாய்ச் சொன்னார்கள். சிலர் வேலை தருவதாகச் சொன்னார்கள். ஆனால் சம்பளம் இருநூறு ரூபாய்க்கு மேல் தரமுடியாது என்றார்கள். ஒன்றும் தோதுபட்டு வரவில்லை.”** [56]

தனது தகுதிக்கேற்ப வேலை தேடும் சண்முகம் விடா முயற்சியோடும் உறுதியோடும் பிடிவாதத்தோடும் இருந்தான் என்று அவனது கதாபாத்திரத்தை ஆசிரியர் படைத்துக் காட்டுகின்றார்.

சண்முகம் வேலையில் ஈடுபட்டபோது பொறுப்போடும் உண்மையாகவும் உழைத்தான். நேரந்தவறாமல் வேலைக்கு வந்து, அக்கறையோடு பணியை முடித்துவிட்டுக் கிளம்பினான். என்று ஆசிரியர் விவரிக்கின்றார். வேலைப் அக்கறையாகத் தொழிலைக் கற்றுக் கொண்டான் என்று ஆசிரியர் சண்முகத்தின் பொறுப்புணர்ச்சியினைத் தெரிவுபடுத்துகிறார்.

> **“முன்போல் சண்முகத்திடம் கலகலப்பு இல்லை. ஆனால் வேலையில் துவிரம் காட்டினான். எல்லோருக்கும் முன்னால் அலுவலகம் வந்தான் எல்லோரும் போன பின்பும் இருந்தான். சொந்த வேலை இல்லாதபோது பெண்கருக்காக அட்வைஸ் எழுதினான். பின் கார்டு போஸ்டிங் செய்தான். இன்ஸ்பெக்ஷனில் போய் எண்ணிக் கொடுத்தான். பேக்கிங் செய்த பெட்டிகளின்மீது மார்க்கிங் செய்தான். மார்க்கிங் செய்தபோதுதான் புரிந்தது. காகிதத்தில் பேனாவால் எழுதுவதுபோல**

**இல்லை. பெட்டியில் பிரிஷ்ஷால் எழுதுவது என்பது. அசெம்பளி செக்ஷனில் போய் நின்று என்ன செய்கிறார்கள் என்று கவனித்தான். உதரிகள் பெயரும் பட்டிகை எண்ணும் தெரிந்திருந்தது என்றாலும் அதன் பணி என்ன, அசெம்பிளியில் எப்போது தேவையாகிறது என்பதை அறிய முனைந்தான்.”** [57]

வேலைப்பளுவின் காரணமாக சண்முகம் கலகலப்பின்றிக் காணப்பட்டான், அவனது கவனம் முழுக்க தொழில் மீது மட்டுமே இருந்தது என்று ஆசிரியர் அவனது கதாபாத்திரத்தை உருவாக்குகின்றார். சண்முகம் தனது வாழ்வியல் சூழலைப் புரிந்து, அதற்கேற்பப் பொறுப்புடன் வெளிமாநிலத்தில் பணியாற்றி, தனது திறனையும் வெளிப்படுத்தி, பேரும் புகழும் பெற்றான் என ஆசிரியர் புதினத்தின் மூலம் தெரியப்படுத்துகின்றார்.

**செண்பகம்**

செண்பகம் கடுமையான உழைப்பாளி. நுட்பமாக வியாபாரம் செய்து வாழ்வாதாரத்தைத் தக்க வைத்துக் கொள்ளும் கதாபாத்திரம். ஆசிரியர் செண்பகத்தை எதார்த்தமாகவும் இயல்பாகவும் படைத்துள்ளார். செண்பகம் அரிசி வியாபாரம் செய்தாலும் அந்த அரிசி மூட்டைகளை அதிகாரிகளுக்குத் தெரியாமல் லாவகமாகக்கொண்டு வரும் கதாபாத்திரத்தை சித்தரித்துள்ளார்.

**“இரண்டு நாட்களாய் செண்பகத்தைக் காணவில்லை. காலையில் அரிசிக்குப் போனவன் திரும்பவில்லை. இரவு எப்படியும் ஏழு அல்லது எட்டு மணிக்குள் வந்துவிடக்கூடியவன் எங்கு போயிருக்கக்கூடும்? ஒரு வேளை தாமதிக்கலாம் என்ற எண்ணத்தில் காமாட்சியும் சாண்முகமும் பொங்கினார்கள். மேலும் சற்று நேரம் பொறுத்துவிட்டுச் சாப்பிட்டார்கள் செண்பகத்தின் சாப்பாடு மூடி வைக்கப் பட்டிருந்தது.**

**எப்போது தூங்கினோம் என்பது நினைவில்லை. இடயில் முழிப்பு வந்தபோது கும்மிருட்டில் ஒன்றும் தெரியவில்லை. கண்டாங்கிப் பாச்சைகள் எதற்கோ கலவரப்பட்டு குறுக்கும் நெடுக்கும் கூட்டமாய்ப்**

**பறந்தன. கண் தெளிந்தபோது செண்பகத்தின் படுக்கை விரிக்குமிடம் காலியாக இருந்தது மனது திக்கென்றது.”** [58]

செண்பகம் நாசூக்காகவும் தெளிவாகவும் அரிசி வியாபாரம் செய்து வருமானத்தையும் பெருக்க நினைக்கிறான். வாழ்வியல் சிக்கலைச் சமாளிக்க செண்பகம் படாதபாடு படுவதாக ஆசிரியர் செண்பகம் கதாபாத்திரனை உருவாக்கியுள்ளார். எவ்விதத்திலாவது குடும்பத்தைக் காப்பாற்றச் கடுமையான போராட்டங்களைச் சந்திக்க வேண்டி உள்ளது என்றே ஆசிரியர் கூறுகின்றார்.

**எட்டுத் திக்கும் மதயானை**

**பூலிங்கம்**

பூலிங்கம் எதார்த்தமான உணர்ச்சிபூர்வமான கதாபாத்திரமாக ஆசிரியர் சித்தரிக்கின்றார். கிராமியச் சூழலிலும் வட்டார வழக்கிலும் பூலிங்கம் ஊறித் திளைத்தவன். சிறுவயதிலேயே ஏழ்மையின் பிடியில் சிக்கித் தவித்து வாழ்வியல் அனுபவங்களைப் பெற்றவன் என்று நாஞ்சில் நாடன் இக்கதாபாத்திரத்தை உருவாக்குகின்றார்.

**“அந்த நேரத்தை முன் கூட்டியே முடிவு செய்து வைத்திருந்தான் பூலிங்கம். சின்ன வயதில் மூக்கன் என்பது வீட்டிலும் தெருவிலும் கூப்பிடும் பெயராக இருந்தது. சூல்கள் மூன்று முறிந்து போனதுயரத்தில் நான்காவது சூல், மூக்கைக் கோறைப்படுத்திப் போட்டாலாவது தங்கிக் கிடப்பான் என மூக்குக் குத்தி விட்டிருந்தனர். எட்டாம் வகுப்புப் படிக்கும் வரைக்கும் மூங்கில் வளையம் கொர்த்துத் திரிந்தான். பிறகு அடம் பிடித்து, ஆதாளி செய்து, வளையத்தை முறித்து எடுத்தார்கள்.”** [59]

சிறுவயதிலேயே சுறுசுறுப்பும் துடிப்பும் வேகமும் கொண்ட கதாபாத்திரமாக பூலிங்கம் திகழ்கிறான். ‘மூக்கன்’ என்ற பெயரோடு இளம் வயதிலேயே பூலிங்கம் கிராமப் புறங்களில் உலவி இருக்கிறான். பூலிங்கம் கிராமப் புறங்களில் உலவி இருக்கிறான் என்று ஆசிரியர் கூறுவதன் மூலம் பூலிங்கத்தின் கிராமியச் சூழல் விவரிக்கப்பட்டுள்ளது.

பூலிங்கம் கிராமியப் பின்னணியிலேயே வளர்ந்ததால் வேகமும் விறுவிறுப்பும் கொண்டவனாய் இருந்தான். தனக்கு யார் தீங்கிழைத்தாலும் அவர்களைப் பழி வாங்கும் எண்ணம் கொண்டவனாகவே பூலிங்கம் உருவாக்கப்பட்டள்ளான். உணர்ச்சிவசப்பட்டு எதையும் செய்யும் கதாபாத்திரமாக பூலிங்கம் கதாபாத்திரம் சித்தரிக்கப்பட்டுள்ளது.

> **“மனம் அலைகளற்றுப் போய்விடவில்லை. கொந்தளிப்பு தற்காலிகமாய்த் தணிந்திருந்தது என்பது மாத்திரம் தெய்வநாயகத்துககு இது பொருள் நட்டம் மட்டுமே. அவமானம் அல்ல. ஊர் பார்த்துச சிரிக்கும்படி ஏதாவதுசெய்ய வேண்டும. தனக்குச் செய்ததற்கு அப்படி சும்மா விட்டு விட்டால் ஆகாது. படப்புக்குத் தீவைக்க முடிவெடுக்குமுன் மேலும் சிலவற்றைப் பூலிங்கம் யோசித்திருந்தான். அவன் தோப்பில் நன்றாகக் காய்க்கும் பத்து மாமரங்களுக்காவது பாதரசம் வைப்பது, பத்து அடிமரங்களை ஆழமாகக் கொத்தி, பாதரசம் வைத்து, களிமண் கொண்டு மூட வேண்டும். நேரம் எடுக்கும். கொத்தும் சத்தம் கேட்கும். நள்ளிரவில் தொழுவத்துத் தொட்டித் தண்ணீரில் ஒரு குப்பி பாலிடால் கலக்கலாம் இரண்டு தொட்டிகளிலுமாகக் கலக்கி விட்டு விட்டால், மூன்று பசுக்கள், நான்கு வண்டிக் காளைகள், ஆறு எருமைக்கடாக்கள்... வாசனையை முகர்ந்துவிட்டு நிச்சயம் குடிக்கும் என்று சொல்லிவிட முடியாது. ஒரு குற்றமும் செய்யாத கால்நடைகள் கால்களைப் பரத்திக் கொண்டு, சாணம் கழித்து, கண்களை ஈக்கள் அரிக்க, செத்துக் கிடப்பது காணக் கோரமாக இருக்கும். தெய்வநாயகம் பிள்ளையின் மோசமான விரோதி கூட மன்னிக்க மாட்டான். பெரும் பாவ மூட்டையை ஆயுள் பூரா சுமக்க வேண்டியதிருக்கும். தென்னை மரத்தில் ஏறிக் குருத்துக்களைக் சிதைப்பது எல்லாம் நடக்கிய காரியங்கள் அல்ல. விஷம் வைத்து விரோதியைக் கொல்வதற்கு ஒரு புழக்க சுதந்திரம் வேண்டும். மிகவும் கதுக்கட்டி நீண்ட நாட்கள் இருந்தால் ஒருவேளை கூடலாம். ஆனால்**

**தப்பிப்பதும் சிரமமாக இருக்கும். வைக்கோல் போர்தான் ஒரு விதம் சாத்தியமாயிற்று.'' 60**

தெய்வ நாயகம் பிள்ளையின் பணக்காரத்தனத்திற்குத் தக்க பதிலடி கொடுக்க பூலிங்கம் எண்ணுவதாக ஆசிரியர் விளக்குகிறார். பொருளாதாரக் சிதைவை ஏற்படுத்திவிட்டால், தெய்வநாயகம் பிள்ளை ஒடுங்கிவிடுவான் என்று பூலிங்கம் எண்ணுவதாக அவனது கதாபாத்திரம் சித்தரிக்கப்பட்டுள்ளது.

**மோசை**

மோசை பூலிங்கத்தின் பள்ளி நண்பனாக உருவாக்கப்பட்டுள்ளான். மோசை துணிச்சலும் துடிப்பும் கொண்ட பூலிங்கத்தை எந்த விதத்திலும் விட்டுக் கொடுக்காமல் ஊக்கப்படுத்தும் கதாபாத்திரமாகவே மோசை கதாபாத்திரம் உருவாக்கப்பட்டுள்ளது.

**"எண்ணத்துக்கு சிரிச்சுகிட்டே போணும்? அதுதான் உங்க பேர்லே இருக்க தப்பு. நாலு பேரு துணிஞ்சு இறங்க ம்டே... காச்சிப் போடணும் காச்சி... செயிலுக்குப் போனாலும் குத்தமில்லேண்ளூ வெளில இறங்கணும்... அப்பத்தான் ஒரு பயம் இருக்கும். உங்க ஊருலே மூக்கையாத் தேவுரு ஒத்த வீட்டுக்காரரு தானடே? எந்த... மகனும் வாலாட்டுகானா? கருக்கரிவாளை எடுத்து சீவிப் போடுவாரு சீவி...'' 61**

பூலிங்கம் அமைதியாக இருப்பதைக் கண்டு மோசை கொந்தளிக்கிறான். மிகவும் வளைந்து கொடுத்துப் போனால், கீழ்நிலையில் உள்ளவர்களை விட்டுவைக்க மாட்டார்கள் என்று எச்சரிக்கிறான். பூலிங்கத்தின் உண்மை நண்பனாக ஆசிரியர் அந்த கதாபாத்திரத்தைப் படைத்துள்ளார்.

மோசையின் கதாபாத்திரத்தின் துணிச்சலினை ஆசிரியர் மேலும் எடுத்துக்கின்றார். தனது நண்பன் பூலிங்கத்தைக் காக்க மோசை அவனுக்கு ஒரு கத்தியைக் கொடுக்கிறான். தற்காப்புக்காக அதனை வைத்துக் கொள்ளச் சொல்லி பூலிங்கத்திற்குத் தைரிய மூட்டும் கதாபாத்திரமாக மோசை கதாபாத்திரம் உருவாக்கப்பட்டுள்ளது.

**“என்னவோ பிளான் போடுகான் பாத்துக்கோ, எதுக்கும் இது கையிலே இருக்கட்டும். எங்கயாம் வசக்கேடா ஆரம்புட்டுகிட்டேண்ணா, ரெண்டு கூதிவிள்ளைகளையாவது வகுந்திரு. பொறவு வர்றது போய்ப் பாத்துக்கிடலாம். வயத்துலே குறுக்கே வகுத்து கொடலைச் சரிச்சிரு... ரெத்தம் கண்டா ஒரு தேவ்டியா மகனும் நிக்க மாட்டான்.”**[62]

மோசை தனது நண்பன் பூலிங்கத்திற்காக எதையும் செய்யப் துணிகிறான். பூலிங்கம் செய்த காரியத்தை நியாயப்படுத்தும் விதமாக மோசை கதாபாத்திரம் உருவாக்கப்பட்டுள்ளது.

**ராமையா பிள்ளை**

ராமையா பிள்ளை கதாபாத்திரம் டீ கடை உரிமையாளர் கதாபாத்திரமாக உருவாக்கப்பட்டுள்ளது. ராமையாபிள்ளை பூலிங்கத்தின் மீது இரக்கமும் அன்பும் கொண்டவராய்த் திகழ்கிறார். ராமையா பிள்ளை தடுத்திருக்காவிட்டால் தெய்வநாயகம் பிள்ளையின் ஆட்கள் பூலிங்கத்தை அடித்தே கொன்றிருப்பார்கள் எனத் தெரிய வருகின்றது. பூலிங்கத்தைப் பரிவுடன் ராமையா பிள்ளை காப்பாற்றுகிறார்.

**“ராமையாபிள்ளை விளக்கிக் கொண்டிருந்தார். தெய்வநாயகத்துககு மக கிட்டே இவன் என்னவோ சொன்னானாம். கூப்பிட்டுக் கேக்கணும்னு கூட்டிட்டு வந்தானுகோ வந்தவனுகோ பேய்த்தனமா அடிக்க ஆரம்பிச்சானுகோ.. நான் ஒத்தையிலே என்ன செய்ய முடியும்? குறுக்கே போயி விழுந்த பொறவுதான் அடி நிண்ணு... நம்ம கடையிலே வச்சு எண்ணத்துக்கு செய்யணும்? நாலு பேரும் வார போற இடம். எல்லாத்துக்கும் ஒருமுறை வேண்டாமா?”** [63]

மேல் சாதிக்காரர்களில் ராமையாபிள்ளை போன்ற கரிசனக்காரர்களும் உள்ளார்கள் என்பதனை ஆசிரியர் விளக்கவே இக் கதாபாத்திரத்தை உருவாக்கியதாகத் தெரிய வருகின்றது.

**சுசீலா**

சுசீலா செண்பகத்தின் உறவுக்காரப் பெண்ணாகச் சித்தரிக்கப்பட்டுள்ள கதாபாத்திரமாகும். ஆசிரியர் இக்கதாபாத்திரத்தின் இயல்பான உணர்ச்சி மேலீட்டை வெளிப்படுத்துகின்றார். பூலிங்கத்துடன் உறவு கொள்ளத் துடிக்கும் கதாபாத்திரமாக அக்கதாபாத்திரம் உருவாக்கப்பட்டுள்ளது. சுசீலா பூலிங்கத்தைச் சிறு வயது முதலே பார்த்துப் பழகிப்போனவளாக ஆசிரியர் உருவாக்குகிறார்.

> **“சுசீலாவுக்குக் கல்யாணம் ஆகி வந்த போது பூலிங்கத்துக்கு ஏழு வயது, நிக்கர் கூடப் போடாமல், குஞ்சானை ஆட்டிக் கொண்டு அம்மாவின் கண்டாங்கித் துமபைப் பிடித்தபடி களத்தில் அலைவான் அடுத்த களத்தில் இருந்து பார்த்த சுசீலாக்கா கேட்டான் இன்னும் பாலு குடிப்பானா? என்று அம்மா சொன்னான், குடுத்தாங் குடிப்பான், இன்னும் கொதி தீரல்லே.. இரண்டு களங்களுக்கும் குறுக்கே மார்பு உயரத்துக்கு ஒரு கட்டை மண்மட்டும்தான். பால் குடித்த காளையங் கன்றுகள் சுசீலாக்காவின் களம் முழுவதும துள்ளி மறிவதை இங்கிருந்தே பார்த்துக கொண்டு நிற்பான். அதன் கழுத்துக கயிற்றைப் பிடித்துக் கொண்டு ஓடலாம் என்று தோன்றும்.”** [64]

சுசீலா பூலிங்கத்தைவிட மூத்தவளாக இருப்பினும் பூலிங்கத்தை அதிகம் விரும்புவளாக உள்ளாள். அவனது சிறுவயது உணர்வுகளைக் கூட சுசீலா சரியாகப் புரிந்து வைத்திருப்பவளாக ஆசிரியர் உணர்த்துகின்றார்.

சுசீலாவின் கதாபாத்திரத்தை ஆசிரியர் மேலும் மெருகேற்றுகிறார். தெய்வநாயகம் பிள்ளையின் ஆட்கள் பூலிங்கத்தைக் கொன்றுவிடுவார்கள் என்று ஊரைவிட்டே போகச் சொல்லுகிறான். வழிச் செலவுக்கு ஆயிரம் ரூபாயைக் கொடுக்கிறார். பூலிங்கத்தின் வாழ்வில், எதிர்கால எண்ணத்தில் மிகவும் அக்கறை எடுத்துக் கொள்கிறார்.

> **“இதை வச்சுக்கோ... ஆயிரம் ரூபா இருககு.. எங்கிட்ட இப்பம் இவ்வளவுதான் இருந்து. இன்னா வாங்கிக்கோ, இதுலே கூச்சப் படதுக்கு**

**என்ன இருக்கு? போறது யாருக்கும் தெரியாண்டாம். அவ்வோ பேசிக்கிடுகதைப் பாத்தா, ரெண்டு நாளைலே உன்னை கதுக்கட்டி வளைச்சிருவா போலிருக்கு. நீ லேசா நெனைச்சிராதே இன்னைக்கு ராத்திரி ஒன்னை எப்பிடியும் பாத்திரணுமேண்ணு நான் வெப்ராளப் பட்டுக்கிட்டு இருந்தேன். நீ ஒண்ணும் யோசிக்காண்டாம். அம்மைக்கும் அப்பாக்கும் ஒண்ணும் ஆகாது. நான் உனக்கு கெடுதலா சொல்லுவேன்.**

**அவனை இறுக்கி அணைத்து நெஞ்சில் முத்தமிட்டாள்.**

**ஒணக்கு இண்ணைக்கு வேணுமா? எனக் கேட்டாள்**

**அவனோர் கலங்கிய மனநிலையில் இருந்தான். அனிச்சையாக அவன் கை அவள் அடிவயிற்றில் அலைந்தது.**

**எனக்கு வெலக்கம் வாற நாளு தப்பி இருவது நாளாச்சு… முப்பிடாரி அம்மன் கண்ணைத் தொறந்து பாத்திருக்க. பந்திரெண்டு பிள்ளை… ஓர்மையிலே வச்சுக்கோ… இப்பம் நான் சொல்லுகது போலக் கேளு. என்னை கண்ணீரு குடிக்க வைக்காதே… தைரியமாப் போயிட்டு வா என்று சொல்லிக் கொண்டே அவனைச் சேர்த்தணைத்து முத்தமிட்டாள். ஒழுகிய கண்ணீர் கரைந்த முத்தம். வெள்ளூர் குயவன் புறமடை அடைத்த குதூகலம் கலந்த முத்தம்.”[65]**

சுசீலா தன்னைவிட இளையவளான பூலிங்கத்துடன் எல்லாவிதத்திலும் உறவு வைத்துக் கொள்வதோடு அவனைப் காப்பாற்றவும் செய்கிறாள். சிறுவயதிலிருந்தே பூலிங்கத்தைப் பார்த்துப் பழகிய சுசீலா வின் கதாபாத்திரம் பூலிங்கத்தின் வாழ்வில் மையமான கதாபாத்திரமாக உருவாக்கப்பட்டுள்ளது.

**மல்லப்பா**

மல்லப்பா ஆந்திர மாநிலத்திலுள்ள ஓர் உணவகத்தில் வேலைக்காரனாக பூலிங்கத்திற்கு அறிமுகமானான். பூலிங்கத்திற்கு பொரியலும் கூட்டும் அதிகம் வைத்து அவன் அன்பைக் காட்டியதாக ஆசிரியர் குறிப்பிடுகின்றார். தாவன்கரேயிலிருந்து சிறுவயதிலேயே இத்தொழிலுக்கு வந்த மல்லப்பா பூலிங்கத்திற்கு அவ்வப்போது உதவிக் கொண்டிருந்தான்.

**“சைவச் சிற்றுண்டி விடுதியில் மல்லப்பா சற்று இணக்கமாக இருந்தான். மத்தியானம் சாப்பிடப் போனால் கூட்டு பொரியல் தாராளமாக வைத்தான். தெரியாதது போல் இரண்டு பூரிகள் மேலும் போட்டுவிட்டுப் போனான். வேலை முடிந்த பிறகு சில சமயம் பேசிக் கொண்டிருப்பான். நாலாவது பிளாட்பாரத்தின் கோடியில் ஓய்வாகக் கிடக்கும் பயணிகள் பெட்டியில் படுத்துக் கிடந்து சன்னல் வழியாகத் தெரியும் வானத் துண்டுகளைப் பார்த்துக் கொண்டு பேசிக் கொண்டிருப்பான்.” [66]**

எதார்த்தமும் தாராள மனதும் பாசமும் கொண்ட கதாபாத்திரமாக மல்லப்பா சித்தரிக்கப்பட்டுள்ளான். வேற்று மாநிலத்திலும் உதவும் குணம் கொண்ட கதாபாத்திரங்கள் இருப்பதால்தான் தமிழர்கள் இன்னும் தொழில் செய்து கொண்டிருக்கிறார்கள் என்பதனை வலியுறுத்தவே மல்லப்பா கதாபாத்திரத்தை ஆசிரியர் படைத்துள்ளார் என்றே கருதவேண்டியுள்ளது.

**ஒரு பெண் அறிமுகம்**

சேட்ஜி ரமாகாந்த் சப்பனோடு முன்பு தொழில் பங்குதாரராக இருந்தவரின் மனைவி தற்போது பழமண்டியிலேயே தங்கிக் கொண்டிருந்தாள். அப்புதிய பெண் கன்னட முகத்தோடு தமிழ் பேசும் பெண்ணாக இருந்ததோடு பூலிங்கத்திற்கு உதவும் கதாபாத்திரமாக விளங்கினாள் என ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

**“நாற்பது தாண்டிய பெண் ஒருத்தி வெளியே வந்தாள். பச்சரிசி மாவு உருண்டை போலிருந்தாள். பார்க்க பூலிங்கம் சைக்கிளில் இருந்து இறங்கி நின்றான். சேட் அனுப்பினார். ஆரஞ்சுக் கூடையைக் கொடுத்துவிட்டு வரச் சொன்னார். வா, உள்ளே வா… சைக்கிளை உள்ளே கொண்டாந்து வை… தெருக்கதவின் கொண்டியைப் போட்டுவிட்டு உள்ளே வந்தாள். சைக்கிளை ஸ்டாண்ட் போட்டு நிறுத்தி விட்டு, கேரியரில் இருந்த கூடையை எடுத்துக்கொண்டு நடந்தான். செருப்பை வாசலில் கழற்றி விட்டுப் பின்னால் போனான். உன்னை இதுக்கு முன்னே பார்த்ததில்லையே? நான் நேத்துதான் வேலைக்குச் சேர்ந்திருக்கேன்.**

**மலையாளியா? இல்லை, தமிழ் கன்னடம் பேசுகே கொஞ்ச நாள் ரெய்ச்சூர்லே இருந்தேன்'' [67]**

வெளிமாநிலங்களில் கூட தமிழ்பேசும் பெண்கள் உதவும் குணாதிசயம் கொண்டவர்களாக இருப்பார்கள் என்பதனை வலியுறுத்தவே ஆசிரியர் இப்பெண் கதாபாத்திரங்களைப் படைத்துள்ளதாகத் தெரிய வருகின்றது.

**பாபியின் உபசரிப்பு**

வேற்று மாநிலத்தில், சேட்டின் மனைவியான பாபி பூலிங்கத்திடம் கரிசனமாக நடந்து கொண்டாள். அவனுக்கு ரொட்டியும் சப்ஜியும் கொடுத்து உண்ணச் சொன்னாள். பூலிங்கத்தின் நிலைமை உணர்ந்து அவனுக்கு உடுத்த உடைகள் எடுத்துக் கொடுத்தான் என்று நாஞ்சில் நாடன் புதினத்தில் குறிப்பிடுகின்றார்.

**''கொஞ்சம் நில்லு என்று சொல்லிவிட்டு உள்ளே போனாள் பாபி வரும்போது கைகளில்இரண்டு பேண்ட் சட்டைகள் இருந்தன.**
**சின்ன பாபுவுக்குள்ளது. அவன் அளவுகூட உனக்கும் பெரிசாத்தான் இருக்கும். போட்டுக்கோ பழசுண்ணு நிலைக்காதே**
**அவ்வளவு பழசாகத் தோன்றவில்லை. சற்றுத் தொளதொள என்றிருந்தது.**
**அம்மணத்துக்கு அழுக்குத் துணி நல்லது. அழுக்குத் துணிக்கு பழைய தொளதொள துணி நல்லது. சொந்தச் சாமான்களை வைத்துக் கொள்வதற்கு கைப்பிடி போன, பூட்டுக் கழன்ற பழைய பெட்டி ஏதும் கிடைக்குமா என்று பாபியிடம் கேட்டுப் பார்க்க வேண்டும். கேட்காமலே தரும் மனசு.'' [68]**

தமிழ்நாட்டில் தமிழர்களால் விரட்டியடிக்கப்பட்ட பூலிங்கம் வேற்று மாநிலத்தில், பாபி போன்ற சேட் பெண்ணின் அரவணைப்பால் ஆதரிக்கப்பட்டான் என ஆசிரியர் பாபியின் கதாபாத்திரத்தைப் படைத்துள்ளார்.

**நிலை**

வேற்று மாநிலங்களில் சாமியார்களையும் துறவிகளையும் அதிகம் மதிக்கும் பழக்கம் உண்டு என்பதனை உணர்ந்த ஆசிரியர் 'பாபா' என்ற யோகியின் கதாபாத்திரத்தைக் கூறுகின்றார். ஒடுங்கிப் போன நிலையிலும் மக்கள் அவர்மீது எத்துணை பக்தி வைத்திருந்தார்கள் என்பதனை விளக்குகிறார். பூலிங்கத்தின் எதிர்காலத்தை எண்ணி பாபி அவனை அழைத்துப் போனதை ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

> **"பூலிங்கத்துக்கு முன்னால் நின்ற கூட்டம் தலை குனிந்து நின்றது. கிராமஃபோன் பெட்டியின் முள்ளிருக்கும் ஹாண்டிலைத் தூக்கி நகர்த்துவதைப் போல, பாபா பக்கத்தில் நின்றிருந்த சேவகன் ஒருவன், அவர் கையைத் தூக்கி ஒவ்வொருவர் தலைமீதும் வைத்து எடுத்துக் கொண்டிருந்தான்.**
>
> **சாமிக்குப் பிடிக்கும் என்று பாத்திரத்தில் மூடிக் கொண்டு வந்திருந்த பிரியாணியை அள்ளி அவர் வாயில் வைத்தான் ஒரு பக்தன். வாயினுள் சில பருக்கைகள் சென்றிருக்கக் கூடும். வெளியே உதிர்ந்த பிரியாணிப் பருக்கைகளைக் கையில் வைத்திருந்த பாத்திரத்தில் ஏந்திக் கொண்டான். பிரசாதமாகப் பாத்திரத்தைத் துணியால் மூடிக் கொண்டான். ஒருவர் சாக்லேட் தாளைப் பிரித்து எறிந்து விட்டு வாயின் இடைவெளியில் தள்ளினார் விரலால். அவர் நாக்கால் உதம்பி வெளியே தள்ளியதை வழித்து எடுத்துக் கொண்டார்."**[69]

வடஇந்தியாவில் ஆன்மிக சிந்தனையும் துறவிகளின் மரியாதையும் மிக ஆழமாகப் பதிந்துள்ளன என்பதை 'பாபா' கதாபாத்திரம் மூலம் உணர முடிகின்றது. உண்ண முடியாத நிலையிலும் வயதான துறவிக்கு மக்கள் செலுத்தும் அன்பை ஆசிரியர் பதிவு செய்துள்ளார்.

**பாபி**

பாபியின் கதாபாத்திரத்துடன் மனக் குமுறலை ஆசிரியர் வெளிப்படுத்துகின்றார். எல்லா மாநிலத்திலும் வயதாகிப் போனவர்களின் நிலை

பாபியின் நிலைதான் என்பதனை அக்கதாபாத்திரம் மூலம் ஆசிரியர் வெளிப்படுத்துகிறார்.

**“யாருக்கும் நான் ஒரு பொருட்டில்லப்பா. சமையற் கட்டிலே கெடக்க பழைய பாத்திரம். மருமக்கமாருக்கு ரெண்டு சிங்காரிக்கவும் கேபிள் டி.வி. பாக்கவும் ஷாப்பிங் போகவும் நேரம் சரியா இருக்கு. குனிஞ்சு துரும்பு எடுத்துப் போடுகதில்லே! அவுனு ரெண்டு பேரும் காலம்பற போனா, ராத்திரி பத்து மணிக்கு வாறான்.”**[70]

மகன்களும் மருமகள்களும் எல்லா நிலத்திலும் ஒரே மாதிரியான குணாதிசயம் கொண்டவர்களாகவே உள்ளார்கள் என நாஞ்சில் நாடன் பதிவு செய்கின்றார்.

மேலும் பாபியின் நிலையினை விளக்கிய ஆசிரியர் பெண்களின் நிலையினையும் பொதுவாக விளக்கிக் கூறுகின்றார். இந்தியப் பெண்கள் சற்று வயதாகிவிட்டாலே, அடுக்களையிலும் ஆன்மீகத்திலுமே தங்கள் பொழுதைக் கழித்துவிடுகிறார்கள் என்று உரைக்கின்றார்.

**“படிப்புரைச் சுவரோரம் ஓடிய கருஞ்சிப்பு எறும்பு வரிசைகளைப் பார்த்துக் கொண்டிருந்தான் பூலிங்கம். சேட்டுக்கு பாபி அலுத்துப் போனாள் போலிருக்கிறது. நீண்ட காலம் போட்டு அலுத்து இன்னும் கிழியாத சட்டை. பாபிக்கு காரியங்கள் நகர்த்தவே பொழுது போதவில்லை. தன் உடலைச் சீராக வைத்துக் கொள்வதிலும் சேட்டுக் கட்டியிருந்த தம்பத்யக் கயிறு தலையாமல் பார்த்துக் கொள்வதிலும் சாமர்த்தியம் போதவில்லை போலும். இந்தியக் குடும்பப் பெண்களுக்கு நாற்பத்தைந்து வயதுக்குள்ளேயே எல்லாம் ஆடி அடங்கிவிடும் போலிருக்கிறது. பிறகு பெசரெட் செய்வதும பெண் பிள்ளைகளுக்குச் சீர் விடுவதும பேரன் பேத்திகளைக் கொஞ்சுவதும் வெள்ளிக்கிழமை அம்மனுக்கு குத்து விளக் கேற்றுவதும் சனீசுவரனைச் சுற்றுவதும் தான் வாழ்க்கை என்று ஆகிவிடும் போலும்.”** [71]

வெளிநாட்டிப் பெண்களைப்போல் உடலைப் பராமரிப்பதும் வாழ்க்கை முறையினைச் சீரமைத்துக் கொள்வதிலும் இந்தியப் பெண்களுக்குப் பக்குவமில்லை, படிப்போ போதவில்லை என்றே ஆசிரியர் பாபியின் கதாபாத்திரம் மூலம் விளக்குகின்றார்.

பாபியின் நினைவலைகளில் குஜராத்திப் பெண்களின் நிலை நிழலாடுகின்றது. அன்றைய குஜராத்திப் பெண்களைப் போல் வனப்புள்ள பெண்ணாகத்தான் இல்லை என்ற பாபியின் நினைவை ஆசிரியர் பதிவு செய்கின்றார்.

> **“ஹூப்ளியில் நிறையக் குஜராத்திக் குடும்பங்கள் இருந்தன. அழகான பெண்கள். முழுங்கீற்று கக்கீரலாம் போல இயற்கை அவர்களுக்கு வஞ்சனையற்ற கொடை கொடுத்திருந்தது. மெலிந்து, நீண்டு, சிவந்து, பொலிந்து, மலர்ந்து – சொல்லிக் கொண்டே போகலாம் சொற் குவியலாய் அப்படியொரு பெண்ணாய் பாபியைக் கற்பனையில் மீட்டெடுக்க முடியவில்லை. சேனைக் கிழங்கும் பூசணிக் காயும், தடியன்காயும் வெள்ளரிக்காயும் போட்டுக் கட்டிய சாக்கு மூட்டை போல உருவமற்று கட்டொழுங்கு இல்லாமல்.”** [72]

பாபியின் உடலுழைப்பும் சலிப்பும் உளைச்சலும் உருவத்தை உருக்குலைத்து விட்டன. பாபியின் நிலையும் மனவேதனையும் பாபியின் நினைவலைகளில் தெரிய வருகின்றன. பாபியின் கதாபாத்திரத்தினை ஆசிரியர் உருக்கமாகச் சித்தரித்துள்ளார்.

**பூலிங்கம்**

பூலிங்கம் வெளி மாநிலங்களில் ஏற்பட்ட அனுபவங்களால் பல்வேறுவிதமான எண்ண ஓட்டத்திற்கும் சென்றான். குறுகிய காலத்தில் பெரும் பணத்தை எடுத்துக் கொண்டு வேறு மாநிலத்திற்குச் சென்று நிலைத்துவிடலாம் என்று நினைப்பதாக ஆசிரியர் அவன் கதாபாத்திரத்தை எடுத்துக் கூறுகின்றார். பூலிங்கம் ஓர் ஒழுங்கில்லாத கதாபாத்திரமாகவே திகழ்கின்றான்.

> **“எண்ணம் பல திசைகளிலுமாய்ப் பிரிந்து ஓடியது. சன்னக் கம்பியொன்று கிடைத்தால் ஏதாவது ஒரு அறையின் பூட்டைக் குடைந்து பார்க்கலாம்.**

**நிரம்பப் பணம் தேவையில்லை. ஐந்நூறு அல்லது ஆயிரம் போதும். இங்கிருந்து ஓடிவிடலாம். தற்செயலாய் நிறையப் பணம் கிடைத்தால் என்ன செய்வது பத்தாயிரக் கணக்கில் இலட்சக் கணக்கில் ஐந்து லட்சம் ரூபாய் ரொக்கமாகக் கிடைத்தால் என்ன செய்வது என்று யோசித்துப் பார்த்தான். மறைவாக எடுத்துக் கொண்டு போக ஒரு சின்ன சூட்கேஸ் பார்க்க வேண்டும். இரண்டு செட் உடைகள் எடுத்துக் கொள்ளலாம். செலவுக்கான சில்லறை மட்டும் வெளியே வைத்துக் கொண்டு பெட்டியைப் பூட்டிக் கையில் எடுத்துக் கொண்டு புறப்பட்டுவிட வேண்டும்.”** [73]

பல்வேறு அனுபவங்களுக்குப் பிறகும் வாழ்க்கைப் பாடத்தினைத் தெளிவுடன் கற்றுக் கொள்ளவில்லை எனில், நிலையில்லாத சிந்தனையும் விபரீதக் கற்பனையும் எல்லோருக்கும் வெளிப்படும் என்பதனை உணர்த்தவே இந்நிலையை ஆசிரியர் எழுதியுள்ளார்.

**பூலிங்கம் நிலை**

பூலிங்கம் வெவ்வேறு மாநிலங்களைச் சுற்றிக் கொண்டு வரும்பொழுது இரயில் வண்டி நண்பனாக திம்மன் பழகுகின்றான். பூலிங்கம் திம்மனோடு பழகிக் குடிப்பழக்கத்திற்கு ஆளாகின்றான். நிலையில்லாத தன்மையினையும் உறுதியில்லாத மனநிலையையும் பூலிங்கம் பெறுகிறான் என ஆசிரியர் உரைக்கின்றார்.

**“வழக்கமாய் ரயிலில் கூட வரும் திம்மனிடம் சொல்லி வைத்திருந்தான். நல்ல அறை இருந்தால் பார்க்க, திம்மனின் வீடு நகரின் கோடியில் இந்திரன் மூலையில் இருந்தது. ஒரு நாள் கூட்டிக் கொண்டு போனான். புல் வேய்ந்த கூரையு ச்ாணம் மெழுகிய தரையும், வாசல் உண்டு. சன்னல் கிடையாது. அடுக்களை வாழ்வறை, படுக்கை அறை எல்லாம் வட்டமான ஒரே அறை. திம்மனின் அம்மா தார்பாய்ச்சிச் சேலை கட்டிக் கொண்டிருந்தான். அடுப்பின் முன் உட்கார்ந்து சோள ரொட்டி தட்டிக் கொண்டிருந்தார்.**

**சிலசமயம் திம்மன் இரண்டு பாக்கெட்டுகளிலும் கால் குப்பி வாங்கிப் போட்டுக் கொண்டு வருவான். சில்லறை விலைக்கு குப்பத்தில் விற்று விடுவானா அல்லது வீட்டு உபயோகத்துக்கா எனத் தெரியவில்லை. ஒரு நாள் கால் குப்பி பிராந்தி வாங்கி ஆளுக்குப் பாதியாகக் குடித்தார்கள். முதல் குடிப்பின் எல்லா மெய்ப்பாடுகளும், கண்கள் நன்கு சிவந்திருந்தது. முகத்துக்கு ஒரு தீவிரத்தன்மை வந்திருந்தது. இரயில் பெட்டிக் கண்ணாடி ஒரு அந்நிய முகத்தைக் காட்டியது. வாசனையும் மூச்சில் கலந்திருக்கும்.”** [74]

வேற்று மாநிலத்தில், திம்மன் போன்றோரின் பழக்க வழக்கங்கள் தங்களின் நிலையை இழக்கச் செய்துவிடும் என்றே ஆசிரியர் உணர்த்துகின்றார். பூலிங்கம் தம்மோடு சேர்த்துத் தன்னை இழந்துவிட்டான் என்று நாஞ்சில் நாடன் தெளிவுறுத்துகின்றார்.

**கோமதி**

திம்மன் குடிப்பழக்கத்தால் அவனைப் போன்ற பலரைப் பழகி வைத்திருந்தான். சாராய விற்பனையில் சிறைக்குச் சென்றோர்கள்எல்லாம் திம்மனின் நண்பர்களாக இருந்தனர். இதில் ஒரு பெண்ணும் திம்மனுக்கு அக்காளாகத் திகழ்ந்தாள். திம்மனுக்கும் அக்காளுக்கும் பாசம் பரிவு இருப்பினும் சிறைக்குள் போவதும் வருவதும் சகஜமாகவே இருந்தது என ஆசிரியர் தெளிவாகக் குறிப்பிடுகின்றார்.

**“திம்மன், அக்கா என்றுதான் கூப்பிட்டான். திம்மனுக்கு பூலிங்கத்தைவிட ஒன்றிரண்டு வயசுகள் அதிகம் இருக்கும். அவன் அக்காவுக்கு அவனை விடவும் இரண்டு வயது கூட இருக்கும். கண்களில் ஒரு பரிவு சுரந்து நின்றது. கூடப்பிறப்புகள் கொள்ளும் பரிவு இப்படித்தான் இருக்கும் போலும். ஆனால் பெரிய துயரம் தெரியவில்லை. போலீசில் பிடிபடுவதையும் சிறைக்குப் போவதையும் வாழ்க்கை சகஜப்படுத்திவிட்டது போலும்.”** [75]

தகாத பழக்க வழக்கங்களும் அதனால் ஏற்படும் தண்டனைகளும் பழகிப்போய் விட்டால், தனிமனிதர் சிந்தனைகள் தறிகெட்டுப் போகுமென்பதனை உணர்த்தவே திம்மனின் அக்காள் கதாபாத்திரத்தினை ஆசிரியர் உணர்த்தியிருக்கிறார்.

**வேலம்மை**

வேலம்மை பூலிங்கத்தின் தாய். மண்பாண்டம் செய்து சேரியில் வாழும் பெண். பூலிங்கம் போல் ஓர் பிள்ளையைப் பெற்றுவிட்டு, தினமும் அவலத்திற்கு உள்ளாகும் கதாபாத்திரம். ஆசிரியர் தாயின் மனோநிலையினை விவரித்துள்ளார். பூலிங்கம் எப்படிப்பட்டவனாக இருப்பினும் மறவாமல் அவன் கடிதம் போட்டதை எண்ணிப் பூரிக்கும் தாயாக ஆசிரியர் அக்கதாபாத்திரத்தைப் படைத்துள்ளார்.

> **"வேலம்மை முகத்தில் ஒரு பொலிவு வந்திருந்தது. சாயங்காலம் பானைகள் விற்கிற சாக்கில், நாலைந்து பாண்டங்களைத் தலையில் வைத்துச் சுமந்து கொண்டு சேரிக்குப் போனா.ன ஏதேச்சையாகக் கேட்பது போல் மோசையின் அம்மாவிடம் கேட்டான். மோசையை எங்க காணதுக்கே இல்லை. தானியேல் கூட கூப்புக்கு லோடு ஏந்தப் போயிருக்கான். ராத்திரியாகும். பூலிங்கத்தைப் பத்தி எதாம் துப்பு உண்டா? குரலைத் தாழ்த்திக் கொண்டு சொன்னான். லெட்டர் போட்டிருக்கான். காலனாப் போவான், ஏழு மாசகத்துப் பொறவு."** [76]

இன்னும் தன்னுடைய பொருளாதார நிலை மறவாமல் மண்பாண்டத்தைச் சுமந்து செல்லும் தாயாகவே வேலம்மாள் சித்தரிக்கப் பட்டுள்ளாள். சேரிவாழ் மக்களின் குறியீடாக வேலம்மாள் படைக்கப்பட்டு உள்ளதாகவே கருத வேண்டியுள்ளது.

**செண்பகத்தின் நிலை**

செண்பகம் பூலிங்கத்தைப் பற்றி அவள் சித்தி சுசீலாவிடம் விசாரிக்கிறாள். சுசீலா பூலிங்கத்ப் பற்றி கூறுகிறாள். பூலிங்கத்தை பற்றி எண்ணி வருத்தப்படும் கதாபாத்திரமாக செண்பகம் கதாபாத்திரம் சித்தரிக்கப்பட்டுள்ளது. எதேட்சையாக நடந்த சம்பவத்தால் பூலிங்கத்தின் வாழ்க்கையே மாறிப் போய்விட்டதே என எண்ணி

வருத்தப்படுவதாக செண்பகம் விளக்கப்படுகின்றாள். சுசீலா அவளுக்கு ஆறுதல் கூறுகிறாள்.

> **“செண்பகத்தின் முகம் சுண்டிவிட்டது தெரிந்தது சுசீலாவுக்கு. அதுக்கு நீ என்ன செய்வே பாவம்? நீ அதைப்பத்தி சங்கடப் படாண்டாம். ஆனா இப்பம் அவன் நல்ல வேலையிலே இருப்பான் போலிருக்கு. அவ்வோ அம்மைக்கு ஆயிரம் ரூபா அனுப்பி இருக்கான்.”** [77]

பூலிங்கம் அவன் அம்மாவிற்கு ஆயிரம் ரூபாய் அனுப்பியிருப்பதை அறிந்து செண்பகம் பூரிப்பதாக ஆசிரியர் எடுத்துரைக்கிறார்.

செண்பகம் தன்னை நினைத்து நொந்து கொள்கிறாள். ஊர்க்காரர்கள் பூலிங்கத்தைத் தன்னோடு சேர்த்து வைத்துத் தவறாகவே பேசியதால்தான் பூலிங்கத்தின் வாழ்க்கை பாழக்கிப் போய்விட்டதாக செண்பகம் வருந்துவதாக ஆசிரியர் கூறுகின்றார்.

> **“இருந்தாலும் சித்தி, தான் இந்தச் சுமட்டையும் தூக்கிகிட்டு அலைய வேண்டியது இருக்கு பாரு. கடைசியிலே நாலு பேரும் என்னைப் பாத்துத்தானே சாடை பேசனா... எனக்கும் அவுனுக்கும் லவ்வுண்ணு பேசன் ஆளுகளும் உண்டும். பெரியத்தானுக்கு அது ஒரு கொறட்ட சுவாவம், என்னா, எதுக்குன்னு கூடக் கேக்கமாட்டா. சில சமயம் இப்பிடி நமக்கே திரும்பிவரும். சவத்தைத் தள்ளு. ஆனா அவன் லெட்டர் போட்டிருக்காண்ணு. கேட்டதும் எனக்கு ஒரு சமாதானம் பாத்துக்கோ நாமோகொடுத்தோம்ணு இல்லாம எங்கயாம் போயிப் பொழைச்சுக்கிட்டாம்னு இருக்கும்லா?**
>
> **என்ன ஆனா என்ன சித்தி? அவுனுக்குப் போன வாழ்க்கை போனதுதானே? எல்லாம் நீயும் நானு;ம நெனச்சு நடக்கது இல்லம்மா சரி விடு நான் இந்தப் பேச்சே எடுத்திருக்காண்டாம். நாம தப்புச் செய்யல்லேண்ணு கடவுளுக்குத் தெரியும்லா? பின்னே என்னா தோசை**

**சுடட்டா? வேண்டாம் சித்தி, அம்மை தேடுவா. எழுந்து போனபோது செண்பகத்தின் கண்கள் கலங்கி இருந்ததைக் கவனித்தாள் சுசீலா.”** [78]

தன்னால்தான் பூலிங்கம் எங்கே கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறான் எனக் கலங்கும் கதாபாத்திரமாக செண்பகம் திகழ்கிறாள். ஒவ்வொரு நாளும் பூலிங்கத்தையே நினைத்து வருந்திக் கொண்டிருந்தாலும் தான் தவறு செய்யவில்லை என்பதில் உறுதியாக இருப்பதாகவே செண்பகம் கதாபாத்திரம் உணர்த்தப்பட்டுள்ளது.

**திம்மன்– பூலிங்கம் – கோமதி**

திம்மன், பூலிங்கம், கோமதி மூவரும் மது அருந்துகிறார்கள். திம்மனின் அக்காள் கோமதியும் சரிசமமாக அலைந்து மது அருந்துகிறாள். கோமதியின் மகனுக்கும் மது வழங்கப்பட்டதாக ஆசிரியர் குறிப்பிடுகின்றார். எந்த நெறியும் இல்லாமல் எல்லாம் பழகிப் போனால், எல்லா அவமானங்களும் சகஜமாகி விடும் என்றே ஆசிரியர் உரைக்கின்றார்.

> **“இடுப்பில் மகனைத் தூக்கிக் கொண்டு கிண்ணத்தில் மூடியபடி கறியோகுழம்போ எடுத்துக்கொண்டு வந்தாள் கோமதி; ஒரு தம்ளரை எடுக்கும்படிக் கூறினான் திம்மன்.**
>
> **திம்மன் எழுந்து போய், ஒரு தம்ளரை எடுத்து வந்து, அளவு பார்த்து ஊற்றி, தண்ணீர் சேர்த்துக் கொடுத்தான். முகத்தைத் திருப்பிக் கொண்டு ஒரு மிடறில் விழுங்கினான். தன் கப்பிலிருந்து சிறிதாகச் சரித்து மருமகனுக்கு உறிஞ்சக் கொடுத்தான் திம்மன்.**
>
> **சாப்பிடும்போது தட்டு எது, தரை எது என்று தெரியவில்லை. எல்லாம் சமரச சன்மார்க்கமாக இருந்தது. கோமதிக்கு சிரிப்பு அடக்க அடக்கப் பொங்கியது. பச்சை மொச்சையும் பிஞ்சுக் கத்திரிக்காயும் போட்ட காரக் குழம்பு மூக்கு முகம் எல்லாம் காந்தியது. கோமதி கொணர்ந்த கிண்ணத்தில் இருந்ததுதான் போலும்.”** [79]

எந்தவிதக் கலாச்சாரமும் இல்லாமல் தலைமுறை தலைமுறையாக ஒழுக்கமில்லாமல் போகும் கதாபாத்திரங்கள் மிகப் பெரும் அவலத்தில் முடிவுறும் என்று உணர்த்தவே ஆசிரியர் இச்சூழலை ஏற்படுத்துகின்றார்.

**கோமதியின் வேலை**

திம்மனின் அக்காள் கோமதியும் கீழ்த்தட்டு நிலையில்தான் வாழ்ந்து வந்தாள். கோமதி பிளாஸ்டிக் கம்பெனிக்குத் தினமும் வேலைக்குச் செல்ல வேண்டும். எதோ ஒரு கல்யாணத்தை ஒட்டி விடுப்பு எடுத்ததால் சம்பளம் கிடைக்கவில்லை என்று ஆசிரியர் கோமதியின் நிலையினையும் பதிவு செய்கின்றார்.

> **“மத்தியானம் தாண்டிவிட்டது. அதுவரை பூலிங்கமும் கோமதியும் நின்று கொண்டிருந்தார்கள். நடந்து பஸ் நிலையம் போய், பஸ் பிடித்து வீட்டுக்குப் போக மூன்றரை மணி ஆகிவிடும். கோமதிக்கு இன்று வேலைக்கும் போகவில்லை. ஒரு நாள் சம்பளம் போக கல்யாணத்தை ஒட்டி நாலைந்து நாள் விடுபபு எடுத்திருப்பதால் நாள் பூரா பிளாஸ்டிக் கம்பனி ஒன்றில் எண்ணிஎண்ணிக் கட்டுகிற வேலை காலை ஏழு மணிக்குப் போனால் திரும்பிவர ஆறரை ஏழு ஆகும். வந்தபின் குளித்தல், துவைத்தல், சமைத்தல், பிள்ளை வளர்த்தல்.”** [80]

கோமதியின் அன்றாட வாழ்க்கையும் அவலமாகவே உள்ளது. கடுமையான உழைப்பும் குறைந்த ஊதியமும், வீட்டு வேலையும் கோமதியை முற்றுகையிட்டு தினமும் அவளை அழுத்திக் கொண்டே இருக்கின்றன என்று ஆசிரியர் கூறுகின்றார். மேலும், நாஞ்சில்நாடன் சதுரங்கக்குதிரை தலைமை மாந்தர் பற்றிக் கூறும்போது

> **“தனியார் கம்பெனி ஒன்றில் விற்பனைப்பிரிவில் இருந்தான் நாராயணன் பெரும்பாலும் ஒரே விதமான வேலை வெளியூர் போனால் மட்டும் மாறிக்கிடக்கும் சில சூழ்நிலைகள் இங்கு வேலைக்குச் சேர்ந்து பதின்மூன்று ஆண்டுகள் ஆகிவிட்டன.’’**[81]

என்று அறிமுகப்படுத்தி நாவலில் காட்டுகிறார்.

## தொகுப்புரை

❖ நவீன இலக்கிய வடிவங்களில் புதினமும் ஒன்று. புதினம் நெகிழ்ச்சித் தன்மை உடையதாகவும், ஆற்றல் மிக்கதாகவும் மக்கள் போற்றும் மகத்தானதாகவும் திகழ்கிறது. எந்த ஓர் இலக்கியமாக இருந்தாலும் ஏதோ ஒரு கருத்தை உணர்த்துவதாக அமையும். அவ்வாறு சொல்லவரும் கருத்தைச் சில பாத்திரங்களின் மூலம் வெளிப்படுத்துவர். தான் கண்ட உண்மைகளைப் பிறிதோர் வடிவத்தில் உருவாக்கிக் காட்டும் போது வாழ்க்கையின் உண்மைகளைப் பற்றி ஓரளவு அழித்து கொண்ட உணர்வு ஏற்படுகிறது.

❖ புதினப் படைப்பில் கதை மாந்தர் தெரிவும் கட்டமைப்பும் ஆசிரியரின் திறனையொட்டி அமைகின்றது. மாந்தர்களின் செயல்பாடுகளை ஆசிரியர் கூறும்போது நுட்பமான முறையில் அறிமுகம் செய்வதால் அம்மாந்தர் படைப்பு கதையில் வெற்றிதரும். அதனை வருணிக்கும் ஆற்றல் ஆசிரியர் திறனைப் பொறுத்து அமைகிறது. ஒரு புதினம் வெற்றி பெறுவதற்கு கதை மட்டும் காரணமில்லை. கதை மாந்தர்களும் காரணமாகின்றனர். மாந்தர்களின் வெற்றியே படைப்பாளியின் வெற்றியாகும்.

❖ கதை என்ற கதாத்தப்பாத்திரம் உயிர்போன்றது. கதை மாந்தர்கள் இன்றி புதினம் இயங்கமுடியாது.

❖ நாவலின் கூறுகளுள் சிறப்புடையது பாத்திரப் படைப்பாகும். அறிவு, உணர்ச்சி, மனம், சுயசிந்தனை, குணம் பண்புகள், காலச்சூழ்நிலைகள் ஆகியவற்றினைக் கூர்ந்து அறிந்து அனுபவமாக வெளிப்படுத்தப்படுவதே பாத்திரப்படைப்பாகும்.

❖ ‘தலைகீழ் விகிதங்கள்’ புதினத்தில் தலைமை மாந்தராக வருபவர் சிவதானு. படித்துப் பட்டம் பெற்றும் வேலை கிடைக்காத சூழ்நிலையில் ஒரு பணக்கார வீட்டிற்கு வீட்டோட மாப்பிள்ளையாகச் செல்லும் சூழ்நிலை ஏற்படுகிறது. வீட்டோட மாப்பிள்ளை என்பது பணக்கார மாமனார் வீட்டின் சம்பளமில்லாத வேலைக்காரன் என்பதை உணர்ந்து கொள்கிறான். மேலும் சிவதானு அவன் மனைவி பார்வது மாமனார் சொங்கலிங்கம் பிள்ளை, மாமியார் நீலாப்பிள்ளை, பார்வையின் தங்கை

பவானி ஆகியோர் ஒவ்வொரு காதாப்பாத்திரமும் தேவையறிந்து படைக்கப்பட்டுள்ளது என்பது ஆய்வாளர் கருத்தாகும்.

- ❖ மாமிசப்படைப்பில் விவசாயிகளை சுரண்டிவாழும் அதிகார வர்க்கம் ஏழைகளை வாழவிடாமல் செய்யும் பாங்கு, சுரவாழும் பணக்காரர்கள் கூறுவழிகந்தையா, பன்னையார் கங்காதரம்பிள்ளை போன்ற கதாப்பாத்திரங்களை ஆசிரியர் மிகச்சிறப்பாக படைத்துள்ளார்.
- ❖ நாஞ்சில் நாடன் சண்முகம் கதாபாத்திரத்தின் படைப்போடு தேசியத்தையும் உணர்த்துகின்றார். மும்பையில் வேலை பார்க்கும் தொழிற்சாலையில், சண்முகத்திற்கு மேலே ஆச்சாரியா வேலை பார்த்தான். சண்முகம் தமிழ்நாட்டுக்காரன் என்பதாலும் கல்வித் தகுதியுடன் இருப்பதாலும் ஆச்சாரியா அவனுக்கு எந்தத் தொழில்நுட்பத்யையும் கற்றுத் தராமல் இருந்ததாக ஆசிரியர் எழுதுகிறார். மங்களூர்க்காரனான ஆச்சாரியா தமிழ் நாட்டுக்காரனான சண்முகத்தைத் தொழில் ரீதியாக முன்னேற விடாமல் முட்டுக்கட்டை போடுகிறேன் என்று ஆசிரியர் கூறுகின்றார். மேலும் பார்வாதி, சொக்கலிங்கம்பிள்ளை, ஐயர், ஆச்சாரியார் போன்ற பாத்திரங்களையும் படைத்துள்ளார்.
- ❖ சதுரங்கக் குதிரை நாவலில் நாராயணன், சதாசிவஐய்யார், சாந்தாராம், என கந்தைமாந்தர்கள் வருகின்றனர்.
- ❖ என்பிதலனை வெயில் காயும் புதினத்தில் சுடலையாண்டி, தாய் தந்தையை இழந்தவன், படித்து பட்டம் பெற்றும் வேலைக்கு போராடுபவன், ஆவுடையம்மாள் போன்ற பிறப்பாத்திரங்களும் படைக்கப்பட்டுள்ளது.
- ❖ எட்டுதிக்கும் மதயானை புதினத்தில் பூலிங்கம், மோசை, இராமையாப்பிள்ளை, சுசீலா, மல்லப்பா, பாபி, கோமதி, வேலம்மை போன்ற பாத்திரங்கள் நாவலின் கதைஓட்டத்திற்கு துணைபுரியும் பிறமாந்தர்களாக படைக்கப்பட்டு நாஞ்சில்நாடன் தன் நாவல்களில் கூறவந்த செய்திகளை மனிதசமூகத்ற்கு செவ்வனே படைத்தளித்துள்ளார் என்பதில் ஐயமில்லை.

## அடிக்குறிப்புகள்

1. அ.ச.ஞானசம்பந்தம், இலக்கியக் கலை, ப.350–357
2. ம.ராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.117
3. Maren Elwood, The character make your stone, p.1
4. இரா.மோகன், டாக்டர் மு.வ.வின் சமூக நாவல்கள், ப.60
5. Walter Allen, The English Novel, p.16
6. இரா.ஜோதிர் ராதிகா, நளபாகம் காமேச்வரன் மூன்றாவது கருத்தரங்க ஆய்வுக் கோவை, ப.369–370
7. தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், ப.308
8. இரா.மோகன், டாக்டர் மு.வ.வின் சமூக நாவல்கள், ப.60
9. ச.சோமசுந்தரம், தமிழ் இலக்கியக் கொள்கைகள், ப.101
10. Christopher Hatarage, The Winter's Book, Helen Hul (Ed) p.33
11. தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், ப.307
12. நாஞ்சில் நாடன், தலைகீழ் விகிதங்கள், ப.39
13. மேலது, ப.41
14. மேலது, ப.110
15. மேலது, ப.138
16. மேலது, ப.145
17. மேலது, ப.164
18. மேலது, ப.203
19. மேலது, ப.105
20. மேலது, ப.105
21. மேலது, ப.206
22. மேலது, ப.206
23. மேலது, ப.206
24. மேலது, ப.23

25. மேலது, ப.27
26. மேலது, ப.119
27. மேலது, ப.143
28. மேலது, ப.154
29. மேலது, ப.185
30. மேலது, ப.206
31. நாஞ்சில் நாடன், என்பிலதனை வெயில் காயும், ப.29
32. மேலது, ப.142
33. மேலது, ப.181
34. மேலது, ப.150
35. மேலது, ப.182
36. மேலது, ப.67
37. நாஞ்சில் நாடன், மாமிசப் படைப்பு, ப.11
38. மேலது, ப.11
39. மேலது, ப.11
40. மேலது, ப.19
41. மேலது, ப.13
42. மேலது, ப.14
43. மேலது, ப.47
44. மேலது, ப.149
45. மேலது, ப.11
46. மேலது, ப.30, 31
47. நாஞ்சில் நாடன், மிதவை, ப.48
48. மேலது, ப.32
49. மேலது, ப.62
50. மேலது, ப.76
51. மேலது, ப.100
52. மேலது, ப.105
53. மேலது, ப.107
54. மேலது, ப.112

55. மேலது, ப.115

56. மேலது, ப.133

57. நாஞ்சில் நாடன், எட்டுத்திக்கும் மதயானை, ப.5

58. மேலது, ப.8

59. மேலது, ப.12

60. மேலது, ப.22

61. மேலது, ப.21

62. மேலது, ப.31

63. மேலது, ப.20

64. மேலது, ப.56

65. மேலது, ப.60

66. மேலது, ப.69

67. மேலது, ப.70

68. மேலது, ப.71

69. மேலது, ப.71

70. மேலது, ப.79

71. மேலது, ப.91

72. மேலது, ப.95

73. மேலது, ப.98

74. மேலது, ப.101

75. மேலது, ப.102

76. மேலது, ப.122

77. மேலது, ப.101

78. மேலது, ப.102

79. மேலது, ப.109

80. மேலது, ப.122

81. நாஞ்சில்நாடன் – சதுரங்கக்குதிரை, ப.9.

## இயல் – மூன்று

# நனவோடை உத்தி

நனவோடை என்னும் சொல் உளவியல் சார்ந்ததாகும். புதின இலக்கியச் சூழலில் அதிகம் வழக்கத்தில் உள்ள சொல்லாகும். இலக்கியத்தில் உள்ள உள்ளத்தின் உணர்வுகளைப் படம் பிடிக்கக்கூடியச் சொல்லாக இந்த நனவோடை உள்ளது. நனவோடை என்பது இலக்கியப் படைப்பிற்கு எவ்வாறு நெறியாக அமைந்தது என்று ஆய்வுக்குரிய ஒன்றாகும். இந்த நனவோடை உத்தி புதின ஆசிரியர்களுக்கு உள்ளார்ந்த தனிமொழியாகப் பயன்படுகிறது என்பதை தெளிவுற எடுத்துரைக்கிறார் பச்சையப்பன்,

> **“மரபு முறைகளினால் நனவோடையைச் சரியாக வெளிப்படுத்த முடியாமையினால், சில புதிய உத்திகளைக் கையாண்டனர். நாவலாசிரியர்களுக்கு உள்ளார்ந்த தனிமொழி என்கிற ஓர் உத்தி மிகவும் கைகொடுத்தது. இதன் மூலம் நாவலின் அனைத்துப் பரப்பினையும் கொள்ளை கொண்டிருந்த ஆசிரியர் அறவே மறைந்து போனார்; பாத்திரங்களை வழிநடத்துவது, கருத்துரைப்பது யாவும் விட்டு விலகின. அங்கங்கே தன் படைப்பிலே தன் முத்திரை விழ நினைப்பது ஒரு நாவலாசிரியனுக்கு ஏற்படக்கூடிய நியாயமான ஆசையே ; ஆனால் அந்த அவாவை அவன் தியாகம் செய்தான். எங்கேனும் வழி நடத்த வேண்டிய ஒரு தேவை கட்டாயமாக நேர்கிறபோது சுவடு தெரியாமல் விரைந்து மறைவதையே அறமாகக் கொண்டான். ஆசிரியர் தெரிந்து அவனுடைய இருப்பு வரவேற்கப்படுகிற கட்டங்களிலே கூடக் கதை மாந்தரின் நனவுகள் தெரியும்படியாக மட்டுமே பேசலானான்”.**[1]

இவ்வாறு ஒவ்வொரு புதின ஆசிரியர்களுக்கும் தன்னை மறைத்து கதைமாந்தர்களின் நனவு தெரியும்படியாக நனவோடை உத்திப் பயன்படுகிறது. இந்த நனவோடை விந்தையினை ஓர் இலக்கியப் பார்வையோடு காட்டுகிறார் ஜேம்ஸ்,

**“நனவு என்பது சிதறிய துண்டுகளோ அல்லது துணுக்குகளாக நறுக்கப்பட்டவைகளோ அன்று. முதலில் பார்க்கும்பொழுது தோன்றும் அதனுடைய தோற்றத்தைச் சங்கிலி என்றோ தொடர் கோவை என்றோ வருணிக்க இயலாது. அவ்வாறு சொல்வது அதன் போக்கைச் சரியாக வருணிப்பது ஆகாது. அது ஒன்றோடு ஒன்று இணைக்கப்பட்டது அன்று. அது ஒழுகுகிறது, ஓடுகிறது. ஓர் ஆறு அல்லது ஓர் ஓடை என்பதே நனவை விளக்கக்கூடிய தகுதியான உருவகங்கள் ஆகும். அதைப்பற்றிப் பேசும் போது இனிமேல் சிந்தனை ஓடை, நனவோடை அல்லது அவநிலை வாழ்வு என்றே சொல்லுவோம்”**[2]

புதின இலக்கியங்களில் நனவு என்பது ஆழ்மனத்தினை குறிப்பதாகவே கொள்ள வேண்டும். மனத்தின் மேல், கீழ்ப்பகுதிகள் என்ற வரையரையினைத் தாண்டி கீழ்ப்பகுதிகளே மேலோங்கி நிற்கின்றன. நனவு என்பது இங்கே மனத்தின் அனைத்துப் பகுதியையும் உட்கொண்டதாகவே உள்ளது. வாழ்வின் எல்லா நிலைகளிலும் ஒரு தேய்மானம் நம்பிக்கை வறட்சி ஏற்படுகின்றது. இந்தச் சூழ்நிலையில்தான் அகமனம் பல்வேறு கற்பனைகளிலே மூழ்குகின்றது. இந்த நிலையில்தான் புதினங்களில் நனவோடை என்னும் பண்பு தோன்ற ஆரம்பிக்கின்றது.

**புதின இலக்கியத்தில் நனவோடை**

நனவு என்னும் பண்பு மனிதர்களிடையே எல்லாக் காலங்களிலும் இருந்திருக்கிறது. குறிப்பாக மனிதன் சிந்திக்கத் தொடங்கிய காலம் தொட்டே இருந்து வந்திருக்கிறது எனலாம். சிந்திக்கத் தொடங்கிய காலம் மட்டுமல்லாமல் ஒருவரை ஒருவர் தொட்டு உணர்ந்த காலத்திலிருந்தே இந்த நனவு தோன்றி வளர்ந்து வந்திருக்கிறது. இந்த நனவு தமிழ் இலக்கியச் சூழலில் சங்க காலத்திலிருந்தே தோன்றி வந்திருக்கிறது. ஆனால் இந்தப்பண்பு புதின இலக்கியங்களில் மேலை நாட்டினரே முதன் முதலில் பயன்படுத்தியிருப்பதை அறிய முடிகிறது. இதனை,

**“டாஸ்டாவிஸ்கி ஒரு வகையில் நனவின் கூறுகளை அறிந்து எழுத முயன்ற முன்னோடி என்று கூறலாம். நனவு என்கிற பெயரையோ**

**நனவோடை எனும் தொடரையோ அவர் பயன்படுத்தவில்லை. இவருக்கு அடுத்து பிரஞ்சு மொழி எழுத்தாளர் டுபார்டின் மிக முக்கியமானவர். இவர்தான் நனவோடை இலக்கியத்தின் தந்தை எனலாம். ஆனால் இவரும் நனவோடை என்கிற தொடர் அறியாதவரே. இவர் 'இனி ஒருபோதும் காட்டிற்கு இல்லை' எனும் நாவலை எழுதிய காலகட்டத்தில் வில்லியம் ஜேம்ஸ் வரைந்த தத்துவக் கொள்கைகள் பல பகுதிகளாக இதழ்களில் வெளிவரத் தொடங்கின. இவர் தாம் கையாண்ட நாவல் உத்தியை 'உள்ளார்ந்த தனிமொழி' என்கிற பெயரிலேயே சுட்டுவதோடு அதற்கான விளக்கங்களிலும் வரையறைகளையும் தருகிறார்'**[3]

என்ற கூற்றின் மூலம் அறிய முடிகிறது.

**தமிழ் இலக்கியங்களில் நனவோடை**

மேலை நாட்டிலக்கியங்களில் நிலவி வந்த இந்தப் புதிய உத்தி தமிழ் இலக்கியங்களிலும் எழுத்தாளர்களால் பயன்படுத்தப்பட்டது.

**“தமிழிலேயும் நனவோடை புகுந்தது. நாவல், சிறுகதைகள் நனவோடை முறையில் எழுதப்பட்டன. புதுமைப்பித்தன், மௌனி போன்றோர் முதன் முதலில் சிறுகதைகளில் இந்த முறையைப் பயன்படுடத்தினர். திருவாளர்கள் க.நா.சுப்ரமணியம், அநுத்தமா, சி.ரகுநாதன், ல.சா.ராமாமிர்தம் போன்றோர் நாவல்களிலும் நனவோடை நாவல்கள் எழுதினர்”**[4]

என்று கூறுகிறார் கைலாசபதி. இவர்களுக்குப் பிறகு ஜெயகாந்தன், சி.சு.செல்லப்பா, க.ரத்னம், நீல.பத்மனாபன், கந்தசாமி போன்றோர் இந்த உத்தியில் புதினங்கள் எழுதத் தொடங்கினர். அவர்களைத் தொடர்ந்து இன்றைய சூழ்நிலையில் நாஞ்சில் நாடன் தமது புதினங்களில் இந்த நனவோடை உத்தியை வெகுவாகப் பயன்படுத்தியுள்ளார்.

**ஆள் நினைவூட்டல்**

நாஞ்சில் நாடன் எழுதியுள்ள ஆறு புதினங்களிலும் இந்த நனவோடை உத்தியைப் பயன்படுத்தியுள்ளார். புதினத்தில் சுவைக்கும்; அடுத்த கட்ட நகர்விற்கும் மாந்தர் நினைவூட்டலுக்கும் இந்த உத்தி பயன்பட்டிருப்பதை நாவலின் வழி அறிய முடிகிறது. 'தலைகீழ் விகிதங்கள்' என்னும் புதினத்தில் இந்த உத்தி பல இடங்களிலும் பயன்பட்டிருக்கிறது. தன் பெண்ணிற்கு நல்ல மாப்பிள்ளையாகப் படித்த பட்டதாரிப் பையனாக வேண்டும் என்று சொக்கலிங்கம்பிள்ளை, சண்முகப் பிள்ளையிடம் கூறிய போது சண்முகம் பிள்ளைக்கு சிவதாணுவின் உருவம் மனக்கண்முன் வந்து போனது.

> **'படித்த பையன் என்று போட்டவுடன் நாலைந்து பேர் அவர் நினைவுக்கு வரத்தான் செய்தார்கள் என்றாலும் நல்ல பையனாக எவரும் அவர் பார்வையில் படவில்லை'** [5]

எனும் போது சண்முகம்பிள்ளை பலரையும் தன் நினைவிற்குக் கொண்டு வந்து அவர்களை நிராகரிப்பது என்பது நனவோடையின் மூலமே நிகழ்கிறது. அப்போது அவர் நினைவிற்கு சிவதாணு வருவதும் அந்த நிலையிலேயே ஆகும்.

**"சிவதாணு கல்லூரிக்குச் சென்று கொண்டிருந்த காலத்திலிருந்தே அவருக்கு அவனைத் தெரியும். அந்த ஒன்பது  பத்து இறச்சகுளம் பஸ்ஸில்தான் அவன் கல்லூரிக்குப் போவான். அவரும் அதே பஸ்ஸில்தான் வேலைக்குப் போவார். வேலை என்று பெரிதாக எதுவும் இல்லை. முப்பது வருடமாகவே கோதண்டம் ஜவுளிக்கடையில் அவருக்கு கணக்கெடுத்து, சுமாரான வசதி உள்ளவர் என்பதால், பொழுதுபோக்குக்காகவே வேலைக்குப் போய் வந்துக்கொண்டிருந்தார். அந்த டவுன் பஸ்ஸில், கண்டக்டர் டிரைவரைத் தவிர அவர்தான் அதிகாரி"** [6]

என்று சிவதாணு என்ற ஒரு கதை மாந்தரை நினைவுக்குக் கொண்டு வருவதன் மூலம் அன்றைக்கு நடந்த சம்பவங்களையெல்லாம் நினைவுக்குக் கொண்டு வருகிறார் சண்முகம்பிள்ளை. மேலும் அவர் சிவதாணுவின் குடும்ப நிலையையெல்லாம் கருத்தில் கொண்டு, ஒரு முடிவுக்கு வருகிறார்.

**“பெருங்காயம் இருந்த டப்பாவான சிதம்பரம் பிள்ளையின் வீட்டு நிலை, படித்துவிட்டு வேலையில்லாமல் அலைகின்ற சிவதாணுவின் கஷ்டப்பாடு ; கல்யாணத்துக்கு நிற்கும் அவன் தங்கை ; படிக்கின்ற தம்பிகள் ; எல்லாமே அவருக்கு நன்றாகத் தெரியும்”**[7]

இவ்வாறு சிவதாணுவின் வாழ்வில் ஒளியேற்றுவதற்கு முன் அவர் முன்பு நிகழ்ந்த அனைத்தையும் நினைவிற்குக் கொண்டு வந்து அதன் மூலம் செயல்படுவதற்கான காரணிகளை அமைத்துக்கொள்கிறன். இந்த நனவோடைப் பண்பு என்பது மனிதகுலத்தின் நடைமுறை வாழ்வில் இருப்பதுதான் என்றாலும் இலக்கியத்தின் வாயிலாக வெளிக்காட்டும்போது புதுப்பொலிவுற்றுத் திகழ்கின்றது. இத்தகைய நனவு எல்லாக் காலங்களிலும் இருந்திருக்கிறது. குறிப்பாக மனிதன் சிந்திக்கத் தொடங்கிய காலத்திலிருந்தே இருந்து வந்திருக்கிறது. சிந்தனை மொழிவழி இன்றி தொட்டுண்டி முதலானவற்றால் உணர்ந்தறிந்து அவற்றைத் தன் உள்ளத்தில் மனிதன் குறியீடுகளாகவே ஆண்டு வந்திருந்த காலத்திலே இருந்து நனவு தோன்றி மலர்ந்து வந்திருக்கிறது.

**நிகழ்வு நனவோடை**

‘தலைகீழ் விகிதங்கள்’ புதினத்தில் சிவதாணுவிற்கு திருமணம் ஏற்பாடாகிறது. வேலையில்லாத காரணத்தால் ஒரு பணக்கார வீட்டின் வீட்டோடு மாப்பிளையாகச் செல்வதென முடிவாகிறது. சிவதாணுவின் மனம் இதற்கு முழுதாக உடன்படவில்லை என்றாலும் குடும்பச் சூழல், தங்கை, தம்பிகளின் நிலை தாய் தந்தையரின் ஏக்கப் பெருமூச்சு என அனைத்தையும் சரிசெய்யும் பொருட்டும்; அந்தக்குடும்பத்தில் ஒரு நிம்மதி காற்று முழுமையாக வீசவேண்டும் என்ற காரணத்தினாலும் இதற்கு உடன்படுகிறான். திருமணச் சடங்குகள் தொடங்குகின்றன. மாப்பிள்ளையாக சிவதாணு திருமண மண்டபத்திற்குள் நுழைகிறான். மண்டபத்தில் உணவுப் பரிமாறும் இடத்தில் நடக்கும் நிகழ்வு சிவதாணுவிற்கு தன் சிறிய வயதில் நடைபெற்ற சம்பவத்தை நினைவூட்டுகிறது.

சாப்பிட உட்கார்ந்த ஒரு சிறுவனை பந்தியிலிருந்து எழுப்பி விட்டதை அவன் அறிகிறான்.

> **“இந்த நிலை சிவதாணுவுக்கும் ஏற்பட்டிருக்கிறது. வெளியூர் கல்யாணங்களுக்கு அவன் அதிகம் போனதில்லை. உள்ளூரில் கல்யாணங்கள் வரும்போது, அதுவும் விடுமுறை நாட்களில், கல்யாணச் சாப்பாட்டுக்கு ஏங்கும் உள்ளம். கிராமத்தில் ஒரு கல்யாணம் என்றால், சாதாரணமாக ஊர்ச் சாப்பாடு தான் என்றாலும் சட்டையையும், நிக்கரையும், நைந்து கிழிந்த ஓரங்களையும், நீர்க்காவி நிறத்தையும் கண்டால் பந்தியிலிருந்து எழுப்பிவிட்டு விடுவார்களோ என்று அவனுக்குப் பயம். பந்தியில் எல்லோரும் வெள்ளையும் சொள்ளையுமாக, தான் ஒருவன் மட்டும் தண்ணீர்க் கிண்ணத்தில் விழுந்த எண்ணெய்த் துளிபோல அழுக்காகத் தெரிவது அவனுக்கே உரைத்தது. எல்லோரும் தன்னையே பார்ப்பதாகக் குடைச்சலும் கூச்சமும். அந்தப் பயங்கரம் அவனையறியாமலேயே நடந்துவிட்டது. மாப்பிள்ளை வீட்டுக்காரர் ஒருவர் இடமில்லாமல் நிற்பதைக் கண்ட பெண்வீட்டு வெளியூர்க்காரர், சிவதாணுவைக் கையைப் பிடித்துத் தூக்கி வெளியில் விட்டுவிட்டார். சிறுவனானாலும் எல்லோர் முன்னிலையிலும் இழைக்கப்பட்ட அவமதிப்பு அவனைக் காயப்படுத்திக் கண்களில் நீரை வரவைத்தது. அழுதுகொண்டே வீட்டுக்கு வந்தவன் தான். பிறகு அவன் சாப்பிடவே போகவில்லை. அந்தக்காயம் ஆறுவதற்கு நெடுநாள் பிடித்தது. இப்போது கூட அந்த வடு, அவன் நினைவில் நெருடத்தான் செய்தது. அன்று பட்ட காயம் இன்று புதுப்புண்ணோடியது.”[8]**

என்று சிறு வயதில் தனக்கு ஏற்பட்ட மோசமான அனுபவத்தை அதைப்போன்ற தன்னுடைய திருமண நிகழ்விலே நடக்கும்போது அதனை உடனடியாக சரிசெய்ய முனைகிறான் சிவதாணு. மனதில் எப்போதும் தங்கிவிட்ட இத்தகைய நிகழ்வுகள் அதனையொட்டிய சம்பவங்கள் நிகழும்போதெல்லாம் பழையனவற்றை நினைவுக்குக் கொண்டு வந்து வலி ஏற்படுத்துகின்றன.

**“நனவில் நினைவுகள் இருக்கின்றன. உணர்வுகளும் பல்வேறு சிந்தனைகளும் இருக்கின்றன. விழிப்பு மனதுக்கும் அப்பால் ஆழமாகப் பதிந்திருக்கின்றன. அங்கே நமது விருப்பத்திற்கு உரியவையும் உண்டு. வெறுப்புக்கு உரியவையும் உண்டு. வேதனைகள் அவற்றின் வேகம் குன்றியும் ஆறியும் இருக்கலாம், புதிய புதிய உணர்வுகளும் கருத்துக்களும் அனுபவங்களும் மோதிச் செல்லுகிறபோது அவற்றின் முனை மழுங்கியும் இருக்கலாம் ; கூர்மை அடைந்து பளபளப்பாகவும் இருக்கலாம். இவை எல்லாம் நாம் விழித்திருக்கிறபோது நமக்கு அப்பாற்பட்டவை இருப்பது போலவே தோன்றாமல் இருக்கும். மாலையில் கூம்பியிருக்கும் தாமரையைப் பார்த்தால் அது பகலில் நன்றாக மலர்ந்திருந்தது என்று நம்ப முடியுமா? வாழ்க்கையும் ஒரு தாமரையைப் போல”[9]**

என்கிறார் காண்டேகர்.

இந்தக் கூற்று சிவதாணுவின் வாழ்வோடு பொருந்திப் போகக் கூடியதாகவே இருக்கிறது. நனவோடை முறை மூலம் புதினத்தில்தான் நனவின் அனைத்துப் போக்குகளையும் காட்ட முடியும். காட்சிகள் மிக எளிமையாக விளங்கிவிடுவது என்னவோ உண்மைதான் என்றாலும் அந்தக் காட்சிகளும் சிந்தனைகளாகத் தீட்டப்படுகிற போதுதான் படிப்பவரின் மனத்தில் மெதுவாக இறங்கிச் செல்லும். முன்னோக்கிச் செல்லும் காலத்தில் நிகழ்ச்சிகளால் பின்னி பாத்திரங்களை உருவாக்கிவிடுவது, திரையில் உலாவ விடுவது முடியக் கூடியதே. ஆனால், மனத்தையே ஒரு திரையாகக் காட்டி நனவை அதிலே ஓடவிடும் முறை புதினத்தாலேயே இயலக்கூடியதாகும். திரைப்படத்திற்கும் நாடகத்தைப் போல ஒப்பனைகள் தேவைப்படுகின்றன. பெருஞ்செலவு செய்யப்படுகிறது. இத்தகைய பெருஞ்செலவு இன்றி ஓர் ஆசிரியன் தன்னுடைய பலம் முழுவதையும் கொண்டு படைக்க முடியும், முடிகிறது. அது மட்டுமின்றி பார்க்கிற மனிதர்களை நினைவிலே வைத்து ஒரு குறிப்பிட்ட நேரத்திற்குள் நிகழ்த்திக்காட்ட வேண்டிய கட்டாயம் திரைக்கும் தொலைக்காட்சிக்கும் உண்டு. புதின ஆசிரியர்களுக்கு இந்தக்

கட்டுப்பாடு இல்லை. இடமோ காலமோ ஒரு வரையறையாக நின்று நனவோடை அவர்களை கட்டுப்படுத்துவதில்லை. எனவே புதினத்தின் போக்கில் தேவைப்படும் இடங்களில் தேவைப்படும் நேரங்களில் எல்லாம் இந்த நனவோடை வந்து செல்கின்றன.

**காலம்**

மனம்தான் அடிப்படை என்ற நிலையில் புறமும் புறத்திற்கே உரிய நிகழ்ச்சிகளும் காலப்பின்னணியும் மறைந்தன. நனவோடைப் புதினங்களில் நனவோடை மட்டுமே மிஞ்சியது. காலத்தின் விரிவும் நிகழ்ச்சி வேகமும் குன்றின. ஆனால் அதற்கு ஈடாகப் புறத்தே எங்கும் பார்த்தறியமாட்டாத மன ஆழம் காட்டப்பட்டது. மனத்தை அறிந்துக்கொள்ள வாய்ப்பு நினைத்த நிலையில் சரியாக உண்மை வாசகனுக்குப் புலனாயிற்று. இருளில் இதுவரையில் இருந்து வந்த வாசகனுக்கு வெளிப்படையாக வாழ்க்கை மூடு மறைவின்றித் துவங்கியது. எனவே புதினங்களில் உள்ள நனவோடை வலிகளுக்கு மாந்தர்களின் உள்ளத்து உணர்வினால் புரிந்துகொள்வதற்கு வாய்ப்பாக அமைந்தது.

புதினத்தில் இந்த உத்தியின் மூலம் காலம் கடந்த பல்வேறு சம்பவங்களையும் நினைவிற்குக் கொண்டு வந்து மாந்தர்கள் மனதிற்குள் அசைபோட உதவுகின்றன. சரியும் தவறும் கலந்து இதுபோன்ற நிகழ்வுகள் நினைவிற்கு வருவதன் மூலம் சரியைத் தொடரவும் தவற்றை சரிசெய்து கொள்ளவும் உதவுகின்றன. சிவதாணு, கந்தசாமி இருவரும் நண்பர்கள். தங்கள் உள்ளத்தில் துளிர்க்கும் அன்பை, ஆசையை, மகிழ்ச்சியை, அந்தரங்கத்தைக் கூட மனதிற்குள் பூட்டி வைக்காமல் பகிர்ந்துகொள்ளும் அளவில் நெருக்கமானவர்கள். சிவதாணு உணவு முடிந்தபிறகு எப்போதாவது தோன்றினால் கையில் ஒரு கவிதைப்புத்தகத்தை எடுத்துக்கொண்டு ஊருக்கு அருகில் உள்ள பிராமணத் தோப்பில் புன்னை மர நிழலுக்குச் செல்வது வழக்கம். அன்றைக்கும் அவன் அப்படிச் செல்லும்போது கந்தசாமியைப் பார்த்தான். அவனுக்கு அந்தப் பழைய நினைவு மனதிற்கு வந்தது.

**“அன்றொரு நாள் பதிவாக அவன் உட்காரும் இடத்தை வேறு சிலர் ஆக்கிரமித்துக் கதை பேசிக் கொண்டிருந்தார்கள். வீட்டுக்குத் திரும்பிப் போக மனமின்றி, வேறு ஒதுக்குப்புறமான இடம் தேடி அவன் அலைந்த போது, கிட்டத்தில் ஆற்றங்கரையை ஒட்டி மேற்புரத்தில் இருந்த அந்தத் தென்னைந்தோப்பு வசதியாய்ப் பட்டது. வெறும் தென்னை மரங்கள் மாத்திரமே. வேறு தோட்டப் பயிர்கள் எதுவுமில்லை. எனவே ஏதோ பெயருக்குத்தான் வேலி என்று இருந்ததே தவிர உள்ளே போக வர யாருக்கும் தடையில்லை. தோப்பின் மத்தியில் குடைபோலக் கொய்யா, மா கவிந்திருந்தன. வெயில் மேற்குத் திசையில் சரிந்து விட்டதால் நிழல் பரந்திருந்த கீழ்ப்பக்கம் துவர்த்தை விரித்துப் படுத்துப் புத்தகத்தைத் திறந்தான். பத்துப் பக்கங்கள் கூடப் படித்திருக்கமாட்டான்.**

**ஆணும் பெண்ணுமாக கிசுகிசுக்கும் பேச்சரவம். சுற்றுமுற்றும் பார்த்தால் யாரையும் காணோம். கொய்யா மாவின் கிளைகள் வளைந்து அடிமரத்தைச் சுற்றிக் குகைபோல் கவிந்து நிழலும் மறைவும் இருட்டும் வளையமிட்டிருப்பது அவனுக்குத் தெரியும். அங்கிருந்துதான் சத்தம் வரவேண்டும்”**[10]

என்று நினைத்த சிவதாணு அவர்கள் கண்ணில் படாமல் மறைய நினைத்து அங்கேயே தூங்குவதுபோல் நடித்தான். அங்கிருந்து வரும் கந்தசாமியையும், கல்யாணியையும் பார்த்து அதிர்ந்து போனான். அந்தப் பெருந்திணைக் காதல் அவனை அதிர்ச்சிக்குள்ளாக்கியது. இத்தகைய சிவதாணுவின் மனதில் தோன்றும் பழைய நினைவு நனவோடையின் மூலம் திரும்பவும் வந்தாலும் அந்நிகழ்வு புதினத்தின் கதையோட்டத்திற்கும் சிவதாணுவின் உடைந்து போன உள்ளத்திற்கு மருந்திடவும் பயனுடையதாக இருந்தது. மனைவியின் குடும்பத்தோடு முரண்பட்டு வந்த சிவதாணுவிடம் கந்தசாமி,

**“பெண்ணைக் கெட்டித்தந்த மாமனாருதாலா நீ மண்ணாய்ப் போகணும்னா அவரு நினைப்பாரு . . . தன்மானம் தெருப்புழுதி எல்லா ஈரமண்ணையும் நினைச்சுக் குமையாதே! நான் ஒண்ணு சொல்லுகேன் நம்பினா நம்பு.**

**நம்பாட்டால் போ . .. என் வீட்டிலே கூரையை மாத்தி பனங்கை போட்டு ஓடு பரத்தினேனே ஏது பணம்ங்கிறே? நான் கெட்டியா வச்சிருந்தேன்? கல்யாணி எவகிட்டேயோ சீட்டுப்போட்டு ஆயிரம் ரூவா வச்சிருநதா . . . வாங்கிக்கோ . . வட்டியும் வேண்டாம் . . . மண்ணும் வேண்டாம் எப்பம் முடியுதோ திருப்பித்தா. திருப்பித்தராட்டா அந்தால ஒழிஞ்சு கட்ட மண்ணாப் போ, அப்படீன்னு உசிரை வாங்கினா . . . எனக்கு முதல்லே யோசனையாத்தான் இருந்தது. மறுநாள் பத்து நூறு ரூபா நோட்டு .. . சலவை நோட்டு . . . முந்தியிலே முடிஞ்சு கொண்டாந்து "இன்னா புடிங்கிறா . . பார்த்தேன். ஏன் விடணும் சாத்தப்பிள்ளைகிட்ட பூசணம் பூக்கிற பணம்தாயா? நமக்குத்தான் உபயோகப் பட்டுமேன்னு வெளிக்குத் தெரியாம வாங்கிட்டேன் . . . அது போல பொழைக்க வழிதேடுவையா?"**[11]

என்று கூறினான். முன்பு எப்போதோ நடந்த ஒரு சம்பவத்தின் நினைவு கூறுவதன் மூலம் நிகழ்கால பிரச்சினைக்குத் தீர்வு காண்பதற்கான வழியினை இந்த நனவோடை வழங்கியது எனலாம். இத்தகைய நனவோடைச் சிந்தனை எங்கிருந்து எப்படி வேண்டுமானாலும் தொடங்கலாம். அத்தகைய வசதி அதன் அமைப்பிலே உள்ளது. ஒரு சதுரத்திற்கும் வட்டத்திற்கும் உள்ள வேறுபாடு அது. சதுரத்தினை ஏதேனும் ஒரு மூலையில் தொடங்க வேண்டும். நான்கு மூலைகளில் அது அடங்கிவிடுகிறது. இது ஓரளவு உளவியல் நாவல்களைக் குறிக்கும். ஒரு நேர்க்கோடாகவே செல்வதுதான் மரபு நாவல். நாவலின் தொடக்கநிலை காவிய நாடகங்களின் அழுத்தமான சாயல், அவற்றின் தாக்கம் அதில் காணலாம். அதிலிருந்து விளைந்தது நேர்க்கோடு சதுரமானது. அதே நேர்க்கோட்டை வட்டமாக்கிவிட்ட பெருமை நனவோடை ஆசிரியருக்கு உண்டு.

அந்த வட்டத்தை எப்படி எங்கே தொடங்கினால் என்ன? நேர்க்கோட்டிலும் சதுரத்திலும் இல்லாத வசதி வட்டத்திற்கு உண்டு. அதன் சூழலும் தன்மை நனவோடை ஆசிரியனுக்கு நாவலின் விரியும் தன்மையைவிட மிக உதவியாக வாய்த்து விட்டது. வட்டத்தை எங்கே வேண்டுமானாலும் தொடங்கலாம் என்று மட்டுமல்ல. வட்டத்தின் எந்தப்பகுதி முக்கியமானது முக்கியமில்லாதது என்று

சொல்வது மேல்கீழ் என்கிற வேறுபாடு இல்லை. அதன் சுழலும் தன்மை அதன் ஒவ்வோர் அணுவுக்கும் ஒரு சரிநிகர் சமநிலைகளை வழங்கியுள்ளது. நனவை வெளிப்படுத்துவதுன் மூலம் புதினம் எழுதும் வடிவத்தில் மாறுதல் தேவைப்பட்டது. ஏனெனில், இதுவரையில் புதினத்தின் வடிவம் புறநிகழ்ச்சி, காலவரிசை போன்றவற்றின் மேலே அமைந்திருந்தது. இந்த அமைப்பில் முற்றிலும் மாற்றவேண்டி ஏற்பட்டது. நனவோடைச் சிந்தனை எங்கிருந்து எப்படி வேண்டுமானாலும் தொடங்கலாம். அத்தகைய வசதி அதன் அமைப்பிலே உள்ளது.

**நினைவூட்டல்**

இந்த நனவோடை புதினங்களில் பல்வேறு வகைகளில் பயன்பட்டு வருகின்ற உத்தி எனலாம். கதையின் ஓட்டத்தில் மறைந்துபோன உறவுகளை நினைவிற்குக் கொண்டுவந்து மீண்டும் அவர்களை வாழ்விக்கின்ற வழியினை இந்த உத்தியின் மூலமே நிறைவேற்ற முடிகிறது. கதையின் முக்கிய மாந்தர்களின் நினைவுகளின் ஊடாக அவர்கள் மீண்டும் மீண்டும் உயிர் வாழ்கிறார்கள். என்பிலதனை வெயில் காயும் புதினத்தில் முதன்மைக் கதை மாந்தரான சுடலையாண்டி தாய் தந்தையர் இருவரையும் இழந்தவன். தாத்தா பாட்டியின் அரவணைப்பில் வாழ்பவன். வீட்டில் நடக்கும் பல்வேறு சம்பவங்கள், அவர்களை நினைவூட்டும் சடங்குகள் என பலவும் நனவோலையின் மூலமாக நினைவூட்டப்படுகின்றன.

அன்றைக்கு சுடலையாண்டியின் தந்தையின் திவசம். அன்றைக்கு அதற்கான ஏற்பாடுகளைப் பாட்டி செய்திருந்தாள்.

> **“தென்மேற்கு மூலை, வெண்கலக் குத்துவிளக்கு, தேங்காய் எண்ணெயில் தோய்ந்து மூன்று திரிகள். திரிகளில் அமர்ந்திருந்த மஞ்சள் மணிகள். விளக்கின் கீழே மூன்று இலைகள். ஒன்று அம்மாவுக்கு, ஒன்று அப்பாவுக்கு, மூன்றாவது யாருக்கு என்று தெரியவில்லை. இலை நிறையச் சோறு. சோற்றின் மீது ஊற்றியிருந்த பருப்பு, சாம்பார், தயிர் இலை விளிம்புகளில் அவியல், பச்சடி, வாழைக்காய் துவட்டல், இரண்டிரண்டு பப்படங்கள், ஒரு பாத்திரத்தில் அரிசிப் பாயாசம், விளக்கின் முன் ஒரு**

**இலை மீது அரளிப் பூ உதிரிகள். கிடோரிப் பசுஞ் சாணத்தால் பிள்ளையார், பிள்ளையார் உச்சி மீது அறுகு. இலையில் ஒரு சீப்பு பாளையங்கோட்டப் பழம். மூன்று வெற்றிலை. இரண்டு துண்டு வறட்டுப் பாக்கு. இலையோரத்தில் பித்தளைத் தம்ளரில் தண்ணீர். தண்ணீரில் மிதந்த அரளிகள். அறுகம் புற்கள், பக்கத்தில் ஒரு தாம்பாளத்தில் வேட்டி அதன் மேல் தலைமுண்டு. ஒரு அரக்குச் சிவப்புக் கண்டாங்கி'** [12]

என்று திவசத்திற்குத் தேவையான அத்தனைப் படையல்களையும் அங்கே வைத்திருந்தாள் பாட்டி. அந்த நாள் அவர்கள் மூவரையும் பெருந்துன்பத்திற்கு ஆளாக்கி விடும் நாளாக ஆண்டொன்றுக்கு ஒரு முறை வந்து போகும். அந்தத் துயரிலிருந்து விடுபடமுடியாத நிலையை அந்த நாள் உருவாக்கும். அப்போதும் அப்படியே வழக்கம் போல் மூவரும் ஒன்று கூடி மறைந்த அந்த ஆத்மாக்களை நினைவு கூர்ந்தனர்.

**காய்ந்த தென்னம்பாளையைச் சிறாவாக வகிர்ந்து, நுனியில் வெள்ளைப் பழந்துணி சுற்றி, தேங்காய் எணெயில் நனைத்துக் கொளுத்தி, சோற்றுப் படையலின் மீது மும்மூன்று திரிகளை நாட்டினாள் ஆத்தா. வாழைப்பழச் சீப்பின் மீது மூன்று புகையும் சாம்பிராணித் திரிகள் நின்றன. அடுப்பிலிருந்து இரும்புக்கண் அகப்பையில் வாரிக்கொண்டு வந்த தீக்கங்கின் மேல் பொடித்து வைத்திருந்த சாம்பிராணியைப் போட்டாள். படையலையும் விளைக்கையும் மூன்று முறைச் சுற்றிக் காட்டினாள்''** [13]

இவ்வாறு மறைந்த அந்த இரண்டு உயிர்களுக்கும் இந்த மூன்று பேரும் நினைவிற்கு கொண்டு வரும் நினைவேந்தல் நிகழ்வாக அந்த திதி நடைபெற்றது. சுடலையாண்டிக்கு இந்த நிகழ்வு நடக்கும் போதெல்லாம் அப்பா, அம்மாவோடு தான் வாழ்ந்த வாழ்க்கை நினைவிற்கு வந்து போகும். அன்றும் அவனுக்கு அப்பாவின் நினைவு வந்தது.

**"அப்பா பற்றியதான முதல் ஞாபகம் தனக்கு எப்போது தொடங்கியது? சுடலையாண்டி மூளையைத் தூர் வாங்கினான். எங்கிருந்து**

**தொடங்கினாலும் அந்த நிகழ்ச்சியில்தான் சென்று எண்ணம் நின்றது. அதுதான் முதலில் . . அதற்கு முன்பு? ஒன்றும் புலப்படாத மங்கல். பழையாற்றின் கயத்தில் ஆழுங்கண்டு மண் எடுக்க முக்குளிக்கையில், கொஞ்ச ஆழம் இறங்கியதும், மூச்சு முட்டலோடு கூடி நீரின் கூரையைப் பார்க்கையில் ஒரே நீலமாகத் தோன்றும். அதுபோல் எங்கும் நீலம், அடர்வான நீலம். சிந்தனைக் கத்தி துளைக்க முடியாத அந்த நீலம் . . .**

**‘சன்னஞ் சன்னமாக அந்த முதல் நிகழ்ச்சி சுடலையாண்டியின் மனதில் ஆழமாகச் செலுத்தப்பட்டு விட்டது. அப்போது எத்தனை வயதிருக்கும்? ஆறு அல்லது ஏழு. வார் நிக்கர் போட்டிருந்ததாக ஞாபகம். ஏழு வயதே ஆனாலும் பத்து வயது வரை தாங்க வேண்டும் என்ற முன் யோசனையோடு தைக்கப்பட்ட நிக்கர். வாரின் மேல் பகுதியில், தோள் பட்டையில், முடிச்சுப் போட்டால் தான் நிக்கர் இடுப்பில் சரியாக இருக்கும். அந்த முடிச்சு இல்லாவிட்டால் கீழே இறங்கித் தொங்கும். ஒன்றுக்குப் போக பட்டனைத் திறக்க அவசியம் இருக்காது. அப்படியொரு வார்நிக்கரைப் போட்டுக்கொண்டு குளிக்கப் போனபோது நினைவிருக்கிறது. மேலே சட்டையில்லை. கைவிரல்கள், கை முட்டு, கால் முட்டு, தொடை எங்கும் சிரங்கு, பல நிறங்களில், பல தரங்களில். குளிப்பு ஒரு தண்டைனயாகிவிட்டது. மாடு குறிப்பாட்ட போகையில் அப்பா கையோடு இழுத்துக்கொண்டு போனார். மறுத்துச் சொல்ல முடியாமல் அப்பாவிடம் பயம். தாத்தா என்றால் ஏய்த்து விடலாம். ஆத்தா சாமார்த்தியம் ஒன்றும் சுடலையாண்டியிடம் செல்லாது. மனமின்றி அப்பாவோடு போனான்.”[14]**

இப்படித்தான் சுடலையாண்டி கொஞ்சம் கொஞ்சமாக அப்பாவை நினைவிற்குக் கொண்டு வந்தான். அப்பாவோடு அவன் வாழ்ந்த காலங்கள் குறைவு என்பதாலும் சிறு வயதிலேயே அப்பாவின் மரணம் நிகழ்ந்தது என்பதாலும் இப்படி சிறிய சிறிய நிகழ்வுகள் மூலமாகவே அவன் அவரை நினைத்துப் பார்ப்பான். ஆற்றொழுக்காக முன்னோக்கிச் செல்லும் அதை ஓட்டத்தில் முக்கிய மாந்தர்களின்

நினைவுகளின் ஊடாயாக மறைந்துபோன மாந்தர்களின் அன்பு, ஆசை, பாசப்பிணைப்புகள் உயிர்வாழ்த் தொடங்குகின்றன. இத்தகையப் போக்கு புதினத்தின் உயிர்ப்பிற்கும் உண்மைத்தன்மைக்கும் காரணமாக அமைகின்றது. இதனை,

> **"பாத்திரத்தின் புறச்சூழ்நிலையில் இருக்கும் சில பொருள்களையும் அப்பாத்திரத்தின் பார்வையில் அடிக்கடி கண்ணில் படும் காட்சிகளையும் பயன்படுத்தி, அவைகளைப் பற்றி சந்தர்ப்பம் கிடைத்த போதெல்லாம் சிந்தனையில் வருவித்து வருணிப்பதாலும் விளக்குவதாலும் அந்தப் பாத்திரத்தின் மன உளைச்சலையும் சலனத்தையும் வெளியிடுவது ஆசிரியரின் ஒரு புதிய உத்தி. கதை மாந்தரின் அனுபவங்களில் வைத்து கதைப்போக்கில் வருணிப்பதைக் குறியீடு உத்தி என்று சொல்லலாம்.**[15]

என்ற கூற்றின் மூலம் அறியலாம்.

அப்பாவோடு சுடலையாண்டி வாழ்ந்த வாழ்க்கையில் அவனுக்கு இந்தக் குளக்கரை நிகழ்வு மட்டும் அடிக்கடி நினைவிற்கு வந்து செல்லும்.

'மாட்டை எழுப்பி நிறுத்திவிட்டு அதன் அடி வயிற்றைத் தேய்த்துக் கொண்டிருந்தார் அப்பா. முற்பகல் வெயில் படுத்தத் தொடங்கியது. புன்னை மரத்திலிருந்த ஒரு மீன்கொத்தி தண்ணீரில் பாய்ந்து உயர்ந்தது. மீனுடன் கூடிய அதன் அலகு கூட்டல் குறிபோல்.

. . . எருமையின் வாலைப் பிடித்து முறுக்கி, கையினால் புட்டியில் அறைந்து எழுப்பி, கரையேத்தி விட்டு, சுடலையாண்டியைப் பார்த்தார் அப்பா,

> **"மக்கா வாடா" / "வேண்டாம்பா . . . நான் பொறவு குளிக்கேன்" / "பொறவு என்ன பொறவு?" வா . . . வா . . . / மனமின்றி, கொலை மேடைக்குப் போவது போல் சுடலையாண்டி எழுந்து போவான். / "நிக்கரை அவுத்துப் போட்டுக்கிட்டு எறங்கு" / வார்களைத் தோளிலிருந்து கழற்றி, கீழே விழுந்த நிக்கரில் இருந்து ஒவ்வொரு காலாக வெளியே எடுத்து வைத்தான். நிக்கரை எடுத்துத் தண்ணீரில் நனைத்துக் கல்லின் மேல் வைத்த அப்பா . . . அவன் கையைப் பிடித்தார். முற்பகல் வெயிலானாலும்**

**தண்ணீர் சில்லென்றிருந்தது. முதல் மீனின் தூண்டுதல் எப்போது துவங்குமோ என்று யோசிக்கையில் ஒரு கையை இடது கையில் பலமாகப் பற்றிக்கொண்டு, சுடலையைத் தேய்த்துக் கழுவ ஆரம்பித்தார் அப்பா. சவம் குளிக்கக் கூப்பிட்டா வாறதில்லே . .. மேலெல்லாம் வங்கு புடிச்சுக் கெடக்கு. ஏம் மூதி நெளிய? பேசாம நில்லு?"** [16]

என்று உடல்முழுவதும் சிரங்கு இருந்த சூழலில் அவனை இழுத்து வைத்துத் தேய்த்துக் குளிப்பாட்டியச் சூழலை நினைத்துப் பார்க்கிறேன். வலி மிகுந்த அந்த நாட்கள் அவன் நினைவை விட்டு நீங்காது மனதில் பசுமையாய்ப் பதிந்து கிடந்தது. அப்பாவின் நினைவு வரும்போதெல்லாம் அவனுக்கு அந்தக் குளியல் காட்சி நினைவுக்கு வந்து வாட்டி வதைத்தது. அப்பா சிரங்குகளைத் தேய்த்துக் குளிப்பாட்டிய போது ஏற்பட்ட வலி, அவரிடமிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு அவரைக் கல்லால் அடித்துவிட்டு ஓடியக் காட்சி அவனை நிம்மதி இழக்கச் செய்தது.

'என்ன நினைத்துக்கொண்டாரோ? திடீரென ஞாபகம் வந்தது போன்று, ஆற்று மணலில் விசிறிப் போட்டிருந்த வைக்கோல் கத்தையை எடுத்து, சுடலையாண்டியின் உடம்பைக் கரகரவென்று தேய்த்தார். பழுத்த, பழுக்க இருந்த, பழுத்து உடைந்த சிவந்த புண்களில் பட்டதும் அனலாகக் காந்தியது. கையையும் காலையும் உதறிக்கொண்டு சுடலைபாண்டி கதற ஆரம்பித்தான்.

அவனுக்குள் அப்பாவின் நினைவு இப்படித்தான் எழுந்தது. அவன் அப்பாவோடு இருந்த வாழ்க்கை வலி நிறைந்ததாக இருந்தாலும் அவனால் நினைக்காமல் இருக்க முடிவதில்லை. சிறிய வயதில் அப்பா மறைந்து போனாலும் அவனுக்கு அவர் முகம் நன்றாக நினைவில் இருந்தது. அம்மாவின் முகம்தான் நினைவிற்கு வர மறுத்தது. இப்படி சுடலையாண்டியின் சிந்தனை சிலச் சூழ்நிலைகளில் கால விழிப்புற்று முன்னும் பின்னும் சென்று வருகிறது. நிகழ்காலத்தில் இருந்துகொண்டு கொஞ்ச நேரத்தில் அவனுடைய கடந்த காலத்திற்குப் போய், தன்னுடைய இளமை இன்பம் கண்ணீர் அனைத்தும் கண்டு எதிர்காலத்தை ஓர் ஏக்கத்தோடும் நடுக்கத்தோடும் பார்க்கிறான். இறந்த காலமும்

எதிர்காலமும் சிறகுகள் என்றால் ஊன்றி எழுவதற்கு இந்த நிகழ்காலமே அவனுக்கு உறுதியாய் நிற்கிறது.

**“நாம் எவற்றை வாழ்வின் இன்ப துன்பங்கள் என்கிறோமோ அவற்றைக் காலம் விட்டுச் செல்லும் அடையாளங்களாகவே காண்கிறார் லா.ச.ராமமிருதம். இம்மாதிரியேதான் ஒவ்வொரு நாளும் செல்கிறது. தயிரைக் கடையும்போது, பாத்திரத்தின் உள் பக்கத்தில் படரும் வெண்ணெய்த் திரள்கள் தன்னுடன் அதனதன் அடையாளமான துக்கங்களையும் சந்தோஷங்களையும் சந்தோஷத்தில் துக்கத்தையும், துக்கத்தில் இன்பத்தையும் சேர்த்துக் கொண்டு இம்மாதிரி பல நாட்கள் சேர்ந்து தான் வாரம் என்பதற்கேற்பவே அவர் வாழ்க்கை நகர்ந்தது.** [17]

இவ்வாறு சுடலையாண்டியின் நனவின் ஊடாக கதைப் பின்னோக்கி வந்து புதினத்திற்குச் சுவை கூட்டுகிறது. நனவோடையை எந்தக் கதைக்கு எவ்வாறு பயன்படுத்த வேண்டும் என்பது எழுத்தாளருக்குத் தெரிந்திருக்க வேண்டும். இல்லையேல் கதை நனவோடைக்குச் செல்லும் போதெல்லாம் சுவை குன்றுவதை அறிந்துக்கொள்ள முடியும். ஆனால் இந்தப் புதினத்தில் சுடலையலாண்டி என்னும் இளைஞனின் வாழ்வும் தாய் தந்தையரை இழந்து அவன் அடையும் இன்னலும் கதையின் பெரும்பகுதியாய் அமைகிறது. எனவே தாய் தந்தையர் இளம் வயதிலேயே இறந்து போவதற்கான காரணத்தை கதை முன் வைக்கிறது. அவன் வாழ்வில் நிகழும் ஒவ்வொரு நிகழ்வும் அவனுக்கு ஏதோ ஒரு வகைகளில் அப்பா அம்மாவை நினைவுகூறச் செய்கிறது.

தாத்தா பாட்டியால் ஏற்பாடு செய்யப்பட்ட ‘திவசம்’ எப்படி அவனுக்கு அப்பாவின் நினைவூட்டியதோ, அதைப்போன்ற கதையில் பலவேசம்பிள்ளை என்பவரின் செயல்கள் ஊடாக அவனுக்கு அம்மாவின் நினைவு வருகிறது.

‘சுடலையாண்டியின் ஞாபகங்கள் பின்னோக்கி நகர்ந்தன. துண்டு துண்டாக அகப்பட்ட செய்திகளைச் சேர்த்து ஒட்ட வைத்து ஒரு உருவம் கொடுக்க முயல்கையில் தையல்காரரின் கை போல், பல நிறங்களில் பல ஆழ அகலங்களில் நினைவுகள்

ஒதுங்கலாயின. தலைமுடியை மட்டும் வைத்துக்கொண்டு பெண்ணுக்குப் பருவிக் கொடுக்க முயலும் ஓவியன்போல் அகப்பட்ட துண்டுச் செய்திகளைக் கொண்டு அம்மாவை, அவள் குண, மன இயல்புகளை அவள் போராட்டத்தின் பொருண்மையைத் தீர்மானிக்க முயன்றான் சுடலையாண்டி.

என்னதான் மனத்தைத் துருவினாலும் அம்மா முகம் கவனத்தில் வரமாட்டேன் என்றது. அடையாளம் கண்டுகொள்ள ஒரு புகைப்படம் கூட இல்லை. அறிந்ததெல்லம் செவி வழிச் செய்திகள். துண்டு துண்டான சம்பவங்கள், உரையாடல்களின் துணுக்குகள். குண விமர்சனங்கள்.

**எல்லாவற்றையும் அந்தாதியாக்கிப் பார்க்கும்போது ஒரு முழுமை கிட்டாமல் அவன் திகைத்தான். அப்பாவின் புகைப்படம் கூடத்தான் இல்லை. ஆனால் ஆறு வயது முதல் கோடுபடத் துவங்கிய ஞாபகம். பதினான்கு வயதில் இது அறுந்தாலும் அந்த இடைப்பட்ட ஆண்டின் நினைவுகளைத் தீட்டித் தீட்டி அவன் கூர்போட்டு வைத்திருந்தான். ஆனால் அம்மா செய்தி பால் பற்கள் குருத்தாக முளைத்த போது பால் நினைவு மறந்தது. அவள் எப்படித்தான் இருந்திருப்பாள்”**[18]

இவ்வாறு அம்மாவின் முகத்தினை நினைவுக்குக் கொண்டு வர முயற்சித்து முடியாமல் திகைக்கிறான். அப்பாவோடு சிறிது காலம் வாழ்ந்ததன் விளைவாக அவரை சில செயல்களின் ஊடாக நினைவு கூற முடிகிறது. கருத்து எட்டுவதற்கு முன்னாலேயே மறைந்துபோன அம்மாவை அவனால் எப்படியும் நினைவிற்குக் கொண்டுவர இயலவில்லை. இப்படித்தான் சுடலையாண்டி அம்மாவின் நினைவுகளில் மூழ்கிப் போவான். இதனை,

**“நனவோடை நாவலாசிரியர் காட்சிக்குக் காட்சி விட்டு விட்டு மாறிச்செல்லும் போது கால இட மாற்றங்களைக் குறித்து ஒரு குறிப்பும் காட்டாமலே ஆனால் இயல்பு குன்றாமல் செல்கிறார்கள். நிகழ்விலே இருந்து இறப்புக்கும் அதிலே இருந்து எதிர்வுக்கும் கூடு விட்டுக்கூடு**

**பாயும் இவர்கள் தன்மையிலே இருந்து படர்க்கைக்கும் ஓரிடத்திலே இருந்து வேறோர் இடத்திற்கும் தாவிச் சென்று விடுகின்றனர்”[19]**

என்ற பச்சையப்பனின் கூற்றின் மூலம் அறியமுடிகிறது. கதை சொல்வதென்பது எப்போதும் ஒரு காலத்தை ஒட்டி எழுந்து ஏதேனும் ஓரிடத்தில் சுழன்று செயல்படுவதே ஆகும். வாய்மொழியாகக் கூறிய கதைகளிலிருந்து பிற்காலத்தில் புதினங்கள் வரையும் காலம் வரையிலும் இந்தப்போக்கு நீடித்தது. புனைவியல் நடப்பியல் எனப் புதிய சோதனை முறைகள் புதினங்களில் புகுந்த போதும் அவற்றில் கதைக்கூறு இருந்துகொண்டே இருந்தது. காவிய, நாடக அமைப்புகளைப் பின்பற்றி அச்சு எந்திரத்தின் துணைகொண்டு வியக்கத்தக்க அளவிலே இது வளர்ந்துள்ளது. மனிதனுடைய வாழ்நாட்களிலே எந்த நாளை முக்கியமானது என்று கூறுவது எந்த நாளை முக்கியம் அல்லாதது என்று கூறுவது பிரித்தறிய முடியாத ஒன்றாகும்.

**பாத்திரப்பண்பு**

சுடலையாண்டி கதையின் போக்கில் பின்னால் நன்கு பார்த்து முடித்து வேலை தேடி அலையும் இளைஞனாக, நல்லவனாக சமூகப்பொறுப்பு மிக்கவனாகக் காணப்பட்டாலும் கதைப்பின்னலுக்காக அவன் சிறிய வயதில் களவாடும் எண்ணமுள்ளவனாகக் காட்டப்படுகிறான். இத்தகைய பாத்திரப் பண்பின் மூலம் நடக்கும் நிகழ்வு அவனைக் கடந்த காலத்திற்குக் கடத்திச் செல்கிறது. நல்லவர்களை மிக நல்லவர்களாகவும், தீயவர்களை மிகக் கொடியவர்களாகவும் தீட்டுவது பண்புகளுக்கு உருவம் தருவதே ஆகும். எந்தப் பண்புகளை மிகைப்படுத்திக் கூறினால் படிப்பவர் விரும்புவாரோ அதையே அந்தந்த இடத்தில் மிகைப்படுத்துவதாகும். நடைமுறையில் செயல்களில் ஒரு பண்பு கொண்டு துலங்கும் மனிதர் தம் மனத்திற்குள் எப்போதும் அதை நிலைநிறுத்திடப் போராடிக் கொண்டிருக்கின்றனர்.

இத்தகையைப் பண்பு சுடலையாண்டியிடமும் காணப்படுகின்றது. ஒரு தவறு அதனால் கிடைக்கும் தண்டனை அந்தத் தண்டனை அவனைக் கடந்த காலத்திற்கு அழைத்துச் சென்று அம்மாவின் முகத்தினைக் காணத் துடிக்கின்றது.

சுடலையாண்டியின் அப்பா இறந்து நான்கு மாதங்கள் கடந்திருக்கும் அப்போது அவன் ஒன்பதாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தான். ஒரு நாள் மாலைப்பொழுதில் ஆள் நடமாட்டமில்லாத சூழலில் புன்னைச் சுள்ளிகளைப் பொறுக்கிக்கொண்டிருந்தான். பலவேசம் பிள்ளைக்குச் சொந்தமான தென்னந்தோப்புக்கருகில் அவன் தென்னம்பாளைகளை எடுத்தபோது அங்கே தேங்காய் ஒன்று கிடக்க அதனை எடுத்துவிட்டான். அதனை பாபநாசம் என்பவன் பார்த்துவிட்டு அவன் பலவேசம் பிள்ளையிடம் சொல்லிவிடுகிறான். பலவேசம் பிள்ளை சுடலைபாண்டியை அழைத்து விசாரிக்கிறார்.

> **"களவாடப் போவியோலே இனி" என்று உறுமிக்கொண்டு கையிலிருந்த வாழைத்தடையால் ஏழெட்டுமுறை வீசி வீசி அடித்து ஓய்ந்து தடையை முற்றத்தில் வீசினார் . . .   ஓடுலே செறுக்கி மவனே . . . தோப்புக்குள்ள இனி காலை வச்சே, முட்டுக்குக் கீழே மொறிச்சிடுவேன். அப்பன் பேரு தெரியாத பயலுக்கு ஆசை . . . ஓடுலே இங்கேருந்து"[20]**

**என்று கோபத்துடன் எச்சரிக்கிறார்.**

> **"இந்த நிகழ்வு மீண்டும் மீண்டும் அம்மாவின் முகத்தை நினைவிற்குக் கொண்டு வரத்துடிக்கிறது. தான் அப்பன் பேர் தெரியாதவனானால் – அவள் யாருக்கோ பெண்டிருந்து, அப்பாவை வளைத்துப் போட்டு ஓடி வந்தாளா? அன்று சொன்னாரே பலவேசம் பிள்ளை! உடன் படிக்கிறவன் எல்லாம் சொன்னானே!"[21]**

என்று சிந்தனையில் மூழ்க வலியால் துடித்துப்போனான். அப்பா அம்மாவோடு அவன் இளம்பருவத்தில் நன்றாக வாழ்ந்ததாக நினைவில் இல்லை. எப்படிச் சிந்தித்தாலும் இதைப்போன்று ஏச்சுகளும் பேச்சுகளும் தான் அவன் நினைவிற்கு வந்தன.

புதினத்தில் சுடலையாண்டி என்னும் அந்த முதன்மைக் கதைமாந்தரின் நனவோடையின் மூலமாகவே அப்பா – அம்மாவோடு அவன் வாழ்ந்த வாழ்க்கைப் பதிவாகிறது. இதைப் போன்றதொரு வாழ்க்கைச் சூழலைக் கொணட இளைஞன் எதிர்கொள்ளும் சமூகச் சிக்கல்களை புதினம் தெளிவுற படம்பிடித்துக் காட்டுகிறது.

சுடலையாண்டி படித்து முடித்து வேலைத்தேடி அலையும் நிலை கதையின் பெரும்பகுதியாக இருந்தாலும், அவன் பிறப்புக் குறித்த சமூகச் சீண்டல்கள் அவனிடத்தில் எந்தவிதமான உளவியல் பதிவினை ஏற்படுத்தியுள்ளது என்பதனை புதினம் சுட்டுகிறது. என்னமாதிரியான சமூகம் இது. மனமொத்த ஓர் ஆணும் பெண்ணும் திருமணம் செய்துகொள்வதில் எந்தவிதமான தடைகளை விதித்துள்ளனர். மதம், நாடு, மொழி, சாதி என நீளும் இவர்களின் பிரிவினை உடைத்து நொறுக்க முடியாதப் பாறையாக மனப்பான்மையில் இறுகிப் போயுள்ளது.

பலவேசம் பிள்ளை பேசிய பேச்சின் பொருளை இயல்பாய் சுடலையாண்டி சிறிதுகாலம் கழித்துப் புரிந்துக்கொள்ளத் தொடங்கினான்.

> **அக்கா . . . நான் காணல்லே . . . நீ எப்படிக் காணுவே . . . ரோட்டிலே எவன் போறான் சின்ன மாப்பிள்ளைன்று பார்த்துகிட்டு சீலை தொவைச்சா ஆளு வாறது எங்க தெரியும் . . . அக்கா வேண்டாத் தனம் பேச வேண்டாம் . . . நான் வேணும்னு செய்யல்லே . . . பலவட்ற தேவடியாளுக்கு வாயைப் பாரேன் . . நானா வேண்டாத்தனம் பேசினேன். . . ஆட்டுக்கொம்பை எடுத்து அலவைக் கிளிச்சிருவேன் பாத்துக்கோ . . வேண்டாத்தனம் பேசுவனாமே . . வேண்டாத்தனம் நான் இப்பம் என்ன சொல்லீட்டேன்னு . . . என்ன சொன்னியா? மூளி எங்கிட்டயா கேக்கே? நான் நல்ல வெள்ளாடிச்சியாக்கும் . . . வெள்ளானுக்குத்தான் பொண்டிருக்கேன் . . . ஒரு பொன்னையனை வளைச்சுப் போட்டுக்கிடல்லே . . . நீ வாயா பேசுகே வா . . . ஈளவத்திற்கு இவ்வளவு கொளுப்பா? வந்திட்டா . .. செறுக்கி. தீயை வச்சுக் கொளுத்திடுவேன் பாத்துக்கோ . . . எங்கிட்டாய வாற நீ”[22]**

இந்தச் சண்டையின் மூலம் தான் அம்மாவை நினைவிற்குக் கொண்டுவந்தான் சுடலையாண்டி.

முகத்தில் தெளித்த சிறு தண்ணீர் துளி ஒரு உயிரை காவு வாங்கியதை நினைக்கும்போதெல்லாம் சமூகத்தின் மீது அவனுக்கு இருக்கும் கோபமும் எரிச்சலும்

இரட்டிப்பாகும். தாய்தந்தையரோடு சுகமாக வாழ இருந்தவனை இந்தச் சிறு சம்பவம் அனாதையாக்கியிருக்கிறது.

சுடலையாண்டியின் இந்த நினைவின் மூலமாகத்தான் நாஞ்சில் நாடான் சமூகத்தின் மீதான தனது கோபத்தை வெளிப்படுத்துகிறார். மனிதரூபம் எவ்வளவு குறுகிய மனம் படைத்ததாகவும் குரூர எண்ணம் கொண்டதாகவும் உள்ளது என்பதைப்படம் பிடிக்கிறார். பிரிவிகைளின் மீதெல்லாம் தனது கோபக்கனலை வாரி இறைக்கிறார். மனித மனங்கள் கட்டி எழுப்பும் பிரிவினைச் சுவரையெல்லாம் உடைத்தெறிய முனைகிறார். சுடலையாண்டியின் வாழ்வின் நெடுப்பயணத்தில் அவன் பிறப்பு குறித்த விமர்சனமே பூதகாரமாக வெடித்துச் சிதறுகிறது. எல்லா இடங்களிலும் எல்லாச் சூழ்நிலைகளிலும் அவன் இந்தப் பிரச்சினைகளை எதிர்கொள்ள நேரிடுகிறது.

இந்தப் பிரச்சினை வீட்டில் வேறுவிதமாக எதிரொலிக்க, சுடலையாண்டியின் தந்தை சோனாசலம் தங்கம்மையை அடித்துத் துவைக்கிறான். தங்கம்மை அரளிவிதையை அரைத்துக் குடித்து இறந்து போகிறாள்.

> **“உலகத்தில் ஏதும் ஆதரவற்றுப்போய் இறந்து போன அவள் மீது கோபப்படுவது என்ன நியாயம் என்று நினைத்தான் சுடலையாண்டி. பலரும் குத்திய புண்ணின் வலி தாங்காமல் செத்துப்போன அம்மா மீது ஒரு பரிதாபம் சுரந்தது”** [23]

இப்படியாக நொந்துபோன ஒரு சமூகத்தில் பிறந்ததற்காக சுடலையாண்டி வாழ்நாளெல்லாம் குமுறினான். சாதி கடந்த மதம் சார்ந்த நாடு கடந்த காதலையெல்லாம் ஏற்றுக்கொள்ள மனமில்லாத சமூகத்தைப் பார்த்துச் சபித்தான்.

> **“ஒரு மலையாள ஈழவப் பெண்ணைக் கூட்டிக்கொண்டு ஓடி வந்த அப்பாவுக்காக, அப்பாவை நம்பி வந்து அல்லல் தாங்காமல் தன்னையே அழித்துக் கொண்ட முகம் தெரியாத அம்மாவுக்காக, அந்த அம்மா வயிற்றில் பிறந்து விட்டதால் அங்கீகாரம் இழந்து நிற்கும் தனக்காக . . .”** [24]

என்று ஒரு சங்கிலித் தொடரால் தொடர்ந்து வரும் இன்னலைக் களைவதற்காக அவன் தன் வாழ்நாளெல்லாம் போராட வேண்டியிருந்தது. எந்த ஒரு மனிதனும் வாழ்நாளெல்லாம் துன்பத்தில் உழல வேண்டும் என்று பிறப்பெடுப்பதில்லை. சமூக நிலைமையில் இத்தகையத் துன்பங்கள் வேண்டாதனவாகும். ‘என்பிலதனை வெயில் காயும்’ புதினத்தில் நாஞ்சில் நாடன் சுடலையாண்டியின் நோக்கிலேயே கதையை சிந்தனையை நடத்துகிறார். ஒரு மனிதன் ஒரு சில பண்புகளின் தொகுதி அல்ல. அவன் ஓர் ஆறு போல ஒரு முறை விரைந்தும் ஒரு முறை மெதுவாகவும் ஒரு முறை தெளிந்தும் இன்னுமொரு முறை குழம்பியும் ஒவ்வொரு நேரம் ஒவ்வொரு வகையாகக் காட்சியளிக்கிறான். அவ்வாறே சுடலையாண்டியும் திகழ்கிறான்.

அவரவரின் சூழ்நிலைக்குத் தக்கவாறு மனக்குரல் கேட்கிறது. சுடலையாண்டியின் மனத்தில் ஒரு போராட்டம். தன் பிறப்பு, வாழ்க்கை குறித்தப் போராட்டம். இந்தப் போராட்டத்தோடுதான் தன் வாழ்நாளை அவன் கடத்தியாக வேண்டும்.

ஆறு மாசம் வெசர்ப்பு சிந்தி பாடுபட்டாத்தான் எங்களுக்கு ரெண்டு கோட்டை நெல்லு கிடைக்கும்.

**“என்னடா சொல்றே நீ ராமசாமி?”**

**‘சாமி பாத்துக்கிட்டுத்தாலா இருக்கியோ! இது என்ன நெல்லளவா, மண்ணளவா? சர்க்கார் கணக்கே பதினாறு மரக்கா நெல்லு கொண்ட சாக்குக்கு, சாக்க அடக்கம் அம்பத்தெட்டு கிலோதான். இதிலே நீங்க எந்த மூடையாம் எடைபோட்டு பாருங்கோ. அறுபத்திரண்டு கிலோவுக்குக் கீழே இருந்தா நான் வேட்டியையும் உரிஞ்சு போட்டுகிட்டு கோணத்தோடே நடந்து போறேன்.செட்டியாருக்குப்பொறுக்கவில்லை.**

**“அதில்லே சாமி, நெல்லு கொஞ்சம் பதம் . . . சாவியும் உறுப்பாங்கட்டியும் கொஞ்சம் . . . நெல்லு பதமா? என்ன வெளையாடுகேரா ஓய்? குறுங்குளத்து நெல்லு பவுனுல்லா? கொறை சொல்ல ஒரு பய இனிமே பொறக்கணும் . . “சரிடா ராமசாமி . . . விடு . . . ஓய் செட்டியாரே!**

**கடவுளுக்குப் பொதுவா அளயும் . . . வயசான காலத்திலே சம்சாரிக்கு சாபம் எனக்கு என்னத்துக்கு ஓய்? அவங்ககிட்ட புடுங்கிப் பறிச்சு நான் யாருக்கு சேத்து வய்க்கணும்"** [25]

என்று அய்யர் பேசியது சண்முகத்திற்கு அவர் மேல் மரியாதையை வரவைத்தது. செட்டியார் அவ்வாறு அளக்கும் வரையிலும் அமைதியாக இருந்த அய்யர் அப்பாவின் குமுறலுக்குப் பிறகு வாய் திறந்தது அவனுக்கு நெருடலாய் இருந்தாலும் அப்பாவின் வலிமை, அந்த வலி தரும் துயரை துயரின் கொடுமையை உணர்ந்தவராய் செவிமடுத்தது சண்முகத்திற்கு ஆறுதலாய் இருந்தது.

பெரியசாமி அய்யருக்குப் பிறகு அவருடைய மருமகன் நிலங்களை கவனித்து வந்தவர். அவர்தான் இப்போது சண்முகத்தை மும்பைக்கு வேலைவாங்கித்தருவதாக வரவழைத்திருக்கிறார்.

அவர் இரண்டு, மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு ஊருக்கு வந்து நிலங்களைப் பார்த்து, வேண்டியதை எடுத்துக்கொண்டு ஊருக்குச் செல்வது வழக்கம். அதைப்போன்று ஒரு முறை ஊருக்கு வந்தபோது தான் அவரை சண்முகம் பார்த்தான். அந்த நிகழ்வைப் பயணத்திற்கு இடையில் நினைத்துப் பார்த்தான்.

**"பெரியசாமிக்காவது வயல்கள் எந்தத்திசையில் கிடக்கும் என்பது தெரியும். ஐயருக்கு அதுவும் தெரியாது.**
**இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை தான் பம்பாயில் இருந்து குடும்பத்தோடு வருவது. வந்தால் குலை குலையாய் இளநீரும் நுங்கும் கொண்டு போடுவார்கள். ஐயர், மாமாவுக்கு ஏற்ற மருமகன் மிக வெகுளி. சின்னப்பிள்ளையில் ஒரு முறை சண்முகம் ஐயரைப் பார்த்து,** [26]

அந்த ஏப்ரல் விடுமுறையில் ஒரு முறை அவர் நாகர்கோயிலுக்கு வந்த போது அப்பா அவனையும் கூட்டிக்கொண்டு போனார். அப்பாவுக்கும் அய்யருக்கும் ஒரே வயது. ஆனாலும் அப்பா அவரை சாமி என்றுதான் கூப்பிடுவது, தலை முண்டைக் கையில் எடுத்துக்கொள்வான். தரையில்தான் உட்காருவார்.

**"ராமசாமி இது யாருடா? உம் மகனா? என்னலே படிச்சிருக்கே?**

**பி.ஏ., சாமி"**

**"எப்பம் பாசானே?"**

**"சிக்ஸ்டி எயிட்லே"**

**அவனுக்குத்தான் ஒரு வேலை வாங்கி குடுங்க சாமி. இங்க எல்லாம் முயற்சி செய்து பாத்தாச்சு . . ."**

**"மூணு வருஷமா என்னடா செய்தாய்? எனக்கு ஒரு லட்டர் எழுதப்படாதாடா? ஏண்டா உனக்கெல்லாம் புத்தி இருக்கிறதா? இஞ்ச இந்த சூனாமானா ராஜ்ஜியத்திலே உனக்கும் எனக்கும் எவனடா வேலை குடுப்பான்?**

**"அதான சாமியை வந்து பார்த்துச்சொல்லலாம்னு'**

**என்ன வேலையானாலும் செய்யணும் . . . பம்பாயிலே தரையிலே முக்குளிக்கத் தெரியணும் . . அப்பத்தான பொழைக்கலாம் . . வீடு சரியில்லே, சாப்பாடு சரியில்லே, அம்மாவைப் பார்க்கணும்னா நடக்காது"**

**அதெல்லாம் ஒண்ணும் சொல்லமாட்டார் . . ."[27]**

என்று தந்தை ராமசாமி கூற மும்பையில் வேலைக்கு ஏற்பாடு செய்வதாக அய்யர் கூறினார். அதன் பொருட்டுதான் இந்தப் பயணத்தை மேற்கொள்கிறான் சண்முகம்.

வேலைதேடி அலையும் சண்முகம் என்னும் கதைமாந்தர் மூலமாகத்தான் கதை நகர்கிறது. அவன் பார்வையிலேயே தமிழகத்தில் நிலவும் அரசியல், சமூக நிலைமை, ஆட்சி மாற்றத்திற்குப் பிறகும் மாறாத இந்த வேலையில்லாத் திண்டாட்டம் எனப் பலவும் நகர்கிறது. முரண்பட்ட சில அரசியல் மரபுகளை நாஞ்சில்நாடன் முன் வைத்தாலும் கதை மாந்தரின் பார்வையின் ஊடாக கதை நகர்வதால் அதனை அப்பாலே எதிர்கொள்ள வேண்டியுள்ளது. இவை அத்தனையும் கதை ஓட்டத்தில் நேரிடையாகக் கூறாமல் சண்முகத்தின் நனவோடை மூலமாகவே கூறப்படுகிறது. இது நாஞ்சில் நாடனின் கதை சொல்லும் உத்தியாகவே கருதப்படுகிறது.

தந்தை அய்யர் நிலத்தை குத்தகைக்குப் பயிர் செய்வதும் அதன் மூலமாக இரண்டு குடும்பங்களுக்கும் ஏற்பட்டுள்ள பாசப்பிணைப்பும் நனவோடையின்

மூலமாகவே உணர்த்தப்படுகிறது. மனதில் எத்தனையோ படிநிலைகள் இருக்கின்றன. நனவு. நனவடி; மனம் நனவினில் என்றெல்லாம் நம் வசதிக்காகப் பகுக்கப்பட்டுள்ளது. எந்நேரமும் ஒரு மாற்றத்திற்கு உட்பட்டபடி இருக்கிற மனத்தில் மேலது கீழாகவும் கீழது மேலாகவும் நிலைமாறி இடம் மாறிக்கொண்டே உள்ளன. அந்த வகையில் சண்முகம் பயணம் மேற்கொள்ளும் போது அந்தப் பயணம் எதற்கானது என்ற வினாவினைத் தொகுத்து அதற்குப் பதிலளிக்கும் விதமாக இந்த நனவோடைக் காட்சியானது கட்டமைக்கப்பட்டுள்ளது. முதலில் சண்முகத்தின் கருத்து தனித்து நின்றது. பிறகு சிறிது சிறிதாக பல்வேறு சம்பவங்கள் ஊடாக கலந்து நின்றது. சில நேரங்களில் பிரித்திட இயலாத அளவு கலந்து நிற்கின்றது. நனவோடைப் பாத்திரங்களின் சிந்தனையைக் கூர்ந்து நோக்கினால்தான் கதையும் ஆழமும் கலந்து போவதைக் காணமுடியும். இதனை,

**“சிந்தனை ஓயாமல் நடைபெறுகிறது. தனித்து நிற்கிற கருத்துக்கள் ஒன்றறக் கலக்கின்றன. ஒன்றறக் கலப்பவை சில நேரங்களில் தனித்துப் போவதுண்டு. பாறை கடலோரத்தில் தனித்து நிற்கிறது. ஆனால் காலமும் அலையும் அதனை உருவின்றிக் கடலில் கரைத்துவிடுகின்றன. சில நேரங்களில் கடலில் இருப்பவை கரை ஓரத்தில் ஒதுக்கப்பட்டுத் தனித்து நிற்பதுண்டு. அவ்வாறே ஒன்றிப்போன ஒரு கருத்தும்** [28]

என்ற கூற்றின் வழி அறிய முடிகிறது. நனவோடையில் மனமே அடிப்படை; ஆதலால் வெளியிடும் முறைகள் வியப்பூட்டும் அளவுக்குப் பெருகிக்கொண்டே போகும். தன்னிலிருந்து தானே வளரும் ஆற்றல் படைத்த இந்தப் புதுமைகள் பெருகிக்கொண்டேதான் இருக்கும்.

**சமூக இழிவு**

சண்முகம் வேலை தேடி மும்பை வந்த பிறகு அய்யர் வீட்டிற்கு அடிக்கடி சென்று வருவான். வேலை கிடைத்துவிடும் என்ற நம்பிக்கையோடு மும்பை வந்தவனுக்கு இன்னும் வேலை கிடைக்காதது வருத்தமளித்தது. அது பற்றி விசாரிக்கவே அன்று அய்யர் வீட்டிற்கு வந்திருந்தான். அவனைக் கண்டதும் அய்யர்,

மகிழ்ச்சியோடு உனக்கு வேலை கிடைக்க எடுத்த முயற்சியில் வெற்றி கிட்டியுள்ளது என்று ஒரு கடிதத்தை நீட்டியதும் அவனுக்கும் மகிழ்ச்சி கரைபுரண்டது. கூடவே அவநம்பிக்கையும் பிறந்தது. இதுபோல் பல கடிதம் பல நிறுவனம். அதைப்போன்று ஆகிவிடக் கூடாதே என்று கவலையடைந்தான். அன்று அய்யர் அவனை வீட்டில் சாப்பிடச் சொன்னார். சாப்பிடும்போது அவனுக்கு, ஊர், கிராமத்து மக்கள், அப்பா என நினைவிற்கு வந்தனர்.

> **“அன்று ஐயர் வீட்டிலேயே சாப்பிட்டான். அவர்களுடன் சரி சமானமாக உட்கார்ந்து சாப்பிடுவது என்னவோ போல் இருந்தது. எல்லோருக்கும் டைனிங் டேபிளில் தட்டு போடப்பட்டிருந்தது. டம்ளரில் இருந்த தண்ணீரைச் சற்று வலது கையில் சரித்து சோற்றைச் சுற்றிவிட்டு ஏதோ மந்திரம் முணுமுணுத்து தண்ணீரை உறிஞ்சி, மூன்று முறை சோற்றுப் பருக்கைகளை எடுத்து வாயில் வைத்துவிட்டுச் சாப்பிடத் துவங்கினார்கள்.**
>
> **தன்னுடைய அப்பா இப்படி எல்லோருடனும் உட்கார்ந்து சாப்பிட்டிருக்க முடியாது என்று நினைத்தான் சண்முகம். ஐயர் அகரத்துக்குப் போனால் துண்டை விரித்துத் தரையில் உட்காருவார். குடிக்கக் காப்பியோ மோரோ கொடுத்தால் போணியைத் தூக்கி அண்ணாந்து குடிக்க வேண்டும். பிறகு அதைக் காட்ட, வீட்டுப் பெண்களில் ஒருத்தி தண்ணீர் விடுவாள். போணியை அலம்பி மூலையில் கவிழ்த்து வைக்க வேண்டும்.** [29]

சமூகத்தில் நிலவும் சாதிய ஒடுக்குமுறைகளை சண்முகம் நினைத்துப் பார்த்தான். ஒரு நனவோடையின் மூலமாக புதினத்தின் கதைக்களனுக்கு அப்பாற்பட்டு சமூக நிலைமைகளை விவரிப்பதென்பது நாஞ்சில் நாடனின் புதின உத்தியாகவே இருக்கிறது. இந்தியச் சமூக அமைப்பும் அதன் சுரண்டல் முறையும் சாதியத்தின் பெயராலேயே நிகழ்கிறது என்பதை புதினத்தின் வழியாகத் தெளிவுற உணர்த்துவது என்பது நாஞ்சில் நாடனின் சமூகப் பற்றையும் சாதிய இழிநிலையை எதிர்க்கும் மனப்பான்மையையும் அடையாளம் காட்டுகிறது.

இந்தச் சாதியப் படிநிலையில் மற்றவர்களிடத்தில் தான் எதிர்பார்க்கும் அதே உரிமையை நாம் மற்றவர்களுக்கும் தர வேண்டும் என்ற சிந்தனை எவரிடத்திலும் எழுந்ததில்லை என்பதையே; சண்முகம் இது இந்த அப்பாவுக்கு உறைக்குமா என்று வினாவாக எழுப்புகிறான். அதே நேரத்தில் இந்த அய்யர் தனக்குக் கொடுக்கும் இந்த உரிமையை, மரியாதையை தன் தந்தை உள்ளிட்ட மற்றவர்களுக்குக் கொடுக்க மறுப்பதோர் என்ற வினாவினையும் மனதிற்குள் எழுப்பிக்கொண்டான். இப்படி கதையின் போக்கில் சொல்ல முடியாத சில சமூக நிகழ்வுகளை ஒரு எழுத்தாளர் தன் கதைமாந்தரின் நனவோடை மூலமாக நிறைவேற்றிக் கொள்கிறார். சாதி குறித்த நாஞ்சில் நாடனின் சிந்தனைகளை அம்பேத்கரோடு பொருத்திப்பார்ப்பது பொருத்தப்பாடுடையதாக இருக்கும்.

> **“சாதி இன்றளவும் தனக்கான பாதுகாவலர்களைக் கொண்டிருக்கிறது என்பது ஒரு பரிதாப நிலையே, பாதுகாவலர்கள் பலர். சாதி அமைப்பு வேலைப்பிரிவினையின் இன்னொரு பெயர் என்ற வாதத்தில் அது பாதுகாக்கப்படுகிறது. மேலும் வேலைப்பிரிவினை ஒவ்வொரு நாகரீக சமூகத்திற்கும் அவசியமான ஒன்று என்பதால், சாதி அமைப்பில் எந்தத் தவறும் இல்லை என வாதிடப்படுகிறது. இந்தப் பார்வைக்கு எதிராக உடனடியாக அழுத்திச்சொல்லப்பட வேண்டிய விஷயம் என்னவென்றால் சாதி அமைப்பு என்பது சாதாரண வேலைப்பிரிவினை மட்டுமல்ல என்பது தான் அது வேலை செய்பவர்களில் பிரிவினையுமாகும்”.** [30]

என்ற இந்தச் சிந்தனைதான சண்முகத்தின் சிந்தனையாகும். மற்றவர்களிடத்தில் நாம் அடிமையாக இருக்கவேண்டிய நிலை வந்தால் மனதளவில் எழுகின்ற கோபமும் வேகமும் நாம் மற்றவர்களை அடிமையாக்கும்போது எழுவதில்லை. எனவே எந்தக் சூழ்நிலையிலும் இந்த அடிமைநிலையைக் கடைப்பிடிப்பது மனிதகுலத்தின் விரோதச் செயல்களே ஆகும் என்பதே இந்த நிகழ்வின் மூலம் சுட்டப்படுகிறது. கதையின் தன்மை சாதியைச் சாடுவது இல்லையாகிலும் கதைப்போக்கில் ஒரு நனவோடையின் மூலமாகச் சுட்டிச் செல்வது நாஞ்சில் நாடனின் சமூகப் பற்றினை உணர்த்துவதாக உள்ளது.

**சம்பவ நினைவு**

சண்முகம் மும்பையில் வேலைக்குச் சேர்ந்து நாட்கள் கடந்த பிறகு ஊர் நினைவில் காலம் கழித்தார். ஊருக்கு எப்போது செல்வது; உறவுகளை எப்போது சந்திப்பது என அவன் நினைவுகள் முழுவதும் ஊரும் உறவும் நிரம்பியிருந்தது. பயணத்தில், நடந்து போகையில், உணவு விடுதியில் என தமிழர்களைப் பார்க்கும் போதெல்லாம் நம்ம ஊராக இருக்குமோ? என்ற கேள்வி அவனுக்குள் அடிக்கடி எழுவதுண்டு. நேரம் போகாத ஒரு சனிக்கிழமையில் 'ஆல்பர் பிராஞ்சு ரயிலில்'' குர்லா வரைக்கும் சென்று திரும்பினால் நேரம் போகுமே என்று வண்டியில் ஏறி சன்னலோர இருக்கையொன்றில் அமர்ந்தான். அப்போது பக்கத்தில் நிற்பவரைப் பார்த்து நம்ம ஊராக இருக்குமோ? என்ற ஐயத்தில் வினவினான். நினைத்தது போலவே அவர் கருப்பையா பிள்ளையின் மருமகன் காமாட்சிநாதன் என்பதைத் தெரிந்துக்கொண்டான். அப்போது கருப்பையாவின் வீடு சண்முகத்தின் நினைவிற்கு வந்தது.

> **''கருப்பையா சார் வீட்டில் ஒரு சீமை நெல்லிக்காய் மரம் உண்டு. அதில் புளிப்பில்லாமல் கரு கருவென்று கடிக்கச் சுவையாக இருக்கும். உப்பில் ஊறப்போட்டால் அடுத்த நாள் காலையில் நல்ல வாசனை வரும். ஆனால், சரியாகப் பழுக்கும் வரை விடுவது கிடையாது. சற்று உயரமான சுட்டமண். ஆனாலும் ஆளில்லாத போது பயல்கள் ஏறிப் பறிப்பார்கள். பாட்டா கருப்பையா சாரின் அப்பா பார்த்தால் கண்டபடி அறுத்துக் கிழிப்பார். சாரின் தங்கச்சி வீட்டில் அமைந்து இருந்தாள். யக்கா . . . யக்காவோவ். . .. ஏ கிட்டமைக்கா . . . நெல்லிக்கா'' என்று கட்ட மண்ணின், இந்தப்புறம் இருந்து குரல் கொடுக்க வேண்டும். யாருலே அது? சரி . .. ஏறிப் பறிச்சுக்கோ . . பிஞ்சைப் பறிச்சிறாதே . . அஞ்சாறு பறிச்சுக்கிட்டு சீக்கிரம் இறங்கு . . பாட்டா குளிக்கப் போயிருக்காரு ... வந்தா ஏசுவாரு'[31]**

என்று ஊரைப்பற்றிய பலவும் நினைவுக்குள் வந்தன. காமாட்சி நாதனைப் பார்த்த பிறகு அவரின் மும்பை வாழ்க்கைக்குறித்த விசாரிப்புகளை விட நனவோடையின்

மூலமாக அவருடனான ஊரில் வாழ்ந்த வாழ்க்கையை நினைத்துப் பார்ப்பது புதினத்தின் இனிமைக்கும் சுவைக்கும் வழிவகுப்பதால் அமைகின்றது. மேலும் சண்முகம், ஊரில் நடந்த சில சம்பவங்களை நினைத்துப் பார்த்தான்.

**“அங்குதான் கிங்காங் நின்று வளர்ந்தான். ஆள் நல்ல தண்டியாக இருந்தான். ஆகவே காரணப்பெயர் அல்லது உவமை ஆகுபெயர். சண்முகத்தைவிட இரண்டு வயது சின்னவன். பன்னிரண்டு வயதிலேயே அவனக்கு உயரம் நின்றுவிட்டது. பக்கவாடுகளில் வளர்ந்தான். குரல் கரகரத்தது. மார்பில் அக்குளில் முகத்தில் முப்பது வயதுக்காரன் போல் முடி வளர்ந்தது. மீசை முளைத்தது. பன்னிரண்டு வயதில் பகவதி அம்பட்டன் முகத்தில் சோப்புத்தடவி அவனுக்கு முகம் வழித்தான். பரிகாரத்துக்கு அஞ்சி மற்ற பயல்களும் சேருவது கிடையாது.**

**கோவிலுக்கோ, குளிக்கவோ போவது பாட்டா கூடத்தான். பாட்டாவின் குரலுக்கு அஞ்சிப் பயல்கள் பக்கத்தில் போவது கிடையாது என்றாலும் முடுக்கின் மறைவில், மரத்தின் ஒளிவில் இருந்து “லேய் கிங்காங்’ என்று சத்தம் அடிக்கடி கேட்கும். பள்ளிக்கூட வாசல் வரை தாத்தா கூட வந்தாலும் மற்ற பயல்களுடன் தானே உள்ளே உட்கார வேண்டும்? வாத்தியார் இருக்கும்போது எதுவும் செய்ய முடியாது என்றாலும் ஒன்றுக்கு விடும்போது, சாப்பிட வரும்போது, குமைக்கும்போது “பாட்டாகிட்ட சொல்லுவேன். . . நான் பாட்டாக்கிட்ட சொல்லுவேன் . . .**[32]

என்று உறுமுவதெல்லாம் சண்முகத்தின் நினைவுக்கு வந்தது. நீங்க கிங்கானின் அண்ணன் தானே என்று விசாரித்தான். நீங்க எடக்குடியில் தானே குடியிருந்தீர்கள் என்று கேட்டுக்கொண்டே குர்லாவிற்குச் சென்றார்கள். வழிநெடுகிலும் ஊர், உறவுகளைப் பற்றிய பேச்சாகவே இருந்தது. இவ்வாறு நனவோடை என்னும் இந்த உத்தியின் மூலம் அடிக்கடி ஊரைப்பற்றியும் உறவுகளைப் பற்றியும் நினைத்துப் பார்ப்பதற்கான வழிவகை இருந்தது. ஏதோ ஒரு மாற்றத்தினால் கடலின் ஆழத்திலிருந்து பெயர்த்தெடுத்து கரையில் விழுந்திருக்கும் பொருள்போல நனவோடைச் சிந்தனையினால் அடிமனப் போக்குகள், கருத்துக்கள் அங்கங்கே வந்து

தெரிவதுண்டு. அழுகைக்கிடையே சிரிப்பு நினைவுகள் தலைநீட்டுவதுண்டு. தூய்மையான சிந்தனைகளுக்கிடையில் அடுக்குகள் புறப்பட்டு மேலே மிதப்பதுண்டு. எல்லையற்றதும் ஒரே சீரற்றதுமான மனித மனத்தின் அலைபாயும் போக்கு இவர்களிடத்திலே காணப்பட்டது.

**உயிர் வதை**

கிராமப்புறங்களில் பரந்து விரிந்த இடங்களில் வாழ்ந்துவிட்டு வந்து நகர்ப்புறங்களில் நெருக்கடியாய் வாழும் சூழலில், ஊரின் ஞாபகம் நினைவுகளில் எழத்தான் செய்யும். சண்முகத்திற்கு இந்த மும்பையின் நெருக்கடி மிகுந்த வாழ்க்கை அடிக்கடி ஊரை நினைவுபடுத்தியபடியே இருந்தது. மும்பையில் ஒரு அறையில் செண்பகம், காமாட்சி, சண்முகம் என்று மூவரும் தங்கியிருந்தார்கள். கொசு, மூட்டைப்பூச்சியின் கடி என்று இன்னல் நிறைந்த வாழ்க்கை. இந்த நேரத்தில் அந்த அறைக்குள் ஒரு நாய்க்குட்டியின் நுழைவு வேறு. அந்த நாய்க்குட்டி எவ்வளவு துரத்தியும் அந்த அறையையேச் சுற்றி வந்தது. இந்த நாயின் தொந்தரவு சண்முகத்திற்கு தம் ஊரில் நடந்த நிகழ்வினை நினைவுபடுத்தியது.

> **“நாலைந்து ஆண்டுகள் முன்பு, ஊரில் சண்முகமும் மாடு மேய்க்கும் ஏசுவடியானுமாக, சிறுநாய் ஒன்றைக் கொன்றான். வீட்டை அடுத்த களமும் தொழுவும். ஒரு காவலுக்காக இருக்கட்டும் என்று குட்டி நாய் ஒன்றைக் கொண்டு வந்து, அது சில நாட்கள் முகம் வீங்கித் திரிந்து, முனகி, பிறகு தெளிந்து . . . கருத்துப்பட்டியும் சங்கிலியும் பால் குடிக்க . . . மோர்ச்சோறு தின்ன அலுமினியத் தட்டு வாங்கி . . .**
>
> **குட்டியில் எல்லாம் அழகே போதும் … பருவம் தொடங்கியதும் இயல்பான வெள்ளை முடி மாறி உருண்டிருந்த முகம் நீண்டது. வாள் வாள் என்று எரிச்சலால் குரைத்தது. கண்ட கண்ட இடங்களில் மலம் கழித்தது. காலொன்றைத் தூக்கி ஆட்டு உரல் மேல் மூத்திரம் செய்தது. அடுக்களைக்குள் ஆளற்ற நேரத்தில் புகுந்து கறிச்சட்டியை உருட்டியது . .**

**இதென்னபெரிய உபத்திரவமாகப் போயிற்று? பொறுக்கிச் சனியனால் ஊரில் பேச்சுக்கேட்க முடியுமா? என்று அப்பாவும் அம்மாவும் இதற்கெல்லாம் சண்முகமே பொறுப்பு என்ற ரீதியில் ஏசத் துவங்கினார்கள்.** [33]

இப்படி தன் அறைக்குள் நுழைந்த ஒரு நாயின் வரவால் ஊருக்குள் தான் வளர்த்த நாய்க்குட்டி, அதனால் எழுந்த பிரச்சினைகள் அப்பா, அம்மா அடைந்த துன்பங்கள் எனப் பலவும் அவன் நினைவுக்குள் வந்தன. நாய் தரும் துன்பம் தாங்க முடியாமல் அதனைக் கொன்றுவிடத் துணிந்தான்.

**‘அடுத்த நாள் ஞாயிறு. ஏசுடிவடியானைக் கலந்து ஆலோசித்து, கொச்சக்கயிறு கொண்டு சுருக்குப்போட்டு நாயைக் களத்துக்குக் கொண்டு போனான். களத்துக் கதவை அடைத்துவிட்டு, கயிற்றை இழுக்க, இருக்க சங்கு நெரிய நெரிய, அது போட்ட சத்தம் குடலைப் புண்ணாக்கியது. அது கால் நான்கையும் பரத்தி மண்ணோடு ஊன்றி இழுப்பை எதிர்த்தது. களத்தின் மூலையொன்றில் காய்க்காமல் நின்ற கட்டைத் தென்னம்பிள்ளை மூட்டில் ஏசுவடியான் ஏற்கனவே தோண்டியிருந்த குழியை நோக்கி இருவருமாய் ஒரே இழுப்பாக இழுத்துத்தள்ளி, அவசர அவசரமாய் மண்ணை அணைத்து – மண் தள்ளும் போது நாய் இறந்திருக்குமோ, தோண்டி எடுத்து விடுவோமா என்ற சந்தேகம் தோன்றியது”** [34]

இப்படி அந்த நாயைக் கொன்றபோது சிறிது நாட்கள் சாப்பிடாமல் அலைந்தது நினைவில் வந்தது. இப்போது மும்பை அறையில் படுத்திருக்கும் நாய் அந்த நாய்க்குட்டியை நினைவுபடுத்தியது. ஒரு நாய்க்குட்டியின் நினைவோடு ஊரில் தான் வாழ்ந்த வாழ்க்கை நண்பர்களோடு சுற்றித் திரிந்து அடைந்த ஆனந்தம் பலவும் நினைவில் வந்து இந்தக் கசப்பு நிறைந்த வாழ்விற்கு இனிப்பூட்டியது.

**ஞாபகத்தொடர்**

பிறந்து வளர்ந்த ஊரையும் உறவுகளையும் துறந்து, பிழைப்பிற்காக வெளியூருக்கு வேலைக்குச் செல்லும் எல்லோர் மனதிலும் ஓர் ஏக்கமும் தேக்கமும் இருந்துகொண்டே இருக்கும். வாழ்க்கை என்பது வெறும் பொருள் ஈட்டுவதில் மட்டும் அல்ல. அந்தப் பொருளைக் கொண்டு உறவுகளோடு இன்பமாக வாழ்வதே வாழ்க்கை. வாழ்தலுக்கும் வசித்தலுக்குமான வேறுபாடு அதன் இடைவெளிக்குள் அடங்கிக் கிடக்கிறது. பறவை, விலங்குகள் இரைதேடுகின்றன. இனப்பெருக்கம் செய்கின்றன. குகைகளில் கூடுகளில் வசிக்கின்றன. ஆனால் மனிதன் மட்டுமே இல்லங்களில் வாழ்கிறான். வாழ்வின் இன்ப நுகர்விற்கு அடிப்படைக் காரணமாக இருப்பது ஊரோடும் உறவுகளோடும் வாழ்வதே ஆகும். அப்படி வாழமுடியாமல் நினைவுகளின் ஊடாக உறவுகளோடு வாழ்ந்து கொண்டிருப்பவன் தான் நாராயணன்.

# தொகுப்புரை

- ❖ நனவோடை என்னும் சொல் உளவியல் சார்ந்ததாகும். புதின இலக்கியச் சூழலில் அதிகம் வழக்கத்தில் உள்ள சொல்லாகும். இலக்கியத்தில் உள்ள உள்ளத்தின் உணர்வுகளைப் படம் பிடிக்கக்கூடியச் சொல்லாக இந்த நனவோடை உள்ளது.

- ❖ நாஞ்சில் நாடன் எழுதியுள்ள ஆறு புதினங்களிலும் இந்த நனவோடை உத்தியைப் பயன்படுத்தியுள்ளார். புதினத்தில் சுவைக்கும்; அடுத்த கட்ட நகர்விற்கும் மாந்தர் நினைவூட்டலுக்கும் இந்த உத்தி பயன்பட்டிருப்பதை நாவலின் வழி அறிய முடிகிறது. 'தலைகீழ் விகிதங்கள்' என்னும் புதினத்தில் இந்த உத்தி பல இடங்களிலும் பயன்பட்டிருக்கிறது.

- ❖ இந்த நனவோடை புதினங்களில் பல்வேறு வகைகளில் பயன்பட்டு வருகின்ற உத்தி எனலாம். கதையின் ஓட்டத்தில் மறைந்துபோன உறவுகளை நினைவிற்குக் கொண்டுவந்து மீண்டும் அவர்களை வாழ்விக்கின்ற வழியினை இந்த உத்தியின் மூலமே நிறைவேற்ற முடிகிறது. கதையின் முக்கிய மாந்தர்களின் நினைவுகளின் ஊடாக அவர்கள் மீண்டும் மீண்டும் உயிர் வாழ்கிறார்கள். என்பிலதனை வெயில் காயும் புதினத்தில் முதன்மைக் கதை மாந்தரான சுடலையாண்டி தாய் தந்தையர் இருவரையும் இழந்தவன். தாத்தா பாட்டியின் அரவணைப்பில் வாழ்பவன். வீட்டில் நடக்கும் பல்வேறு சம்பவங்கள், அவர்களை நினைவூட்டும் சடங்குகள் என பலவும் நனவோலையின் மூலமாக நினைவூட்டப்படுகின்றன.

- ❖ சிவதாணு என்ற ஒரு கதை மாந்தரை நினைவுக்குக் கொண்டு வருவதன் மூலம் அன்றைக்கு நடந்த சம்பவங்களையெல்லாம் நினைவுக்குக் கொண்டு வருகிறார் சண்முகம்பிள்ளை.

- ❖ என்பிலதனை வெயில் காயும் புதினத்தில் முதன்மைக் கதை மாந்தரான சுடலையாண்டி தாய் தந்தையர் இருவரையும் இழந்தவன். தாத்தா பாட்டியின்

அரவணைப்பில் வாழ்பவன். வீட்டில் நடக்கும் பல்வேறு சம்பவங்கள், அவர்களை நினைவூட்டும் சடங்குகள் என பலவும் நனவோலையின் மூலமாக நினைவூட்டப்படுகின்றன.

- சுடலையாண்டி கதையின் போக்கில் பின்னால் நன்கு பார்த்து முடித்து வேலை தேடி அலையும் இளைஞனாக, நல்லவனாக சமூகப்பொறுப்பு மிக்கவனாகக் காணப்பட்டாலும் கதைப்பின்னலுக்காக அவன் சிறிய வயதில் களவாடும் எண்ணமுள்ளவனாகக் காட்டப்படுகிறான். இத்தகைய பாத்திரப் பண்பின் மூலம் நடக்கும் நிகழ்வு அவனைக் கடந்த காலத்திற்குக் கடத்திச் செல்கிறது. புதினத்தில் சுடலையாண்டி என்னும் அந்த முதன்மைக் கதைமாந்தரின் நனவோடையின் மூலமாகவே அப்பா – அம்மாவோடு அவன் வாழ்ந்த வாழ்க்கைப் பதிவாகிறது. இதைப் போன்றதொரு வாழ்க்கைச் சூழலைக் கொணட இளைஞன் எதிர்கொள்ளும் சமூகச் சிக்கல்களை புதினம் தெளிவுற படம்பிடித்துக் காட்டுகிறது.

- வேலைதேடி அலையும் சண்முகம் என்னும் கதைமாந்தர் மூலமாகத்தான் கதை நகர்கிறது. அவன் பார்வையிலேயே தமிழகத்தில் நிலவும் அரசியல், சமூக நிலைமை, ஆட்சி மாற்றத்திற்குப் பிறகும் மாறாத இந்த வேலையில்லாத் திண்டாட்டம் எனப் பலவும் நகர்கிறது.

- நாஞ்சில் நாடன் கதையை பின்னோக்கி கூறுவதன் மூலம் வாசகம் கதையில் இடம்பெறும் கதாப்பாத்திரங்களின் காலத்தோடு ஒன்றிப்போகிறான். இவ்வுத்தி நாஞ்சில்நாடனுக்கு நாவல் வெற்றி பெற உதவுகிறது. மேலும், கதையில் கூறவந்த கதைவோட்டம் சிதைவு படாமல் நகர்த்திச் செல்லும் பாங்கு நாஞ்சில் நாடனுக்கு உரியதாகும்.

# அடிக்குறிப்புகள்

1. ம.வீ. பச்சையப்பன், தமிழ் நாவல்களில் நனவோடைக் கோட்பாடுகள், ப.7
2. William James, Principles of Psychology, p.155.
3. ம.வீ.பச்சையப்பன், தமிழ் நாவல்களில் நனவோடைக் கோட்பாடுகள், மே.த.நூ., ப.17
4. க. கைலாசபதி, தமிழ் நாவல் இலக்கியம் ப.106
5. நாஞ்சில் நாடன், தலைகீழ் விகிதங்கள், ப.34
6. மேலது, ப.34
7. மேலது, ப.80
8. ம.வி. பச்சையப்பன், தமிழ் நாவல்களில் நனவோடைக் கோட்பாடுகள், ப.37
9. நாஞ்சில் நாடன், தலைகீழ் விகிதங்கள், ப.129
10. மேலது, ப.133
11. நாஞ்சில் நாடன், என்பிலதனை வெயில் காயும், ப.8
12. மேலது, ப.9
13. மேலது, ப.12
14. பொ.கொ.சுந்தரராசன் (சிட்டி) சோ. சிவபாதசுந்தரம், தமிழ் நாவல், ப.233
15. நாஞ்சில் நாடன், என்பிலதனை வெயில் காயும், ப.14
16. நாஞ்சில் நாடன், என்பிலதனை வெயில் காயும், ப.15
17. கா.ராமமிருதம், புத்ர, ப.152
18. நாஞ்சில் நாடன், என்பிலதனை வெயில் காயும், ப.15
19. ம.வீ.பச்சையப்பன், தமிழ் நாவல்களில் நனவோடைக் கோட்பாடுகள் ப.61
20. மேலது, பக். 49, 50
21. மேலது, ப.51
22. மேலது, ப.51
23. மேலது, ப.51
24. நாஞ்சில் நாடன், மிதவை, பக். 41,42

25. மேலது, ப.43

26. மேலது, ப.45

27. ம.வீ.பச்சையப்பன், தமிழ் நாவல்களில் நனவோடைக் கோட்பாடுகள், ப.206

28. நாஞ்சில் நாடன், மிதவை, பக். 62,63

29. பி.ஆர்.அம்பேத்கர், சாதியை அழித்தொழித்தல் ப.217

30. நாஞ்சில் நாடன், மிதவை ப.117

31. மேலது, ப.117–118

32. மேலது, ப.141

33. மேலது, ப.142

34. மேலது, ப.157

## இயல் – நான்கு

# நடைத்திறன்

இலக்கியங்களில் கதைகளை சொற்களின் மூலமே விவரிக்க இயலும். கதையின் தன்மை, கதை நடைபெறும் களம், கதை மாந்தர்களின் குணநலன், இயற்கைச் சூழல், மாந்தர்களின் உணர்ச்சி வெளிப்பாடு என்று அனைத்தையும் சொற்களால் மட்டுமே விளக்க முடியும். எழுத்தாளர் கதையைக் கூற பயன்படுத்தும் சொற்களைத் தேர்ந்தெடுக்கும் முறைமையே அவரின் நடை எனப் போற்றப்படுகின்றது.

> **“நல்ல முறையில் மொழியைத் தெளிவாகப் பயன்படுத்துவதே சிறப்பான நடையாகும். அரிஸ்டாட்டில், சிசாரே போன்றோர் எண்ணத்தை அழகுபடுத்தும் கருவியாக நடையைக் கருதினர். ஜானாத்தன் ஸ்விப்ட் (Jonathan Swaift) என்பவர் தகுந்த இடத்தில் தகுந்த சொற்களைக் கையாள்வதே சிறப்பான நடை என்று நடைக்கு விளக்கம் தருகிறார் (Proper words in Proper Places)”.**[1]

என்று நடை பற்றி ஆங்கிலப் பேரகராதி வெளிப்படுத்துவதாகக் கூறுகிறார் கோ.வே.கீதா.

சமுதாயத்தில் நடக்கும் நிகழ்வுகளை எடுத்துரைப்பது இலக்கியம் ஆகும். இலக்கியம் வெற்றி பெறுவதற்கு மிகவும் இன்றியமையாததாக மொழிநடை அமைகிறது. இருபதாம் நூற்றாண்டின் கல்வி நிலை வளர்சசியடையத் தொடங்கியது தமிழ் மொழியின் வளர்ச்சி என்பது பெரும்பாலும் உரைநடையின் வளர்சசியே ஆகும். உரைநடை வளர்ச்சியில் இன்று புதினம் ஒரு சகாப்தமாகத் திகழ்கிறது. புதினத்தின் தனித்தன்மையை அப்புதினாசிரியரின் நடை அடையாளப்படுத்தும், ஓர் இலக்கியப் படைப்பாளியின் முழுமையான வெற்றியை மொழிநடையே தீர்மானிக்கிறது. புதின இலக்கியங்களில் பல்வேறு வகையான மொழிநடைகள் கையாளப்பட்டு வருகின்றன. நவீன இலக்கியங்களில் மக்கள் வழங்கும் நடைகளை இயல்பாகக் காணமுடிகின்றன.

ஓர் எழுத்தாளனின் தன்மையினைக் காட்டுவது அவனது மொழி நடையேயாகும். அவ்வகையில் நாஞ்சில் நாடனின் புதின நடைத்திறன் இவ்வியலில் ஆராயப் பெறுகின்றது.

**நடை விளக்கம்**

தமிழில் நடை என்பதற்குப் பல பொருள்கள் உள்ளன. நடை என்னும் சொல் Style என்பதாகும். Style என்பது stilus என்ற இலத்தீன் சொல்லின் வழியாகப் பிறந்திருக்க வேண்டும். வாய்மொழியின் மூலமாகவோ அல்லது எழுத்தின் மூலமாகவோ தான் கூற விரும்பிய கருத்தை வெளிப்படுத்தும் முறையே நடையாகும். நடையழகு என்பது ஆசிரியருக்கு ஆசிரியர் வேறுபடக்கூடியது. நடை என்பது ஓர் ஆசிரியரை இனம்கண்டு அறியும் வகையில் அவரது தனின்தன்மையை வெளிப்படுத்துவதாகும். தனது எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் வெளிப்படுத்துவதாகிய இலக்கியத்தின் குணப்பண்புதான் மொழிநடை ஆகும்.

> **“நடை என்பது கருத்தை வெளிப்படுத்தும் சொற்கூட்டம் அன்று அது எழுத்தாளரின் தனிப்பட்ட சிந்தனை அல்லது பார்வை”**[2]

என்று அகிலன் கூறுகின்றார்.

> **“நடையானது ஆசிரியரையோ எழுதப்படும் பொருளையோ எழுதப்படும் காலத்தையோ பொருத்து அமைவதாகும்”**[3]

என்று சிவகாமி கூறுகின்றார்.

> **“வெளியுலகத்தில் பழக்கப்பட்டுவிட்ட சொற்களைத் தாம் முன்வந்து எழுத்தாளனின் அனுபவத்துடன் இணைந்து நடையை உருவாக்குகின்றன”**[4]

ஒரு நல்ல நாவலாசிரியரை அவரது நடையின் மூலமாகவே நாம் இனங்கண்டு கொள்ள முடியும். மனித உணர்ச்சிகளைத் தெளிவாகப் புலப்படுத்துவதே மொழியேயாகும்.

**நடையின் வகைகள்**

இக்கால கட்டத்தில் வளர்ந்து வரும் இலக்கியங்களில் மொழிநடையைப் பொறுத்து வெற்றியும், தோல்வியும் அமைகின்றது. எனவே, நடையின் வகையினைக் காலமும் தீர்மானிக்கின்றது. ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழில் நிலவி வந்த நடையினை,

**“உரை வகை நடையே நான்கென மொழிப”**[5]

என்று தொல்காப்பியம் குறிப்பிட்டுள்ளது.

இலக்கியங்களில் இன்றைய சூழ்நிலையில் பல்வேறு வகையான மொழிநடைகள் காணப்படுகின்றன. படைப்பாளனின் நடை சுருங்கியும் விரிந்தும் செல்லும் படைப்பாளனின் நடை சுருங்கியும் விரிந்தும் செல்லும் படைப்பாளனின் நடையைப் பின்வரும் நிலைகளில் வைத்து அமைத்துக் கொள்ளலாம்; ஆசிரியரின் காலம், கதை நிகழும் இடம், நோக்கம் ஆகியவற்றைப் பொருத்தே நடையின் வகைகள் வேறுபடுகின்றன. அந்த நடையே ஒரு படைப்பாளனை அடையாளப்படுத்தும்.

**கிராமிய நடை**

கிராமியச் சூழலில் கதை நிகழும் போது அந்தக் கதையில் இடம் பெறும் கதை மாந்தர்கள் கிராமத்து மொழியில் தங்கள் கருத்துக்களைப் பேசுவது கதையில் நம்பகத்தன்மையை உணர்த்தும்.

கிராமிய நடை கதையின் போக்கையும் கதை மாந்தர்களின் தன்மையையும் மண் சார்ந்த, வட்டாரம் சார்ந்த கலாச்சாரப் பின்னணியோடு எடுத்துரைப்பதாகும். கதையின் ஆசிரியர் அந்த வட்டார மண் வாசனையை அனுபவ ரீதியாக உணர்ந்து எழுதுபவராக இருத்தல் வேண்டும். கிராமிய நடையில் வட்டார வழக்குச் சொற்களைப் பயன்படுத்துவது மிகவும் முதன்மையானதகக் கருதப்படுகின்றது. தென் பாண்டி மண்டல மண்ணை நன்கு உணர்ந்த ஆசிரியர் நாஞ்சில் நாடன் ‘தலைகீழ் விகிதங்கள்’ என்ற கதையில் தனது கிராமிய நடையை உணர்த்துகின்றார்.

**‘இப்ப என்னத்துக்கு எட்டு ரூபா? அது வாங்கணும் இது வாங்கணும்னு ரெண்டு வருசமா ஒனக்குத் தந்த பணத்தைச் சேத்து வச்சிருந்தா பனையடி வயலு ஒத்தியைத் திருப்பியிருக்கலாம்... சோலிக்கு எழுதிப் போட்டு பாழாப் போனது போவதும்... போய் எருமைக்கு ஒரு சாக்குப் பில்லு அறுத்துக்கிட்டு வா...’**

**“இவ்வளவு வளந்தும் புத்தியில்லியே... உழவைக் கருத்தா உழப்பிடாதா...? ஒண்ணுலே உழவுக்குள்ளயே விட்டுக்கிட்டு வாறே... இல்லேண்ணா ஈரணை ஏரு வலத்தை வச்சுப்பிடிக்கே... நீங்கெல்லாம் என்னத்துக்குத்தான் படிக்கேளோ தெரியல்லே... கலப்பையிலே அடஞ்சிருக்கிற மண்ணைத் தள்ளு...”**[6]

ஆசிரியர் வட்டார வழக்குச் சொல்லான ‘உழப்பிடாதா’ ‘ஈரணை’ போன்ற சொற்களைச் சரியான இடத்தில் கையாண்டுள்ளார். படித்தவர்களுக்கும் உழவுக்கும் எவ்வளவு இடைவெளி உள்ளது என்பதனையும் ஆசிரியர் குறிப்பிடுகின்றார். உழவும் விவசாயமும் அம்மண் சார்ந்த அனுபவப்பட்ட மக்களுக்கே உரித்தானது என்பதனைப் பூடகமாக வெளிப்படுத்துகின்றார்.

கிராமிய நடையில் கதையை நகர்த்திச் செல்வது மிகவும் கடினமான ஒன்று. அந்தந்தப் பகுதிகளில் வெகு காலம் வாழ்ந்திருந்தால் தான் கிராமிய நடையைக் கையாள இயலும். மண்ணையும் மக்களையும் அங்குள்ள இயற்கையையும் பறவைகள் விலங்குகளையும் தாவரங்களையும் நன்கு அறிந்தவர்கள் தான். கிராமிய நடையைத் திறம்படக் கையாள இயலும். ஆசிரியர் நாஞ்சில் நாடன் தனது புதினங்களில் அற்புதமான கிராமிய நடையினைக் கையாண்டுள்ளார். கிராமிய நடை பலருக்குப் புரிவதில்லை என்ற குற்றச் சாட்டும் உண்டு. அதற்கும் ஆசிரியரே பதிலுரைக்கின்றார்.

**“சிரமங்கள் இருக்கக் கூடும், சில சொல்லாட்சிகளைக் காண நேரும் போது. ‘சலம்பாபல் கிட’ என்று சொல்லுவதன் பொருள். “பேசாமல் இரு” என்று கண்டு கொள்வதற்கு வாசகனுக்கு அதிக நேரம் ஆவதில்லை. அதைக் கூடப் புரிந்து கொள்ள முடியாதவன், புரிந்து கொள்ள முயற்சி**

**செய்யாதவன் எப்போது 'தோழி சிலம்புவதையும் குருகு சிலம்புவதையும் புரிந்து கொள்ளப் போகிறான்''[7]**

இவ்விதம் கூறும் ஆசிரியர் அவர் புதினத்தில் நயம்படக் கூறியுள்ளார்.

**''என்ன நீங்க அப்பிடிப் பேசுகியோ... வீட்டிலே வயசுவந்த குமரியை வச்சுக்கிட்டு மகனுக்குக் கலியாணம் செய்யதுக்க நிக்கேளே... நல்ல கூத்து...!**

**அட எழவே... அதையெல்லாம் நான் ஆலோசிக்கலேண்ணா சொல்லுகே... அவனுக்கு நல்ல இடத்திலே கலியாணமானா லெச்சுமிக்கும் நல்ல தரமா வரும்... நமக்கும் முன்னே பின்னே செய்யதுக்கு ஒரு வசம் இருக்கும்... அதைவிட்டுப்போட்டு... அதுக்காக...? அவனுக்குத்தான் ஒரு இருவத்தஞ்சு வயசாவது ஆகாண்டாமா....? இருவத்தி மூணுதாலா திமகைஞ்சிருக்கு...! இப்பமே கலியாணத்தைச் செய்து வச்சா அந்தப்பய எப்பிடிக் குடும்பம் நடத்துவான்...''[8]**

ஆசிரியர் ''விளாசீந்துது'' 'சோலி' 'திமகைஞ்சிருக்கு' போன்ற சொற்கள் மூலம் கிராமிய வட்டாரச் சொற்களைக் கையாள்கிறார். அதே வேளையில், படிந்த இளைஞர்களுக்கு வேலை கிடைக்காமல் போகிறது என்பதையும் அதனால் திருமண நிகழ்ச்சிகள் தள்ளிக் கொண்டு போகிறது என்பதையும் ஆசிரியர் தனது நடையில் தெளிவு படுத்துகின்றார்.

**கிராமிய நடை**

கிராமிய நடையைக் கையாள்பவர்கள் அந்த வட்டார மரபை நன்கு அறிந்திருக்க வேண்டும். அந்த மண்ணோடு ஒன்றிக் கலந்து உறவாடியிருக்க வேண்டும். மண்ணை அறியாமல் அங்குள்ள மக்களைக் கதை மாந்தர்களாக சித்தரிக்க இயலாது. இக்கூற்றை ஆசிரியரே குறிப்பிடுகின்றார்.

**''ஒரு குறிப்பிட்ட வட்டாரத்தைச் சாராத படைப்பாளி அவ்வட்டார மொழியைப் பயன்படுத்தி, அம்மக்களின் வாழ்க்கையைத் தமது படைப்பில் சித்தரித்துக் காட்டினால் அப்படைப்பு சிறப்பானதாக இராது. அப்படைப்பில்**

**அவர் கையாண்டுள்ள மொழியின் செயற்கைத் தன்மையே படைப்பின் சிறப்பின்மைக்குக் காரணம்"**[9]

இவ்விதம் குறிப்பிடும் ஆசிரியரின் புதினத்தில் அவரது கிராமிய நடை செம்மையாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. மண்ணின் மரபை நன்கு உணர்ந்ததாலேயே ஆசிரியரால் தெளிவாக உணர்த்த முடிந்துள்ளது.

**"இந்தப் பொட்டைப் பிள்ளையை மாத்திரம் கொஞ்சம் கவனிச்சுக்கோ... குமாரைத் தள்ளி விட்டுட்டா எனக்குப் பாரம் குறைஞ்சிரும். ஆம்பிளைப் பயக்க எப்படியும் புழைச்சிக்கிடுவான்...அவனவன் பாட்டை அவனவன் கவனிச்சுக்கிட மாட்டானா...? சவங்க இல்லேண்ணா மாடு மேச்சுண்ணாலும் தண்ணி குடிக்கும்...! அந்த மனுசனுக்கும் முன்னே மாதிரி இப்போ முடியல்லே...? மூணு கோட்டை விதைப்பாடு பாட்டம் பயிரிட்டு, பாட்டம் அளந்து, வட்டிக்கும் நெல் அளந்து, உங்களையும் படிச்சு வச்சு, எல்லோரும் சாப்பிடவும் வேணும்ணா சும்மாவாடே போகும்? இதையெல்லாம் நீ நினைச்சுப் பார்க்காண்டாமா? உன்னை அப்பிடியென்ன கிணத்திலேயா கொண்டு தள்ளீரப்போறோம்? ராசா மாதிரி இருக்கப் போறே...! ஏதோ உன் வரைக்குமாவது விடியாதாண்ணுதான் அப்பாவும் சொல்லுகா...! நீ இப்படி அடம் பிடிச்சா எப்படிலே மக்கா?"**[10]

ஆசிரியர் கிராமிய நடைக்குள்ளேயே கதாபாத்திரத்தில் தன்மையையும் சூழலையும் நன்கு விவரிக்கின்றார். விவசாயி எவ்வளவு பாடுபட்டு உழைத்து, மிச்சம் பண்ணி தனது குடும்பத்தைக் காக்கிறான் என்பதனை உணர்த்துகின்றார். 'விதைப்பாடு', 'பாட்டம்', 'சவங்க' என்ற கிராமியச் சொற்களால் ஆசிரியர் தனது அனுபவத்தை எடுத்துக் காட்டுகின்றார்.

கிராமிய நடையில் காலங்ககாலமாக வந்த மரபும் கலாச்சாரமும் மிளிரும். கதபாத்திரங்களின் குணாதிசயங்களும் நடவடிக்கைகளும் கிராமிய நடையில் வெளிப்படும். அம் மண்ணின் மைந்தர்களின் தேவைகளும் ஆசைகளும்

எதிர்பார்ப்புகளும் புலப்படும். கிராமிய நடையைக் கையாளும் நாஞ்சில் நாடன் புதினத்தில் எதார்த்தத்தைக் கொணர்ந்துள்ளார்.

> **“கந்தையா கொஞ்ச நாளா கொண்டுகிட்டுத்தான் திரியான்... பூடந்தெரியாம சாமி ஆடுகொன்... அண்ணைக்கு நம்ம பூவத்தான் கோயில் வய......... அறுத்துக் கெட்டச்சிலே நம்மட்டேயே கத்திக்கிட்டு களத்தைவிட்டு வெளீல போயிட்டான்... இதை இப்பிடீ விட்டுக் கிட்டிருந்தா எப்படி? ஆட்டைக் கடிச்சு மாட்டைக் கடிச்சு மனுசாளையும் கடிக்க ஆரம்பிச்சாச்சு... சோணாயலம் என்ன சின்னப் பயலா தெரியாம விடதுக்கு? அவனுக்கு வயது இருவது ஆகுல்லா? இதை நாமே தட்டிக் கேக்காண்டாமா? கொஞ்சம் பொறு... உடனே நாமோ கம்பெடு தடியெடுண்ணு பெறப்பட்டிர முடியாது அடிவிடிக்கு... கந்தையா ஒரு மொறட்டு நியாயக்காரன். அவன் ஒண்ணு செய்தா சரியாத்தான் இருக்கும்ணு ஊருகாரனுக பேசுவான்... அதும் பொட்டப்பிள்ளை வெவகாரம்... பாவப்பட்டவம் பிள்ளைண்ணதுனாலே தானே மாட்டிக் கலைச்சு வெளையாடினாம்ணு நாலு பேசுவானுக. அதனால இப்ப ஒண்ணுங் கேக்கப் பிடாது”.** [11]

கந்தை பிள்ளையின் குணாதிசயம் நன்கு விளக்கப்படுகின்றது. கிராமியக் கதாபாத்திரங்களின் உணர்ச்சிபூவர்மான மனோநிலை உணர்த்தப்படுகின்றது. பெண் பிள்ளையின் நிகழ்வாக இருப்பதால் கந்தையாவைத் தட்டிக் கேட்கத் தயங்குகிறார்கள் என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

**சூழலை விளக்கும் நடை**

கதை சென்று கொண்டிருக்கும் பொழுது கதை மாந்தர்களின் மனோநிலையைச் சுற்றி நடக்கும் சம்பவங்களை அதனுடைய தன்மைகளை படிப்பவர்களுக்குப் புரியும்படி எடுத்துக் கூறும் நடையே சூழலை விளக்கும் நடையாகும். சூழலை நன்கு விவரிக்கும் வண்ணம் கதாசிரியர் மிகுந்த

அனுபவங்களையும் அதற்கான சொற்களையும் பெற்றிருக்க வேண்டும். ஆசிரியர் தனது புதினத்தில் சூழ்நிலையை விளக்கிச் சொல்லும் பாங்கு இயல்பாக உள்ளது.

**“பாட்டாக்கு இன்னும் உலகம் தெரியல்லியே? இன்னா பாரும்... உம்ம பேத்தியாள் ஸ்கூல் பாசாயிருக்கு... கடவுள் புண்ணியத்திலே நல்ல வசதியாட்டும் இருக்கியோ... உம்ம பணத்தையும் செல்வாக்கையும் வச்சு அந்தப் பையனுக்கு ஒரு சோலி வாங்கிக் குடுமேன்... நாளைக்கு பேங்கிலேயோ இல்லேண்ணா சர்க்கார்லியோ வேலை கிடைக்கப் போச்சுன்னா உமக்குத்தாலா பெருமை? பெரிய பணக்காரனுக்கு வாழ்க்கைப்பட்டு குறுணி அசிரி பொங்கிப் போட்டு புழுக்கச்சி வேலை செய்து சாகிறதை விட இது உமக்குச் கசக்கவா செய்யி?”**[12]

இதுவரை ஒன்றும் பேசாமல் சும்மா வந்த சொக்கலிங்கம் பிள்ளையின் மைத்துனர் நல்ல குற்றாலம் கண்ணாடியைக் கழற்றித் துடைத்துக் கொண்டே சொன்னார்.

**“அதும் சரிதான்... ஆனா சிதம்பரம் பிள்ளை பெரிய சம்சாரி போலிருக்கே...! பையனுக்குத் தங்கச்சி ஒருத்தி சமைஞ்சு அஞ்சாறு வருசம் இருக்குமாமே? அதுக்க கல்யாணம் இருக்கு... நாலஞ்சு கண்ணுங்கயந்தலைகள் வேறே... அதையெல்லாம் யோசிச்சிப் பார்த்தேளா....? அது ஒரு பாயிண்டு தான். ஆனா அந்தப் பிள்ளையை ஆயிரமோ ரெண்டாயிரமோ உருப்பிடி போட்டுத் தள்ளி விரட்டிசப் போறான்...”**[13]

ஆசிரியர் பாட்டாவின் பேத்தியின் நிலையையும் பேத்தியை மணம் பிடிக்கப் போகும் பையனின் நிலையையும் தெளிவாக எடுத்துரைக்கின்றார். அதே வேளையில், சிவதாணுவின் தங்கையின் நிலையையும் தெளிவுபடுத்துகின்றார். எல்லாக் கால கட்டத்திலும் பெண்களின் நிலை யாரோ ஒருவரைச் சார்ந்ததாகவே தான் உள்ளது என்பதனை எடுத்துரைக்கின்றார். வசதி படைத்தவர்கள் வீட்டில் வாழ்க்கைப் பட்டு அடிமைப் படுவதைவிட தனக்கு ஏற்ற இடத்தில் வாழ்க்கையை அமைத்துக்

கொள்ளுதல் பெண்களுக்கு நன்று எனும் கூற்றை 'பெரிய பணக்காரனுக்கு வாழ்க்கைப் பட்டு குறுணி அசிரி பொங்கிப் போட்டு புழுக்கச்சி வேலை செய்து சாகிறதை விட'' என்ற வாக்கியத்தில் ஆசிரியர் அடக்கி விட்டார்.

**சூழலுக்கேற்ற சொல்லாட்சி**

கதையின் சூழலைப் புரிந்து கொள்ளும் விதத்தில் அதற்கு ஏற்ற மாதிரி சொற்களை ஆசிரியர் கையாள்கிறார். கதாபாத்திரத்தின் மனோநிலையைக் கண்ணாடி போல் காட்டுகின்ற எளிய, வலிய சொல்லாட்சியை ஆசிரியர் பயன்படுத்துகின்றார். கதையின் சம்பவங்களைப் படிப்பவர்கள் மனதில் பதிய வைக்கும் வண்ணம் சூழலை விவரிக்கின்றார்.

> **"அப்படி என் தோல்வி மனப்பான்மையைக் கைக் கொண்டு என்னை நானே வருத்திக் கொள்ள வேண்டும்? அவர்களாகத்தானே ஏழையாக இருந்தாலும் படித்த பையன் வேண்டும் என்று தேடி வருகிறார்கள்? அப்படித் தேடி வருகிறவர்களுக்குப் பணபலத்தை, ஆள் பலத்தைக் கொண்டு வேலை வாங்கித் தந்து விடுகிற நம்பிக்கை இல்லாமலாப் போகும்? அப்படி இல்லாமலா இந்த ஏற்பாட்டுக்கு இசைகிறார்கள்? அந்த நம்பிக்கை அவர்களுக்கு இருக்கும் போது, வேலை கிடைத்து என் காலில் நின்று கொண்டு, வறுமையில் உழலுகின்ற என் வீட்டாரைக் கரையேற்றவும் கடைத்தேற்றவும் நான் முயன்றால் என்ன கெட்டு விடும்? தற்கொலை செய்து கொள்வதை விட, எங்காவது ஓடி மேலும் அவர்களைத் துன்பப்படுத்துவதை விட பிரச்சினைகளை எதிர் கொண்டு வென்று விடுவது நல்ல தில்லையா? என் மீதே எனக்கு ஏன் நம்பிக்கை இல்லாமல் போயிற்று?"**[14]

படித்த இளைஞன் வேலை இல்லாமல் அவதிக்குள்ளாகும் பொழுது அவன் மனம் என்ன பாடுபடும் என்பதனை நன்கு விவரித்துள்ளார். தன் குடும்பத்தைக் காக்க சம்பந்தம் செய்து கொள்ளும் குடும்பத்தின் வசதியைப் பயன்படுத்தினால் என்ன தவறு என்ற கருதுகிறான். தன்னிடம் படிப்பு இருக்கின்றது; அவர்களிடம்

பணம் இருக்கின்றது. இதனைப் பயன்படுத்தி வேலை வாங்கி, தனது குடும்பத்தையும் பாதுகாக்கலாமே என்று ஆதங்கப்படும் இளைஞனின் சூழலை ஆசிரியர் நன்கு விவரித்துள்ளார்.

கதையின் சம்பவங்களைத் தெள்ளிய முறையில் விளக்கிச் சொல்ல ஆசிரியர் கையாளும் சொற் திறனே சூழலுக்கேற்ற சொல்லாட்சியாகும். கதாபாத்திரத்தின் ஓட்டத்தை விறுவிறுப்பாகவும் சுவையாகவும் எடுத்துக் கொண்டு செல்ல இந்த சொல்லாட்சி முறையே உதவுகின்றது. பெண்ணைப் பார்க்க வேண்டும் என்று திருமணம் செய்யப் போகும் இளைஞன் நினைக்க, அதனைப் புரிந்து சண்முகம் பிள்ளை பேசுவதாக நாஞ்சில் நாடன் தனது புதினத்தில் குறிப்பிடுகின்றார்.

> **“இன்னும் பழைய பஞ்சாங்கமெல்லாம் பார்த்துக் கிட்டிருந்தா நடக்குமாடே? ஆனா வீட்டிலே போய் பார்த்தா நாலு பேரு நாலும் சொல்லுவா...! பொண்ணு வீட்டுக்காராளுக்கும் தான் உன்னைப் பார்க்கணும்னு ஆசை இருக்காதா? ஒண்ணு செய்யலாம்... இன்னைக்கு மார்கழி இருவத்தி ஏழு, தைமாசம் ரெண்டாம் வெள்ளிகிழமை நல்ல நாள் தான். சொக்கலிங்கத்தைக் குடும்பத்தோட கன்னியாகுமரிக்குக் கூட்டீட்டு வரச் சொல்லுகேன். சாயங்காலமா நீயும் நானுமாப் போலாம்... வெளிக்குத் தெரியவும் செய்யாது... ரெண்டு பேரும் ஒருத்தரை ஒருத்தர் நல்லா பார்த்துக்கிடவும் செய்யலாம்....”**[15]

சண்முகம் பிள்ளை ‘பழைய பஞ்சாங்க மெல்லாம் பார்த்துக் கொண்டிருக்க வேண்டுமா?’ என்று கேட்டு விட்டு, ‘மார்கழி 27 தை மாதம் ரெண்டாம் வெள்ளிகிழமை நல்ல நாள்’ என்று மீண்டும் சம்பிரதாயப் படியே நடக்க முயல்கிறார் என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். சண்முகம் பிள்ளையின் கதாபாத்திரத்தை ஆசிரியர் சில சொற்களிலேயே வெளிப்படுத்தி, சூழலையும் விளக்கியுள்ளார். பெண்ணும் மாப்பிள்ளையும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ளும் சூழலை நன்கு தெளிவுபடுத்துகிறார்.

கதையை நடத்திச் செல்லும் ஆசிரியர் சூழலைத் திறம்பட விவரிக்க வேண்டிய கட்டாயம் உள்ளது. ஒவ்வொரு கதாபாத்திரத்தையும் நன்கு அறிந்திருந்தால் தான் சூழலுக்கேற்ற சொல்லாட்சியைப் பயன்படுத்த முடியும். காட்சிகளை மனக்கண்ணில் உள்வாங்கி அதற்கேற்பச் சொற்களைத் தேடி, தேர்வு செய்து எழுதும் பொழுது தான் சூழலை விளக்க இயலும். ஆசிரியர் எந்தச் சூழலையும் மனதில் பதிய வைக்கிறார்.

> **“உனக்குத்தான் என்ன குறைடே சிதம்பரம்? இப்பம்தாலா தாரித்திரியம் புடுங்கித் திங்குது? உங்க அப்பா காலத்திலே பார்க்கணும்... மேலப்பத்துலே பொன்னாங்காணி மடையைப் புடுங்கினா, பதினைஞ்சு கோட்டை விதைப்பாடும் பாஞ்சாத்தாலா மத்தவாளுக்குப் பாயலாம்? குறுக்கே காகம் பறக்குமா? அவ்வளவு அங்குசா இருந்த மனுசம்லா? அம்மன் கோயில்லே அவரு போயில்லாம பௌர்ணைக்குத் தீவார்ணை நடக்குமா? சின்ன நிலையா? எல்லாத்தையும் கெடுத்துக் குட்டிச் சுவராக்கீட்டுத் தாலாபோனாரு...! இப்பம் தாலா காணி நிலமில்லே, கலப்பை சாத்த இடமில்லேண்ணு ஆச்சு! நீயும் பெரிய குடும்பக்காரன் தாண்டே.... சொக்கலிங்கத்தைவிடக் குறைஞ்சவன் ஒண்ணும் இல்லே...”**[16]

சிதம்பரத்தின் தந்தை வாழ்ந்த விதத்தை கதாசிரியர் சில வாக்கியங்களிலேயே புரிய வைத்து விடுகின்றனர். “மேலப்பத்துலே பொன்னாங்காணி மடையைப் புடுங்கினா, பதினைஞ்சு கோட்டை விதைப்பாடும் பாஞ்சாத்தால மத்தவாருக்குப் பாயலாம்” என்று சிதம்பரத்தின் தந்தையின் நிலையை விளக்குகின்றார். வாழ்ந்து கெட்ட குடும்பம் என்பதனை சொற்ப வாக்கியத்திலேயே நாஞ்சில் நாடன் வெளிப்படுத்தி விடுகின்றார்.

**காலச் சூழல் – மனவெளிப்பாடு**

கதையில் நிகழும் காலத்தின் சூழலை விளக்கும் வண்ணம் கதாபாத்திரத்தின் மன வெளிப்பாட்டை உணர்த்துவது கதாசிரியர்களின் திறனாகும். கதையின் சூழலை சில சொற்களிலேயே சுருக்கி, படிப்போரின் மனதில் அச்சூழலைப்

பதிய வைப்பது கதாசிரியர்களின் உத்தி என்பர். நாஞ்சில் நாடன் தனது புதினத்தில் காலச் சூழலை விளக்கியுள்ளார்.

> **"ஹலோ... ஹலோ.... டிரங்கால் ஃபிரம் நாகர்கோயில் பி.பி.டு மிஸ்டர் சிவதாணு.... எஸ். சிவதாணு ஸ்பீக்கிங்.... குரலின் நடுக்கம் ரிசீவரில் தெரியாமல் கட்டுப்படுத்த முயன்று" பார்வதி ஏதாவது இசைகேடாக? குழந்தைக்கு என்னவாவது? 'தொருக் தொருக்'கென்று சிந்தனைத் தொடர்கள் அறுபட்டுத் தொங்க. ஹலோ... பிளீஸ் ஸ்பீக் ஹியர். மிஸ்டர் சிவதாணு ஆன் த லைன்" டெலஃபேன் ஆபரேட்டரின் இனிமை, அக்கினிக் குழம்பாகக் காதுகளில் சொட்டுச் சொட்டென்று சொட்டியது.**
>
> **ஹலோ... சிவதாணு அண்ணனா? தொலைபேசியில் குரலை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. யாராக இருக்கும்? செல்லப்பன் தானா?**
>
> **ஹலோ... சிவதாணுதான். யரு பேசுகது?**
>
> **நான்தான். செல்லப்பன் பேசுகேன் என்னலே? என்ன விசயம்? சீக்கிரம் சொல்லு... ஆத்தா... ஆத்தா செத்துப் போயிட்டா!"[17]**

தாயின் மரணத்தை அண்ணன் காரன் தம்பியிடம் கூறும் சூழலை ஆசிரியர் தெளிவாக விளக்கியுள்ளார். தம்பியின் பதற்றத்திலேயே படிப்பவரின் மனதைப் பதை பதைக்கச் செய்கின்றார். "அப்பாவுக்கு', 'தம்பிகளுக்கு', 'அம்மாவுக்கு' என்று தம்பியின் சந்தேகத்தின் மூலமே காலச் சூழலை ஆசிரியர் பதிய வைக்கின்றார். முடிவில், 'ஆத்தா செதுப் போயிட்டா' என்று கூறி படிப்பவரை உணர்ச்சி வசப்பட வைக்கின்றார். தம்பியின் மனவெளிப்பாட்டின் மூலம் அவனது மனஅழுத்தத்தையும் நடுக்கத்தையும் துல்லியமாகப் படம் பிடித்துக் காட்டுகின்றார்.

**பழமொழி**

காலங்காலமாக அந்தந்த வட்டாரங்களில் அனுபவ ரீதியாகச் சொல்லிக் கொண்டு வரும் மொழி தான் பழமொழி. நீதிக் கருத்துக்களையும் நன்னெறிகளையும் அறக் கருத்துக்களையும் உள்ளடக்கி மக்களை விழிப்படையச் செய்யும் மொழியே பழமொழியாகும். பழமொழியில் அம்மண்ணின் அனுபவங்களும் மூட நம்பிக்கைகளும்

பழக்க வழக்கங்களும் வெளிப்படும். ஆசிரியர் தக்க இடங்களில் பழமொழியினைக் கையாண்டுள்ளார். பல நூல்களைப் படித்து உணராத பாமரர்கள் கூட பழமொழிக்குக் கட்டுப்படுவார்கள். அவ்விதத்தில் ஆசிரியர் வழக்கிலுள்ள பழமொழியைக் கையாளுகிறார்.

**“சும்மயாடே சொல்லியிருக்கா...? உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகுமாண்ணு...? ஆனை தூறிச்சுதுண்ணு ஆட்டுக் குட்டியும் தூறினா அண்டம்லா கீறிரும்...”**[18]

தகுதி என்பது தரத்தையும் தன்மையையும் பொறுத்துள்ளது என்பதற்காக ஆசிரியர் பழமொழியைப் பயன்படுத்துகிறார். தங்களை அறியாத தேவையில்லாத ஆசைகளால் எந்தவிதப் பயனும் இல்லை என்று கூறுகின்றார்.

குறிப்பிட்ட வட்டார மக்களின் நெடுங்கால வாழ்வியல் மரபின் அனுபவச் சொற்களே பழமொழிகள். ஆசிரியர் இதனை தகுந்த இடங்களில் பயன்படுத்தியுள்ளார். மண் சார்ந்த மணத்திற்கு பழமொழியும் ஒரு காரணம் என்றே கூறலாம். ஆசிரியர் தக்க பழமொழியைக் கூறியுள்ளார்.

**“அம்மணங்குண்டி ராச்சியத்தில் கோவணங் கட்டியவன். பைத்தியக்காரன்.**[19]

உலகத்தோடு ஒட்ட ஒழுகாமல் போகின்றவன் மக்களிடம் மதிப்பை இழப்பான் என்ற கருத்தை கதாசிரியர் இப்பழமொழியின் மூலம் வகைப்படுத்தியுள்ளார். காலம் எப்போதும் தன்னை மாற்றிக் கொண்டே போகும் என்பதனையும் உணர்த்துகின்றார்.

வழிவழியாக வரும் அனுபவரீதியான நன்னெறி வாக்கியங்களே பழமொழி என்பதாக அறிஞர்கள் கூறுவர். கதைகளில், குறிப்பாகக் கிராமியக் கதைகளில் பழமொழிகள் அதிகம் கையாளப்படுவதுண்டு. கிராமிய மக்களும் புழக்கத்தில் பழமொழியை அதிகம் பயன்படுத்துவர். ஆசிரியர் தனது புதினங்களில் ஆங்காங்கே பழமொழிகளைப் பயன்படுத்தி உள்ளார்.

**“கெட்டவனுக்கு இட்டவனும் கெட்டுல்லா போவான்?”**[20]

தீய மனங் கொண்ட ஒருவனுக்கு உதவி செய்பவனும் தீய உள்ளங் கொண்டு கெட்டுப் போவான் என்ற பழமொழியை ஆசிரியர் கையாண்டுள்ளார். தீய செயல்களைச் செய்பவன் மட்டுமல்ல, தீய செயலுக்கு உதவி செய்பவனும் தன்னை இழப்பான் என்று கதையில் நன்னெறியை அறிவுறுத்துகின்றார்.

**கால்நடை வருணனை**

கதை ஓட்டத்தில் கால்நடையைப் பற்றியும் ஆசிரியர் சொல்லிக் கொண்டு போகிறார். வட்டார வழக்கில் தாவரங்களும் பறவைகளும் விலங்குகளும் கூட முக்கிய இடம் பெறும். இதனையும் கூர்ந்து கவனித்து ஆசிரியர் எழுத்தில் வடிப்பதே மண் சார்ந்த பயனாகும். ஆசிரியர் மாட்டைப் பற்றிக் கூறுகிறார்.

> **“மாடு பிடிச்சிட்டான் மாடு... இவனுக மாடு பிடிக்கவா போறான்? போனாப்பிலே போத்தி கடையிலே சூடா அல்லாவும், ரசவடையும், இட்டிலியும் திண்ணா மாடா பார்க்க முடியும்? புடிக்கற மாட்டிலே பெண்டாட்டிக்குத் தெரியாம எவ்வளவு ஒசத்தலாம்ணு பார்த்தா மாடு இப்படித்தாலா வாய்க்கும்? ஓடேன் சவமே! கறியாயில்லே... செம்மான் கெணக்க இருக்கியே... ரெண்டு தொட்டி தண்ணி குடிக்கத் தெரியில்லா? நாய்க்கு பொறந்த பய மாடு....”**[21]

ஆசிரியர் மாடு பிடிக்கப் போகும் மாந்தரின் மனோ நிலையை விளக்குகிறார். மாட்டை வைத்தே கதாமாந்தரின் தன்மையை நன்கு வலியுறுத்துகின்றார்.

மண் சார்ந்த கிராமியக் கதைகளில், கால்நடைகளும் கதாபாத்திரங்களாக மாறும் வாய்ப்புண்டு. கதாசிரியர்கள் மரத்தையும் தாவாத்தையும் பறவையையும் விலங்குகளையும் கதாபாத்திரங்களாக சித்தரிப்பார்கள். கால்நடைகளின் இயல்பான குணமும் அதன் தன்மையும் அறியாமல் கால்நடையைப் பற்றி எழுத இயலாது, நாஞ்சில் நாடன் கால்நடைகளையும் கதையில் நயமாகக் கையாண்டுள்ளார்.

> **“ஆண்பிள்ளையைக் கண்டு தலைகுனிந்து மிரண்டு நடந்து வந்த காமாட்சியின் முன்னால் காளைக்கன்றின் திடீர்ப் பாய்ச்சல், “ம்மா....” என்றோர் குன்னாளி போட்டு கன்று எகிறிப் பாய்ந்தது. சத்தம் கேட்டு**

**கண்ணுயர்த்திப் பார்த்த காமாட்சி மிரண்டு அரண்டு அங்கா இங்கா என்று ஒதுங்க முயல, காளையின் தலையசைப்பு குடத்தில் மோதி, தண்ணீர்க்குடம் 'தளங்' கென்று தரையில் விழுந்தது. கௌரவம் மிக்க கன்னிப் பெண்ணின் நகை தாங்காக் கழுத்துப் போல், காமாட்சியின் குடம் கழுத்து அமுங்கி அசிங்கமாய்க் கிடந்தது. பயந்து சுவரோரம் சாய்ந்த காமாட்சியின் இடது கை முட்டியில் இலேசான சிராய்ப்பு., இரத்தத் துளிர்ப்பு."** [22]

இளங்கன்று பயமறியாது என்பதனை மெய்ப்பிக்கும் விதத்தில் இளங்கன்று காமாட்சியை முட்டித் தள்ளுவதாக ஆசிரியர் எழுதுகின்றார். 'குன்னாளி' போட்டு என்று வட்டார வழக்கைக் பயன்படுத்துகிறார். 'நகைதாங்காக கழுத்து போல் குடம் நசுங்கிப் போனது என்று ஆசிரியர் கூறும் உவமை நயம்பட உள்ளது.

**வட்டார வழக்கு**

வட்டார வழக்கு என்பதனை வட்டாரத்தின் மரபு என்றும் அதனைச் சார்ந்த வாழ்க்கைக் கூறுகள் என்றும் எடுத்துக் கொள்ளலாம். ஆசிரியர் நாஞ்சில் நாடன் வட்டார வழக்கைப் பற்றி அவரே விளக்குகின்றார்.

**"வட்டாரத்தில் வழங்குகின்ற சொற்களை ஒரு பக்கம் போலி போலக் குவித்து வைத்துக் கொண்டு, பக்கப் பக்கமாக கை கையாகத் தூவி விட்டுப் போவதல்ல நாவல். நான் தூத்துக்குடியில் போய் ஒரு பத்து நாட்கள் தங்கியிருந்து, அங்கு உப்பளத் தொழிலாளர்களின் சொற்களை எல்லாம் சேகரித்து பின்பு அதை வைத்து நாவல் எழுதிவிட முடியாது"** [23]

என்று கூறுகிறார் நாஞ்சில் நாடன்.

சிறிய அலுமினியத் தட்டின் ஊசித் துவாரங்களைக் காபந்து பண்ணிப் பரந்திருந்த பூவரச இலையிலிருந்து புளித்துகையலைத் தொட்டு நாக்கில் தீற்றிக் கொண்டு, பீங்கான் தட்டை வாய்க்கு உயர்த்தி எடுத்துத் தண்ணீரை உறிஞ்சிக் குடித்தான் சிவதாணு.

**“ஒண்ணும் சொல்லாம இருந்தா எப்பிடி....? எனக்கு இப்போக் கலியாணம் வேண்டாம்மா...! ஏம்லே அப்பிடிச் சொல்லுகே... கடவுள் இப்பமாவது கண்ணைத் தொறந்திருக்கான்... நல்ல வசதியாட்டுப் பொண்ணு வீட்டுக்காரா வாறா... ஒரு சோலியும் வாங்கிக் குடுத்தாண்ணா உனக்கு என்ன குறை இருக்கப் போவுது? நான் தான் வேண்டாம்னு சொல்லுகேனே... அந்தால விடு! எல்லாம் முதல்லே வேலை கிடைக்கட்டும். அதுக்குப் பிறகு பார்த்தாப் போரும்... இப்பம் என்ன பறத்தம்? முதல்லே தங்கச்சியைக் கெட்டிக் குடுக்கதுக்குண்டான வழியைப் பாருங்கோ...!”** [24]

ஆசிரியரே குறிப்பிட்டது போல் வட்டார மரபுகளை அவரது புதினத்தில் குறிப்பிட்டுள்ளார். ‘புளித்துகையல்’, ‘பூவரசு இலை’, ‘அலுமினியத் தட்டு’ என்ற வட்டாரச் சொற்கள் கையாளப்படுகின்றன. அதே வேளையில், அவ்வட்டாரத்து இளைஞர்கள் வேலைக்குப் படும் பாட்டையும் படம் பிடித்துள்ளார். தனது சொந்த உழைப்பில் பொருளீட்டி சுயமரியாதையோடு திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று எண்ணுகின்ற இளைஞர்களையும் ஆசிரியர் சித்தரிக்கின்றார்.

தாம் வாழ்ந்த மண்ணின் வாசம் கெடாமல், அதன் தன்மை மாறாமல், அதன் எதார்த்தத்துடனே சொற்களைக் கையாளும் நடையே வட்டார வழக்கு நடை. நாஞ்சில் நாடன் தனது மண்ணின் கலாச்சாரத்தை எல்லாவித சம்பவங்களிலும் உணர்த்துகின்றார். வட்டார வழக்கு மொழி ஆசிரியருக்கு கைவரப் பெற்றள்ளது. இதனை ஆசிரியரே கூறுகின்றார்.

**“வாழ்ந்து சுற்றுப்புறத்தில் புழங்கிய மொழி எனக்கு ஜீவனுள்ள மொழியாகத் தென்பட்டது. என்னுடையது உணர்ச்சியை அதிகச் சிரமமில்லாமல் சொல்வதற்கு அது வசதியாக இருந்தது. வாழ்க்கையின் எல்லா சாரங்களையும் அந்த மொழி புலப்படுத்திக் கொண்டே இருந்தது”** [25]

“இக்கூற்றின் படியே ஆசிரியர் வட்டார வழக்கைக் கையாண்டுள்ளார்.

**“கருது விடாம நல்லா அரிச்சு வாருங்கலே.... சொர்ணப்பா... படையை அப்பிடிப்போட்டு சமுண்டி இறுக்காதே... நெல்லெல்லாம் தொளியல்லா செய்யி... குட்டியளே! கெட்டுக்கு பொறத்த போயிப் பொறக்குங்கோ... அங்க என்ன அந்தா விளுகு! அவனுகளை வாரிக்க கெட்ட விடாம குண்டிக்குப் பொறத்தாலேயே திரிஞ்சா எல்லாத்தையும் வரப்பிலே ஏத்திவிட்டிருவேன்...”**[26]

ஆசிரியர் ‘அரிச்சு’, ‘சமுண்டி’ போன்ற வட்டார வழக்குச் சொற்களை எளிதாகக் கூறுகின்றார். ‘குண்டிக்குப பொறத்தாலே’ என்று கிராமிய எதார்த்தத்தை உணர்த்துகின்றார். படிப்போரின் உள்ளம் தனித்துவமான வட்டாரச் சொற்களில் மூழ்கி, அதன் மணத்தை உணரும் படி ஆசிரியர் பதிய வைத்துள்ளார்.

வட்டார வழக்கில் மரபு சார்ந்த பழக்க வழக்கங்கள் பதிவு செய்யப்படுகின்றன. அன்றாட நிகழ்வுகளும் அதனை அம்மக்கள் ஏற்றுக்கொள்ளும் விதங்களும் உரைக்கப்படுகின்றன. வட்டார வழக்குச் சொற்கள் தொன்மையானதாக இருப்பினும் வலிமை வாய்ந்ததாக உள்ளன. ஆசிரியர் நாஞ்சில் நாடன் தனது புதினம் முழுவதும் வட்டார வழக்குச் சொற்களையே கையாண்டுள்ளார். அதைத் தவிர்த்து ஆசிரியரால் விலகிச் செல்ல இயலவில்லை எனபதே நிதர்சனமாக உள்ளது.

**“சோறு வடிச்சாச்சு.... உப்புப் போட்டு கொஞ்சம் கஞ்சித் தண்ணி வேணும்ளா? காலம்பறையே ஒண்ணும் குடிக்காம இருக்கேளே.... ம்.... ஒரு போணியிலே ஆத்திக்கொண்டா....**

**இங்கிணயா? கொள்ளாம்... நாலு ஆளு வாற போற. இடம்... ஆமா.... வீட்டுக்குள்ளே வச்சுக் குடிச்சா பால் பாயசம் குடிக்காண்ணு நினைச்சுடுவானுகளாக்கும். அது உள்ளே வந்து குடிக்கப்பிடாதாங்கும்.. நீ கொண்டா மூளி. வியாக்கியானம் பண்ணிக்கிட்டு நிக்கா... ஆனாலும் ஒண்ணுசொன்னா அந்தால கேக்கப்பட்ட ஆளுதாலா...”**[27]

கணவன் மனைவிக்குள் நிகழும் உரையாடல் மூலம் ஆசிரியர் வட்டார மரபைப் படம்பிடித்துக் காட்டுகிறார். கிராமப்புறங்களில் கஞ்சித் தண்ணியே காலை

உணவு என்பதைத் தெரியப்படுத்துகின்றார். இக்காலை உணவு உண்ணுவதில் கணவன் மனைவிக்குள் நிகழும் பிணைக்கும் வட்டார வழக்கு என்றே உணர முடிகின்றது. ஊர்ப்புற கணவன் மனைவி உறவுகளில் உள்ள பாசமும் பற்றும் கடுமையும் ஆசிரியரின் சொற்களால் வெளிக்கொணரப்பட்டுவிட்டன. கிராமியச் சூழலில் இவையும் வட்டார வழக்காகவே கருதப்படுகின்றன என்றே ஆசிரியர் உணர்த்துகின்றார்.

கிராமிய வட்டாரங்களில் மூடநம்பிக்கை வேரூன்றி இருப்பது நடைமுறையாகும். கிராமிய மக்களின் எண்ணங்களும் மூட நம்பிக்கைகள் பால் ஈர்க்கபட்டுவிடும். கிராம மக்களின் அனுபவத்தைக்கேற்ப சித்தாந்தங்களும் கொள்கைகளும் உணரப்படும் சித்தரைப் பற்றிய வரையறையும் ஆசிரியரால் இவ்விதமே விளக்கப்பட்டுள்ளது. வட்டார வழக்கில் அறியாமையும் மண்டிக்கிடக்கு மென்பது ஆசிரியரின் எழுத்தில் புரிய வருகின்றன.

> **“தாயோளி உருப்படுவானா இவன்...? பிள்ளையாரு செலையை உடைக்கணும்ங்கானே... செறுக்கி விள்ளைக்கு குறும் வயத்துவலி வராம என்ன செய்யும்? வேலேய்... தலை தெறிச்சிராம... அப்பனைப் போசுகபேச்சா... பெரிய சித்தரு மயிரு மாரி பாட்டுப் படிக்கான். சித்தருண்ணா செவுரு முட்டி அரிஷ்டம்தான் குடிக்கணுமாலே... யோகிகள் எல்லாம் அப்படித்தாண்டா இருப்பா... ஆமா... யோகி எல்லாம் பத்து வச்சதான் சாவான்... உனக்கு மூலத்திலே பத்து... தாயோ நாக்கு அளுகீராமே... என்ற துரியில் பேச்சு போகும்.”[28]**

பிள்ளையார் சிலையை உடைக்க வேண்டும் என்று சொல்பவனை கீழான நிலையில்தான், பாமரமக்கள் வைத்துள்ளார்கள் என்பதனை ‘தாயளி’ என்ற சொல்லே புரியவைத்து விடுகின்றது. யோகிகளையும் சித்தர்களையும் வட்டார வழக்கில் வெவ்வேறு விதமாகப் புரிந்து வைத்துள்ளாரகள் என உரையாடல்கள் கூறுகின்றன.

கதையில் வட்டார வழக்கு பெரிதும் இடம் பெற்றால், கதாசிரியர் தனது கிராமியப் புலமையைக் காட்டுவார். ஊர்ப் பெயரையும் விளையும் பயிர்களின்

பெயரையும் குறிப்பிடுவர் வட்டாரத்துக் குள்ளேயே புழங்கும் வியாபாரமும் சந்தை நிலவரமும் கதையில் இடம்பெறும். ஆசிரியர் தனது புதினத்திலும் இதனைக் குறிப்பிடுகின்றார்.

> **“செண்பகம் இந்த வியாரத்தைச் சற்று நாகரீகமாகச் செய்தான். ஆள், பார்க்க வாட்டசாட்டமாய் – முகம் மழித்து, மீசை கத்தரித்து கச்சிதமாய் உடுத்தி இருப்பான். ஒரு ஏர் – பேக்ககும் ஹேன்ட் பேக்குமாக பஸ்ஸில் இருநது ரயிலில் இருந்து இறங்கி நடக்கும் போது கனம் வெளியே தெரியாதபடி வசமாகப் பிடித்து நடப்பான். நல்ல சன்ன அரிசியாகப் பார்த்தே வாங்குவது. குர்லாவில் வண்டி மாறி முமபராவில் இறங்கி பஸ் பிடித்து தலோஜா போய் வாங்கி வருவான். அங்கு விலை சற்று மலிவாகவும் எடை முனைப்பாகவும் இருக்கும். நடைக்கு பதினைந்து முதல் இருபது கிலோ வரை அவனால் கொண்டு வர முடிந்தது. எத்துக் குத்தாய் சனியன்கள் எதிர்ப்பட்டால் கொடுக்க என இரண்டு ரூபாய் நோட்டுகள் வைத்திருப்பான். ‘சாப்பாட்டுக்கு வாங்கீட்டுப் போறமுங்க’ என்று முகத்தை வைத்துக் கொள்வான்.”**[29]

செண்பகம் அரிசி வியாபாரம் செய்யும் லாவத்தை ஆசிரியர் வட்டார வழக்கோடு குறிப்பிடுகின்றார். ‘குர்லா’, ‘மும்பரா’, ‘தலோஜா’ என்ற இடங்களின் பெயர்களைக் குறிப்பிட்டு வட்டாரத்தை உறுதி செய்கின்றார். எதிரே வரும் அதிகாரிகளுக்கும் செண்பகம் லஞ்சம் கொடுக்க வேண்டிவரும் என்பதனையும் ஆசிரியர் தெரியப்படுத்துகின்றார்.

வட்டார வழக்கில், கதாபாத்திரங்கள் ஏற்றத்தாழ்வும் வாழ்வியல் சிக்கல்களும் தெரிவதுண்டு. கதாசிரியர் அந்தந்த வட்டாரத்திற்கேற்கேற்ற பிரச்சினைகளையும் கையாள்வது உண்டு. கதாபாத்திரங்களின் மனக்குறையும் சண்டை சச்சரவுகளும் வட்டார மரமாகக் கதையில் குறிப்பிடுவதுண்டு. ஆசிரியர் இக்கதையில் அவ்விதமே வெளிப்படுத்தியுள்ளார்.

**“அண்ணன் சொல்லுகது சரிதான். வருசம் மூணு தாண்டியாச்சு... ஒரு நோட்டுகூட வேண்டாம்னு சொல்லி, கேட்டதும் ரூவாயை எடுத்து தந்தேரு. நான் மறந்திரல்லே... வேலையும் முன்னைப் போல ஒண்ணும் இல்லே. எப்படியும் பய பாசாகி ஒரு வேலைக்குப் போயிட்டா முதக் காரியமா ஒம்ம கடத்தை தீத்திருகேன்.... அதுக்கில்லே சுப்பையா... உம் பேரிலே எனக்கு நம்பிக்கை இல்லாம இல்லே... மூணு வருசமா கேட்டனா? இப்பம் எனக்கும் பெரிய முடை வந்து சேந்திட்டு... நிண்ண நெலையில் ரெண்டு எருமையும் செத்துப் போச்சு.... அந்த நாறத் தேவ்டியா மவன் கோலப்ப ஆசாரி கேசுக்கு சின்னப் பணமா செலவாகுங்கே... இல்லேன்னா ஒன்னை வந்து கேப்பனா? சரிண்ணேன்... நீரு இப்பிடிச் சொல்லச்சிலே நான் வேற என்னத்தைச் சொல்ல? தை மாசத்துக்குள்ளே எப்பிடியும் தந்திருகேன்... ... ஒரு மாசம் பொறுத்துக்கிடும்...”**[30]

சுப்பையா வாங்கிய கடனைக் கொடுத்தவர் திருப்பிக் கேட்க, சுப்பையாள சமாதானம் கூறுகிறார். கொடுத்தவர் எருமை இறந்த போனதையும் கோலப்ப ஆசாரி கேசுக்கு செலவு செய்வதையும் கூறுகின்றார். கிராமிய வட்டாரத்தில் நில வழக்குகள், கடன் தொல்லைகள் சகஜமான ஒன்று என்பதனை ஆசிரியர் விளக்குகின்றார்.

வட்டார வழக்கில், கதையில் நிகழும் சம்பவங்களும் வெளிப்படுவதுண்டு. கொட்டும் மழையும் கடுமையான வெயிலும் வட்டார வழக்கில் வந்துசேரும். கதாசிரியர் வட்டாரத்தில் நிகழும் எல்லா மாற்றங்களையும் தங்கள் கதைக்குள் கொண்டு வருவதுண்டு. விடாது பெய்யும் மழையையும் அதன் நிகழ்வுகளையும் கதாபாத்திரம் மூலம் ஆசிரியர் விளக்குகின்றார்.

**“ரொம்ப வெறைக்கு இல்லே... ஆமாமா... வெறைக்கும் வெறைக்கும்... கொஞ்சம் கிட்ட வந்து இரியேன்... பேசாம இரி குத்தாலம்... அன்னா அந்த மூலைலே யாரோ இருக்கா... அதா...? ஒரு சின்னப் பயல்லா.... ராத்திரி வழி தெரியாம கெடக்கான்... சின்னப் பயண்ணா...? பஸ் ஸ்டாண்டிலே என்னைப் பார்கல்லேண்ணா என்ன செய்வே? வேற என்ன செய்யது?**

**பேசாம ஒரு மூலையிலே குத்தவச்சு இருந்திருப்பேன், விடியது வரை... இப்பிடி ஆகும்னு கண்டனா? ஒசரவெளையிலிருந்து பொறப்பிடச்சிலே எட்டு மணி அடிச்சாச்சு... ஒம்பது மணிக்கு மீனாட்சிபுரம் பஸ்டாண்டு வந்தாச்சு. ஒம்பதரை மணிக்குத்தாலா தாளக்குடி கடைசிக் காரு. சவம் இன்னா வந்திரும் போயிரலாம்னு நெனைச்சேன். இப்பிடி ஆகும்னு கண்டனா? மளைண்ணா ஊத்து ஊத்தண்ணு ஊத்துரு... காருக்கு நிண்ணு நிண்ணு பார்த்தா காரையும் காணோம். மோரையும் காணோம். சூரங்குளம் ரோட்டிலே உடைப்பு, காரு போகாதுங்கான். இறச்சகுளம் பஸ்ஸிலே ஏறி அங்கேருந்து நடந்து ஒரு பொட்டச்சி எப்பிடி வாறது இந்த வெள்ளத்திலே?''** [31]

கொட்டும் மழையில் குத்தாலமும் அவன் மனைவியும் உரையாடுவதாக வட்டார வழக்கு அமைந்துள்ளது. ஆசிரியர் கடும் மழையை ''ஊத்து ஊத்துண்ணு ஊத்துரு'' என்ற வாக்கியத்தால் முழுமையாக வெளிப்படுத்துகின்றார். கிராமப்புறங்களில் கனமழையில் ஏற்படும் நிகழ்வுகளை ஆசிரியர் விளக்கியுள்ளார்.

**உணர்ச்சி நடை**

கதையில், கதாபாத்திரங்கள் வெளிப்படுத்தும் கோபங்களில் வெளியாகும் சொற்கள் வட்டார வழக்குச் சொற்களாகவே இருக்கும். உணர்ச்சியும் அடங்காத வேகமும் வார்த்தைகளில் புலப்படும். கிராமப்புற மக்கள் அதிகம் படிப்பறிவு இல்லாதவர்களாக இருப்பதால், அவர்களின் கோபம் நொடிக்கு நொடி மாறிக் கொண்டே போகும். படிக்காத மக்கள் தங்களுக்கென்று எப்போதும் வழக்கமாகப் பயன்படுத்தும் சொற்களை மட்டுமே பயன்படுத்துவார்கள் என்பதனை ஆசிரியர் நன்கு விளக்குகின்றார்.

''லே சிவதாணு...

சிதம்பரம் பிள்ளை அவனை அடக்க முற்பட்டார்.

தன் பலவீனத்தைக் குத்திக் காட்டியதால் நல்ல பெருமாளின் கோபம் கட்டுமீறி –

**“யாருகிட்டலே பேசுகே? செவளையைத் திருப்பீருவேன்... செவளையைத் திருப்புகது அப்புறம் வச்சிக்கிடலாம்... முதல்லே மரியாதையாய்ப் பேசும்... ஏலே, ஒலண்ணேருன்னா உமக்கும் அந்த மரியாதைதான் கிடைக்கும் ஆமா...”** [32]

சிவதாணுவின் குரலில் ஒலித்த துணிச்சல் அவரை அயரச்செய்துவிட்டது.

**“என்னையே எதிர்த்துப் பேச வந்திட்டேயில்லா...? உன்னைப் பார்த்துக்கிடுகேன். இப்பமே இவ்வளவு கொழுப்பா? உனக்கு எவன் சோலி தரப்போறாண்ணு நானும் பார்க்கத்தாலா போறேன்?”** [33]

சிவதாணுவும் சிதம்பரம் பிள்ளையும் நாட்டு வழக்குத் தெரிந்தவர்களாக இருந்தாலும் கோபம் வரும் பொழுது உணர்ச்சிவசப்பட்டுப் போய் விடுகிறார்கள். அந்தக் கோபத்தில் ‘செவளையைத் திருப்பீடுவேன்’’ என்ற வட்டார வழக்குச் சொல்லைப் பயன்படுத்துகின்றார்.

கதாபாத்திரத்தின் வேகத்தையும் துடிப்பையும் வெளிப்பாட்டையும் பொங்கும் பிரவாகமாக ஓட வைக்கும் நடையே உணர்ச்சி நடையாகும். இந்நடையின் மூலம் கதாசிரியர் கதாபாத்திரத்தின் தன்மையினை நன்கு வெளிக்கொணர்வார். ஆசிரியரும் தனது உணர்ச்சி பூர்வ நடையால் கதாபாத்திரத்தின் தீர்க்கமான முடிவினை உணர்த்துகின்றார்.

**“அப்பிடியா சொன்னேன்... மோதிரத்தை விக்கிற அளவுக்கு அப்பிடி எனக்குத் தெரியாம என்ன செலவுண்ணுதானே கேக்கேன்... அழகா ரெண்ட கழஞ்சு மோதிரம்லா? அப்பிடி ஒரு அர்ச்சண்டுண்ணா எங்கிட்ட சொல்லப்பிடாதா? அப்பாட்ட கேட்டு வாங்கித் தருவம்லா? ஆமாமா... நீ வாங்கித் தருவே1 பொறகு ‘தரித்திரம் பிடிச்சதுகளுக்கு எவ்வளவு போடடாலும் ஆத்தா’துண்ணு வகை சொல்லுகதுக்கு... அப்போ வித்துத் திண்ணுங்கோ... செயினையும் வாச்சையும் வேணும்ணாலும் கொண்டு கொடுத்துக்கிட்டு வாருங்கோ... வித்துத் திங்கதுக்குத்தானே நல்லாக்கிப் போட்டிருக்கு...”** [34]

கணவன் மனைவி இருவருக்கும் இடையே பொங்கும் உணர்ச்சிகளை ஆசிரியர் வார்த்தைகளில் வெளிப்படுத்தி யுள்ளார். குடும்பத்துப் பொருளாதாரப் பிரச்சினையை உணர்ச்சி பூர்வமாக நாஞ்சில் நாடன் எடுத்துரைக்கின்றார். காசில்லாத கணவனின் சூழ்நிலையை தத்ரூபமாக ஆசிரியர் புலப்படுத்தியிருப்பது கதாபாத்திரத்துக்கு வலிமை சேர்ப்பதாக உள்ளது. மாமனார் வீட்டில் பணம் வாங்குவது அவமானம் என்பதனை கணவன் உணர்வதாக ஆசிரியர் எழுதியிருப்பதே நடைமுறைத் தன்மையாகும்.

கதாபாத்திரத்தின் படைப்பை ஆழமாகப் படிப்பவர்கள் மனதில் பதிய வைப்பதற்காக உணர்ச்சி பூர்வமான நடையில் எழுத்தாளர்கள் எழுதுவது உண்டு. கதை மாந்தர்கள் தங்களின் சம்பவங்களுக்கு ஏற்ப உணர்ச்சி பூர்வமாகப் பேசி, சம்பவத்தின் தன்மையை மனதில் பதிய வைப்பார்கள். உணர்ச்சி பூர்வ நடையில் சொற்கள் வேகமாகவும் விறுவிறுப்பாகவும் அமைவதுண்டு. நாஞ்சில் நாடன் தனது புதினத்தில் மாமனாரின் உணர்ச்சிக் கொந்தளிப்பைக் கொட்டியுள்ளார்.

> **“நிறுத்துலே... செறுக்கிமவனே... நீ அடிச்சு கொல்லுகதுக்காக நான் பொண்ணைப் பெத்து வளர்த்திருக்கேன்?”** [35]
>
> **அவனைப் பற்றிப் பிடித்து இழுத்துப் பிடரியில் கைவைத்துத் தள்ளினார்.**
>
> **“நானும் பார்த்துக்கிட்டுத்தான். வாறேன். மரியாதையா வீட்டை விட்டு வெளியே போயிரு. ஓடுலே ராஸ்கல்... இனி இந்த வீட்டு வாசற்படியைச் சமுண்டினே காலை நொறிச்சிருவேன்... பொறுக்கித் திங்கிற பயக்களுக்குப் பொண்ணைக் குடுத்தா அடிக்க மாட்டியா நீ...”** [36]

ஆசிரியர் ‘பொறுக்கிப் பயலே’, ‘ராஸ்கல்’, ‘காலை நொருச்சிருவேன்’ என்ற சில சொற்களிலேயே மாமனாரின் ஒட்டு மொத்தக் கோபத்தை வெளிப்படுத்தியுள்ளார். வீட்டோட மாப்பிள்ளையாக வந்த ஓர் இணைஞனை அவன் மாமனார் இவ்விதம் பேசுவதன் மூலம் உணர்ச்சி பூர்வ நடை புலனாகின்றது.

கதையையும் கதாபாத்திரங்களையும் உயிரோட்டமாகச் சித்தரிக்க வேண்டுமெனில் உணர்ச்சிபூர்வமான நடையைத்தான் கையாள வேண்டும் என்பர்.

நாட்டுபபுற மக்கள் கல்வியறிவில்லாதவர்களாக இருப்பதால், அவர்களின் உணர்ச்சி மிகவும் –––– வெளிப்படையாக வெளிப்படும். ஆசிரயர் கதாபாத்திரங்களின் உணர்ச்சியினை உரையாடலில் அவ்விதமே தெறியப்படுத்துகின்றார்.

**“அப்பம் இந்த அநியாயத்தை தட்டிக் கேக்க முடியாது. என்னாண்ணு கேக்கா? இது அநியாயம்னா ஊடுமாடு மேய இடத்திலே தோட்டம் போட்டதும் அநியாயம் தாலா...? அப்பிடியா? ஆனா இதை எந்த செறுக்கிவிள்ளை செய்திருந்தாலும் சரி... நான் ஒரு அப்பனுக்குத்தான் பொறந்தவனா இருந்தா இப்படி வஞ்சம் வச்சு செய்த தாயோளிக்கு குடலை வகுத்துப் போடாம விடப் போறதில்லே... அப்பம் ஊரு என்ன செய்யிண்ணு பார்த்திருவோம். கந்தையா இப்பம் என்னை பயமுறுத்துகியா? யாரையும் நான் பயமுறுத்தல்லே... ஒரு பல வட்ற தேவ்டியா மகள் என் வயத்லே சமுண்டீருக்கான். உயிரு எனக்கு மயிருக்கு சமானம் ரெண்டிலே ஒண்ணு தீக்காம விடப் பேறதில்லே.”** [37]

ஊரு மாடு மேய்கின்ற பொது இடத்திலே தோட்டம் போட்டதை உணர்ச்சி பூர்வமாக ஆசிரியர் கண்டிக்கிறார். கதாபாத்திரங்கள் கெட்ட வார்த்தைகளைப் பயன்படுத்துவதன் மூலம் அவர்களின் பொறுப்புணர்ச்சி ஆசிரியரால் வெளிக்கொணரப் பட்டுள்ளது. உணர்ச்சி மிகும்பொழுது அறிவு மங்கிவிடும் என்ற கூற்றிற்கு ஒப்ப கதாபாத்திரங்கள் உரையாடல்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

உணர்வு நடையில் ஒரு கதாபாத்திரத்தின் கோபம், வெறுப்பு, சோகம், ஆனந்தம் போன்ற எல்லாவித உணர்வலைகளும் வெளிப்படும். ஆசிரியர்கள் இதனைத் தகுந்த இடத்தில் கையாள்வார்கள். ஒவ்வொரு கதாபாத்திரத்தின் வேரையும் அறிந்து, சொற்களைத் தேர்வு செய்து எழுத வேண்டும். உணர்வு நடையை சரிவரக் கையாண்டால், கதாபாத்திரத்தின் முழுத்தன்மையையும் அறிய இயலும். நாஞ்சில் நாடன் அவர்கள் உணர்வு நடையை உயிரோட்டமாக வெளிப்படுத்தியுள்ளார்.

**“ம்... அடியந்திரச் செலவு வரைக்கும் சன்னஞ் சன்னமா ஆயிரத்தி முன்னூறு ரூவா செலவாயிருக்கும். அதும் சுருக்கமாகச் செய்ததுனால...**

**நீ தருவேன்னு எதிர்பார்த்து நான் செலவாக்கல்லே... அவளுக்குச் செய்ய நான் கடமை பட்டவன்தான்... பட்டினி கெடத்தாலும் வெளில சொல்ல மாட்டா.. உள்ள நெல்லை வச்சே சமாளிப்பா.... நீ காலேஜுக்குப் போன பெறவுதான் எங்கிட்ட அப்பப்பம் அவ கடனா வாங்கினது. அதும் தீர முட்டினாத்தான் கேப்பா்... அது எல்லாம் ஒரு ரெண்டாயிரத்து நூறு ரூவா ஆச்சு. அதுல நீ வேலைக்குப் போயிப் பணம் அனுப்ப ஆரம்பிச்ச பொறவு, அறுநூத்தம்பது ரூவா எனக்குத் தரம் ஒண்ணும் அவசரமில்லே. கொஞ்சங் கொஞ்சமா அனுப்பினாலும் சரி...சேத்து வச்சுத் தந்தாலும் சரி. உனக்கு வயிலுக்கு அசலுக்க ஒப்பம் பாட்டம் வரும் இன்னத்த வெலைக்கு. கோட்ட நூறு விக்கி... நாலு பூ பாட்டத்திலே வகை வச்சாலும் சரிதான்... எனக்குப் பணம் தரணுமேன்னு நீ கஷ்டப்படணும்னு இல்லை... சரி, மாமா... எனக்கும் கைமாத்தா வாங்கினா ரூவா கொஞ்சம் அங்க குடுக்கணும். அது தீர்ந்ததுக்குப் பொறவு முடிஞ்சதை அனுப்பித் தாறேன்...**" [38]

மாமாவின் உணர்வுபூர்வமான உரையாடலை மாப்பிள்ளை கேட்டு மணம் நெகிழ்கிறான். மாமா கதாபாத்திரம் எவ்வளவுதான் மாப்பிள்ளையின் வளர்ச்சிக்காகச் செலவு செய்தாலும் அதைத் திரும்பக் கேட்கும் மனோ பாவத்தில் இருப்பதாக ஆசிரியர் சுட்டிக்காட்டுகிறார். மாப்பிள்ளையும் தான் எப்படியாவது செலவழித்த தொகையைத் திருப்பித் தந்துவிடும் மனோநிலையிலேயே இருக்கிறான். மன உணர்வுகள் எல்லாவற்றிற்கும் இயற்கை ஓர் எல்லை வகுத்து வைத்துள்ளது என்பதனை ஆசிரியர் உணர்த்துகின்றார்.

கதாபாத்திரங்களில் கோபம், கருணை, நகைச்சுவை, எரிச்சல் போன்ற எண்ணற்ற உணர்சிகளை சம்பவங்களுக்கேற்ப கதாசிரியர் விவரிப்பார். நிகழ்வுகளுக்கு ஏற்ப உணர்ச்சிகளின் தம்மையினையும் புரிந்துகொண்டு வேவ்வேறு விதமாக சித்தரிப்பதே சிறந்த உத்தி என்பர். நாஞ்சில் நாடன் கிராமிய உணர்ச்சியினை அதன் மூலம் குறையாமல் மனதில் பதியவைக்கிறார்.

**"நீண்ட நாட்கள் அலைக்கழித்த அவசரம் என்னா, ஒரே யோசனையாக இருக்கு? பீடியை அணைத்துச் சுண்டி விட்டுக் குத்தாலம் கேட்டான். ஒண்ணுமில்லை. பழைய நெனப்புத்தான்... என்னத்தைப் பழைய நெனப்பு? நீயுந் திரியே சன்னியாசி மாரிட காலா காலத்திலே கல்யாணம் செய்யதை விட்டுப் போட்டு... ஏன்? இப்பம் என்ன கொறஞ்ச போச்சு? ஒண்ணுங் கொறையல்லே... என்னத்துக்குடே பூசி பொளுகுகெ... ஒனக்கு மாமா ரொம்பக் கரிசனத்தோட பேசுகாரு... ஒரு பொண்ணைப் பார்த்துக் கெட்டி வைக்கத் துப்பில்லே... இனி அதெல்லாம் அவசியம்னு நினைக்கையா? ஏன்? என்ன உலகத்திலே இல்லாத சங்கதியா? முதப் பொண்டாட்டி செத்துப் போனா, நாப்பத்தஞ்சு வயசிலே ரெண்டாந் தரம் கெட்டுகதில்லையா? இனிமே அளிச்சாம் புளிச்சாம் விளையாட்டு விளையாடச் சொல்லு:"** [39]

முதல் மனைவியைப் பறிகொடுத்தவனுக்கு மறு திருமண ஏற்பாட்டைச் செய்ய முயற்சிப்பதும் அவன் அதனை மறுப்பதும உணர்ச்சிபூர்வமாக வெளிப்படுத்தப்பட்டுள்ளன. பழைய சோகத்திலேயே மூழ்கியவனுக்கு வேறு திசையைக் காட்டும் விதத்தில் நடைபெறும் உரையாடல்கள் உணர்ச்சி பூர்வமாகவே உள்ளன.

கதையின் நிகழ்வை உயிரோட்டமாக மாற்ற உணர்சசிநடை மிகுதியும், பயன்படுகின்றது. கதாபாத்திரத்தின் உண்மையான தன்மையைத் தெள்ளத் தெளிவாக எடுத்துக்கூற இந்நடையே ஆசிரியருக்குக் கைகொடுககின்றது. கதையே கலை வெளிப்பாடாகும். கலை என்பதே உணர்ச்சி வெளிப்பாடாகும். உணர்ச்சியின் வெவ்வேறு வடிவங்களே கதாபாத்திரங்களாகும். கதாபாத்திரத்தின் வேரை அறிய வைப்பதே உணர்ச்சி நடைதான் என அறிஞர் உரைப்பர். நாஞ்சில் நாடன் உணர்ச்சி நடையில் முழு விவரத்தையும் கூறுகின்றார்.

**"சரி, பின்னே போட்டும், நான் வேற ஒரு விசயம் பேசவர்க்கும் வரச் சொன்னேன்.......... சவூதியிலே நான் இப்பம் பணம் அனுப்புகம்லா, அதுக்கு ஒரு டாலருக்கு கவர்ன்மெண்ட் ரேட்டு ஒண்ணு இருக்கு. அங்க வேற சில**

**பார்ட்டி இருக்கும். ஆயிரம் டாலர் அங்க குடுத்தம்னா, கவர்ன்மென்ட் எக்சேஞ்ச் ரேட்டைவிட மூணு ரூவா டாலருக்கு அதிகமாக இங்க தந்திருவான். நமக்கு இதுவே மூணாயிரம் ரூபா லாபம் இருக்கு. இந்த ரூபாவை நான் செரமடத்திலே குடுக்கச் சொல்ல முடியாது... கொடுத்தாலும் அவ கண்டமானம் செலவளிச்சுப் போடுவா! மச்சினம்மாரும் கள்ளத் தாயோளியோ பாத்துக்கோ. நல்ல துவாளிப் புள்ளியோ... பம்பாயின்னா உபத்திரவம் இல்லே. காரியமும் ஈசியாட்டு நடக்கும் எனக்கு தன் ஓர்மைதான் வந்து பாத்துக்கோ... நீ வேற ஒண்ணுமே செய்யாண்டாம். இங்க நான் உனக்கு ஆபிஸ் பக்கத்திலே ஒரு பாங்கிலே அக்கவுண்டு தொடங்கிருவேன். பாஸ் புக் உங்கிட்டயே இருக்கட்டும். அதுல நீ பணத்தைப் போட்டுட்டாப் போரும். விசயம் வேற யாருக்கம் தெரியாண்டாம்... குமாரசாமி கிட்டே சொல்லீரவே செய்யாத, நான் என் வீட்டுக்காரி கிட்டே வடச் சொல்லல்லே... இந்தப் பணம் தனியாக் கெடக்கட்டும்:" [40]**

இதெல்லாம் ரொம்ப ரிஸ்க்குப்பா... நாராயணனனும் பூதலிங்கமும் பேசிக் கொள்ளும் உரையாடலில் உணர்ச்சி நடையினை ஆசிரியர் கையாளுகின்றார். பூலிங்கம் நாராயணனைச் பயன்படுத்தி பணத்தை மும்மைக்கு வரவைத்து ஹவாலா மூலம் சம்பாதிக்கலாம் என தவறான பாதையைக் காட்டுகிறான். நாராயணனுக்கும் மற்ற இருவருக்கும் வாக்குவாதம் தொடங்குகிறது. உணர்ச்சியோடு இருவரும் பேசிக் கொள்கிறார்கள். பூதலிங்கத்தின் பணத்தாசையும் நாராயணனின் தயக்கமும் உரையாடலில் துல்லியமாகவும் பதிவு செய்யப்பட்டுள்ளன.

கதையின் போக்கைப் பொறுத்து சில நிகழ்வுகளில், உணர்ச்சி நடையில் பல சமூகக் கருத்துக்களும் வெளிப்பட்டுவிடும் உணர்ச்சி மேலோங்கி நிற்கும்போது கதாசிரியரின் வேகத்தில் பல கருத்துகள் வெளிவர வாய்ப்புண்டு. ஆசிரியர் தனது கொள்கைகளை வெளிப்படுத்தவும் உணர்ச்சி நடையினைக் கையாள்வதுண்டு.

**“உறுப்பினர் ஆகணும் சார்... என்னத்துககு? சாண்டில்யன் புஸ்தகம் படிக்கவா? அதெல்லாம் படிச்சாச்சு சார்... தெரியும்மய்யா... சாண்டியல்வன் புஸ்தகம் தீர்ரது வரை வருவீங்க... அப்புறம் பணத்தை வாங்கீட்டுப் போயிருவீங்க... இல்லே சார்... தெரியும்லா... இப்பம் பாரம் தீந்து போச்சு... அடுத்த மாசம் வந்து பாருங்க... அவர் எதிரே ஒல்லியாக, மூக்கு முடீ வெளியே தெரியும்படி இருந்த ஒருவர் மெலிதாகச் சிரித்தார். இப்படிப் ‘பொடு பொடு’ வெனப் பேசுபவரிடம் என்ன பதில் சொல்வது என்று தெரியாமல், சற்று சோர்வுடன் சண்முகம் வெளியே வந்தான். நேரே தி.மு.க. மேடையில் இருந்து இறங்கி வருபவர் போன்ற தோற்றத்தில், பட்டு வேட்டி முழுக்கைச் சட்டை, நடு வகுப்பு செதுககல் மீசை, தோளில் சால்வையுடன் ஒருவர் எதிரே வந்தார். என்னப்பா தம்பி? உறுப்பினர் ஆகணும்னு...? உள்ளே யார்ருக்க? சுந்தரராமனா? பாரம் இல்லன்னு சொன்னானா? தேவ்டியாப் பயலுவ... பப்பானா இருந்தாத்தான் பாரமே குடுப்பான்... வா நீ எங்கூட....”** [41]

நூலகத்தில் தொடர்ந்து படிப்பதற்காக சண்முகம் உறுப்பினராக முற்பட, அங்குள்ள் சங்கரராமன் என்ற அலுவலர் அவனைச் சேரவிடாமல் தடுக்க,வேறு ஒருவர் மூலம் சண்முகம் உறுப்பினராக முற்படுகிறான் என்பதனை ஆசிரியர் உணர்ச்சி வேகத்தில் கூறுகின்றார். சங்கரராமன் பாப்பானோ இருந்தால்தான் பாரமே கொடுப்பான் என்று வேறொருவன் கூறுவதாக ஆசிரியர் உரைக்கின்றார். கீழ்ச்சாதிக்காரர்கள் படித்துவிடக் கூடாது என்றும் மேல்சாதிக்காரர்கள் காலங்காலமாகக் கவனமாக இருப்பார்கள் என்பதனை விளக்கவே ஆசிரியர் இச்சூழலை உருவாக்கியுள்ளார் என்று தெரிகின்றது. இக்கருத்தை வலியுறுத்தும்படியே பெரியாரும் எடுத்துரைக்கின்றார்.

**“மேல்சாதிக் தன்மை என்பது இந்த நாட்டுக்கும் பெரும்பாலான மனித சமுதாயத்துக்கும் மிகக் கேடானதும் குற்றமுடையதுமாகும். அது முன்னேற்த்தையும் மனிதத் தன்மையையும் சமஉரிமைகளையும் தடுப்பதாகும் ஒரு பெரிய மோசடியும் கிரிமினலுமாகும். ஆதலால்**

**என்னவிலை கொடுத்தாவது மேல்சாதிக் தன்மையை ஒழித்தாக வேண்டும்''**[42]

கதையில் பங்கேற்கும் கதாபாத்திரங்கள் வெவ்வேறு நேரங்களில், தளங்களில் வெவ்வேறு உணர்ச்சியினைப் பின்பற்றிப் போவதுண்டு. ஆசிரியரின் நிர்ணயத்திற்கேற்ப கதாபாத்திரங்களின் உணர்ச்சி வேகம் மாறும். ஆசிரியர் கணவன் மனைவிக்குள் உரையாடுவதை உணர்ச்சிபூர்வமாகக் கூறியுள்ளார்.

**''நீரு பாட்டுக்கு ஒளிஞ்சு போயிட்டீரு, எவ அரிசி தருவா? சுத்திச் சூளக் கடம். கௌங்காவது கேட்டதுக்கு இல்லேன்னு சொல்லாமத் தந்தான்... அந்தப் பயலுக்காச் சுட்டி பாத்தேன். இல்லேண்ணா எம்பாட்டுக்கு தீ கூடப்பெருக்காம இருந்திருப்பேன். இருப்ப இருப்ப... ஏன் இருக்க மாட்டே? போன இடத்திலே ஒங்க அம்மைக்கு ஆமக்கனா இருக்கான்? பணத்தை அவுத்துத் தர... கொஞ்சம் மின்னப் பின்ன ஆகும்... ஆமா... மின்னப்பின்னே ஆகும்... எவன் வாயையாம் பாத்துக்கிட்டு நிண்ணுருப்பேரு... சொறுக்கி என்னா நாக்கு நீளுகு? வந்தம்னா அலவைக் கிளிச்சிருவேன்...''**[43]

உரையாடலில் 'சொறுக்கி', 'சுட்டி' 'அலவை' என்று வட்டார வழக்குச் சொற்களை உணர்ச்சிக்கேற்பக் கையாள்கிறார். வாழ்வியல் தளத்தில் நடக்கும் பொருளாதாரச் சிககல்களின் தாக்கம்தான் உரையாடலில் தொனிக்கின்றது. ஆசிரியரும் அதனையே வலியுறுத்துகின்றார்.

கதைகளில் வரும் கதபாத்திரங்களுக்கேற்ப எல்லாவித உணர்ச்சிகளையும் ஒரே நேரத்தில் உணர்ச்சி நடையில் கதாசிரியரால் கையாள இயலும். கிண்டல், கேலி, நகைச்சுவை என்று உணர்ச்சி நடையில் ஆசிரியர் ஒரே கதாபாத்திரத்தின் மூலமே எல்லா உணர்ச்சிகளையும் வெளிக்கொணர இயலும்.

**''தெரவியம்! ஒனக்கு கணக்கிலே எத்தனைடே? நாற்பத்தெட்டு ..... படிக்கவுதக்குக் கேட்கவா வேணும் அதெப்படி கொள்ளையாண்டிப் பயலுக்கு தொண்ணத்தாறு? அவன் நல்லாப் படிக்கான். நீ ஏன்**

**படிக்கல்லே.....? திரவியம் சிரித்தான். சுந்தரத்தை அடுத்திருந்த தங்கப்பன் சொன்னான்– சோத்தைக் கொறச்சுத் திங்கணும்... நல்ல சாளைப் புளிமுளம் வச்சு மூக்கு முட்ட சண்ணுனா போராது. மொகம் பாத்துக் கஞ்சி குடிக்கணும். பத்துந் தண்ணியுமா... தெரிஞ்சா? அதில்லடா தங்கப்பா... உனக்கு விசயந் தெரியாதா? பய கிராசுல்ல...! படிக்கதுக்குக் கேக்கவா வேணும்.'' [44]**

திரவியம் நாற்பத்தெட்டு மதிப்பெண் எடுத்ததற்கு மூக்குமுட்ட சோறு சாப்பிட்டதுதான் காரணம் என்று தங்கப்பன் கூறுகின்றான். அதே வேளையில் கொள்ளையாண்டி பையன் தொன்னூற்றி ஆறு மதிப்பெண் எடுத்ததற்குக் காரணம் அவன் 'கிராசுல்ல' என்று சுந்தரம் கூறுகின்றான். பள்ளியில் நடக்கும் விஷயங்களை நகைச்சுவை உணர்ச்சியோடு ஆசிரியர் எடுத்துரைக்கின்றார்.

**இயற்கை வருணனை**

கதையை நகர்த்திச் செல்லும் பொழுது படிப்பவர்கள் மனதில் உற்சாகத்தையும் சுவையையும் ஊட்டவே இயற்கை வருணனை கதாசிரியர்களுக்குத் தேவைப்பட்டது. வட்டார மரபு வழிக் கதைகளில் இயற்கையை வருணிக்கும் பொழுது அம்மண்ணின் மரஞ்செடி, கொடி, பூக்களை மட்டுமே வருணிக்க வேண்டும். கதாசிரியரின் தனித்துவமான புலமையும் இயற்கை சார்ந்த ஈடுபாடும் இயற்கை வருணனையில் புலப்படும். மரம், செடி, கொடி, பூக்களின் பெயர்களும் அதன் வடிவமும் ஆசிரியருக்குத் தெரிந்திருக்க வேண்டும். இல்லையெனில் இயற்கை வருணனையைக் கையாள இயலாது. கதாசிரியர் நாஞ்சில் நாடன் தனது புதினத்தில் அருமையான இயற்கை வருணனையைக் கையாண்டுள்ளார்.

ஆனால், வருணனையைப் பற்றி தி.சு. நடராசன் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

**''வருணிப்பு அல்லது வருணனை என்பது என்ன? ஒரு பொருளை அது இன்னது எனக் குறிப்பிடுதல் என்ற நிலையில் அல்லாமல், அத்தகைய ஒன்றை விசாலமாகவும் விரிவாகவும் விளக்குகின்ற நிலையில்**

**சொல்லுவது வருணிப்பு ஆகும். தெளிவுபடுத்துவது, கேட்போரை, வாசிப்போரை ஈர்க்கிற விதத்தில் சித்தரிப்பது ஆகும்.''**[15]

இந்தக் கூற்றுக் கிணங்க ஆசிரியர் தனது புதினத்தில் வருணனையைச் சித்தரித்துள்ளார்.

**''புன்னை மரங்களில் அணில்களின் 'கீச்சுக்கு கீக்சு' எங்கோ ஒரு ஒற்றைக்காசும் உறவைத் தேடிக் கரைந்து கொண்டிருந்தது. கலைப்பதற்கு மனிதப் பூச்சிகள் இல்லாத இயற்கையின் மோனத்தவம். நித்திலத்தைப் பழிக்கும் புன்னை அரும்புகள் ஆற்றில் காம்போடு உதிர்ந்த வண்ணம் இருந்தன. ஆளைமயங்காத புன்னம்பூவின் மெல்லிய மணம். நாணல் புதரிலிருந்து செண்பகப் பறவை குரலெழுப்பிக் கொண்டிருந்தது. அதன் எதிரொலியாக ''முக்குர்ணி, முக்குர்ணி'' என்று முக்குர்ணிப் புள்ளின் பக்க மேளம், தென்னந் தோப்பின் கொடுக்கள்ளி வேலியைத் தாண்டி வந்து நாலைந்து கீரிப்பிள்ளை விளையாடிக் கொண்டிருந்தன.''**[46]

ஆசிரியர் நாஞ்சில் நாடன் முக்குர்ணி புன்னையும் கொடுங்கள்ளி வேலியையும் புன்னை அரும்பையும் செண்பகப் பறவையையும் வட்டார மரபோடு விளக்கியிருக்கின்றார். ஆசிரியரின் இயற்கை வருணனை அந்த வட்டாரத்துக் கிராமத்தைக் காட்சிப் படுத்தியிருக்கின்றன. கதையின் ஓட்டம் இயற்கை வருணனை மூலம் சுவையாகின்றது.

கதாசிரியர் இயற்கை வருணனையில் கதையை மட்டும் சொல்லிக் கொண்டு போகாமல் அதன் மூலம் சமூகக் கருத்துக்களையும் எடுத்துரைப்பார்கள். முற்போக்கான எண்ணம் கொண்டவர்கள் இயற்கை வருணனையிலும் தங்களின் எண்ண ஓட்டத்தை வெளிப்படுத்தி விடுவார்கள். இவ்விதம் ஆசிரியர் தனது புதினத்தில் தன்னுடைய கொள்கைகளையும் விதைக்கின்றார்.

**''தை பிறந்து விட்டது! வீரநாராயண மங்கலத்தின் நான்கு புறங்களிலும் நெற்பயிர்கள் தலைபழுத்து, நெல்மணிகள் முதிர்ந்து தரையோடு தரையாகப் படிந்து கிடந்தன. 'எத்தனை முறை தான் தை பிறந்தாலும் வழி**

**பிறக்காது' என்று ஏங்கி வாடி நிற்கும் ஏழைக் குடியானவர்களைப் போல, படிந்து கிடக்கும் நெற்பயிர்களின் இடையே செத்தவேரும், ஊரையும், குழலியும் தலை நிமிர்ந்து நின்றன.அறுவடைக்கு இன்னும் பத்து நாட்கள் ஆகும் என்று நிலையில் முன்னேற்பாடுகள் கணிசமாகவே நடந்து வந்தன. களங்களைத் தட்டிக் கொட்டிச் சமன்படுத்துவதும், சாணியால் வழிப்பதுமாகச் சில்லறை வேலைகள், வரப்போகும் தற்காலிகமான செழிப்பின் எதிர்பார்ப்பு மயக்கத்தில் நிகழ்கால நிரந்தர வறுமை ஏங்கிக் கிடந்தது. அறுவடைக்கு வயல்கள் தயரானவுடன், நாள் கிழமை நட்சத்திரம் பார்த்து 'நாட்கதிர்' கொண்டாகி விட்டது."[47]**

இவ் வருணையை ஏங்கி வாடி நிற்கும் ஏழைக்குடியானவர்களைப் போல படிந்து நிற்கும் நெற்பயிர்கள் என்ற வாக்கியத்தில் ஆசிரியரின் சமூகப் பார்வை தென்படுகின்றது.

கதையை மட்டும் கூறிக் கொண்டு போனால், மனதில் அக்கதை காட்சியாகப் படியாமல் போய் விடுவதுண்டு. சுற்றுப்புறச் சூழலோடு இயற்கையையும் வருணித்துக் கொண்டு போகும் பொழுதுதான் கதைக்கே உயிர் பிறக்கிறது என்பர். கதை நிகழும் களத்தின் கால கட்டமும் பருவ காலமும் அதனால் பாதிக்கப்படும் கதாபாத்திரங்களின் தன்மையும் இயற்கை வருணனையின் மூலமே நன்கு வெளிப்படும். நாஞ்சில் நாடன் அவர்களும் கரிசல மண்ணின் தன்மையினை வருணிப்பதோடு கதாபாத்திரத்தை உணர்த்துகின்றார்.

**"ஆறு மணியானாலும் வெக்கை குறையவில்லை. சித்திரை மாதத்தின் முத்திரை வெயில் பூமியின் ஈரப்பசையையே உறிஞ்சிக் கொண்டிருந்தது. பாளம் பாளமாக வெடித்திருந்த கரிசல் காடு, பாலில்லாத் தாய் மார்பை ஏக்கத்தோடு பார்க்கின்ற குழந்தையைப் போ வான் பார்த்துக் கிடந்தது. திட்டுத் திட்டாக ஆங்காங்கே தெரிகின்ற உடை மரங்கள் மட்டுமே கரும் பச்சையாகக் கண்ணில் பச்சை குலுங்கியது. வேறு எங்கணும பாலை படர்ந்த பரிபலம். மழையே இல்லாத மாதம், சாலையில் புழுதிக்குக்**

**கணக்கே இல்லை. வெக்கையோடு சேர்ந்து கொள்ளுகிறது. புழுதி சாரங்கா கெமிகல்லிலிருந்து, ஆபிஸ் முடிந்து சைக்கிளில் ஆறுமுகநேரிக்கு வந்து கொண்டிருந்தான் சிவதாணு, ஐந்தரை மணி வெயிலிலும், வெப்பமும், புழுதியுமாக வியர்வையில் பனியன் முதுகில் ஒட்டிக் கொண்ட நசநசப்பு"**[48]

ஆசிரியர் கரிசல் காட்டில் நிலவும் வெப்பத்தை மனதில் பதிய வைக்கிறார். 'பாலுக்காகத்தாயின் மார்பகத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும குழந்தையைப் போல் வான் பார்த்துக் கிடந்த வறண்ட பூமி' என்று ஆசிரியர் எழும் பொழுது உவமை நயத்தோடு கரிசல் காட்டு மக்களின் வேதனையும் நமக்குள் புரிய வருகின்றது. 'உடை மரங்கள்' என்று ஆசிரியர் எழுதுகிறார். கரிசல் காட்டுப் பகுதியில் அனுபவ ரீதியாக வாழ்ந்தால் மட்டுமே இது போன்ற மரங்களை உணர முடியுமென்பது கதை ஓட்டத்தில் புரிய வருகின்றது. வெப்பம் தகிக்கும் புழுதி படர்ந்த கரிசல் காட்டுப் பாதையில் சிவதாணு சைக்கிள் ஓட்டி வந்தான் என்று எழுதுகிறார். கரிசல் காட்டை வருணித்தால் சிவதாணுவின் மனோநிலை நமக்குப் புரிய வருகின்றது.

இயற்கை வருணனையில் அக்கிராமத்தின் இயற்கைத் தன்மை உணர்த்தப்படும். இயற்கையோடு கூடிய அம் மக்களின் வாழ்வியல் முறையும் தெரியப்படுத்தப்படும். அம் மண்ணின் தாவரங்களும் அதன் தன்மையும் பயனும் உணர்த்தப்படும். இவ்விதம் ஆசிரியர்ள இயற்கை வருணணையைப் புதினத்தில் பயன்படுத்தியுள்ளார்.

**"இயற்கையான ஆறு இலுப்பாறு; அனந்தன் ஆறும் வெட்டாறுகள், தண்ணீருக்கு கட்டும் காவலும் உண்டு. ஆனால் இலுப்பாறு காட்டாறு; உயிராறு. மழை பெய்தால் தான் இலுப்பாற்றில் வெள்ளம் வரும் என்று இல்லை. ஆங்காங்கே ஆற்றின் நெடுகிலும் கயங்கள் உண்டு. தன்னூற்றாகத் தண்ணீர் பொங்கும். பொங்கும் தண்ணீர் ஆறு நெடுக ஒழுகும். வெள்ளி மணலும், பச்சைப் பாசி ஓரங்களும் கோரைப் புற்களும் ஆனை அறுகம்புல் கொடியோடிப் படர்ந்திருந்த திரடுகளுமாக கோடை**

**காலத்தில் கூட பழையாற்றுக்கு ஓர் அழகு உண்டு. பங்குனி சித்திரை வெயில் காலத்திலும் அந்த ஆறு சோக வயப்பட்டதில்லை திரட்டில் குருகுருவென பறித்துவிட முடியாத உயரம்'' [48]**

நாஞ்சில் வட்டார மரங்களை வகைப்படுத்துகின்றார் ஆசிரியர். 'மஞ்சணத்தி' 'அழிகம் புதர்கள்' என்று வட்டார வழக்குச் சொற்களைக் கையாள்கிறார். மரங்களின் ரகங்களும் அதன் வடிவங்களும் நன்கு வருணிக்கப்படுகின்றன. சம்பவங்கள் காட்சிகளாக உருவாகின்றன.

கதையின் உயிரோட்டத்திற்கு மெருகேற்றும் விதமாக ஆசிரியர் ஏராளமான இடங்களில் இயற்கை வருணனையைக் கையாண்டுள்ளார். ஆசிரியரின் ரசனை இதன்மூலம் நன்கு வெளிப்படுகின்றது. வெளிப்புற நிகழ்வுகளைக் கூர்ந்து நோக்கும் தன்மை ஆசியருக்கு இருப்பது தெரிய வருகின்றது.

**''மழை பிந்திப் பெய்தாலும் சரியாக நின்று பெய்தது. ஐந்தாறு நாட்களும் நெஞ்சம் வைத்து பெய்து தீர்த்தது. அக்கினி நட்சத்திரத்தில் கூத்து என்றார்கள். நினைத்துக் கொண்டு வானம் கறுத்தது. மேகங்கள் ஓடின. கனத்த எருமைக் கடாக்கள் மண்டை ஓடு தெறிக்க முட்டி மோதுவது போல் 'கடார் கடார்' என இடிகள் இடித்தன. மண்டை பிளந்து வரி வரியாய்ப் பாயும் உதிரமாய் மின்னல் வரிகள் ஆடின. வடகிழக்கு மூலையில் மலை முகட்டில் மூடிய மேகங்கள் வெள்ளமாய்க் கரைந்து ஓடின. மரங்கள் மடல்கள் எல்லாம் தண்ணீரால் கழுவி விடப்பட்டு பச்சையாய்ப் பொலிந்தன. புன்னை இலைகள் சூரியன் கதிரை வாங்கி அதன் முகத்திலேயே திருப்பி அடித்தன. மழை முகமும் வெயில் முகமும் கொண்டு ஊரின் வீடுகளின் ஓட்டுக் கூரைகளின் மேல் பச்சைப் பட்டால் போர்த்தியது போல் பாசி படர்ந்தது.''[49]**

கொட்டித் தீர்க்கும் கனமழையையும் எட்டிப் பார்கும் வெயிலைய;ம ஆசிரியர் மிக நேர்த்தியான சொற்களில் எழுதியுள்ளார். எருமைக் கடாக்கள் மோதும் சப்தத்தை இடியாகச் சித்தரிக்கின்றார். வரியாய்க் கொட்டும் உதிரம் மின்னல் கீற்றாகத்

தெரிவதால் ஆசிரியர் இயற்கையை வருணித்துள்ள விதம் உயிரோட்டமாக உள்ளது. புன்னை இலைகளின் எழிலும் தோற்றமும் நன்கு விவரிக்கப்பட்டுள்ளன.

இயற்கையின் எழிலையும் வெயிலையும் மழையையும் வருணித்த ஆசிரியர் அதன் வறட்சியையும் வருணிக்கின்றார். இயற்கைச் சீரழிவைத் தக்க உவமைகளோடு ஆசிரியர் வருணித்திருப்பது சாலப் பொருத்தமாகும். வைகையின் வறண்ட நிலையை நாஞ்சில் நாடன் வறண்ட சொற்களிலேயே வருணிக்கின்றார்.

> **“திருப்பரங்குன்றம், மாசி வீதிக் கோபுரங்கள், வைகை, பெரிய அதிர்ச்சியாய் இருந்தது வைகையைப் பார்க்க, கிழட்டுத் தேவடியாளைப் பார்ப்பதுபோல் கால்களில் நீர், வெடிப்பு, முகத்தில் வீக்கம், காய்ந்து அடர்ந்த உதடுகள், பூழை திரண்ட கண்கள், சரும ரோகம், தோல் பாய்ந்த முலைகள், ஒருவித வீச்சமுடன் இருக்கும் கிழட்டுத் தேவடியாளைப் பார்ப்பது போல் பெரிய அதிர்ச்சியாய் இருந்தது. வைகையைப் பார்க்க கரையோரம் முட்புதர்கள், வடியும் சாக்கடைகள், குந்தி இருந்து மலம் கழிப்பவர்கள். குட்டையாகிப் போன தேங்கல் தண்ணீர்...**
>
> **இதைப் பார்த்திருக்கக் கூடாதோ என்று தோன்றியது. சண்முகத்தின் மனதில் இருந்தது எல்லாம் சிலப்பதிகார வைகை. சில வரலாற்று நாவல்களின் வைகை...”** [51]

வைகையின் வறண்ட நிலை கிழக்குத் தோரணையின் தோற்றத்தை ஒத்திருக்கின்றது என ஆசிரியர் தக்க உவமையில் வருணிக்கின்றார். இயற்கையின் சீற்றமும் மணலை அள்ளிய அரசியல்வாதிகளின் நடவடிக்கையும் மக்களின் அக்கறையில்லாத தன்மையும் சிலப்பதிகார வைகையைச் சீரழித்து விட்டது என்று ஆசிரியர் பூடகமாக வருணிக்கின்றார்.

இயற்கை வருணணையில், கதைக்களமும், ஊரும் வளமும் வெளிப்படும். கதாசிரியர் அக்கதைக் கதைக் களத்தினை அழகுற வருணித்துப் படிப்போர் மனதில் பதிய வைப்பர். நாஞ்சில் நாடன் இயற்கையினை நயமுடன் ரசித்து, புதினத்தில் விளக்கியுள்ளார்.

**“மாலை அழகாக இருந்தது. செம்பட்டை மயிர் போல் வயலெங்கும் குத்தி கத்தியாக அறுத்த தாள்கள், அறுவடை முடிந்து காய்ச்சலுக்குக் கிடந்த நிலங்கள். ஆற்றில் தண்ணீர் வள்ளிசாக இல்லை. கொஞ்சும் ஊற்று மட்டும் சுரந்து கொண்டிருந்தது. ஆற்றின் குறுக்கே, ஆங்காங்கே மீன் பிடிப்பதற்கான தெவக்கங்கள், சாதாரணமாகவே குரங்குளத்திற்குக் கீழே ஆறு அசிங்கப் பட்டுக் கிடக்கும். கோரையும், சுடக்கும், சேம்பும் மண்டி– மணலே காணக் கிடைக்காது. ஊர்களில் போரிங் பம்புகள் காரணமாக, ஆற்றின் இந்த அசிங்கம் யாரையும் பாதிக்கவில்லையோ? கவனிப்பாரற்றுப் போய், ஆற்றின் தேங்கிய குட்டைகள் நாறின. செத்த மீனின் ‘உலும்பு’ வாடை, பன்றிகள் புரண்டு சேற்றுக் குட்டையாக அருவருப்பாகக் கிடந்தது ஆறு”.**[51]

**இலக்கிய அழகு**

அழகைக் கண்டு களிக்கலாம். இலக்கியத்தைப் படித்து உணரலாம். ஆனால், இலக்கியத்தை நல்ல சொற்களில் கையாண்டால் அச்சொற்கள் அழகாகின்றன. அச்சொற்களே மனதிற்குள் கற்பனையையும் ரசனையையும் வளர்க்கின்றன. இயற்கை அழகை ரசித்த மனிதனின் எழுத்தாற்றலே இலக்கியமானது. அவ்விதத்தில் தி.சு. நடராசன் அழகைப் பறறிக் கூறுகின்றார்.

**“அழகினுடைய ஆற்றல், அறிவுப் புலனையும் உணர்வு நிலையினையும் இலக்கியமாக ஆக்குகிறது.”**[53]

இதனை ஆசிரியரும் தனது புதினத்தில்,

**“வளைந்து கொடுப்பதில் தான் வாழ்க்கையின் வெற்றியே அடங்கியிருக்கிறது என்ற அறிஞர் ஒருவரது கூற்று அவன் நினைவுக்கு வந்தது. ஆனால், இந்த ‘வளைவு’ என் பக்கத்திலிருந்து மட்டுமே வர வேண்டும் என்று எதிர்ப்பார்க்கப்படுமானால், நாளடைவில் வளையவே தேவையில்லாமல் ‘கூனல்’ ஏற்பட்டுப் போகாதா? இந்த வளைவு**

**எதிர்ப்பக்கத்திலிருந்தும் வந்தால் – வாராது என்று இப்போதே ஏன் ஒருதலைப் பட்சமாக முடிவெடுக்க வேண்டும்.”**[54]

இக்கூற்றின்படி ஆசிரியர் நாஞ்சில் நடன் தனது புதினத்தில் இலக்கிய அழகைக் காட்டுகின்றார்.

‘வளைந்து’ என்ற சொல்லை வைத்துக் கொண்டே ஆசிரியர் இலக்கிய அழகைச் சித்தரித்துள்ளார். ‘வளைந்து’ கொடுப்பதென்பது இரண்டு பேர்களுக்கும் பொதுவான ஒன்று தானே என வலியுறுத்துகின்றார். ஒரு சாராரே வளைந்தால் கூனலாகிப் போகதா? என்றும் கேட்கிறார். ‘வளைவது’ என்ற சொல்லில் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை வெளிப்பட்டாலும் இதனை மாற்றாரும் ஏற்றுக் கொண்டால் தான் நன்று என ஆசிரியர் அழகுபட உரைக்கின்றார்.

**உருவகம்**

உவமம் என்பது ஒரு பொருளை மற்றொரு பொருளோடு ஒப்பிட்டுக் கூறுவது. உருவகம் என்பது ஒரு பொருளை மற்றொரு பொருளாகவே மாற்றி விடுவது. இவையெல்லாம் இலக்கிய உத்திகள். கதையின் போக்கை, கதாபாத்திரத்தின் தன்மையைக் கூறப் பயன்படுத்தும் முறையாகும். ஆசிரியர் உருவகத்திலும் சொற்களைக் கையாண்டு கதை மாந்தர்களை மனதில் பதிய வைக்கின்றார்.

**“எதையெதையோ எல்லாமோ கணக்கிட்டு அளப்பதற்கு மனிதன் கருவி கண்டு விட்டான். ஆனால் இந்த மனக்கடலையும், அதன் ஆழத்தையும், அலை பாய்ச்சலையும், உள்ளார்ந்த நீரோட்டங்களையும் – அதன் அடிவாரத்தில் எப்போதும் உலவிக் கொண்டேயிருக்கும் அற்பத்தனம் என்னும் விஷப் பாம்புகள், சுயநலத்திமிங்கலங்கள், துரோகச் சுறாமீன்கள், புறல்கள், அந்தப் பயுலின் மையங்கள் இவற்றையெல்லாம் அளப்பதற்குக் கருவி கண்டானில்லையே!”**[55]

ஆசிரியர் ‘மனக்கடல்’ ‘சுயநலத் திமிங்கலங்கள்’ ‘துரோகச் சுறாமீன்கள்’ என்று எண்ணற்ற உருவகச் சொற்களைக் கையாண்டு புதினத்தைச் சுவையாக

மாற்றுகின்றார். மொழி நடையில் உருவகங்கள் சூழலை மனதில் நன்கு பதிய வைக்கும். ஆசிரியர் இதனை நன்குணர்ந்து உருவகத்தைப் பயன்படுத்தியுள்ளார்.

நாஞ்சில் நாடன் அவர்கள் உருவகத்தைப் புதினத்தில் மிகவும் கவனமாகக் கையாண்டுள்ளார். கதாபாத்திரத்தின் மனவேதனையை வெளிப்படுத்த உருவகத்தைப் பயன்படுத்துகிறார். கணவன் தனது மனைவியும் புறக்கணித்த பிறகு எவ்விதம் இருந்தான் என்பதனை விளக்க உருவகத்தைப் பயன்படுத்துகிறார்.

**“அனிச்சப் பூவைப் போல மனதை வைத்துக் கொண்டு, அகணப் பறவை போல செவியுணர்வை வைத்துக் கொண்டு, சிறுசிறு சீண்டல்களுக்கும் சிணுங்கல்களுக்கும் கூட ஈடு கொடுக்க முடியாமல் கூனிக் குறுகிச் சுருண்டு விடும் போது, எதிர்காலத்தின் இடிபாடுகளைத் தாங்குகின்ற தெம்பும் திராணியும் தனக்கு இருக்கிறதா? ஊரும், உலகமும், உறவும், மனைவியும் புறக்கணித்த ஒற்றை மரமாக, நோய் பிடித்த நொறுங்கலாக, நடமாடும் சுடுகாடாக, தாழ்வு மனப்பான்மையில் வெந்து தீய்ந்து சாம்பலாகின்ற உள்ளப் புகைச்சலும் குமைச்சலுமாக வாழ வேண்டிய கால நிர்ப்பந்தம் வந்தால்.”** [56]

ஆசிரியர் ‘ஒற்றை மரம்’, ‘நடமாடும் சுடுகாடு’ என்ற சொற்களிங்ல கதாபாத்திரத்தின் நிலையை நன்கு விளக்கி விடுகின்றார், கதாபாத்திரத்தின் வேதனையைப் படிப்போர் உணரும் வண்ணம் உருவகங்களைப் பயன்படுத்தி அதன் தன்மையைப் புரிய வைக்கின்றார். எல்லோராலும் கைவிடப்பட்ட தன்மையை ஒற்றைமரம்’ என்ற சொல்லில் அடக்குகின்றார் ஆசிரியர்.

**நிகழ்ச்சி வருணனை**

கதையின் ஓட்டத்தைத் தெளிவுபடுத்தவும் கதையின் சம்பவங்களைத் துல்லியமாக விளக்கவும் நிகழ்ச்சியைக் கண் முன்னால் கொண்டு வரவும். நிகழ்ச்சி வருணனை தேவைப்படுகின்றது. நிகழ்ச்சிகளை விளக்கவும் வருணிக்கவும் அங்குள்ள வட்டார மரபுச் சொற்கள் நிரம்பத் தேவைப்படும். ஏராளமான மரபுச் சொற்களையும் அம்மண்ணின் சடங்கு, சம்பிரதாயங்களையும் அறிந்தவர் மட்டுமே

நிகழ்ச்சிகளை வருணிக்க இயலும். ஆசிரியர் நாஞ்சில் நாடன் நிகழ்ச்சியின் வருணனையை இயல்பாகக் கையாண்டுள்ளார்.

**“வடிவீசுவரம் சீனி ஐயர் வைப்பு, தாழக்குடி கோவிந்தபாணி, சக்ரபாணி நாதசுர வாசிப்பு, இலை, சளவோலை, கூந்தல்பனை, குலைகளுக்கெல்லாம் வடக்குமலை பாலமோர் எஸ்டேட்டில் அச்சாரம் தந்தாதி விட்டது. மாலை வரவேற்புக்காக ரோஜாப்பூ மாலைகளும் செண்டுகளும் திருவனந்தபுரத்திலிருந்து வர இருக்கின்றன. ஈத்தாமொழி வெற்றிலை, இரணியல் சந்தையிலிருந்து கத்திரிக்காய், வழுதுணங்காய் குலசேகரத்திலிருந்து சிங்கள் வாழைக்குலைகள், கனகமூலம் சந்தையில் தேங்காய், தடியன்காய் இத்யாதி இப்படிச் செய்திகள் காற்று வாக்கிலாவது வந்து காதில் விழுந்தன. இவற்றையெல்லாம் சேர்த்துக் கூட்டி கணக்கிட்டுப் பார்க்கும் போது சிவதாணுவின் அடிவயிற்றைக் கலக்கியது”.**[57]

நாஞ்சில் வட்டாரத்தில் எந்தெந்த இடத்தில் என்ன கிடைக்குமோ அதனை நிரல்படுத்தி ஆசிரியர் எழுதியுள்ளார். ஆசிரியரின் மண்சார்ந்த புலமையும் நேரடி அனுபவமும் புலப்படுகின்றன. கதையின் விளக்கத்திற்கு ஆசிரியரின் வருணனை மிகுந்த வலிமையைக் கொடுக்கும். ஒவ்வொரு நிகழ்ச்சியையும் இது போல் வருணிக்கும் பொழுது சம்பவங்கள் படக்காட்சிகளாகவும் ஓவியமாகவும் மனதில் பதிந்து விடுகின்றன.

கதையின் சம்பவத்தைத் துல்லியமான முறையில், சரியான சொற்களில் சரளமாக விளக்கிக் கொண்டு போவதன் மூலம் படிப்பவர்களின் சலிப்பை நீக்கலாம். கதாசிரியர்கள் நிகழ்ச்சி வருணனை உத்தியின் மூலம் சுவையூட்டி அழகியல் உணர்ச்சியை ஏற்படுத்தி விடுகின்றனர். நாஞ்சில் நாடன் அவர்களும் தனது புதினத்தில் இதனைக் கையாண்டுள்ளார்.

**“வண்ணக் குழல் விளக்குகள்; அலங்காரச் சரவிளக்குகள்; வாயிலின் இருமருங்கும் மொந்தன் வாழைக் குலைகள்; அதன் ஓரத்தில் கெவுளி**

**பாத்திரச் செவ்விள நீர்க்குலை; நுங்குக்குலை; நுங்குக் குலைகளைத் தொட்டுத் தடவிக் கொண்டு காவி நிறப் பாக்குக்குலை. அதை அடுத்துக் கோடாலி முடிச்சுப் போட்ட கேரளப் பெண்களின் அளசும் போலக் கூந்தல் பனைகளின் சூலை நிலம் வரை தொங்கியது. தென்னை ஓலை நிரைசல் தெரியாதபடி, சளவேலைகள் அலங்காரமாகச் செருகப்பட்டிருந்தன. தரையெங்கும் கடல் மணல் நெய் போன்று பரந்து மினுமினுத்தது. புதுத்துணிகளை அழுக்காக்கிக் கொண்டு குழந்தைகளின் கும்மாளம்.**[23]

நாஞ்சில் வட்டாரத்தில் நடைபெறும் திருமணத்தில் எத்தனை வகை குலைகள் பயன்படுத்தப்படுகின்றன என்பதனை ஆசிரியர் நிரல்பட விளக்குகிறார். அம்மண்ணின் கலாச்சாரமும் பண்பாடும் சடங்கும் சம்பிரதாயங்களும் தெள்ளிய முறையில் விளக்கப்பட்டுள்ளன. இப்பட்டியலைக் கண்டே அம்மண்ணின் விளைச்சலை அறிய முடிகின்றது.

**உவமை நடை**

உவமையைக் கையாள கதாசிரியருக்கு மிகுந்த புலமையும் நடைமுறை அனுபவமும் தேவை எனச் சான்றோர்கள் உரைப்பார்கள். ஆசிரியர் எளிய உவமையினைத் தக்க இடத்தில் பயன்படுத்தி சிவதாணுவின் மனோநிலையை உணர்த்தி உள்ளார். திருமணத்தைத் திறம்பட நடத்தி முடிக்க எண்ணும் கதாபாத்திரத்தின் தன்மையை நன்கு விவரித்துள்ளார்.

**“மறுவீடு அடைந்து, ஆரத்திமுன் நின்று வாசலைத் தாண்டிய பிறகு, தண்ணீரில் இருந்து எடுத்துத் தரையில் விடப்பட்ட மீன், துள்ளிக் குதித்து மீண்டும் நீரில் விழுந்ததைப் போல சிவதாணு உணர்ந்தான். பார்வதியைச் சுற்றிப் பெண்கள் கூட்டம்.”**[58]

ஒரு பணக்கார வீட்டின் மாப்பிள்ளையாகிய ஓர் ஏழை இளைஞனின் மனநிலை இந்த உவமை நடையின் மூலம் விவரிக்கப்பட்டுள்ளது.

**மன வெளிப்பாடு**

கதாபாத்திரத்தின் உள்ளுணர்வினை வெளிக் கொணர்ந்து, படிப்போரின் மனதில் அக்கதாபாத்திரத்தின் உண்மை நிலையை உணர வைக்கும் நடையே மனவெளிப்பாட்டு நடை. கதையின் ஆசிரியர் ஒவ்வொரு கதை மாந்தருக்குள்ளும் கூடு விட்டுக் கூடு பாய்ந்து, ஊடுருவி, அதன் வேரை அறிந்து, சொற்களில் வடிக்கும் மரபே மனவெளிப்பாடு என்றானது. நாஞ்சில் நாடன் தனது புதினத்தில் சிவதாணு கதாபாத்திரத்தின் மனோ நிலையைக் கண்ணாடி போல் காட்டுகின்றார்.

> **“தாயையும், தந்தையையும், தங்கையையும் பிரிந்து வளர்ந்த வீட்டையும், ஊரையும், பழகிய நட்பையும் உறவையும், விட்டுப் பிரிந்து பிரிவாற்றாமையால் மனம் நொந்து கலங்கும் அவளைப் போய், இன்று இம்மாதிரி ஒரு கேள்வியைக் கேட்டிருக்கக் கூடாதோ என்று சிவதாணு கழிவிரக்கம் கொண்டான். மணி ஐந்தரை தாண்டி விட்டது. துண்டை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டு சோப்புப் பெட்டியைக் கையில் எடுத்துக் கொண்டு அவன் கீழே இறங்கினான். அடுக்களையில் நுழைந்து தலையில் எண்ணெய் தேய்க்கும் போது, பார்வதியும் லட்சுமியும் ரசமாக ஏதோ பேசிக் கொண்டிருப்பதைக் காண அவனுக்கு ஆறுதலாக இருந்தது.”**[59]

சிவதாணுவின் கதாபாத்திரம் மிகவும் மென்மையான ஒன்று என கதாசிரியர் உணர்த்துகிறார். தாய், தந்தை மற்றும் அனைத்தையும் பிரிந்து வந்த ஒரு பெண்ணை நோகும்படி பேசி விட்டோமே எனப் புழுங்கும் சிவதாணு கதாபாத்திரத்தின் மனவெளிப்பாடு நன்கு புலப்பட்டுள்ளது. கழிவிரக்கம் கொள்ளும் சிவதாணுவின் கதாபாத்திரம் அவனின் உணர்தலின் மூலம் மேலும் உயர்வடைகின்றது. ஆசிரியர் இக்கதாபாத்திரத்தின் உணர்ச்சி பூர்வமன மன அதிர்வினை நன்கு வெளிப்படுத்தியுள்ளார்.

கதையில் பங்கெடுக்கும் கதாபாத்திரங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமாக இருப்பதுண்டு. அதனைத் தீர்மானிப்பவர் தான் கதாசிரியர். அவரது

கட்டுக்குள் தான் கதாபாத்திரங்களின் வேறுபாடுகள், முரண்பாடுகள், மாறுபாடுகள் எல்லாம் நிகழ்கின்றன. கதாபாத்திரத்தின் எல்லாவித மன ஓட்டத்தையும் தானே உணர்ந்து, திட்டமிட்டு வெளிப்படுத்துபவர் தான் கதையை எழுதுபவர். நாஞ்சில் நாடன் அவர்கள் ஒவ்வொரு கதாபாத்திரத்தின் மனவெளிப்பாடாக பல விசயங்களைக் கூறுகின்றார். மனவெளிப்பாடு மூலம் எழுதும் உத்தியை சிலர் தான் சரியாகக் கையாண்டுள்ளார்கள். ஆசிரியரும் தனது புதினத்தில் இதனைப் பதிவு செய்கின்றார்.

> **“எங்கும் பிலாக்கணங்கள் எப்பாலும் பேய்க்கணங்கள் தங்குமிடம் அத்தனையும் சரஞ்சரமாய் முட்கதிர்களா’கப் போவானேன்? ஏன் இவளால் என்னைப் புரிந்து கொள்ள முடியவில்லை. என் தவிப்புக்களை, தளர்ச்சிகளை, தயக்கங்களை இவள் உணரக் கூட முயல மாட்டேன் என்கிறாளே! பதிலாக– எதற்கெடுத்தாலும் கோபமும் முகத்தைத் தூக்கி வைத்துக் கொள்வதும், சிணுங்குவதும் சிடுசிடுப்பதுமாக இது என்ன கொடுமை? கணவனுக்கு உணவு பரிமாறித் தருவது கூட இரண்டாம் பட்சமாய்ப் போய், அக்கம் பக்கத்துப் பெண்களுடன் வம்பளப்பதும் கதைப் புத்தகம் படிப்பதும் தானா பிரதானமாகப் போய்விட்டது? ஒப்புக்காவது, சினிமாவுக்குப் போகிறேன்; உறவுக்காரர்கள் வீட்டுக்குப் போகிறேன் என்று ஒரு அளவுக்கு சொன்னால் என்ன குறைந்து போகும்? ஒரு வேளை நான் அளவுக்கு மீறிப் பொறுமையுடன் இருக்கிறேனா? அதையே எனது பலவீனமாகக் கொண்டு விட்டாளா? அந்த இடம் பார்த்துக் குண்டு வீசக் கற்றுக் கொண்டு விட்டாளா? ஆசையாக நெருங்கும் போது அதட்டி விரட்டுமளவுக்கு இப்போது என்ன நடந்து விட்டது? யாரிடம் இந்தப் பிடிவாதம்? எத்தனை நாள் இது செல்லும்? கயிற்றை விட்டுக் கொடுத்துக் கொண்டே போவது நம்மை இழுத்துக் கொண்டு ஓடவதற்கா? இவன் இழுத்த இழுப்புக்கு வராமலா போவான் என்ற தீர்மானமா?**[60]

கதையில் வரும் கணவன் தனது மனைவியிடம் அன்பையும் ஆதரவையும் எதிர்பார்க்கிறான் என்ற உணர்ச்சியை ஆசிரியர் துல்லியமாக விவரித்துள்ளார். மனைவியின் ‘தான்’ என்ற மனோபாவம் கணவனைப் பலவீனப் படுத்துகிறது என்று

ஆசிரியர் உரைக்கின்றார். கணவனின் மௌனம் மனைவிக்கு ஏதுவாகப் போய்விட்டதோ என்று எண்ணத் தோன்றுகிறது. ஆசிரியர் கணவனின் எதார்த்தத்தையும் மனைவியின் பிடிவாதத்தையும் மனவெளிப்பாட்டின் மூலமே தெளிவுபடுத்தியுள்ளார்.

மனவெளிப்பாட்டைக் கூறும் உத்தியில் ஆசிரியர்கள் வெவ்வேறு முறைகளைக் கையாள்வதுண்டு. நாஞ்சில் நாடன் அவர்கள் தனது புதினத்தில் கதாபாத்திரத்தின் கூற்றாகவும் தன்னிலை விளக்கமாகவும் ஆசிரியரின் கூற்றாகவும் மனவெளிப்பாட்டைப் பதிவு செய்துள்ளார். சிவதாணுவிற்கு வேலை கிடைத்து விட்டது என்ற கூற்றை உள்வாங்கி ஆசிரியரே அதன் மகிழ்ச்சியை விவரிக்கிறார்.

> **"எனக்கு வேலை கெடைச்சாச்சும்மா! 'அம்மா!' என்ற அந்த அழைப்பில் தான் எத்தனை நெருக்கம்? பதினாறு வருடம் குழந்தையில்லாமல் இருந்து; பிறகு பிள்ளை பெற்ற அதுவும் ஆண் பிள்ளை பெற்ற மலடிக்கு இவ்வளவு ஆனந்தம் இருக்குமா? முதல் கதையைப் பத்திரிகையில் கண்ட எழுத்தாளக் குஞ்சுக்கு இவ்வளவு பூரிப்பு இருக்குமோ இவையெலலாம் ஒன்றாகக் கலக்கப்பட்டு சுண்டக் காய்ச்சி சுண்டைக்காயளவு லேகியமாக உருட்டி ஒரே விழுங்கலில் விழுங்கியதைப் போல் இருந்தது சிவதாணுவுக்கு, அப்பாவும் மாலையில் தம்பிகளும், அண்டை அயலாரும் அறிந்த போது இன்று இந்த விநாடியில் தான் அவன் மனிதனாகியதாகத் தோன்றுகிறது. பருப்பும் பாயாசமுமாக அம்மா தடபுடல் படுத்தி விட்டாள்."**[61]

ஆசிரியர் தனது வெளிப்பாடாக உவமைகள் மூலம் சிவதாணுவின் மகிழ்ச்சியை வலியுறுத்துகிறார். பதினாறு ஆண்டுகளுக்குள் பிறகு குழந்தை பெற்ற தாயைப் போலவும் முதல் கதையைப் பத்திரிகையில் கண்ட எழுத்தாளனைப் போலவும் அந்த மகிழ்ச்சி இருந்ததாக வெளிப்படுத்துகின்றார். படிப்போர் மனதில் கதாபாத்திரத்தின் மகிழ்ச்சி பதிய வேண்டும் என்பதற்காகவே ஆசிரியர் உத்தியைக் கையாண்டுள்ளார்.

**அக மனவெளிப்பாடு**

கதாபாத்திரங்களின் மன வெளிப்பாட்டை உணர்ந்து எழுத வேண்டுமெனில், ஆசிரியருக்கு உளவியல் தெரிந்திருக்க வேண்டும் என்பர். உளவியல் ரீதியாகவும் உலகியல் ரீதியாகவும் ஒவ்வொரு கதாபாத்திரங்களையும் ஆய்ந்து, அறிந்து, உணர்ந்து ஆசிரியர் கதையைப் புனைந்துள்ளார்.

> **“சொக்கலிங்கம் பிள்ளையின் பேச்சு வாதத்திற்கு நன்றாக இருக்கிறது. செல்வம் தரும் எல்லாச் சுக போகங்களும் வேண்டும் என்றால், வேலை வேண்டாம் என்று சொல்லிவிட்டு இங்கேயே இருக்கலாம். ஆள், அம்பு, சேனை என்று அதிகாரம் கூடச் செய்யலாம். ஆனால் – உள்ளம் என்ற ஒன்று, நந்தியா வட்டைப் பூவைப் போன்று வெண்மையும் மென்மையும் கொண்ட ஒன்று இல்லாமலிருந்தால், – ஏ, சின்னத்தம்பி! பண்ணையார்வாளுக்கு என்ன வேணும்ணு கேரு.... அல்வா இப்பம் போட்டது. ஒரு கிலோ பார்சல் கெட்டிக் குடு, ரெசவடை சூடா இருக்கு... கீரை வடை போட்டிருக்கு... ஏலே! அங்க என்னத்தைப் பார்த்து இளிக்கே? அந்த மேசையைத் துடை.. என்று தூள் பறத்தலாம்”** [62]

ஆனால் மாமனார் திண்ணையோரத்தில் கூட்டமாகக் கிடக்கும் செருப்புகளைக் காலால் ஒதுக்குவதைப் போல சற்றும் பொருட்படுத்தாமல் அல்லவா நடந்து கொள்கிறார்... மாமியார் புழுவைப் போன்றல்லவா பார்க்கிறாள்? நம் வீட்டில் தானே இருக்கிறான் என்ற மிதப்பில் மனைவிக்குக் கூடப் பொருட்டில்லையே!”[32]

வீட்டோடு மாப்பிள்ளையாகிப் போன கணவன் மாமனாரால் எவ்விதம் அவமானப்படுத்தப்படுகிறான் என்பதனை ஆசிரியர் விளக்கியுள்ளார். மனைவியும் உதாசீனப்படுத்துவதால் மனம் உடைந்து போன கணவன் தனது வெளிப்பாடாக இவ்வுரையாடலைக் கூறுவதாக ஆசிரியர் அமைத்துள்ளார். வசதி படைத்த வீட்டில் மாப்பிள்ளையாகப் போகும் இளைஞனின் ஆதங்கத்தையும் மனக் குமுறலையும் நாஞ்சல் நாடன் பதிவு செய்துள்ளார். ‘நந்தியா வட்டைப் பூவைப் போன்று’ என்ற உவமை நயம் பொருத்தமாக அமைக்கப்பட்டுள்ளது. கரிசல் காட்டுப் பூவைக்

கதையோடு சேர்த்துள்ள ஆசிரியரின் உத்தி கதாபாத்திரத்திற்கு வலிமை சேர்த்துள்ளது.

மனவெளிப்பாடாக ஆசிரியர் பல்வேறு இடங்களில் விவரித்துள்ளார். ஒவ்வொரு சம்பவத்திலும் ஆசிரியரின் சொற்களும் உணர்ச்சியும் வேறுபடுகின்றன. சூழ்நிலைக்கேற்ப வார்த்தைகளை மிகவும் கவனமாகக் கையாண்டு கதாபாத்திரத்தின் தன்மையினைத் துல்லியமாகத் தெரியப்படுத்துகின்றார்.

> **“இவர்கள் இப்படித்தான் இருப்பார்கள். பணக்காரச் சாதிக்கே உரிய திமிர். உடம்பில் ஊறிப் போன மதம், அந்த மதமும் திமிரும் அண்ட ஒட்டாத தூரத்தில் வாழ்க்கை நடத்தவும் தன்னால் முடியும். இவள் பார்வதி மனது வைத்தால் – இவள் மட்டும் மனது வைத்தால், பணத்தை மட்டுமே கொண்டு மனிதர்களை எடை போடும் இந்தப் பதர்களின் முகத்தைக் கூடப் பார்க்காமல் போய் விடலாம். ஆனால், அவளுக்கு ஏன் இது உறைக்க மாட்டேன் என்கிறது? என்னை அவமானப்படுத்துவது தன்னை அவமதிப்பதேயாகும் என்பது அவளுக்குப் புரியவில்லையா? இல்லை அவளும் அம்மாவைப் போலவே நினைக்கிறாளா? நான் என்ன தலையில் வைக்கும் திருகுப்பூவா? வேண்டுமானால் வைத்துக் கொள்வது இல்லையென்றால் கழற்றிப் பெட்டியில் போட்டு விடுவதற்கு?”**[63]

ஆசிரியர் ஓர் இளைஞனின் மனவெளிப்பாட்டை உணர்ச்சியின் உச்ச நிலையில் நின்று விவரிக்கின்றார். பணக்காரத்தனமான மாமனாரின் நிலைக்கேற்ப மனைவியும் அடிபணிந்து போகிறாளே என்று குமுறும் இளைஞனின் வெளிப்பாடாகச் சொற்களைப் பயன்படுத்தி உள்ளார். ‘திருகுப்பூ’ என்ற சொல்லில் முழு வெளிப்பாட்டையும் காட்டி உள்ளார்.

ஓர் இளைஞனின் மனவெளிப்பாட்டை தன்னுடைய புதினத்தில் நாஞ்சில் நாடன் நன்கு பதிய வைக்கிறார். தன் மனைவியின் சந்தேகத்தைக் கண்டு குமுறும் இளைஞனின் மனவெளிப்பாட்டை ஆசிரியர் சில வாக்கியங்களில் நிரப்பி விடுகிறார். மனவெளிப்பாட்டு நடையில், அழகியல் உணர்ச்சியை விட ஆவேச உணர்ச்சிதான்

மிகுந்து நிற்கும். இதனை ஆசிரியர் இளைஞனின் மனவெளிப்பாடாக உணர்த்துகிறார்.

**“எல்லாம் அவளால் – அந்தச் சிறுக்கி மகளால் – மூட்டைப் பூச்சியைப் போல் என் தன்னம்பிக்கையை அந்தத் தடியன் நசுக்குவதற்குக் காரணமாயிருந்த அவள்.. கொன்று போட்டிருக்க வேண்டும்... அடியோடு நிறுத்தியிருக்கக் கூடாது...**

**என்ன சொன்னாள்? ‘காந்திமதியோடு கொஞ்சிக் கொண்டு கிட...’ அட மூடமே! கொஞ்சமாவது உனக்கு அறிவு இருந்தால், எள்ளளவாவது புத்தியிருந்தால் அப்படிச் சொல்வாயா? அறுத சண்டாளி... யாரைப் பார்த்துச் சொன்னாய்? யாரைப் பார்த்து? நாக்கு அழுகிப் போய்விடாதா”[64]**

ஆசிரியர் ‘தடியன்’, ‘அறுத சண்டாளி’, ‘நாக்கு அழுகி’ போன்ற சொற்களால் வீட்டோடு மாப்பிள்ளையாக வந்த இளைஞனின் மனக் கெந்தளிப்பைக் காட்டுகின்றார்.

நாராயணனின் அத்தை அவனிடம் எந்தவிதப் பாசமும் இல்லாமல் இருப்பதனை ஆசிரியர் விளக்குகின்றார். அத்தை மகன் குமாரசாமியைவிட நாராயணன் பட்டப்படிப்பு படித்துவிட்டதே அத்தைக்கு பிடிக்காமல் போனதோ என்று எண்ண வைக்கின்றார் ஆசிரியர். நாராயணனின் மனக்குமுறலாக ஆசிரியரே பேசுகின்றார்.

**“பெரிய மாமாவின் தயவு தேவையாக இருந்தது. அது தவிர, யார் வீட்டிலும் அம்மா ‘தொண்ணாந்து’ நின்றதும் இல்லை; அவனை நிற்க விட்டதும் இல்லை. பெரிய மாமாவின் வீடு தெருவின் கோடியில் தான் என்றாலும், தேவை கருதிப் போவது மட்டும் தான். அதுவும் மாமா இருக்கும் நேரம் பார்த்து, அத்தை, இரி... காப்பி குடிக்கியா? என்று கேட்பதில் உள்ளன்பு இருக்காது. ஒரு வேளை அப்பாவிள் இறப்புக்குப் பிறகு, அம்மா பாத்திரம் தேய்துக் கொடுத்து, சாணி வாரி, சமையலில் கூட**

**மாட ஒத்தாசை செய்து, நீ புவிமுளம் வச்சா ஒரு தனி மணம் தான்! எனப் பொய்யாய்ப் புகழ்ந்து, புழுக்க வேலையில் நகக்கண்களில் அழுக்கும், விரல்களில் கறையும் ஏற, அடங்கிக் கிடந்திருந்தால், சற்றுக் கனிவு இருந்திருக்கும். குமாரசாமியும் நாராயணனும் இரண்டு மாதங்கள் முன் பின்னால் பிறந்தவர்கள். பட்டப் படிப்பென்ற மலை உச்சியில், மரண பயம் ஏற்படுத்தும்பாறைப் பிளவில் நின்ற நெல்லி மரத்தின் கனியானது, தன் மகனுக்குக் கிடைக்காமற் போய், நாராயணனுக்குக் கிடைத்தது ஒரு காரணமாக இருக்கலாம். யோசித்துப் பார்த்தால் வெறுப்புக்கான துல்லியமான காரணம் பிடிபடவில்லை. நெல்லிக் கனி தின்றவன் எல்லாம் ஜீரணமும் ஆகாமல் வாந்தியும் செய்ய முடியாமல் திணறுவது அத்தைக்கு அர்த்தமாகிறது"**[65]

நாராயணனின் அத்தைக்கு எடுபிடி வேலைகள் செய்து அடிமையாய் இருப்பது பிடிக்கும் என்பதனை மனவெளிப்பாட்டின் மூலம் ஆசிரியர் எடுத்துரைக்கின்றார். 'தான்' என்ற எண்ணமும் வசதியும் அத்தையை இதுபோல் மாற்றிவிட்டதோ என நாராயணன் குமுறுகிறான் என்பதனை நாஞ்சில் நாடன் தெளிவுற வெளிப்படுத்துகின்றார்.

அப்பாவைப் பறிகொடுத்தவனின் மனவெளிப்பாட்டை ஆசிரியர் நுட்பமாக விளக்கியுள்ளார். தாத்தாவும் ஆத்தாவும் இல்லாமல் போயிருந்தால், தான் ஒரு அனாதையாகிப் போயிருக்க இயலும் என ஒரு கதாபாத்திரம் வேதனைப்படுவதாக வெளிப்பாடு அமைந்துள்ளது. அன்றாடத் தேவைக்கு அடிமையாக ஏதோ ஓர் வேலையில் சேரவேண்டி வந்திருக்கும் என்பதே அக்கதாபாத்திரத்தின் குமுறலாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**" தாத்தா செத்துப் போனால் – இருள்............. தோலுரிக்க முடியாத இருள்.... உளி போட்டுச் செதுக்க முடியாத இருள்... எந்தச் சூரியனாலும் இளக்க முடியாத இருள். தாத்தாவும் ஆத்தாவும் தனக்கு இல்லாதிருந்தால் – பதினான்கு வயதில் அப்பா பட்டு விழுந்த பிறகு,**

**என்னவாக ஆகியிருப்பேன்? ஏதாவது ஓட்டலில் மேஜை துடைக்க – தையல் கடையில் காஜா போட – கொத்த வேலைக்குக் கையாளாக – நெய்யும் இடத்தில் ஓடம் பொறுக்கிப் போட – சந்தையில் சுமடு தூக்க – சினிமா தியேட்டரில் சோடா, கலர் விற்க – எதுவாகவும் ஆகியிருக்கலாம் என்று எண்ணுகையில் நெஞ்சு கனத்தது" [66]**

கதையில் வரும் கதபாத்திரத்தின் மனவெளிப்பாட்டினை கதாசிரியர் எவ்விதத்திலும் வெளிப்படுத்தலாம். கதாபாத்திரத்தின் தன்னிலை விளக்கமாகவும் கூறலாம். ஒரு கதாபாத்திரம் தனது மனோநிலையை முழுவதுமாக மனவெளிப்பாட்டின் மூலம் தெரியப்படுத்த இயலும். ஆசிரியர் இக்கதையில் ஒரு கதாபாத்திரத்தின் மனவெளிப்பாட்டினைக் கவிதையாக வடித்துள்ளார்.

**வினாவிடை**

கதாபாத்திரங்களுக்குள் கேள்வி, பதிலை வரவழைத்து அதன் மூலம் உரையாடலை நிகழ்த்தி, கதாபாத்திரங்களின் உண்மை நிலையினைப் படிப்பவர்களுக்கு அறியச் செய்யும் முறையே வினா விடை நடையாகும். சிறு, சிறு சொற்களில் கேள்வி, பதிலை உருவாக்கி, பாமரனும் புரியும் வண்ணம் கதாசிரியர் எழுதும் உத்தியே வினா விடை நடையாகும். நாஞ்சில் நாடன் தனது புதினத்தில் கதாபாத்திரங்களின் உரையாடல் மூலம் வெளிப்படுத்துகின்றார்.

**"மாமாகிட்டே கேட்டுப் பாரேன்… கொஞ்ச நாள்லே திருப்பிக் கொடுத்திரலாம்… சற்று நேரத்தில் அவள் திரும்பி வந்தாள்.**

**கேட்டாயா? கேட்டேன்… அவள் குரலில் உற்சாகம் இல்லை.**

**என்ன சொன்னா? ஐயாயிரத்துக்கு இப்ப எங்கே போறதுங்கா! ஆயிரம் ரெண்டாயிரம்ணா கூடப் பெரட்டிலாமாம்… கையிலிருந்த பணத்தையெல்லாம் போட்டு, போன மாசம் தான் கீழத்தெரு வீட்டை ஒத்தி வாங்கினாளாம்…. சும்மாத் தராண்டாம்… கடனாகத் தரச் சொல்லு. ஒரு வருசத்திலே கொடுத்திரலாம்; வட்டி வேணும்ணாலும் குடுத்திடுவோம்…**

**அதைக்கேட்ட பார்வதியின் முகம் கறுத்தது. அதெல்லாம் எனக்குத் தெரியாது... நீங்களே கேட்டுக் கிடுங்கோ... என்னை என்னத்துக்கு இடையிலே போட்டு தேய்க்கியோ...''**[67]

கணவன் மனைவியை மாமாவிடம் தூதாக அனுப்பி வைத்துப் பணம் கேட்கிறான். மாமா காரணம் சொல்கிறார். மனைவி கணவனையே நேரடியாகக் கேட்கும்படி கூறுகிறாள். இவ்வினா விடையில் கணவனின் தயக்கமும் மாமாவின் மழுப்பலும் மனைவியின் மனத்தாங்கலும் நன்கு வெளிப்படுகின்றன. ஆசிரியர் இம்மூன்று கதாபாத்திரங்களையும் உரையாடல் மூலமே முழுமைடையச் செய்கின்றார். பல பக்கங்கள் எழுத வேண்டிய சம்பவத்தை வினா விடை மூலம் ஆசிரியர் வெளிப்படுத்தியிருப்பதே அவரின் உத்தி என உணர வேண்டியுள்ளது.

கதா பாத்திரங்களின் உரையாடல்கள் மூலம் கதையையும் சம்பவங்களையும் நகர்த்திக் கொண்டு போவதும் ஓர் உத்தியாகக் கருதப்படுகின்றது. ஆசிரியர் தன்னிலை விளக்கமாகக் கூறத் தேவையிலலை என்ற இடத்தில் வினா – விடை நடையினைக் கையாள்வார். நாஞ்சில் நாடன் அவர்களும் கேள்வி பதில் மூலம் கதாபாத்திரத்தை விளக்குகிறார்.

**''கந்தையா! ஒரு கெட்டுலே எவ்வளவு நெல்லுடே இருக்கும்? வாரிக் கொண்டிருந்த படையை கட்டில் வைத்து இறுக்கிக் கொண்டே கந்தையா சொன்னான். சொல்ல முடியாது பாட்டா.... ஏழெட்டு மரக்கா இருக்கும் நல்ல செமட்டுக்காரன் கெட்டுலே? நல்ல செமட்டுக்காரன் நம்ம செட்டிலே பூலிங்கம் தாலா? எவ்வளவுடே இருக்கும் பூலிங்கம்? சிரித்துக் கொண்டு பூலிங்கம் சொன்னான். என்னா மிஞ்சிப் போனா பத்து மரக்கா இருக்கும்... ம்ஹெ... ஓர் இளக்காரச் சிரிப்புடன் கங்காதரம் பிள்ளை சொன்னார். ''இம்புட்டு மயிருதாலா? அதே தொனியில் கந்தையா கேட்டான். பின்னே எம்புடு இருக்கும்னு நெனைச்சேரு? பந்தி ரெண்டு மரக்காலாவது இருக்கும்னு நெனைச்சேன். இவ்வளவு தாலா உங்க சாமார்த்தியம்? சரி! பதினாலு மரக்கா நெல்லுக்கு குறையாம ஒரு**

**கெட்டுலே கொண்டு களத்திலே சேத்திட்டா என்ன தருவேரு? முடியாத காரியத்தைப் போட்டு பேசி என்னத்துக்கு? முடியல்லேண்ணா இண்ணைக்கு உள்ள கொத்தை விட்டிருகேன்... முடிஞ்சுண்ணா அந்த கெட்டுலே உள்ள நெல்லை எங்களுக்கு விட்டிருகேரா... அப்பிடியா? சரி... அதையும் பார்த்திரலாம்''[68]**

கந்தையா பிள்ளைக்கும் பூலிங்கத்திற்கும் உருவான உரையாடல் கிராமியப் பின்னணியில் அமைந்துள்ளது. விவசாய நிலத்தில் அவரவர்களுக்கு இருக்கும் அனுபவத்தையும் திறனையும் காட்டுவதாக உரையாடல் அமைந்துள்ளது. நெடுங்காலம் விவசாயத் தொழில் ஈடுபட்டவர்கள் பேசும் நம்பிக்கையான வார்த்தைகள் உரையாடலில் வெளிப்படுகின்றன.

கதையின் நிகழ்வை நீண்ட தூரம் விளக்கிக் கொண்டு போகாமல் வினாவிடை மூலம் சுருங்க விளக்குவதே வினாவிடை நடையின் நோக்கமாகும். கதாசிரியர் இந்த உத்தியைப் பல கோணங்களின் புதினங்களில் கையாண்டுள்ளார். வெளிமாநிலத்தில். தெரியாத நபரிடம் பேசியபொழுது விஷயத்தை மட்டுமே எடுத்துரைப்பது நடைமுறை. ஆசிரியர் இந்த யதார்த்தத்தையும் கவனமாகக் கையாண்டுள்ளார்.

**''நேராக வந்து நின்றார். நேரடியாகக் கேட்டார். சார் தமிளா? ஆமா எந்த ஊருன்னு தெரிஞ்சுக்கலாமா? நாகர்கோயில் நாடாரா? ஆமா சம்மா தான் கேட்டேன். தப்பா நினைக்காதேங்கோ... ஃபேக்டரியிலே இருந்தேனா? ம்... எங்க தங்கி இருங்கேள்? கோலிவாடா... சி.ஜி.எஸ். குவார்ட்டர்ஸ் வாடகை எவ்வளவு? நூத்தம்மபது... தண்ணீர் தாராளமா வருமோல்லியோ? ஓ... காலைல நாலரை மணிக்கு வரும்... ஒன் ரூம் கிச்சனா? ஆமா... எத்தனை பேர் இருக்கேள்? நான் அநாவஸ்யமா தொந்தரவு பண்றேன்... பரவால்ல... மூணு பேர் இருக்கோம்... ஒருத்தர் கூட வச்சப்பேளா? படுக்க இடம் பத்தாதே! அட்ஜஸ்ட் செய்துக்கலாம்... மந்தவங்கள்ட்டே கேக்கணும்... கேட்டுச் சொல்றளோ? தொந்தரவு**

**ஒண்ணும் இல்லையே? இல்ல... இல்ல... சொல்லுகேன்... ஆமா, யாருக்காகச் சுட்டி ரூம் தேடுகியோ?:"** [69]

இரு கதாபாத்திரங்கள் பேசுவதை நேரடியாகிய பேசிக் கொள்வதுபோல் ஆசிரியர் வினா விடையை அமைத்துள்ளார. கதாபாத்திரத்தின் கேள்வி முதலில் ஊரைப் பற்றியும் அடுத்து சாதியைப் பற்றியதாகவும்தான் உள்ளது. வெளி மாநிலங்களுக்குச் சென்றபோதிலும் சாதியைத் தெரிந்து கொள்வதில் அனைவரும் அக்கறையாக உள்ளார்கள் என்பதனை எடுத்துரைக்க ஆசிரியர் இக் கேள்வியைத் தொடுகின்றார். சில கேள்விகளிலேயே அறை, வாடகை, தண்ணீர் வசதி, தங்கிய இடம் என்று எல்லாவற்றையும் தெரிந்து கொள்ளும் விதமாக வினா விடை நடையினை ஆசிரியர் அமைத்திருப்பது விறுவிறுப்பை விளக்குகின்றது.

கதையின் களத்தின் சூழலுக்கேற்றவாறே வினா விடையைத் தொடுக்க வேண்டிய நிலை கதாசிரியருக்கு ஏற்படும். அதன் நிலைக்கேற்பவே வினாவைத் தொடுக்க வேண்டும். வினாவைச் சரியாகத் தொடுத்தால்தான் சரியான விடையைக் கொடுக்க இயலும். சில கருத்துகளைக் கூற வேண்டுமென்பதற்காகவே சில வினாக்களைக் கேட்க வைப்பது ஆசிரியரின் உத்தியாகக் கருதப்படுகின்றது. நாஞ்சில் நாடன் தனது புதினங்களில், பெரும்பாலான தருணங்களில், தக்க கேள்விகள் மூலம் பல சமூகக் கொள்கைகளை விதைத்து விடுகின்றார்.

**"அண்ணாச்சிக்கு எந்த ஊரு? களக்காடு நீங்களும் ராமர்வாடியிலே தான் இருக்கேளா? ஆமா... நீரு ஆரைப் பார்க்கணும்? சுப்பையாண்ணு டாக்டார்டிலே வேலை செய்யாருல்லா? யாரு? ஏர்வாடி சுப்பையாவா? அவன் முத்துராமலிங்கம் சால்லே இல்லா இருக்கான்? அவனை எப்படிப் பளக்கம்? எங்க ஊர்க்காரருக்குத் தெரிஞ்சவரு... தங்கதுக்கு இடம் இருக்காண்ணு கேக்கணும். நீரு தேவமாரா?**

**இல்லே... பின்னே எப்படி முத்துராமலிங்கம் சால்லே தங்க முடியும்? அது தேவமாரு சாலுல்லா? எதுக்கும் நீரு சுப்பையாவைப் பாரும். அவன் என்னவாம் ஐடியா வச்சிருப்பான்..."** [70]

ஒரே இடத்தில் வேலை பார்க்கும் தொழிலாளர்கள் தான் தங்குவதற்கான இடத்தைக்கூட ஜாதியின் அடிப்படையில்தான் தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதை ஆசிரியர் நன்குப் புரிய வைக்கின்றார். தொழிலாளர்கள் ஒரே வர்க்கமாக இருப்பினும் ஒரே சாதியாக இல்லாத காரணத்தால், முத்துராமலிங்கம் தங்கும்அறையில் வேறு சாதித் தொழிலாளி தங்க முடியாது என்று நாஞ்சில் நாடன் மனதில் பதிய வைக்கின்றார். ஆசிரியரின் கருத்துக்கு ஒப்ப தந்தை பெரியாரும் சாதியினைச் சாடுகின்றார். ''ஜாதி – மதம் – மொழி ஆகியவை ஒரு மனிதனுக்கு இயற்கையானவை அல்ல. இவை செயற்கையானவை காலதேசம் வர்த்தத்தினால் ஒரு மனிதனை வந்து அடைபவை, அல்லது மனிதனின் வசதிக்குத் தக்கபடி ஏற்படத்தக்கவை.''

வினா விடை நடையினை நாஞ்சின் நாடன் அவர்கள் தனது புதினங்களில் ஏராளமான இடங்களில் கையாண்டுள்ளார். வேகத்தையும் விறுவிறுப்பையும் காட்ட கதாசிரியருக்கு வினா–விடை பயன்படுவதாகக் கூறுவதுண்டு. ஆசிரியரும் சுடலையாண்டிக்கும் பாட்டாவுக்குமான உரையாடலை அவ்விதமே அமைத்துள்ளார்.

> **''மாட சாமி வழியில் கண்டு கேட்டான். ... நாளைக்கு வரச்சொல்லியிருக்காரு எப்பண்டே பணம் கெட்டப் போறே? கெட்டணும். இன்னும் பணம் கெடக்கல்லே... சீக்கிரம் கெட்டீரு... பொறகு எடம் தீந்திரும்... சுடலையாண்டிக்கு மனம் 'கெதங் கெதங்' என்றிருந்தது. அன்று இரவு சாப்பிடும் போது தாத்தாவிடம் கேட்டான். தாத்தா பணம் கெடச்சா? இல்லியே மக்கா ... ரெண்டு மூணு பேருகிட்டே சொல்லியிருக்கேன்.... பணம் பெரள மாட்டங்கு... சீக்கிரம் கெட்டாட்டா எடம் போயிருமாம்! போனாப் போட்டு. அடுத்த வருசம் பாத்துக்கிடலாம். சொல்லும் போதே தாத்தாவின் தொண்டை கமறியது. என்ன செய்யச் சொல்லுகே மக்கா... ரெண்டு நாள் பொறு. தாழக்குடியிலே ஒரு ஆளுகிட்டே கேட்டிருக்கேன். நாளைக்கு வரச்சொல்லியிருக்காரு...''[71]**

சுடலையாண்டி பள்ளிக்குக் கட்ட வேண்டிய கட்டணத் தொகையைப் பாட்டாவிடம் கேட்க, பாட்டா மணம் வெதும்புவதாக ஆசிரியர் வினா–விடையை

அமைத்துள்ளார். பணம் கட்டவில்லையெனில் பள்ளியில் இடம் கிடைக்காது என சுடலை குமுறுவதும் எடம்போனால் போகுது என்று பாட்டா சலிப்பதும் இந்நாட்டின் கீழ்மட்டத்து மக்களின் குரலாகவே ஆசிரியர் வெளிப்படுத்தியுள்ளதாகத் தென்படுகின்றது.

**உவமை நடை**

உவமை அணி மற்ற அணிகளுக்கெல்லாம் முதன்மையானது என்று அறிஞர்கள் கூறுவர். நுட்பமும் திட்பமும் கொண்ட சொற்களில் நடைமுறைக்கேற்ப உவமைகளைக் கையாண்டால், அவை ‘படிப்போரின் உள்ளத்தில் மிகுந்த தாக்கத்தையும் உணர்ச்சியையும் ஏற்படுத்தும் என்பவை அறிஞர்களின் கூற்று. ஆசிரியர் கதாபாத்திரத்தின் நிலையை மழை மேகம் கவிந்ததற்கு ஒப்பிடுகின்றார்.

> **“தாடகை மலையில் மழை மேகம் கவிவதைப் போல, அவனுள் வெறுப்புக் கவிந்தது. தன் அம்மா, அப்பா, மாமனார், மாமியார், மனைவி எல்லோர் மீதும் வெறுப்பு மூண்டெழுந்தது.”**[73]

ஒரு மலையில் மழை மேகம் கவிந்து விட்டால், முழு மலையும் தன் தோற்றத்தை இழந்து விடும். அதைப் போன்று ஓர் இளைஞனின் வெறுப்பு தாய், தந்தை, மனைவி, மாமனார் அனைவரின் மீதும் படிந்து விட்டது என்று ஆசிரியர் ஒப்பிடுகின்றார். மழை மேகம் கருத்து மலையை மூடி விட்டால், மலையின் எழில் எவ்வாறு போய் விடுமோ அதைப் போல் இளைஞரின் மென்மையான இதயத்தில் வெறுப்பு கவிந்து, மனதின் மென்மை மறிப் போனவைதாக ஆசிரியர் உரைக்கின்றார்.

**கள வருணணை**

கதை நிகழ்கின்ற களத்தை வருணிப்பதன் மூலம் படிப்போர் மனதில் எங்கு கதை நடக்கின்றது என்ற புரிதல் ஏற்படும். கதைக் களத்தைப் பொறுத்துத்தான் அதன் வருணனையும் சம்பவங்களும் நிகழ்கின்றன. களத்தினை சரியாக உணரவைக்கும் பொழுதுதான் கதாபாத்திரங்களை உணர வைக்க இயலும். இதனை மனதில் உள்வாங்கிய கதாசிரியர் கள வருணனையக் கையாள்கிறார்.

**"பூ முகத்து வீடு என்றால் அது கடுவாய் கங்காதரம் பிள்ளையின் வீடு. அதை வீடு என்று சொல்லிவிட முடியாது. ஒரு சிறிய கொட்டாரம். கங்காதரம் பிள்ளையின் தாத்தா திருவிதாங்கூர் மகாராஜாவின் ராணிகளில் ஒருத்தியின் கொட்டாரத்தில் விசாரிப்புக்......ாரராக இருந்தவர். கண்டதும் கூடியதுமாக ஒதுங்கியொதுங்கி கெல்லாம் வண்டலாய் மேடு சுட்டியது. ஆட்ட பாட்டமெல்லாம் அடங்கிய பிறகு கணக்குப் பார்கையில் – வயல்கள், தோப்புகள், விளைகள், களங்கள், புரையிடங்கள் என அங்க சேர்ந்து கிடந்தன. இரண்டு தலைமுறை சென்ற பிறக ஒன்று இரண்டாகி, இரண்டில் ஒன்று மூன்றாகி, மூன்றில் ஒன்று கங்காதரம் பிள்ளையின் ஏசுபோகம்"** [74]

கங்காதரப் பிள்ளையில் வசதியும் அவருடைய தாத்தாவின் பூர்வீக சொத்தும் அதன் தொடர்பும் விளக்கப்படுகின்றன. திருவிதாங்கூர் மகாராஜ குடும்பத்தோடு நெருங்கிப் பழகும் வாய்ப்பு கிடைத்ததால், கங்காதரம் பிள்ளையின் தாத்தா வயல்களையும் தோட்டங்களையும் அடைந்தார் என ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

கதைக் களத்தை ஆசிரியர் நன்கு விவரிக்கும் பொழுதுதான் கதாபாத்திரங்களின் எல்லாவித உணர்ச்சி வேகங்களும் புலப்படும். நாஞ்சில் நாடன் தனது புதினத்தில் களத்தை நன்கு புரியும்படி வருணிக்கிறார். கதாபாத்திரங்களின் வேறுபாடுகள், உடன்பாடுகளைக் களத்தோடு ஒட்டி உணர்த்துகின்றார்.

**"வாழைகள் குலை விழுந்த பிறகு, யதேச்சாாய், விக்கிர சிங்கம்பிள்ளை, கடுவாய் கங்காரதரம்பிள்ளையின் வீட்டில் இருந்தபோது இது பற்றிப் பேச்சு வந்தது. பயக்கோ வாழைத்தோட்டம் எப்பிடி போட்டிருக்காம்னு அத்தான் பாத்தேளா? பாத்தேன்... ஊக்கம் உள்ளவன்தான் கந்தையா... மத்த பயக்களை மாதிரி இல்லை... நானும் முதல்லே தோட்டத்தை அழிச்ச உடனே இந்தால ஒஞ்சு போயிருவாம்னுதான் நினைச்சேன்... ஆமா... ரொம்ப சாமார்த்தியமா நடந்திட்டதா நினைச்சுப்போட்டே... அவன் உன்னைவிடக் கில்லாடி... பழி வாங்குவது மாரி வாழையும் தென்னையும்**

**போட்டிருக்கான்... முதுல்லே எனக்கும் கொஞ்சம் திக்குண்ணுதான் இருந்தது. நல்லவேளை அவுனுக கண்டுபிடிக்கல்லலே. நீமெச்சுப் போட்டுக்கிட்டு இரி. அவுனுக கண்டு பிடிக்காட்டாலும் குண்டாமுட்டி சொல்லி குடுத்திருப்பாரு... தெரிஞ்சா என் கம்முண்ணு இருந்திட்டானுகோ... அதான் சொன்னேன். அவன் எவ்வளவு சாமார்த்தியசாலிண்ணு. நம்மை விட வெவரத்திலே கொறஞ்சவன் ஒண்ணும் இல்லே பாத்துக்கோ.''** [75]

விக்கிரம சிங்க பிள்ளையும் கங்கநாத பிள்ளையும் கந்தையாவைப் பற்றிப் பேசுகிறார்கள். கந்தையாவின் ஊக்கமும் உழைப்பும் விடாமுயற்சியும் நன்கு விளக்கப்பட்டுள்ளன. கந்தையா பழிவாரிக்கப்பட்டாலும் தன்னம்பிக்கையோடு தென்னையையும் வாழையையும் பயிரிட்டு, தனது முயற்சியைக் காட்டி உள்ளதாக ஆசிரயர் களவருணனை செய்துள்ளார்.

**சூழலை விளக்கும் நடை**

கதாபாத்திரத்தின் சூழ்நிலையைத் தகுந்த சொற்களால் விளக்கிக் கொண்டு போவது கதையினை வலுவூட்டும். சூழ்நிலையினை விவரிக்காமல் போனால், உன்னத கதாபாத்திரத்தின் தன்மையும் புரியாமல் போக வாய்ப்புள்ளதாக அறிஞர் கூறுவர். நாஞ்சில் நாடன் தனது படைப்பில், ஒவ்வொரு சூழலையும் துல்லியமாக விவரிக்கின்றார். படிப்போர் ஐயப்பாடில்லாமல் உணர இந்நடை உதவுகின்றது.

**''அவன் எங்க வந்து சேரப் போறான்? பம்பாயிலேயோ எங்கயோல்லா இருக்கானம்... தந்தி கெடச்சோ இல்லியோ? வீட்டில் இருந்தானோ என்னமோ! ஆமாமா.... இனிமேப் பாத்துப் பிரயோசனம் இல்லை... ஈஸ்வரங்கிட்டே சொல்லி எடுக்கத்துக்குக் ஏற்பாடு செய்ய வேண்டியது தான்... பிள்ளையளும் பொப்பளையளும் எவ்வளவு நேரம் பட்டினி கெடக்கும்? நான் காலம்பற பொறப்பிடச்சிலேயே நாலு தேசங்காத் தோசை தின்னு காப்பி குடிச்சிட்டுத்தான் வந்தேன். எப்படியும் பொழுது சாஞ்சிரும்னு தெரியும்.... செலவெல்லாம் ஈஸ்வரந்தான் செய்யானோ?**

**அவன் தான் செய்வானா இருக்கும்... வேற யாரு செய்வா? தங்கம்மைக்குக் கொடுக்கல் வாங்கல் எல்லாம் அவன்கிட்டதானே! குடுக்கல் எங்கே? எல்லாம் வாங்கல் தாலா! அப்படி ஏண்டே சொல்லுகே... அவளுக்க வயலை ஈஸ்வரந்தானே பயிரேத்துகான்... செய்யம்ணா... அந்தப்பய நாராயணனுக்கு படித்த செலவுக்கெல்லாம் அவன்கிட்டே தான் கடன் வாங்கீருக்கா... என்ன கணக்கோ என்னமோ? அந்தப் பயலுக்கு எவ்வளவு குடுக்கணும்னு தெரியுமோ என்னமோ? எல்லாம் ஈஸ்வரம் சொல்லுகதுதான் கணக்கு... ஆனா அந்தப் பய வேலைக்குப் போனதுக்குப் பொறவு. தங்கம்மைக்கு கொஞ்சம் தெளிச்சல்தான். மாசா மாசம் அம்பது ரூவா அனுப்புகாம்ல...''[76]**

நாராயணன் வெளியூரிலிருந்து வரவேண்டியிருப்பதும்; அதற்காகத் தந்தி கொடுக்கப்பட்டிருப்பதும்; தங்கம்மையின் இயலாமையும், ஈஸ்வரனின் ஒத்தாசையும் சூழ்நிலையில் விளக்கப்பட்டுள்ளன. நாராயாணனை நம்பியே தங்கம்மை வாழ்வதாகச் சூழல் விளக்குகின்றது.

கதை நிகழ்ந்து கொண்டிருக்கும் பொழுது அதன் சூழலை விளக்கிப், படிப்போர் மனதில் காட்சியைப் பதியவைக்கும் உத்தியே சூழல் விளக்க நடையாம். சூழலை விளக்க நடைமுறையும் எதார்த்தமும் இடத்தின் தன்மையும் நன்கு அறிந்திருக்க வேண்டியது அவசியமாகும். ஆசிரியர் விமான நிலையத்தில் நடக்கும் சம்பவத்தை எளிதில் புரியவைக்கவே எளிதாக மொழியைக் கையாள்கிறார். சிறுசிறு கேள்விகள் மூலம் சூழலை விளக்கிக் கூறுகின்றார்.

**“என்னப்பா, என்ன விசயம்? பூதலிங்கம். எஸ்.ஐ. மூணாயிரம் கேக்காரு... நல்லசியம். ஏன்? என்னத்துக்கு? அதான்... கொஞ்சம் கஸ்டம்ஸ்லே உதவி செஞ்சாருல்ல. அதுக்குத்தான். என்ன உத வி செய்தாரு? நாலாயிரம் ரூபா டூட்டி கெட்டியில்லா வெளியில வந்தேன்! என்ன மிஸ்டர் நாராயணன் இது? எனக்கத் தெரியாதுப்பா... நல்லசிவம் ஏற்பாடு தான்... ஒரு பைசா குடுக்க முடியாது. என்ன செய்திருவான் அவன்? சுபாஷ் மானே மறுபடியும்**

**அருகில் வந்து க்யா பிராப்ளம் ஹை? என்றான் நல்லசிவம் அவசரம் அவசரமாகச் சொன்னான். குச்சை... குச்தை... அத்தான். எதாவது குடுத்து அனுப்புங்க... நான் எதுக்குப்பா குடுக்கணும்? மானேக்குத் தமிழ் புரியா விட்டாலும் விஷயம் புரிந்தது. லுக் மிஸ்டர்... டோன்ட் ட்ரை டு பி ஃபன்னி... எகெய்ன் ஐ கேன் மேக் ஐ அண்டர் கோ அதைர் கோ அதைர் கஸ்டம்ஸ் செக்... வாட் டு யூ திங்க்...ம்?'' என்று அதட்டினான்''** [77]

விமான நிலையத்தில் நல்லசிவம் தன் பொருள்களுக்கு டூட்டி கட்ட உதவியதற்காக அங்குள்ள மானே அவனிடம் பணம் கேட்க, நல்லசிவம் விழிக்க, முடிவில், SIக்காகப் பணத்தை கொடுக்குமாறு கேட்க, மானேவிடம் இதை முறையிட, அவன் நல்லசிவத்தை மிரட்டுவதால் ஆசிரியர் சூழலை விவரித்துள்ளார். நல்லசிவம் வெளியூர்க்காரன் என்பதால் சுபாஷ் மானே மிரட்ட, நாராயணன் மும்பையைப் புரிந்தவனானதால் பணத்தைக் கொடுக்க மறுக்க, எதார்த்தமான சூழல் விளக்கப்பட்டுள்ளது. சிறுசிறு வார்த்தைகளில் கேள்விகளைக் கேட்டுச் சூழலை நாஞ்சில் நாடான் மனதில் பதிய வைக்கிறார்.

**விழா நடைமுறை வருணனை**

கதையில் நிகழும் திருமண விழக்களும் கிராமிய நடையில் எழுதப்படுவதுண்டு. கிராமப்புறங்களில் நடக்கும் திருமண முறைகளில் நிறைய வேறுபாடுகள் காணப்படும். வட்டார கழகத்திற் கேற்ப திருமண விழாக்களும் பந்தியும் நடைபெறும். திருமண விருந்தில் பரிமாறப்படும் காய்கறிகளும் வேறுபட்டதாக இருப்பதுண்டு. திருமணச் சடங்கும் கிராமிய நடைமுறைக்குள் வருவதால், ஆசிரியர் திருமணவிழா நிகழ்வினை வட்டார வழக்கோடு வருணித்துள்ளார்.

**''நாலா நீர்ச் சாப்பாடு முடிய இரவு எட்ரை மணி ஆயிற்று. பந்தல் அலங்கோலமாகக் கிடந்தது. மூன்று கிடார அடுப்புகளில் இன்னம் இரண்டு அடுப்புகளில் கங்குகள் கனன்றன. கொல்லன் உலை போல காலியான அண்டா குண்டா, நிலவாய், செம்பு, வார்ப்பு உருளி, போணி எல்லாம் ஒரு மூலையில் தாறுமாறாகக் கிடந்தன. கல்யாணச் சாப்பாடும்**

**நாலா நீர்ச் சாப்பாடும் முடிந்தது. ஊசிப்போகும் நிலையில் இருந்த அவியல், துவட்டல், பருப்பு, சாம்பார், எரிசேரி, புளிசேரி எல்லாம் சேர்த்துப் பெரிய ஈயம் பூசிய அண்ணாவில் போட்டுக் கிடார அடுப்பின் அனப்பில் கனன்று கொண்டிருந்தது. நாளை ஏழா நீர்ச் சாப்பாட்டுக்கு உபயோகமாகும் என்றுள்ள மாங்காய் உப்பிலிடு, நாத்தங்காய் பச்சடி, மிளகாய் பச்சடி, தயிர் கிச்சடி என சின்னவாளிகளில் நிறைந்து ஓலைப் பாய் போட்டு மூடி, காற்று பறத்தி விடாமல் இரண்டு மூன்று விறகுக் கட்டைகளைப் பாரமாக நீளவாக்கில் வைத்து, ஆக்குப் பெரையின் மூலையில் இருந்தன:" [78]**

திருமண விழாக் கோலத்தை வருணித்த ஆசிரியர் நீர்ச்சாப்பாடு என்றும் கிடார அடுப்பு என்றும் உருளி, போணி என்றும் எரிசேரி, புளிமேரி என்றும் ஆக்குப் பெரை என்றும் வட்டார வழககோடு மண் வாசனையை வெளிப்படுத்துகின்றார். ஈயம் புதிய அண்ணா போன்ற சொல் எல்லாம் இன்றும் கிராமப்புறங்களில் புழக்கத்திலுள்ளன. நாஞ்சில்நாடன் தனது மண்ணின் கலாச்சாரச்தோடு திருமண விழாவை வருணித்துள்ளார்.

**நகைச்சுவை நடை**

உணர்ச்சிகளில் மிகவும் நுட்பமான உணர்ச்சி நகைச்சுவை எந்த ஜீவராசிக்கும் இல்லாத நகைக்சுவை உணர்ச்சியைக் கைதேர்நத எழுத்தாளர்களே திறம்படக் கையாளுவார்கள் பொருத்தமான நிகழ்வில், கதையின் போக்கிற்கேற்ப நகைச்சுவையைப் பயன்படுத்தினால், கதையின் ஓட்டம் விறுவிறுப்பாகு. ஆசிரியர் தனது புதினங்களில் ஆங்காங்கே நகைச்சுவை உணர்வினை வெளிப்படுத்தியுள்ளார்.

**"குத்தாலம் நமக்கு நாப்பதஞ்சு வயசாகு. பழைய காலம் போல எம்பதும் தொண்ணூறும் வயசு யாரும் இருக்கப் போறதில்லை. கூடிப் போனா இன்னும் பத்துப் பன்னிரண்டு வருசம். என்னதுக்கு இந்தச் சள்ளை... உம் மகளுக்குப் பதினேழு வயசு இருக்குமா? பயலுக்குப் பதினஞ்சு இருக்கும். நாலஞ்சு வருசத்திலே நீயும் தாத்தா ஆயிருவே. பொறுப்புத் தீந்திரும்.**

**நான் இனிமே கலியாணம் களிச்சு பிள்ளை பெறணும். என்னத்துக்குப்பா இந்த உவத்திரவம்? யாரு அளுகா இப்பம் கலியாணமும் காடாத்தும இல்லேன்னுட்டு... ஆமா... இப்பிடியே அங்கின இங்கின மேஞ்சுக்கிட்டு காலத்தை ஒட்டிரலாம்னு பாக்கே... உங்கிட்டே போயி இவ்வளவு நேரம் ஆவியை விட்டேன் பாரு... குத்தாலம் இன்னுமொரு பீடியைப் பற்ற வைத்துக் கொண்டான். சரி, அதை விடு... ஒரு நாளைக்கு சந்தவிளைக்கப் போயி மாலைப்பயினி குடிக்கணும். கூட்டுட்டுப் போ... ஒரு மண்ணாங்கட்டி பயினியும் நி குடிக்காண்டாம் பொறப்பிட்டு பம்பாய்க்குப் போய்ச் சேரு... நாராயணனுக்குச் சிரிப்பு வந்தது.”** [79]

நாராயணனும் குத்தாலமும் திருமணத்தைப் பற்றிப் பேசுகிறார்கள். நாராயணனுக்கு வயதானாலும் அங்க இங்க போகாம இருக்கக் கல்யாணம் தேவை என்று குத்தாலம் வலியுறுத்துகிறான். பேச்சை மாற்றிய நாராயணன் மலைப் பகுதி பற்றிப் பேசி நகைச்சுவை காண்கின்றான்.

**பயண விளக்க நடை**

ரயில் பயணத்தில் எற்படும் அனுபவமே. மற்ற எல்லாவித வாகன அனுபவங்களை விட விறுவிறுப்பானது என்று ஆய்வாளர்கள் கூறியுள்ளனர். குத்தாலமும் பால்ராஜும் ரயில் பயணத்தில் புரிதலோடு சென்றிருப்பதாக ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

**“முழு வண்டியும் காலியாக இருந்தது. ஏர் பேக்கையும் சூட்கைசையும் கால்களுக்கு அடியில் தள்ளி விட்டு, தண்ணீர் பாட்டிலையும் சோற்றுப் பையையும் சாயாமல் வைத்து விட்டு, சன்னலோர இருக்கையில் அமர்ந்தான். வண்டி நகர, குத்தாலத்துக்கும் பால்ராஜுக்கும் கை காட்டி விட்டு வெளியே பார்க்க ஆரம்பித்தான். இனி வழி நெடுகத் திருவனந்தபுரம், கொல்லம், காயங்குளம், கோட்டயம், எர்ணாகுளம் என்று வண்டி நிறைந்து நிறைந்து, பாலக்காட்டில் பொங்கி வழியும், இரண்டு பகல்களை ரயில் பிரயாணத்தில் தாட்டுவது என்பது லேசான**

**காரியமில்லை. குடும்பத்தோடு வருபவருக்கு அவரவர் காரியம் இருக்கும். குழுக்களாக வருபவர் சீட்டுக் களிப்பார்கள். மறைவாக விஸ்கி, பிராந்தி கடித்துக் கும்மாளம் செய்வார்கள். சாயாக்காரணை, சாத்துக்குடி வியாபாரியை எத்திப் புளகம் அடைவர்.''**[80]

ஆசிரியர் ரயில் பயணத்திற்கேற்ப நடையினைக் கையாண்டுள்ளார். திருவனந்தபுரம், கொல்லம், காலங்குளம், கோட்டயம் என்று ஊரின் பெயர்களை வரிசைப்படுத்தி, ரயில் பயணத்தை நேர்த்தியான நடையில் ஆசிரியர் எழுதியுள்ளார்.

**வாழ்வியற் சிக்கல்**

கதையின் போக்கிற்கேற்ப வாழ்வியல் சிக்கல்கள் மாறும். நடைமுறையில் நிகழும் வாழ்வியல் சிக்கல்கள் பொதுத்தன்மை கொண்டவை. வேலையில்லாத இளைஞனும் அவனது பொருளாதாரச் சிக்கலும் அவமானமும் இந்நாட்டில் அன்றாட வாழ்வியல் சிக்கலாகப் போய்விட்டது என்பதனை ஆசிரியர் உரையாடல் மூலம் நன்கு விளக்குகின்றார்.

**''ஒரு பி.ஏ., படித்தவன் வேறு என்னதான் செய்ய முடியும்? அப்பா சொல்கிறார் – பால் மாட்டுக்கு ஒரு கட்டு புல் அறுத்துக் கொண்டு வந்து போடு. மாடுகளைக் குளிப்பாட்டிக் கட்டு தெக்கு மடையிலே தெவக்கம் கெடக்காண்ணு பாத்துக்கிட்டு வந்திரு. அவன் புறுபுறுத்துக் கொண்டேயானாலும் செய்யத்தான் செய்கிறான். இப்போதெல்லாம் விண்ணப்பம் அனுப்ப பணம் பெயருவதே பெரிய பாடாக இருக்கிறது. அப்பா சாப்பிடும்போது வேறெங்கோ திசையில் பார்த்துக் கொண்டு கதவு நிலையைப் பற்றிக் கொண்டு... ஸ்டேட் பேங்குக்கு அப்ளிகேஷன் போடணும். நாப்பது ரூவா வேணும் சவத்தை ஒரு முளு நோட்டாக் கேளேன் நான் என்னா சினிமா பாக்கதுக்கா கேக்கேன். முப்பது ரூபா போஸ்டல் ஆடர். அதுக்கு கமிஷன் ரெண்டு மூணு சர்ட்டிபிகேட்டை டைப் அடிச்சு அட்டெஸ்ட் செய்யணும். எல்லாம் ரெசிஸ்தர் பண்ணி அனுப்பணும். எல்லாம் இதுவரைக்கும் அனுப்பினது போரும்... வேலை வச்சுக்கிட்டு**

**காத்துக்கிட்டு இருக்கான்... பிறகு அம்மாவிடம் அதட்டலாகவும் மிரட்டலாகவும் இரங்கியும் இறங்கியும் நாலைந்து தடவை பேசினால் முபபத்தஞ்சு ரூபாய் கிடைக்கும். சர்டிபிகேட் அட்டெஸ்ட் பண்ணித்தர ஜூனியர் என்ஜினியருக்கு ஐந்து ரூபாய் என்று ரேட் ஆகி விட்டது. சர்க்கார் ஆஸ்பத்திக்குப் போனாலும் போஸ்டாபீஸுக்குப் போனாலும் இதுதான் கதை.”**[91]

பட்டம் வாங்கிய ஓர் இளைஞன் வேலையில்லாமல் சொந்த வீட்டிலேயே எவ்விதம் அவமானப்படுத்தப் படுகிறான் என்பதனை ஆசிரியர் படம் பிடித்துக் காட்டுகின்றார். வேலை வாய்ப்புத்தேடி குறைந்த பட்ச பணமில்லாமல் அவன் தவிக்கும் தவிப்பை ஆசிரியர் நன்கு பதிய வைக்கின்றார். அரசாங்க அதிகாரிகள் லஞ்சம் கேட்டபதையும் ஆசிரியர் சமூகப் பார்வையோடு வாழ்வியல் சிக்கலாகச் சுட்டிக் காட்டுகின்றார்.

**பாடல் வருணனை**

கதைக்களத்தில், வேறு மாநிலதத்தின் பூகோள மாற்றங்கள் ஆசிரியரால் விளக்கப்படுகின்றன. அங்குள்ள இயற்கை வளங்களின் தன்மையும் நிலையும் குறிப்பிடப்படுகின்றன. வேறு நிலத்திலுள்ள கடலின் தன்மையினை ஆசிரியர் துல்லியமாக விவரிக்கின்றார். மக்களால் அவை எவ்விதம் தனது எழிலை இழந்துள்ளது எனக் குறிப்பிடுகின்றார்.

**“இங்கே கடல் கன்னியாகுமரிக் கடல் போல சௌந்தர்யம் கொண்டதல்ல. குறைப்பிரசவக் குழந்தை போல பயங்கரமும் ஆபாசமும் கொண்டதாக இருந்தது. கடல் மட்டம் ஏறியிருந்தால் இந்தக்கதி. இறங்கி இருந்தால் கேட்கவே வேண்டாம். கோரமாக இளித்தது. நகரத்தின் கசடுகள், அழுக்குகள், டீசல் மிதப்புகள், ஒரு விதமான துர்நாற்றம் கொண்ட காற்று இந்தக் காற்று உடலை மனதை மாசு படுத்தும். ஆராக்கியம் கெடுக்கும். இளநீர்க் கதம்பைகள், மக்காச் சோளக் கதிர்கள், உடைந்த பிளாஸ்டிக்**

**சாமான்கள், காய்ந்த மலர் மாலைகள் என்று என்னவெல்லாமோ மிதந்தன.”[82]**

மக்களின் அலட்சியத்தாலும் அரசியல்வாதிகளின் அக்கறை இல்லாத் தன்மையாலும் முதலாளிகளின் கவலையில்லாத் தன்மையாலும் கடலில் எண்ணெய் மிதப்புகளும் பிளாஸ்டிக் பொருட்களும் மிதந்தன என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். இயற்கை வளத்தை அலட்சியப் படுத்தினால் இயற்கை நம்மை அலட்சியப்படுததும் என்று எச்சரிக்கின்றார்.

**தத்துவ நடை**

கதையில், அது செல்லும் போக்கில், நிரம்பக் கருத்துகளையும் தத்துவங்களையும் கதாசிரியர்கள் கையாளுவார்கள் கதாசிரியர் முற்போக்கான எண்ணமும் கொண்டவராக இருப்பின், கதாசிரியர் கொள்கை கோட்பாடுகள் கதா மாந்தர்களின் மூலம் வெளிப்படும் நாஞ்சில் நாடன் முற்போக்குச் சிந்தனையாளராக இருப்பதால், தனது புதினங்களில் முற்போக்குச் சிந்தனைகளை அமைத்துக் கொண்டு போகின்றார். ஆசிரியர் கம்யூனிஸ்ட்டு களைப்பற்றிக் கூறுகின்றார். சுரண்டலற்ற சமதர்ம சமுதாயம் அமைய வேண்டும் என்பதற்காகவே காரல்மார்க்ஸ் கம்யூனிசம் என்ற அறிவியல் பூர்வமான பொருளாதாரத் தத்துவத்தை உருவாக்கினார். அதனைப் பின்பற்றுபவர்கள் கம்யூனிஸ்டுகள் எனப்பட்டனர். அதனைப் பின்பற்றிய தலைவர்களையும் ஆசிரியர் கதையில் குறிப்பிடுகின்றார்.

**“காமாட்சியின் அப்பா ஆர்.வி.மில்லில் கார்டிங் செக்ஷனில் ஜாபராக இருந்தார். பெரிய கம்யூனிஸ்ட், நிறையப் படிப்பார். ஊருக்கு விடுமுறையில் வரும்போது, சாப்பிட்டுவிட்டு சாத்தாங்கோயில் படிப்புரையில் துண்டு விரித்துப் படுக்கும்போது எஸ்.ஏ.டாங்கே புத்தகமோ ஏ.கோ.கோபாலன் புத்தகமோ கையில் இருககும் ஆர்.வி.மில்லில் ஒரு முறை வேலை நிறுத்தம் நடந்தபோது இரண்டு மாதங்கள் ஊரில் தங்கியிருந்தார். அப்போது பேசிப் பழக்கம் உண்டு. எல்லோரும் ‘கரட்டுக் கம்புக்கு முரட்டுக் கோடாலி’ என அரசியல் பேசும்போது அவர் புள்ளி விவரங்கள் நிறையக் கொடுப்பார்.” [83]**

காமாட்சியின் அப்பா கம்யூனிஸ்ட்காரராக இருப்பதால், கம்யூனிஸ்ட் கட்சிகளின் தலைவர்களான எஸ்.ஏ. டாங்கே பற்றியும் ஏ.கே.கோபாலனைப் பற்றியும் அவர்களின் புத்தகங்கள் மூலம் தெரிந்து வைத்திருக்கின்றார். தொழிலாளியாக இருப்பினும் பட்டம் படித்தவர்களுக்கும் தெரியாத புள்ளி விவரங்களைப் பேசும் வாய்ப்பை அவர் கம்யூனிஸ்டுகளிமிருந்து கற்றிருந்தார் என்பது ஆசிரியரின் நடையின் மூலம் தெரிய வருகின்றது.

**உரைநடை**

கதையில் உரைநடை ஆசிரியரின் அனுபவத்திற்கேற்ப சரளமாக வருவதுண்டு. கதாபாத்திரத்தின் தன்மைக்கேற்ப உரைநடையைக் கையாண்டால்தான் படிப்போர் மனதில் நிகழ்வுகள் பதியும். உரைநடையில் தொய்வின்றிச் சொற்களைத் தொகுப்பதே முதன்மையாகக் கருதப்படுகின்றது. ஆசிரியர் இக்கதையில் தனது உரைநடை வேகத்தை நன்கு வெளிப்படுத்தியுள்ளார்.

> **“எத்தனைலே படிக்கே...?........ ஒம்பது படிக்கவனா ஒன்பது ஊரான் தோட்டத்திலே களவாங்கப் போனே? வாத்தியான் இப்பிடித்தான் படிப்பிக்கானா? .................. வாயைத் தொறந்து சொல்லாம்லே... ஏன் தோப்புக்குள்ள போனே? பாட்டா..... தெரியாம... தெரியாம என்னலே தெரியாம... ஊரான் மொதலுண்ணா உப்புப் போடாமத் திங்கலாம்.... பாட்டன் படிப்பிச்சானா? சொற்கள் தொண்டைக் குழியில் தடுக்கி உள்ளேயே விழுந்தன சுடலையாண்டிக்கு. ஓடுலே செறுக்கி மவனே... தோப்புக்குள்ளே இனி காலை வச்சே, முட்டுக்குக் கீழே மொறிச்சிருவேன். அபபன் பேரு தெரியாத பயலுக்கு ஆசை... ஓடுலே இங்கேருந்து...”[84]**

ஒன்பதாம் வகுப்புப் படிக்கும் சுடலையாண்டி ஆசைப்பட்டு பாட்டாவின் தோட்டத்திற்குள் சென்றுவிடுவதையும் பாட்டா அவனைக் கேவலமாகத் திட்டுவதையும் உரைநடையில் ஆசிரியர் நறுக்கென்று கூறியுள்ளார். ‘அப்பன் பேரு தெரியாதபய’ என்ற வார்த்தையில் ஆசிரியர் சுடலையாண்டியின் எல்லாவித அவமானத்தையும் அடக்கிவிட்டார்.

**நினைவலை நடை**

கதையில் வரும் சில கதபாத்திரங்கள் தங்கள் நினைவுகளில் திளைத்து அடிக்கடி தங்களை மறந்துபோவதாகக் கதாசிரியர்கள் சித்தரிப்பார்கள். சுடலைபாண்டியும் தனது பாட்டாவுடன் போடும் வேளையில், தனது பழைய இந்தி டீச்சரைக் கண்டு நினைவலைக்குள் செல்வதாக ஆசிரியர் நினைவலைகளைத் தக்க இடத்தில் புகுத்துவது ஆசிரியரின் திறனாகும். நாஞ்சில் நாடன் தனது புதினத்தில் நன்கு வெளிக்காட்டியுள்ளார்.

இந்திப் பாடத்தில் இது வழக்கம். திடீரென்று வாசிக்கச் சொல்லுகையில் படிக்கத் தெரிய வேண்டுமே டீச்சர் பெயர் சொன்னவுடன் எழுந்து நின்றான். கையில் தூக்கிப் பிடித்த புஸ்தகம். வாயிலிருந்து சொல் ஏதும் பெயரவில்லை.

> **“ம்..... வாசி..... ........................ சும்மா நிண்ணா எப்பிடி? வாசி....? சுடலையாண்டி மனதுள் ஒரு தீர்மானம். இவளை ஒரு கை பார்த்து விடுவது. தெரியல்லே.... தெரியல்லேண்ணா எப்பிடி? தெரியாட்டா எப்பிடி வாசிக்கது? வகுப்பு முழுவதும் நிமிர்ந்து சுடலையாண்டியைப் பார்த்தது. இவன் ஒரு போருக்குத் தயாராகி இருக்கிறான் என்பதை உணர்ந்த இந்தி டீச்சரின் முகம் சிவந்தது. இவனை என்ன செய்வது? சரி. இன்னொருக்க படிக்கேன்... கெவுனி.... இல்லே.... ஆவுடையம்மை படி..... நல்ல ஒறச்சுப் படி.... தெரியாதவாளுக்கெல்லாம் கேக்கட்டும்.... சுடலையாண்டி, பாடத்தைப் பாரு.... தலையை ஒரு வெட்டுவெட்டி, இரட்டைச் சடையைக் குலுக்கி, நிமிர்ந்து படிக்கத் தொடங்கினாள், ஆவுடையம்மாள். கவனிப்பது போல் சுடலையாண்டி பாவனை செய்தான். படித்து முடித்துவிட்டு மிகுந்த கௌரவத்துடன் உட்கார்தாள். சரி.... இப்பம் படி சுடலையாண்டி.... சுடலையாண்டி எழுந்து நின்றான், நெடுமரம் போல். அவன் அடம் டீச்சரை முகம் சிவக்கச் செய்தது. கண்களில் நீர் சுரந்தது. சற்று நேரம் நாற்காலியில் அமர்ந்து பராக்குப் பார்த்தாள். தன்னுள் ஒரு இரக்கம் சுரப்பதைச் சுடலையாண்டியால் உணர முடிந்தது. வேண்டும் உனக்கு.**

**நன்றாக வேண்டும். வகுப்பு திகைத்து உட்கார்ந்திருந்தது. சுடலையாண்டியிடம் எதிர்பார்க்காத ஒன்று. அவனைப் பார்த்து முகத்தை வலிப்புக்காட்டி, பக்கத்தில் இருந்த பாலாம்பாளிடம் கிசு கிசுத்தாள் ஆவுடையம்மாள். மறுபடி தொடர்ந்த இந்தக் கதை காரணமாக இவனைப் பார்த்ததும் இந்தி டீச்சருக்கு ஒரு அலட்சியம். மற்ற மாணவர்களைப் போல் இவனும் வினாக்களையே திரும்பவும் விடைத்தாளில் வரைய ஆரம்பித்தான். மாதத் தேர்வுகளில் சைபர்கள் கிடைத்தன. ஆனால் அரசாங்கத் தேர்வு எழுதி, சான்றுப் புத்தகம் வந்த போது, டீச்சருக்கே ஆச்சரியமாக இருந்தது. அறுபத்தெட்டு மதிப்பெண்கள் வந்திருந்தது. எல்லா ஆசிரியர்களிடமும் சொல்லிக் கொண்டு புறப்பட்டது போல், இறுதியில் இந்தி டீச்சரையும் பார்த்தபோது, சுடலையாண்டிக்கு வெட்கமாக இருந்தது. நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு நேர்ந்த அந்தச் சந்திப்பின் முடுக்கத்தில் பழைய ஞாபக அலைகளிடையில் சுடலையாண்டி தாத்தாவுடன் நடந்தான்.”**[85]

சுடலையாண்டியின் நினைவலைகளில் தான் இந்திப் பாடத்தில் பலவீனமாக இருந்து, முடிவில் நல்ல மதிப்பெண்கள் எடுத்துள்ளதை அவன் நினைப்பதைாக ஆசிரியர் கதையில் எடுத்துரைக்கின்றார். சுடலைபாண்டியின் முயற்சியும் வெற்றியும் உணர்த்தப்பட்டுள்ளன. சுடலையின் கதாபாத்திரத் தன்மை நன்கு வெளிப்பட்டுள்ளது. இந்திப் பாடம் அப்பொழுதே பள்ளிகளில் இருந்துள்ளதை ஆசிரியர் எடுத்துக் கூறுகிறார்.

**நனவோடை பால்ய நிலை**

கதாபாத்திரத்தின் பால்ய கால நினைவுகள் வந்து போவதாக கதாசிரியர் கற்பனை செய்து கதைக்கு உரமூட்டுவர். நனவோடை உத்தியில் ஆசிரியர் தனது கதாபாத்திரத்தின் தன்மையை உயர்த்துவர். கதாபாத்திரத்தின் உணர்ச்சிகளை படிப்போர் மனதில் பதியவைக்க நனவோடை நிலையை ஆசிரியர் கையாள்வர். நாஞ்சில் நாடன் அவர்களும் இவ்வுத்தியைக் கையாண்டுள்ளார்.

**“வாசலில் அரவம் கேட்டு ஆத்தா வெளியே எட்டிப் பார்த்தாள். சுடலையாண்டி படிப்புரையில் போய் அமர்ந்தான். அவன் முகத்தைக் குறுகுறுத் ஆத்தா கேட்டாள். என்ன சண்டைலே ஆத்திலே? ஒண்ணுமில்லே... என்ன ஒண்ணுமில்லே....? எல்லா செறுக்கி வின்ளைகளும் சேர்ந்து உன்னை அடி அடிண்ணு அடிச்சானாமே... நீ பாத்துக்கிட்டா நிண்ணே? செறுக்கி விள்ளைகளுக்கு ஒத்தைக் கையைக் காலை முறிக்க வேண்டியதுதானே? சவங்கோ திண்ணு கொளுத்துப் போச்சு... ஒண்ணும் இல்லாத்தா... ஏன் இப்பம் அவயம் போடுக? சவத்தைத் தள்ளு... சவத்தைத் தள்ளவா? நீயும் அந்த அப்பனைப் போலத்தான் வந்து வாச்சிருக்கே. எவனும் அடிச்சா பட்டுக்கிட்டு வருவயாக்கும்? மாறி நாலு குடுக்கதுக்கு என்னா?**

**சரி, அந்தால விடு.... போட்டு நூத்துக்கிட்டே இருக்காதே...! திங்கத்துக்கு என்னவாம் இருக்குண்ணா தா.... திங்கத்துக்கு என்ன இருக்கு? காப்பக்கா குறுணை கடன் வாங்கி கஞ்சி வச்சிருக்கேன். உப்பு மொளகு நுணிக்கி வச்சிருக்கேன். தொட்டுக்கிட்டு குடி... இரண்டு அகப்பை குறுணைக் கஞ்சியைத் தட்டத்தில் விட்டுக் கொண்டு, உப்பு மிளகை விரலால் தொட்டுக் கொண்டு கஞ்சியைக் குடிக்கையில் ஆத்தா ஏதாவது குடித்திருப்பாளா என்று தோன்றியது”**[86]

சுடலையாண்டியின் பால்யகால நினைவுகள் வெளிப்படுத்தப் பட்டுள்ளன. சுடலைபாண்டி மற்ற பிள்ளைகளிடம் அடிவாங்கி வருவதும் அதன் பின்பு கஞ்சியைக் குடிப்பதும் நிகழ்வுகளாகி உள்ளன. சுடலை உண்பதற்காக அவன் தாய் குறுணையைக் கடன் வாங்கிக் கஞ்சியாகக் காய்ச்சி வைத்திருப்பதாகவும் அதற்கு உப்பு மிளகை நுணுக்கி வைத்திருப்பதாகவும் ஆசிரியர் தெரியப்படுத்துகின்றார். கிராமப்புறத்து ஏழ்மையும் வாழ்க்கையும் உணர்த்தப்பட்டுள்ளன.

# தொகுப்புரை

❖ இலக்கியங்களில் கதைகளை சொற்களின் மூலமே விவரிக்க இயலும். கதையின் தன்மை, கதை நடைபெறும் களம், கதை மாந்தர்களின் குணநலன், இயற்கைச் சூழல், மாந்தர்களின் உணர்ச்சி வெளிப்பாடு என்று அனைத்தையும் சொற்களால் மட்டுமே விளக்க முடியும். எழுத்தாளர் கதையைக் கூற பயன்படுத்தும் சொற்களைத் தேர்ந்தெடுக்கும் முறைமையே அவரின் நடை எனப் போற்றப்படுகின்றது.

❖ இலக்கியங்களில் இன்றைய சூழ்நிலையில் பல்வேறு வகையான மொழிநடைகள் காணப்படுகின்றன. படைப்பாளனின் நடை சுருங்கியும் விரிந்தும் செல்லும் படைப்பாளனின் நடையைப் பின்வரும் நிலைகளில் வைத்து அமைத்துக் கொள்ளலாம்; ஆசிரியரின் காலம், கதை நிகழும் இடம், நோக்கம் ஆகியவற்றைப் பொருத்தே நடையின் வகைகள் வேறுபடுகின்றன. அந்த நடையே ஒரு படைப்பாளனை அடையாளப்படுத்தும். நடையின் வகையினைக் காலமும் தீர்மானிக்கின்றது. ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழில் நிலவி வந்த நடையினை, "உரை வகை நடையே நான்கென மொழிப" என்று தொல்காப்பியம் குறிப்பிட்டுள்ளது.

❖ கிராமிய நடையைக் கையாள்பவர்கள் அந்த வட்டார மரபை நன்கு அறிந்திருக்க வேண்டும். அந்த மண்ணோடு ஒன்றிக் கலந்து உறவாடியிருக்க வேண்டும். மண்ணை அறியாமல் அங்குள்ள மக்களைக் கதை மாந்தர்களாக சித்தரிக்க இயலாது.

❖ கிராமிய வட்டாரங்களில் மூடநம்பிக்கை வேரூன்றி இருப்பது நடைமுறையாகும். கிராமிய மக்களின் எண்ணங்களும் மூட நம்பிக்கைகள் பால் ஈர்க்கபட்டுவிடும். கிராம மக்களின் அனுபவத்தைக்கேற்ப சித்தாந்தங்களும் கொள்கைகளும் உணரப்படும் சித்தரைப் பற்றிய வரையறையும் ஆசிரியரால் இவ்விதமே விளக்கப்பட்டுள்ளது. வட்டார வழக்கில் அறியாமையும் மண்டிக்கிடக்குமென்பது ஆசிரியரின் கருத்தாகும்.

- ஆசிரியர் சூழலை விவரிக்கும் நடை, சொல்லாட்சி, கதாப்பத்திர மனவெளிப்பாடு, சூழ்நிலைக்கருதி நாவலில் பழமொழிகளைப் பயன்படுத்துதல், உணர்ச்சியான கதை ஓட்டத்தினைக் கொண்டு நாவலைப் படைத்தல், துணைமை மாந்தர்களை உலவவிடும் உத்தி அதனோடு இயற்கை நிகழ்ச்சிகளையும் இணைக்கும் பாங்கு போன்றவைகளின் மூலம் ஆசிரியர் தனக்கென தனித்தஅடையாளத்தோடும் எளிய சொல்லாட்சியும் கருத்துக்களை கணமாக வாசகர் நெஞ்சில் பதிய வைக்கும் எழுத்து போன்றவை பிற படைப்பாளர்களிடம் இருந்து நாஞ்சில் நாடனின் வேறுபடுத்திக்காட்டுகிறது. மேலும் உவமை, உருவகம் ஆகியவற்றை நாவலில் அளவறிந்து பயன்படுத்தியுள்ள பாங்கு போற்றத்தக்கதாகும்.

# அடிக்குறிப்புகள்

1. கோ.வே.கீதா, தமிழ் நாவல்கள், ப.171
2. அகிலன், கதையும் கருத்தும், ப.18
3. தீராநதி, 2004, ப.6
4. அகிலன், ப.54
5. தொல்காப்பியம், செய்யுளில் நூர.420.
6. நாஞ்சில் நாடன், தலைகீழ் விகிதங்கள், ப.12
7. நாஞ்சில் நாடன்,
8. நாஞ்சில் நாடன், தலைகீழ் விகிதங்கள், ப.19
9. நாஞ்சில் நாடன்,
10. நாஞ்சில் நாடன், தலைகீழ் விகிதங்கள், ப.33
11. நாஞ்சில் நாடன், மாமிசப் படைப்பு, ப.33
12. நாஞ்சில் நாடன், தலைகீழ் விகிதங்கள், ப.15
13. மேலது, ப.15
14. மேலது, ப.47
15. மேலது, ப.49
16. மேலது, ப.57
17. மேலது, ப.261
18. மேலது, ப.23
19. மேலது, ப.63
20. மேலது, ப.143
21. மேலது, ப.70
22. நாஞ்சில் நாடன், மாமிசப் படைப்பு, ப.27
23. நாஞ்சின் நாடன்,
24. நாஞ்சின் நாடன்,
25. நாஞ்சில் நாடன், நற்றமிழ் அமுதென்றும் ஒன்று, ப.30
26. நாஞ்சில் நாடன், மாமிசப்படைப்பு, ப. 12,13

27. மேலது, ப.125

28. நாஞ்சில் நாடன், மிதவை, ப.11

29. மேலது, ப.126

30. நாஞ்சின் நாடன், என்பிலாதனை வெயில் காயும் ப.54

31. மேலது, ப.100

32. நாஞ்சின் நாடன், தலைகீழ் விகிதங்கள், ப.48

33. மேலது, ப.45

34. மேலது, ப.142

35. மேலது, ப.202

36. மேலது, ப.202

37. நாஞ்சின் நாடன், மாமிசப் படைப்பு, ப.67

38. நாஞ்சின் நாடன், சதுரங்கக் குதிரை, ப.34,35

39. மேலது, ப.59

40. மேலது, ப.99,100

41. நாஞ்சில் நாடன், ப.110, 9.11.2006

42. நாஞ்சில் நாடன் ப.3

43. நாஞ்சில் நாடன், என்பிலதனை வெயில் காயும், ப.77

44. மேலது, ப.39

45. நாஞ்சில் நாடன், தலைகீழ் விகிதங்கள், ப.50

46. நாஞ்சில் நாடன்,

47. மேலது, ப.189

48. நாஞ்சில் நாடன், மாமிசப் படைப்பு, ப.29

49. மேலது, ப.74

50. நாஞ்சில் நாடன், மிதவை, ப.23

51. நாஞ்சில் நாடன், என்பிலதனை வெயில் காயும், ப.133

52. தி.சு.நடராசன், தமிழ் அழகியல், ப.9

53. நாஞ்சில் நாடன், தலைகீழ் விகிதங்கள், ப.81

54. மேலது, ப.82

55. மேலது, ப.194

56. மேலது, ப.67

57. மேலது, ப.65

58. மேலது, ப.93

59. மேலது, ப.163

60. மேலது, ப.191

61. மேலது, பக்.193–194

62. மேலது, ப.257

63. மேலது, ப.207

64. நாஞ்சில் நாடன், சதுரங்கக்குதிரை, ப.19

65. நாஞ்சில் நாடன், என்பிலதனை வெயில் காயும், ப.27

66. நாஞ்சில் நாடன், தலைகீழ் விகிதங்கள், ப.141

67. நாஞ்சில் நாடன், மாமிசப் படைப்பு, ப.12–13

68. நாஞ்சில் நாடன், சதுரங்கக்குதிரை, ப.124

69. நாஞ்சில் நாடன், மிதவை, ப.83

70. நாஞ்சில் நாடன், என்பிலதனை வெயில் காயும், ப.58

71. நாஞ்சில் நாடன், தலைகீழ் விகிதங்கள், ப.202

72. நாஞ்சில் நாடன், மாமிசப் படைப்பு, ப.31

73. மேலது, ப.79

74. நாஞ்சில் நாடன், சதுரங்கக்குதிரை, ப.25–26

75. மேலது, ப.97

76. மேலது, ப.54

77. மேலது, ப.62

78. நாஞ்சில் நாடன், மிதவை, ப.14

79. மேலது, ப.57

80. நாஞ்சில் நாடன், மிதவை, ப.121

81. நாஞ்சில் நாடன், என்பிலதனை வெயில் காயும், ப.86

82. மேலது, ப.83

83. மேலது, ப.87

84. மேலது, ப.170

85. மேலது, ப.125

86. மேலது, ப.178

# இயல் – ஐந்து

# சமூக வாழ்வியல் கூறுகள்

மனித சமூகம் ஒருங்கிணைந்து வாழத்தொடங்கிய பிறகு தன் மகிழ்ச்சி, உள்ள எழுச்சியைக் கொண்டாடும் வகையில் பல்வேறு வகைப்பட்ட விழாக்களையும் பண்டிகைகளையும் சடங்குகளையும் பழக்க வழக்கங்களையும் ஏற்படுத்திக் கொண்டனர். அவை வாழ்வில் நீண்ட நெடுந்தூரம் பயணிக்கக்கூடிய வாழ்வியல் கூறுகளாக மனப்பதிவுகளாகப் பதிந்துபோயின. குடும்பம், கிராமம், நாடு என மக்கள் திரள் பரவலான போது இந்தப் பழக்கவழக்கங்களும் பண்டிகைகளும் சடங்குகளும் பரவலாயின. சடங்குகள் என்பது தனித்த குடும்பம் சார்ந்ததாகவும் விழாக்கள் பண்டிகைகள் என்பவை பொதுமை சார்ந்ததாகவும் வரையறுக்கப் பெற்றன. இவற்றுடன் தனிதனி வாழ்வும் அவன் எதிர்கொள்ளும் வாழ்வியற் கூறுகளாக இடம் பெற்றன.

பிறப்பு முதல் இறப்பு வரையிலும் ஒரு மனிதனின் வாழ்வியல் நடைபெறும் அனைத்து நிகழ்வுகளையும் வாழ்வியல் கூறுகளாகப் பதிவு செய்யலாம். இத்தகைய வாழ்வியல் கூறுகள்தான் படைப்பிலக்கியத்திற்குத் தூண்டுகோலாக அமைகின்றன. சமூகத்தில் நடைபெறுகின்ற நிகழ்வுகளால் ஈரக்கப்படுகின்ற, பாதிக்கப்படுகின்ற படைப்பான அதனைத் தனது படைப்புத்திறன் மூலமாக இலக்கியமாக மாற்றிவிடுகிறான். படைப்பாளி தான் படைத்துக் காட்டுகிற இலக்கியத்தின் மூலமாக தான் வாழும் பகுதியில் மண்ணையும் மக்களையும் அவர்களின் பண்பாட்டு வாழ்வியற் நெறிகளையும் பதிவு செய்கிறான். இவைதான் காலப்போக்கில் ஓர் இன மக்களின் வரலாற்றுப் பெட்டகமாக மாறுகின்றன.

ஓர் இலக்கியவாதி எந்தப் பகுதியில் வாழ்கிறானோ அந்த வட்டாரத்தைப் பின்னணியாகக் கொண்டு கதையை நிகழ்த்துகிற பொழுதுதான் அவன் படைக்கின்ற படைப்புகள் நம்பகத்தன்மை நிறைந்ததாகத் திகழும். உலகில் அனைத்துப் பகுதியிலும் மனிதகுலம் வாழ்ந்தாலும் ஒரு பகுதியில் வாழும் மனிதனுக்கும் பிறிதொரு பகுதியில்

வாழும் மனிதனுக்கும் இடையே பண்பாட்டுப் பழக்கவழக்கங்கள் நம்பிக்கைகள் முதலியவற்றில் வேறுபாடுகள் திகழ வாய்ப்புள்ளன. எனவே ஒரு படைப்பாளன் தான் வாழும் பகுதியின் அந்தப் பகுதி மக்களின் பண்பாட்டு விழுமியங்களைப் படைப்பாக்குவதே அந்த மக்களின் வாழ்விற்கு நியாயம் கற்பிப்பதாகவும் உண்மை நிறைந்ததாகவும் திகழும். அந்த வகையில் நாஞ்சில் நாடன் தன் படைப்புகளில் படைத்துள்ள நாஞ்சில் நாட்டு மக்களின் சமூக பண்பாட்டு பழக்க வழக்கங்களை ஆராய்வதாக இந்த இயல் அமைகின்றது.

**தமிழர் வாழ்வு**

> **“இக்காலத்தில் நகரம், கிராமம் என மக்களின் வாழ்விடத்தை அடிப்படையாகக் கொண்டு வாழ்க்கை முறை அமைந்திருப்பதைப் போன்று பண்டைக் காலத்தில் தமிழ்நாட்டில் ஐவகை நிலத்தை வாழ்க்கை முறை நிலவியது.**
>
> **மலையில் தோன்றிய ஆறு (குறிஞ்சி) கீழ் இறங்கிக் குதித்துச் சென்று (முல்லை) பெருக்கெடுத்து ஓடி (மருதம்) கடலில் சென்று கலக்கும் (நெய்தல்), இதன் அடிப்படையிலேயே பண்டைய மக்கள் தம் வாழ்க்கையை அமைத்துக் கொண்டனர். இந்நிலப் பாகுபாட்டைத் திணை என்று அழைத்தனர். அந்தந்த திணைக்குரிய நில அமைப்புக்கும் தட்ப வெப்பத்திற்கும் தக மக்களின் வாழ்க்கை முறை அமைந்தது.”**[1]

என்று கூறுகிறார். ஐந்திணையில் வாழும் மக்களின் வாழ்வு பல்வேறு உணவு, உடை, நடைமுறை பழக்கவழக்கங்களை உடையதாக இருந்தது.

> **“அகில், சந்தனம் போன்ற மரங்களை அழித்து, நிலம் திருத்தி தினையை விதைத்து உழவுத் தொழிலையும் செய்வர். தினைப்புனத்தைக் காப்பதிலும் வல்லவர்கள் கவண் எறிந்து கிளி ஓட்டியும், கிணைப்பறை முழக்கி யானையை விரட்டியும் காப்பர்.”**[2]

புலால் உணவு, மலைத்தானியங்கள், கிழங்கு, பழம், தேன் முதலியவற்றை உண்பர். தோப்பி என்ற கள்ளையும் விரும்பிக் குடிப்பர். மலைப்பொருள்களான

யானைக்கோடு, அகில், சந்தனம் போன்றவற்றைப் பிற திணையில் விற்று நெல் பெற்றுச் சென்று சமைத்தும் உண்பர்.

**திருமண வாழ்வு**

தமிழர்களின் திருமண வாழ்வில் சடங்கென்பது மிக முக்கியமான ஒன்றாகும். பருவமெய்திய ஒரு ஆணையும் பெண்ணையும் இல்லற வாழ்விற்குக் கட்டுவிக்கும் முயற்சியாக இந்தச் சடங்கு திகழ்கிறது. தலைகீழ் விகிதங்கள் புதினத்தில் சிவதாணு– பார்வதி திருமணத்தில் மிகக் கோலாகலமாக பார்வதியின் தந்தை நடத்திக் கொண்டிருக்கிறார். தமிழகத்தில் திருமணச் சடங்கு இரண்டு நாள் விழாவாகக் கொண்டாடப்படுகிறது. முதல் நாள் விழாவில் பெண் அழைப்பு வீட்டார் உறவினர்களும் கலந்து பழகுவதற்காக ஒரு வாய்ப்பினை ஏற்படுத்தப்படுகிறது. இருவீட்டாரும் ஓரிடத்தில் தங்கி கலந்து பேசி ஒருவருக்கொருவர் தங்கள் மன உணர்வுகளைப் பகிர்ந்து கொள்வதற்கு ஒரு வாய்ப்பாக அமைகின்றது. விருந்து, விழாக்கோலம், வண்ண ஊர்வலமாக ஒரு புத்துணர்ச்சிசோடு அந்த விழா நடந்து முடிந்து, அடுத்தநாள் காலையில் தாலி கட்டும் சடங்கு, அன்பளிப்புகள் வழக்கம், காலைச் சிற்றுண்டி என சிறப்பாக நடந்து முடிகிறது.

> **“பெண்ணை அழைத்துக் கொண்டு வந்தார்கள். ஆணும் பெண்ணுமாகச் சேர்ந்து செய்ய வேண்டிய வறட்டுச் சடங்குகள் ஒவ்வொன்றாக நடந்து கொண்டிருக்கின்றன. (பேழையில் மேல் விரிப்பு, அதன் மீது தாம்பூலத் தாம்பாளங்கள், சந்தனம், குங்குமம், பன்னீர், செப்பு, மேசையின் நேர் உயரே, பக்கச் சுவர் நிரைகளில் முகம் பார்க்கும் கண்ணாடி, வலதுபுறம் மகாத்மா காந்தி பொம்மை.**
>
> **பங்களாவின் கிழக்கு மூலையில் இருந்த தவில் நாதஸ்வரங்கள் சேர்ந்து முழங்கின. தவில்காரர் ‘திடும்’ ‘திடும்’ என்ற அறையும் ஓசை நெஞ்சில் விழுவதைப் போன்ற மயக்கம், அவன் கையில் மங்கல நாணைத் தந்தார்கள். கோயில்களில் ஆடு வெட்டிப் பலி செய்த பிறகு வெட்டில் கிடுகிடு, வெட்டால் கிடுகிடு ஓர் ஆயுத எழுத்தாக நின்றிருப்பான்.”**[3]

என்று சிவதாணுவின் மனநிலை பதிவு செய்யகிறார்.

சிவதாணு பணக்கார வீட்டில் மாப்பிள்ளையாவதின் வலியை, வேதனையை உணர்த்தி விடுகிறான்.

> **"வரவேற்பு முடிந்ததும் அதன்பிறகு செய்ய வேண்டிய சடங்குகள் நடைபெறத் தொடங்கின. நலங்கு, பூப்பந்து, பல்லாங்குழியின் தொடர்ச்சியாக நாலாநீர்; சுருள்; தாரை வார்ப்பு, பணம் பிடுங்வதற்காகப் பிள்ளையைப் பெற்றவர்கள் செய்கின்ற பீதி, செக்கு மாட்டைப் போல சுற்றிச் சுற்றி கமலை மாட்டைப்போல ஏறி இறங்கி, தகர்ந்து போகாத பழமையின் மரபுகள்"[4]**

என நாஞ்சில் நாட்டுப் பகுதியின், திருமணச் சடங்குகள் அனைத்தும் பதிவு சொல்லப்படுகின்றன. ஒவ்வொரு சடங்கின் பின்னாலும் ஒளிந்திருக்கின்ற குரூர எண்ணங்கள் வெளிப்படுகின்றன.

> **"பழக்க வழக்கங்களை நிர்ணயிப்பதில் புவியியல் சூழல் முக்கியப் பங்கு வகிக்கிறது"[5]**

என்று டாக்டர் நசிம்தீன் கருத்து இங்கு எண்ணத்தகுந்ததாகும்.

இத்தகையப் பழக்கவழக்கங்கள் எழுதி வைக்கப்படாத சட்டங்குகளாக சமூக வாழ்கையின் கட்டுப்பாடுகளாகத் திகழ்கின்றன. மேலும் இந்த சமூக ஒழுகலாறுகள் குறித்து க.காந்தி கூறும் கருத்தினை நோக்க வேண்டியுள்ளது.

> **"மக்களின் தேவைகளின் அடிப்படையிலேயே பழக்கங்கள் தோன்றுகின்றன. அவை சமுதாயத்தின் ஏற்றுக் கொள்ளப்படுகின்ற நிலையில் வழக்கங்களாக உருப்பெறுகின்றன."[6]**

என்னும் கருத்து பழக்க வழக்கங்கள் சமூகத்தில் எவ்வாறு நிலை கொண்டுள்ளன என்பதனைக் சுட்டிச் சொல்கிறது. வாய்ச்சிரிப்பில் தடி ஊன்றிக் கொண்டு, கண்ணாடியின் இடதுபுறம் வேறொரு படம். சொக்கலிங்கப் பிள்ளையின் அப்பாவாக இருக்கலாம். எப்படியோ, அன்று மகாத்மாவின் சரிநிகர் சமானமாகும் பேறு அவருக்கும் இருந்தது.

வந்திருந்தோர்களுக்கெல்லாம் காட்சி தந்து ஆசிபெற வேண்டி சிவதாணுவும் பார்வதியும் பந்தலுக்குள் வந்தார்கள். வாழ்த்துப்பாக்களின் மிகையானப் புகழ்ச்சிகள்.

ஒரு திருமணச் சடங்குகள் மூலமாகப் பதிவு செய்கிறார் நாஞ்சில் நாடன். ஒரு படைப்பு என்பது வாழ்வின் பிரதிபலிப்பே என்பதை இந்த நிகழ்வுகள் சுட்டிச் சொல்கிறது. இந்தத் திருமணம் பெண் வீட்டாரால் நடத்தப்பெறுகின்ற திருமணம் என்பதால் மாப்பிள்ளையாக சிவதாணுவின் மனநிலை தன் உற்றார் உறவினர் பெண் வீட்டாரால் காயம் பட்டுவிடக்கூடாது என்ற மனநிலையோடு விளங்குவது புதினத்தில் ஆங்காங்கே பதிவு செய்யப்படுகிறது.

**வரவேற்பு**

திருமணத்திற்கு முன்பு நடைபெறும் நிகழ்வாக வரவேற்பு நிகழ்வு உள்ளது. வரவேற்பு நிகழ்வு சிறப்பாக முடிந்தால் திருமணம் பெரும்பான்மையும் சிறப்பாக நடந்தேறியதாக இருக்கும். இந்த நிகழ்வில் உற்றார், உறவினர், சுற்றத்தினர், நண்பர்கள், உடன் பணிபுரிவோர் என அவைனரும் வருகை தந்து, அன்பின் வெளிப்படையாக பல பரிசுப் பொருட்களை வழங்கிவிட்டுச் செல்வார்கள். அந்த நிகழ்வில் அவரவர் தகுதிக்கு தக்கவாறு இசைநிகழ்சிகளும் பல்வேறு வகைப்பட்ட இலக்கியங்களின் சங்கமங்களும் இருக்கும். சிவதாணு, பார்வதி திருமண வரவேற்பில் தண்டபாணி தேசிகரின் தாமரைப் பூத்த தடாகமதில் பாடல் நாதசுரக் கலைஞரால் இனிமையாக இசைக்கப்பட்டது. இந்தப் பாடலின் மூலமாக (இசையும்) தமிழ் இனத்தின் மாண்பும் தமிழிசையின் பெருமையையும் எழுத்தாளர் நிலை நாட்டியுள்ளதை அறிய முடிகிறது.

வரவேற்பு பேழை, புதிய சூட் அணிந்து கழுத்தில் ரோஜாப்பூ ஆரம் அசைய சிவதாணு, பட்டுப்புடவையில் பளிச்சிடும் பார்வதி. சிவதாணுவின் தற்காலிகமாக ஒய்வில் இருந்தது. அவன் நண்பர்களும், கல்லூரிப் பேராசிரியர்களும் வந்து வாழ்த்துவிட்டுப் போன நிறைவு. அவர்கள் வந்திராவிட்டால் சொக்கலிங்கம் பிள்ளைக்கு வேண்டியவர்கள் அணியணியாய் இருக்கின்ற அந்தச் சூழ்நிலையில் இவ்வாறு தமிழர் வாழ்வில் திருமணச் சடங்கு முக்கிய இடம்பெற்று விளங்கியது.

**மறுவீடு**

திருமண விழா முடிந்தபிறகு மறுவீடுசெல்வது என்பது ஒரு சடங்காகும். தாலிகட்டி முடிந்த பிறகு மாப்பிள்ளை வீட்டிற்குச் சென்றவர்கள் ஓர் இனிப்பு, சிற்றுண்டிக்குப்பிறகு பெண் வீட்டிற்கும் செல்வார்கள். அங்கே பெண் வீட்டாரின் வசதி விருப்பத்திற்கேற்ப ஐந்து நாட்களோ ஏழு நாட்களோ தங்கிவிட்டு மீண்டும் மாப்பிள்ளை வீட்டிற்கு வருவது வழக்கம். இதையே மறுவீடு செல்வது என்பார்கள். அந்தச் சம்பவம் 'தலைகீழ் விகிதங்கள்' புதினத்தில் நாஞ்சில் நாடன் சிறப்புற பதிவு செய்துள்ளார்.

> **"இன்று அவர்கள் எல்லோரும் வீரநாராயண மங்கலத்துக்கு மறுவீடு போக வேண்டும். சுமார் பத்துப் பேர்தான் சுசீந்திரத்தில் இருந்து போவதாக இருந்தார்கள். சாதாரணமாக நாலு செம்பு அரிசி வைத்துக் கல்யாணம் நடக்குமானால், மறுவீட்டுக்கு மூன்று செம்பாவது வைக்க வேண்டும். சடங்குகள் அதிகம் இருக்காதே தவிர, அதுவே ஒரு முக்கால்வாசிக் கல்யாணம்தான்.**
>
> **ஆனால் அப்படி யார் வீட்டில் பணத்தையோ அடம்டபிடித்து வாங்கி வம்புக்கு வாரி இறைக்க சிதம்பரம் பிள்ளைக்கு விருப்பமில்லை. சிவதாணுவுக்கும் கூடத்தான். எனவே ஐந்து மரங்கள் அரிசி வைத்து, நெருங்கியவர்களை மட்டும் அழைத்து, மறுவீட்டை நடத்துவதாக இருந்தார்கள். பத்தரை மணிவரை இராகு காலம். ஆகையால் பெண்ணும் மாப்பிள்ளையும் அதன் பிறகுதான் புறப்படுவார்கள்.[7]**

என மறுவீட்டுச் சடங்கு திருமணத்தைப் போன்றே மிக முக்கியச் சடங்காக நடத்தப்பெற்றுள்ளதை அறிய முடிகிறது.

தமிழர்களின் வாழ்வில் இந்த திருமணச்சடங்கு பலநாட்கள் நடைபெற்று வரும் சூழ்நிலையில் நாகரிகம் போக்குவரத்துச் சூழல்கள் வளர்ச்சியடைந்த நிலையில் அது இரண்டு நாட்களுக்குள் சுருங்கிப் போனது. ஆனாலும் இந்த இரண்டு நாள் அங்கு பல்வேறு வகைப்பட்ட நிகழ்வுகளை உள்ளடக்கியதாக இருக்கிறது. முதல்நாள்

நிகழ்வான வரவேற்பில் வழங்கல் என்ற அடிப்படையில் சிறியதாக நடைபெற்றாலும் மொய்ப்பணம் வழங்கல் நிகழ்வு கோலாகலமாக நடைபெறும். உறவினர்கள் தங்கள் பணபலத்தினை இந்த நிகழ்வில் காட்டிக் கொண்டிருப்பார்கள் இந்தத் திருமணவிழாவில்,

> **“பெண் வீட்டார்கள் பணபலத்தைக் காட்டவோ என்னவோ அவர்கள் வைக்கும் சுருள்களின் வீக்கம் மாப்பிள்ளை வீட்டாரின் மூன்றும் ஐந்தும் ஏழும் நைந்து தேய்ந்து மெல்லிய குரலில் ஒலித்தன. அதைத் தொடர்ந்து வரும் இருபத்தி ஒன்றுகள் முப்பந்தி ஐந்துகள், அவை எழுப்பின மௌமான பணத்தையும் கொடுத்துவிட்டு இதைப் போய்க் கொடுக்க வேண்டியிருக்கிறதே என்ற தாழ்மை, தங்களைக் கூனிக் குறுகச் செய்யும் இந்த மூடச்சடங்குகள் தேவைதானா? என்று ஏன் இந்த மக்கள் சிந்திக்கவே மறுக்கின்றார்கள். சுருள் வைத்தவர்களின் பெயரும் தொகையும் வாசிக்கப்படும்போது, அவமானத்தில் தீர்ந்து கரிந்த தன் ஆன்மாவின்; நாற்றத்தை அவன் உணர்ந்தான்.”[8]**

இவ்வாறு மாப்பிள்ளையாக சிவதாணு பணக்காரப் பெண்ணை, திருமணம் செய்வதன் மூலம் ஏற்படும் உள்ளக்குமுறலை வெளிப்படுத்துகிறார். இதுபோன்ற சடங்குகள் ஏதோ ஒரு வகையில் யாரோ ஒருவருக்கு மனக் காயத்தினை ஏற்படுத்துகின்றன, என்பதனை உணர்த்துகின்றது. மேலும் மொய்ப்பணம் வைப்போரின் பட்டியலை ஒலிபெருக்கியில் வாசிப்பது என்பது அந்த ஊர் மக்களின் பொருளியல் சூழ்நிலையைப் படம்பிடித்துக் காட்டுவதாகவே இருந்தது.

திருமண நிகழ்வினைத் தொடர்ந்து நாலாம் நீர்ச் சடங்கு, இரவு சாப்பாடு என உறவினர் ஒவ்வொருவரும் வீட்டை விட்டுப் புறப்படுதுல், ஏழாம்நீர் சடங்குக்கு வருவதாக பெற்றோர் புறப்படுதல் என தொடர்ந்து பத்து நாட்களுக்குத் திருமண நிகழ்வின் சடங்குகள் தொடர்ந்து நடைபெற்று வந்ததை அறிய முடிகின்றது.

**வைத்துக் கொடுப்பது (திதி)**

இறந்தவர்களின் நினைவாக ஆண்டொன்றுக்கு ஒருமுறை அவர்களின் நினைவைப் போற்றக்கூடிய வகையில் அவர்களுக்குப் பிடித்தமான உணவினைச் சமைத்துப் படைப்பது என்பது தமிழர்களிடையே வழக்கத்தில் உள்ள ஒரு செயலாகும். தமிழர்கள் தங்கள் நினைவின் ஊடாக வாழக் கற்றுக் கொண்டவர்கள். அதனால்தான் இறந்தவர்களை மறக்காமல் போற்றுகின்றார்கள் என்பதனை வெயில் காயும் புதினத்தில் நாஞ்சில் நாடன் சுடலையாண்டி மாலை நேரத்தில் வீட்டிற்குள் நுழையும்போது பருப்பு, பப்படம், சாம்பார் என்று மணந்ததும் சுடலையாண்டி பாட்டியிடம் விசாரித்துத் தெரிந்து கொண்டான். அவனுக்கு அப்பாவின் நினைவு வந்தது. அந்த ஒரு நாள் வீடு மணப்பதும் சோகத்தில் நனைவதும் அவன்சிறு வயது முதல் அறிந்த ஒன்று.

> **"இன்று தனக்குக்கூட விரதம் என்பதுஅவனுக்கு நினைவு வந்தது. நேற்று தோசைக்குப் போட்டு சாயங்காலம் ஆத்தா அரைப்பதைக் கண்டு நாளை ஒடுக்கத்தில் வெள்ளிக்கிழமை என்றுதான் நினைத்தான். சாதாரணமாகவே அமாவாசை கடைசி வெள்ளிகளில் தாத்தாவுக்கு விரதம். விரதம் என்றால் காலையில் தோசை அல்லது இட்லி. மத்தியானம் குளித்து முழுகிற பிறகு சாப்பாடு. சமையல் அன்றைய பொருளாதார நிலவரம் போல் இருக்கும். பருப்பு, பப்படம், சாம்பார், பச்சடி என்று உண்டு. ரசமும் சுட்ட பப்படமுமாகக் குறைவதும் உண்டு. ஆனால் விரதம் மட்டும் முடக்கம் கிடையாது.[9]**

ஆனால் இன்றைக்கு ஆத்தா செய்திருக்கும் இந்தச் சமையல் வகைகள் அப்பா, அம்மாவின் நினைவிற்காக என்பதைத் தெரிந்து கொண்டான். ஆண்டுக்கு ஒரு முறை இந்நிகழ்வில் மூலைக்குப் படைக்கையில் ஒரு அம்மாவுக்கு ஒரு கண்டாங்கியும் வைத்துப் படைப்பார்கள். அதைப் பெட்டியில் வைத்திருந்து விட்டு மறு ஆண்டுக்கு அதைப்போன்ற ஒன்றை எடுத்தப் பிறகுதான் இதை உடுத்துவார்கள். எப்போதும் தாத்தாவுக்கு போடும் வேட்டியும் துண்டும் சுடலையாண்டி வளர்ந்த பிறகு

அவனுக்குத் தந்து அழகு பார்த்தார் தாத்தா. ஆத்தா அன்றைக்கு நினைவிற்கு வேண்டிய அத்தகைய ஏற்பாடுகளையும் தடபுடலாகச் செய்திருந்தனர்.

> **"தென்மேற்கு மூலை, வெண்கலக் குத்து விளக்கு, தேங்காய் எண்ணெய்யில் தோய்ந்த மூன்று திரிகள், திங்களில் அமர்ந்திருந்த மஞ்சள் மணிகள், விளக்கிக் கீழே மூன்று இலைகள். ஒன்று அம்மாவுக்கு, ஒன்று அப்பாவுக்கு மூன்றாவது யாருக்கு என்று தெரியவில்லை. இலை நிறையச் சோறு, சோற்றின் கீழ் ஊற்றிருந்த பருப்பு, சாம்பார்தயிர், விளிம்புகளில் அவியல், பச்சடி, வாழைக்காய் துருவல், இரண்டிரண்டு பப்படங்கள், ஒரு பாத்திரத்தில் அரிசிப் பாயாசம், விலக்கின் முன் ஒரு இலை மீது அரளிப் பூ உதிரிகள். கிடேரிப் பசுஞ்சாணத்தால் பிள்ளையார். பிள்ளையார் உடற்மீது அறுகு, இலையில் ஒரு சீப்பு பாளையந் தோட்டப் பழம். மூன்று வெற்றிலை. இரண்டு துண்டு வறப்புப் பாக்கு இலையோரத்தில் பித்தளைத் தம்ளரில் தண்ணீர், தண்ணீரில் மிதந்த அரளிகள், அறுகம் புற்கள், பக்கத்தில் ஓடு தாம்பாளத்தில் வேட்டி அதன்மேல் தலைமுண்டு. ஒரு அரக்குச் சிவப்பு கண்டாங்கி"**[10]

என்று படையலுக்குத் தேவையான அனைத்துப் பொருட்களும் தவறாது வைக்கப்பட்டடு இறந்தவர்களின் நினைவினைப் போற்றி இருக்கிறார்கள் என்பதை இதன் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது. அந்தச் சடங்கின் போது நாஞ்சில் நாட்டில் காய்ந்த தென்னைப் பனையைச் சீறாக வகிர்ந்து எடுத்துத் துகிலில் வெள்ளைப் பழைய துணியைச் சுற்றி, தேங்காய் எண்ணெயில் நனைத்துக் கொளுத்தி, போற்றும் படையலின் மீது மும்மூன்று திரிகளை வைப்பது. வாழைப்பழச் சீப்பின் மீது மூன்று புனைப் சாப்பிராணித் திரிகள் வைக்கப்பட்டிருந்தன. துளையிடப்பட்ட இரும்புக் கரண்டியில் அள்ளிவரப்பட்ட தீக்கங்குகள் மீது சாப்பிராணியைப் போட்டு மூன்றுமுறைச் சுற்றி வரச்செய்து வணங்கினார்கள் என்பதை அறிய முடிகின்றது. நல்ல உணவுப் படையலும் இருந்தாலும் இறந்தவர்களின் நினைவு அவர்களை வாட்டி வதைக்க அந்த உணவு உண்ணாமலேயே மனப்பிசையில் காரணமாக ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளது என்பதும் பதிவாகியுள்ளது.

**பூப்படைதல்**

பெண் இல்வாழ்க்கைகுத் தயாராகிவிட்டாள் என்பதை இந்தப் பூப்படைதல் வழியே அறியலாம். இந்தப் பூப்படைதல் நிகழ்வை கிராமப்புறங்களில் பெற்றோர் கோலாகலமாகவே கொண்டாடி விடுவார்கள். பெண் பூப்படைதல் இயல்புதான் என்றாலும் வட்டாரத்துக்கு வட்டாரம் வெவ்வேறு அடையாளச் சடங்குகள் மூலம் அதனைக் கொண்டாடுகிறார்கள்.

'என்பிலதனை வெயில் காயும்' புதினத்தில் கதையில் தலைவி ஆவுடையம்மாள் பூப்படைந்து விடுகிறாள். ஆவுடையம்மாளின் உறவுக் காரர்கள் ஊர் முழுவதும் வந்து தண்ணீர் விடுவதற்காக அழைத்துக் கொண்டாடுகிறார்கள். பூப்படைந்த பெண்ணின் தலையில் ஊரே திரண்டு தண்ணீர் ஊற்றுவது வழக்கமாக இருந்துள்ளது. ஊரில் ஒரு பெண் பூப்படைவது ஊரே கூடி விழா கொண்டாடுவதைப் போன்று சிறப்பாக இருந்தது.

> **"வீடு முழுவதும் உள்ளூர், வெளியூர்என்று உறவுக்காரர்கள் நிரம்பி வழிந்தார்கள். பெரிய பித்தளைத் தாம்பாளம், தாம்பாளம் மூன்று குமிழ்களில் பெஞ்சுமேல் நின்றது. தாம்பாளம், பொன், வெற்றிலைப் கட்டு பிரித்தபடி, பழுக்காய் பாக்குகள், யாழ்ப்பாண புகையிலை, தடைப்புகையிலை, கறண்ட வத்தல் சுண்ணாம்பு, வாய்ச் சிவக்கப் போட்டுத் தெருவெல்லாம் துப்பினர். வீட்டின் மேற்கு கிழக்குத் தெருப் படிப்புரைகளில் வாலிபர்கள் தெருவில் ஓடிப்பிடித்து விளையாடும் சிறுவர்கள். வேலை இல்லாது போல் போய் வரும் சிறுமிகள், காலில் வெள்ளி கொலுசும் இடுப்பில் தங்க ஒட்டியாணமும் விரலில் நெளியும் பச்சை, நீல சிவப்புப் பட்டுகளும் தலையில் கொழுந்து பிச்சிப் பூவுவாகப் பெண்கள் ஒரே இரைச்சல்"**[11]

என ஆவுடையப்பவரின் வீடு குதூகலமாக விளங்கியது. விவரிக்கப்படுகிறது. ஒரு பெண் பூப்படைதல் என்பது ஊரிடன் முகசிய நிகழ்வாகவே பார்க்கப்பட்டுள்ளது. தண்ணீர் தலையில் ஊற்றும்போது குரவைத் சத்தம் ஊர் முழுவதும்

எதிரொலித்துள்ளது. தண்ணீர் விட்டு முடிந்ததும் வீட்டிற்கு வந்திருப்பார்கள். சிறியவர், பெரியவர் என அனைவருக்கும் வழக்கப்பட்டுளளது. பாளையங்கோட்டைப் பழம் வெற்றிலை, பாக்கு சீனி என தாம்பாளம் வழங்கப்பட்டுள்ளது.

**பூப்படைந்த பெண்ணின் பக்குவமும் செயற்பாடும்**

பூப்படைந்த பெண்ணின் குதூகலமும் சிறுபிள்ளை விளையாட்டும் காணாமல் மறைந்து போகும் முந்தைய பேச்சும் செயல்பாடும் முற்றிலும் மாற்றம் பெற்றிருக்கும். பண்பாடு, கலாச்சாரம், பூப்படைந்த பெண்கள் கடைபிடிக்க வேண்டிய பழக்கவழக்கங்கள் எனப் புதிது புதிதாக நடைமுறைகளை அவர்கள் பின்பற்றத் தொடங்கி விடுகிறார்கள். ஆவுடையம்மாள் பூப்படைந்ததிலிருந்து உடன் பயிலும் மாணவர்களிடத்தில் அவள் முன்பு போல் பழகவில்லை. அவளின் நடை உடை முற்றிலும் மாற்றம் காணப்பட்டது. பூப்டைந்ததற்குப் பிறகு அவள் முதல் நாள் பள்ளிக் வந்திருந்தாள்.

> **"நீல நிறத்தில், நிறைய சுருக்கு வைத்து தைத்தப் பட்டுப் பாவாடை, அரக்குச் சிவப்பில் ஜெம்பர், நீலப் பட்டுத் தாவணி, முகமெங்கும் பூத்திருக்கும் மஞ்சள், கால்விரலில் கூட மஞ்சள், கை விரல் நகங்களில், உள்ளங்கைகளில் மருதாணி, கண்களில் ஒரு மருட்சி..."**[12]

என்று ஆவுடையம்மாள் முற்றிலும் மாறியிருந்தாள். புதிது புதிதாக அடிமைச்சின்னங்கள் அவளிடத்தில் முளைத்திருந்தன. பண்பாடு என்ற பெயரில் அவளிடமிருந்த குதூகலம் அனைத்தையும் பறிந்திருந்தாள். இயல்பாக நட்பு பாராட்டும் உரிமை கூட அவளுக்கு இல்லை. சுடலையாண்டியிடம் அவள் எப்போதும் பேசுவது போல் அவள் இப்போது பேசவில்லை. நோட்டு புத்தகங்கள் கூட அவள் தோழியை விட்டுத்தான் சுடலையாண்டியிடம் வாங்கச் சொல்வாள்.

இவ்வாறு பெண்கள் பூப்படையும் நிலையில் பல்வேறுபட்ட மாற்றங்களை அடைகிறார்கள்.

**திருவிழா**

கிராமப்புறங்களில் கோவில் திருவிழா வெகு சிறப்பாகக் கொண்டாடப்படும். தமிழகத்தில் இருக்கும் கிராமங்களில் ஏராளமான குலசாமிகளும் அவற்றிற்கான திருவிழாக்களும் நடைபெற்று வருகின்றன. 'என்பிலதனை வெயில் காயும்' புதினத்தில் சூரன்குளத்தில் நடைபெற்ற திருவிழாக்கள் குறித்து பதிவு செய்கிறார் நாஞ்சில் நாடன். திருவிழாவில் நீராட்டு முடிய ஏழுநாள் நடைபெறும் திருவிழாவிற்கு 'தேவஸ்வம் போர்டு' அனுமதித்த தொகை ரூபாய் நூற்று என்பது மட்டும் என்றாலும் அந்தக் கோவிலுக்கு இரண்டு தலைமுறைகளுக்கு முன்னாள் பண்ணையார்கள் ஆளுக்குக் கொஞ்சம் நிலம் அறக்கொடையாக எழுதி வைத்துள்ளார்கள். அதிலிருந்து வரும் நெல், பூ தோறும் வரும்.

> **"சாஸ்தா கோவில் பூஜை செய்யும் நம்பியார் இன்று கொடுத்துவிட்டு சாஸ்தாவுக்கு ஒரு நேரம் பச்சரிசிச் சோறும் இரண்டு மூன்று அரளிப் பூக்களும்தான் மிச்சம். மாதத்தில் பத்து நாள் அவரும் வெளியூர் போய் விடுவார். அவர் மகன் வசம்பு மணம் மாறாத பாலகன். அம்மாவும் வந்து வீட்டிலேயே பொங்கிக்கொண்டு வந்த சோற்றைச் சாமியின் மூக்குக்கு நேரே காட்டிவிட்டு வாளியுடன் போய்விடுவாள். சாமியின் மூக்கில் காட்டுவது வடித்த பச்சரிசி சோறா அல்லது முன் தினத்து பழையதா என்பதில் அங்கு பலருக்கும் சந்தேகம் உண்டு. மேலும்,**
>
> **இவ்வாறு விழக்காலங்களில் சாஸ்தா செய்யும் செயல்களை தலைமுறை தலைமுறைகளாக நெல் அளந்து வந்த பழக்கமும் நின்று போனது. சூரன்குளத்தில் நடைபெறும் திருவிழாக்கள் இரண்டு வகைப்படும. ஒன்று அம்மன் கோயில் கொடை, அம்மன் உடையலங்காரம், தர்ம கர்த்தா போகக் கணிசமாக மீதமாகும். கொடை ஆண்டுக்கு ஒரு முறை, மூன்றாண்டுக்கு ஒரு முறை அல்லது ஏழாண்டுக்கு ஒருமுறை என்று நிச்சயமில்லாமல் வரும். ஊர் முதலடி பலவேசம் பிள்ளையின் சௌகரியங்களை உத்தேசித்து, அவர் தனக்கு குதூகலம் என்றும் அதே ஆண்டு கொடை இல்லது. அம்மனின் மிச்ச வாரத்தைத் தற்காலிகக்**

**கைமாற்றம் எடுத்து அரைக்கோப்பை தன் பெயருக்கு வாங்கியிருந்தால் அந்த ஆண்டு கொடை இருக்காது?**[13]

இவ்வாறு கொடைகள் தள்ளிச் சென்றாலும் ஆறுநாள் விழா கொண்டாடுவதில் எவ்வித தடையுமில்லாமல் கொண்டாட முன் முயற்சிகள் மேற்கொள்ளப்படும். அதுவும் சாஸ்தா'' கோயில் திருவிழா ஆண்டுதோறும் இடைவிடாது கொண்டாடப்படும். அவர்களால் நிறுத்த முடியாது. நிறுத்தினால் அரசின் மானியம் நின்றுபோகும் என்பதாலும் எதிர்க்கட்சிகள் கேள்விகள் கேட்டும் தொடர்ந்து திருவிழா நடத்தப்பட்டது.

> **"ஆறுநாள் திருவிழா என்றாலும் முதல் ஐந்துநாள் திருவிழாக்களுக்குச் செலவேதும் கிடையாது. காலையில் ஒருமுறை வாகனம் எடுப்பு, மாலையில் ஒருமுறை வாகனம் எடுப்பு. நேர நிர்ணயம் ஏதும் கிடையாது. ஒன்பது கோயிலும் ஒரு ஆச்சனும் என்பது போல், தேவஸ்தானம் ஒரு தவிலையும் ஒரு நாதஸ்வரத்தையும் திருவிழாவுக்கு என்று அருளும். அந்த இரண்டு பேரும் தாழக்குடி, திருப்பதிசாரம், வெள்ளமடம், இறைச்சகுளம் கோயில்களில் வாசித்து விட்டு, காலை பத்தரை மணிக்கு மேல் பன்னிரண்டுக்கும் அகம் சூரங்குளம் வருவார்கள்.**
>
> **தமிழ் நாதசுரத்காரர்களை எதிர்ப்பார்த்து, சிறியதோர் யானை வாகனத்தில் பீடத்தில் வெண்கலச் சப்பத்தினுள் சாஸ்தா செவ்வரளி மாலை பூண்டு, சிவப்புத் துண்டு கட்டி, ஊதுபத்தி வாசனையில் தயாராக இருப்பார். வாகனத்துகக ஆள் சேர்ப்பார்கள். மூலைக்கு ஒருவராய் நான்கு பேர்கள் வேண்டும். ஒரு முறை சுற்றிக்கொண்டு வந்து இறக்க இரண்டணா காலி."**[14]

என்று சாஸ்தா கோயிலின் விழா நடைபெறுவது புதினத்தில் விளக்கமாக இடம்பெற்றுள்ளது. கிராமத்துச் சடங்குகளும், விழாக்களும் பண்டிகைகளும் சூரன்குளத்தில் வழிபாட்டையும் அதன் அழகையும் மக்களின் நம்பிக்கைகளையும் படம்பிடிப்பதாக உள்ளது. மேலும் சாமி சுற்றி வருவதும் சாஸ்தா கோயில் சந்நிதியில்

ஒரு தீபாரதனையும் பொரி விளம்பதும் நடைபெறும். (விளம்பல் – வழங்கல்). நான்காம் நாள் திருவிழாவில் இரவு வாகனம் எடுக்கப்படும். காலையை விட அது அளவில் வேறுபாடு இருக்காது. வெளிச்சத்திற்கு ஒரு தீவட்டி, சிறுவர்களும் சாஸ்தாவுக்குத் துணைபோவார்கள். இந்த வகையில் ஐந்து நாட்கள் திருவிழாவும் நடைபெறும். ஆறாவது நாள் நம்பிரான் விளையாட்டிற்கும் பெரிய பரபரப்பாக இருக்கும். நம்பிரான் விளையாட்டிற்கு ஆகும் செலவை அம்மன் கோவில் கணக்கிலே செய்வார்கள். ஊரில் உள்ள பெரிய மனிதர்கள் அனைவரும் காலையிலேயே வந்து தானம் செய்வது ஊர்ச் சிறப்பாக இருந்துள்ளது. அந்த தானத்தில் ஊரில் கஞ்சி வைப்பு நடைபெறும்.

> **"ஊரில் கஞ்சி வைப்பு நடைபெறும்போது இரண்டு வண்டி நிறைய பனையோலைகள் வரும். அதனைக் கொண்டு ஊரில் உள்ள வயதானப் பெரியவர்கள் நான்கு பேர் ஓலையைக் கீறிப் பட்டை செய்து குவிப்பார்கள். கஞ்சிப் பட்டை, கறிப்பட்டை என்று இரண்டு பிரிவாக அந்தப் பட்டையைச் செய்துள்ளார்கள். பெரியதும் சிறியதும் செய்யப்பட்டுள்ள அந்தக் கஞ்சிப் பலகையில் பூசணி, வாழைக்காய், சேனை, கத்திரிக்காய், கடலைப்பருப்பு பேஸ்டு, தேங்காய் அனைத்தும் அரையாமலும் மிதக்கின்ற ஒரு கூட்டுக்கறியும் மற்றொன்றில் கஞ்சியும் வார்த்திருக்கின்றார்கள்.**
>
> **கஞ்சி குடித்த பிறகுதான் நம்பிரான் விளையாட்டு வேலைகள் உண்மையிலேயே ஆரம்பமாகும். ஒரு கூட்டம் பாத்திர பண்டங்களை ஒதுங்க வைத்து, கோயில் பிரசாதங்களைப் பெருக்கி, கழுவி வெளிச்சுற்றைச் சுத்தப்படுத்தும். மறுகூட்டம் தெருவில் வண்ணம் போக இடைஞ்சலாக நிற்கும் சக்கடா வண்டிகளை எல்லாம் வயற்காட்டில் இறக்கித்தள்ளி தெருக்களில் கவிந்து நிற்கும் மரங்களில் கிளைகளைச் சீர்பார்க்கும். கோயிலின் பின்புறம் சுற்றிலும் பிள்ளையார் கோயில் சுற்றிலும் கிடக்கும் கள்ளி, கண்ணாடித்துண்டு, உடைந்த பானை, கந்தல் துணி, பீகாறிச் செடி, கொடுக்கள்ளி யாவற்றையும்அள்ளி மாற்றும். வேறொரு கூட்டம் வாகனப் புகையில், வௌவால் புழுக்கைகளின் மணத்துடன வாழும் வாகனச் சட்டத்தையும் குதிரை வாகனத்தையும்**

**கீழிறக்கி சாஸ்தா கோயில் முகப்பில் உயராமாக தட்டுப்பந்தல் கீழ்க் கொண்டு நிறுத்தும்''[15]**

இவ்வாறு ஊரில் அந்தத் திருவிழா வெகுச்சிறப்பாக மக்களின் ஒட்டுமொத்த ஆதரவால் கொண்டாப்பட்டுள்ளது என்பதை நாஞ்சில் நாடன் தெளிவுற எடுத்துரைக்கிறார். கிராமத்து மக்களின் உயிரும் வாழ்வும் இத்தகைய திருவிழாக்களில்தான் நிலை கொண்டுள்ளது. இந்த விழாக்கள்தான் அவர்களின் கசப்பு நிறைந்த இன்னல் மிகுந்த வாழ்க்கைக்கு மருந்தாகத் திகழ்கிறது.

**சாமி அலங்கரிப்பு**

சூரங்குளத்தில் சாஸ்தாவிற்கு எடுக்கப்படும் விழா மிக முக்கியமானதாகவும் மக்களிடத்தில் புகழ்மிக்க விழாவாகவும் இருந்துள்ளது. சாஸ்தா அமர்ந்து செல்லும் வாகனம் மிகவும் சிறப்பாக அலங்காரம் செய்யப்பட்டுள்ளது. மாலை நான்கு மணிக்கு வாகனத்தை அலங்கரித்துக் கொண்டு இருக்கிறார்கள். நம்பியாருக்கு உதவி செய்வதற்காக வெளியூரிலிருந்து பட்டர்கள் வரவழைக்கப்பட்டனர்.

குதிரை வாகனத்துக்கு கேறு தண்டலங்கள், இரண்டு பக்கத்திலும் நாவிலும், சுருளை சுருளையாகக் கொச்சக் கயிறுகள், ஒன்பதங்குல விட்டமுள்ள பெரிய மூங்கில் தண்டலங்கள். இரு முறைகளிலும் இரும்புப் பூண், தோள் பட்டு பட்டு மிக பழுத்திருந்த தண்டலங்களைத் தொட்டால் ஒரு குளிர்ச்சி. மேலே குதிரைக்குச் சட்டம் அதற்கு மேல் குதிரை, நாக்கை ஒரு புறம் வழித்துக்கொண்டு போன ஆண்டு புதுவர்ணம் அடித்தார்கள். கண்ணை வாங்கும் நிறங்கள், பக்கத்து ஊர்கள், இறச்சகுளம், நாவற்காடு, புத்தேரி, ஆறல் வாய் மொழிக் குதிரைகளைவிட சூரன்குளத்துக் குதிரைக்குத் தனிக்களை உண்டு. உறுதியாக கனமற்ற மரத்தின் வடிவாக அமைந்த கடைகள், வயிறு பெருத்து விடாமல், முதுகு அதிகம் வளைந்து போகாமல், முகத்தில், கண்களில் உயிர் துடிக்க அது சுழலும் விதமே தனி. மற்ற ஊர்க்காரர்களுக்கு சூரன்குளத்து குதிரை மீது பொறாமை கூட உண்டு. சூரன்குளத்தைவிட மற்ற ஊர்களெல்லாம் பெரியவை. குதிரையின் பின்னங்கால் குளம்பைப் பற்றித் தள்ளிச்

சுழற்றும் உடல்திறன் கொண்டவர்கள் சூரன்குளத்தில் அதிகம் பேர் இல்லை. ஆனாலும் இந்தக் குதிரை பறக்கும் வேகம்.

சாஸ்தாவுக்கும் குதிரைக்குமாகப் பெரியதோர் சிவந்திப் பூ ஆரம், சாஸ்தாவின் உச்சியிலிருந்து துவங்கிக் குதிரயின் இடுப்புக்குக்கீழ் நாறும் பெரியதொரு வாடாமல்லி மாலை சாஸ்தாவுக்கு மட்டும் ரோஜா மாலை. பின்புறம் மூங்கில் பிளந்த நீண்ட துண்டுகளால் கட்டி, ஒரு சாய்மானத் திண்டு, போர்த்தி பெரிய சிவப்புப் பட்டு. சாஸ்தாவின் தோள் புறங்களில் வெட்டிவேர் விசிறிகள். தலைமேல் பூக்குடை. கிளி வைத்த குடை முகம் மட்டும் தெரிய மற்றெல்லாம் மாலைகள் மறைந்த சாஸ்தா. குதிரையில் தோளிலிருந்து கீழிறங்கும் பெரியதோர் கதம்ப ஆரம். முன்னங்கால்களில் தலைகீழாகக் கட்டிய கடுகம் பூக்குலைகள், பொம்மைகள் கழுத்தில் அரளி மாலை. கையில் தென்னங் குருத்தில் சாட்டை.

இவ்வாறு சூரங்குளத்தில் சாஸ்தா அலங்கரிக்கப்பட்டு மாலை ஆறரை மணிக்கு மேல் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படும். ஊர்வலத்தில் பொய்க்கால் குதிரை ஆட்டம், பொய்க் குதிரையின் துள்ளல், மயிலின் ஒய்யாரம் என்று ஊர்வலம் மக்களின் மனமகிழ்ச்சியோடு நடைபெறும். ஒரு காலத்தில் மக்களால் தெளிவுபட வகுக்கப்பெற்ற இத்தகையப் பண்பாட்டு விழாக்கள் காலந்தோறும் இடைவிடாது கொண்டாடப்படுவது வழக்கமாகிக் போனது. காலத்தில் வளர்ச்சி நிலைக்கேற்ப இந்த விழாக்கள் சாமி அலங்கரிப்புடன் புதுப் 'பொலிவை' பெற்று நிற்கின்றன. இத்தகையப் பழக்கவழக்கங்களும் நம்பிக்கையும் ஒன்றையொன்று சார்ந்தே நிற்கின்றன. மேலும் பழக்கவழக்க நிலைபேற்றிற்குப் பல நேரங்களில் நம்பிக்கை அடிப்படையாக நிற்பதைக் காணலாம். நம்பிக்கையில் நிலைபேற்றிற்கான காரணங்களாகக் க.காந்தி,

> **"தீமையிலிருந்து தன்னைப் பாதுகாத்துக்கொள்ள இயலும் தற்காப்பு முயற்சியும், நல்லன விளைய வேண்டும என்ற விருப்பமும் நம்பிக்கைகளை இன்று வரை தொடர வைத்து நிலைநிறுத்தியுள்ளன."**[16]

மனிதகுலத்தின் இயங்கு சக்தியாக இத்தகைய நம்பிக்கைகள் விளங்குகின்றதை அறியமுடிகின்றது. இத்தகைய நம்பிக்கைகளுக்கு ஆதாரங்களாக

இருப்பவை புராணங்களும் இதிகாசங்களுமே காரணமாகும். வழிவழியாகச் சொல்லப்பட்டு வரும் இந்தக் கதைகள் மக்களிடத்தில் நீங்கா இடம்பெற்று பெரும் நம்பிக்கையாகத் தங்கிவிடுகின்றது. நம் வாழ்வின் வளத்திற்கும் நலத்திற்கும் இத்தகைய பக்தியும், சாமி ஊர்வலங்களும் நம்பிக்கைகளும் தான் காரணம் என்பதாக அவர்கள் நம்புகின்றார்கள். பொருளாதார வசதி ஏற்பட ஏற்பட விழாக்களை நீண்ட நாள் நடத்துவதோடு அதிக அளவில் பொருட் செலவையும் செய்கிறார்கள்.

**மாங்கோணத் திருவிழா**

நாஞ்சில் நாடனின் புதினங்களில் விழாக்கள், பண்பாட்டுச் சடங்குகள் புனைவாக இல்லாமல் உள்ளதை உள்ளவாறு இயல்பாகவும் எதார்த்த நிலைகளாகப் பதிவு செய்யப்பட்டுள்ளதாகவும் உணரமுடிகிறது. இவ்வாறு இயல்பாகப் புனையப்படும் இத்தகைய நிகழ்வுகள் ஓர் உண்மைத் தன்மையைக் கெண்டு நிலவுகின்றன. மக்கள் வாழ்ந்து வளர்ந்த கிராமப்புறங்களில் நடைபெறும் ஊர்த்திருவிழக்களை, கோயில், அலங்கரிப்புகளை உள்ளதை உள்ளவாறே பதிவு செய்துள்ளார்.

'மாமிசப் படைப்பு' புதினத்தில் மாங்கோணத்தில் நடைபெறும் திருவிழாக் கோலங்களை அச்சு அசலாகப் பதிவு செய்துள்ளனர். அந்த ஊரில் அம்மன் கோயில் உருவான வழியை மிகத் தெளிவாக விவரிக்கின்றார்.

> **"மாங்கோணத்தில் உத்தேசம் இருநூறு வீடுகள் இருக்கும். ஐந்துதெருக்கள், இணையிணையாய் மேற்கு, நடு, கிழக்கு தெருக்கள், கால்மாட்டில் வடக்குத்தெரு தலை மாட்டில் தெற்குத் தெருவின் மையத்தில், நடுத்தெருவை நேர்ப் பார்வையாகக் கொண்டு முத்தாரம்மனுக்கு கோயில் அமைந்தது. வடக்கோடும் பார்வையில் அம்மன். மிகப்பெரிய கொடையாகக் கழித்து, கறையான் திரட்டிலிருந்து அம்மன் சிலையை அகழ்ந்து எடுதது, பல்லக்கில் எற்றி, வடக்குப் படித்துறை வழியாக ஏறி, ஊர் நடுவில் அமைந்திருந்த சிறிய கோயிலில் குடி அமர்த்தினார்கள். முதலில் ஊர் நடுவில் இருந்த அந்த மேட்டுப்**

**பொட்டலில் நின்ற வேப்ப மரத்தின் முன்னால் சிறியதாக செங்கல்லால் கோயில் எழுப்பி, முன்றடியிலும் திறந்த மர அளி செய்தார்கள்.”[17]**

பூ தோறும் அறுப்படிப்பு முடிந்த பின்பு, வீட்டுக்கு வீடு தலைக்கட்டுககு ஒரு வரி வீதம் நெல் பிரித்தார்கள். சேர்ந்தநெல்லை சீட்டு போட்டார்கள். முத்தாரம்மன் பெயரில் வயல்கள் வாங்கினார்கள். கோயிலை இடித்துப் பெரியதாகக் கட்டினார்கள். சுற்றிச் சூழ மதில் எழுப்பினார்கள். அம்மன் பெயரில் காலி மனைகள் வாங்கிப் போட்டார்கள். கோயில் வகைக்கு என்று பாத்திர பண்டங்கள் சேர்த்தார்கள். நெல் போட பந்தயப்புரை கட்டினார்கள். இவற்றை ஒழுங்காகக் கட்டி ஆள தர்மகர்த்தாக்கள் தோன்றினார்கள்.

**முத்தாரம்மன் சகல சம்பத்துகளோடும், புடைசூழ சந்தனமாரி, ஆலைப்பிடாரி, ஆகிய தோழிகளோடும் பூதத்தான் சேனாதிபதியோடும் வைரவன் என்ற காவலோடும் மாங்கோணத்தை பஞ்சம், வறுமையிலிருந்தும் வாந்தி, பேதி, வைசூரி, நோய்களிலிருந்தும் காத்து பாலித்து வந்தாள்”[18]**

இப்படியாக நாஞ்சில் நாடன் மாங்கோணம் கிராமத்தில் முத்தாரம்மன் கோயில் உருவான வரலாற்றையும் கோயிலுக்காக முத்தாரம்மன் பெயரில் வயல்களும், காலி மனைகளும், பாத்திர பண்டங்களும் பெருகிய நிலையையும் சுட்டிக்காட்டுகிறார். கிராமங்கள் தோறும் அம்மன் கோயில்கள் பெருக்கெடுத்த கதையும் இதுவேயாகும்.

கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பது தமிழர்களிடையே நீண்ட காலமாக நிலவி வரும் சொல் வடையாகும். எனவே தாங்கள் வாழ்வதற்கு ஏற்ற தகுதியுள்ள ஊராக மாற்ற வேண்டுமேயானால், அந்த ஊரில் ஒரு கோயிலைக் கட்டிக் கொள்ள வேண்டும் என்பது அவர்களின் கொள்கையாக இருந்தது. முத்தாரம்மன் கோயிலுக்கு மக்கள் மாதந்தோறும் விழா எடுத்துள்ளார்கள். கோயிலுக்கு காணிக்கை கொடுக்கும் விதமாக ஆண்டுதோறும் மாசி மாதத்தில் மண்டைக்காட்டு அம்மனுக்கு கொடை கழிந்த மறுகிழமையில் அம்மனுக்கு அன்னக்கொடை கொடுத்துள்ளார்கள்.

**கார்த்திகை மாதத்துச் செவ்வாய்கள், தை அமாவாசை, மாசி மகம், பங்குனி உத்திரம், சித்திரை வருடப் பிறப்பு, வைகாசி விசாகம், ஆடி அறுதி என்று மாதத்துக்கொன்றாக வரும் பண்டிகைகளில் சிறப்பு செய்தார்கள். ஒவ்வொரு வீட்டில் விசேடத்தோடும் அம்மன் சம்மந்தப்பட்டாள். பிறந்த நாளுக்கு, கல்யாணம் மறுவீட்டுக்கு, சூலழைப்புக்கு ஆண்டு நிறைவுக்கு என்று பாயாசம் வைத்துக் கொடுத்து வழிபட்டார்கள்.''**[19]

முத்தாரம்மன் கோயில் மாங்கோணத்து மக்களின் நல் வாழ்விற்கும் வளர்ச்சிக்கும் காரணமாக இருப்பதாக நம்பினார்கள். கிராமத்து மக்களின் வாழ்வில் கோயில் விழாக்கள் ஒரு முக்கியத்தாக்கத்தை ஏற்படுத்துகின்றன. பங்குனி மாதத்து பௌர்ணமி இரவுகளில், முத்தாரம்மன் கோயில் பரபரப்பாகத் திகழும். கோயிலில் உள்ள எல்லா விளக்குகளும் அப்போது எரிந்து ஒளிவீசும். நடை திறக்கப்பட்டு தீப ஆராதனையும் தொடங்கிவிடும். தீபங்களை மக்கள் வழிபடத் தொடங்குவார்கள். இந்த ஒளி வழிபாடு தமிழர்களிடையே தொன்றுதொட்டு இருந்து வரும் பழக்கமாகும். இதனை நாட்டுபபுற இலக்கியம் தெளிவாக வரையறுக்கிறது.

**''உலக வழிபாடுகளில் மிகத்தொன்மையான வழிபாடக ஒளி வழிபாட்டையே மாந்தர் கருதியமை என்று வரலாற்றின் தந்தையான யமன ஷெரடோபஸ் கூறுகிறார். மானிடவியல் அறிஞர் பிறகும் உலகில் தொன்மையான வழிபாடுகளில் மிகத் தொன்மையான வழிபாடாகக் கதிரவன் வழிபாட்டைக் கருதுகின்றனர். இறைவன் ஒளிவடிவமாக (God is light) என்ற அடிப்படையில் ஒளிக்கு முதன்மையான இடத்தைத் தந்து கடவுளோடு தொடர்புடையதாகக் கூறியுள்ளார். இதிலிருந்து மறந்தவையே ஒளி வழிபாடு. விளக்கு ஏந்திப் பெண்கள் வழிபடுவதும் மிகத் தொன்மையான வழிபாடாகும்.''**[20]

இத்தகைய ஒளிவழிபாட்டில் தொடங்கிய தமிழர் வழிபாடு காலப்போக்கில் உருவ வழிபாட்டில் வந்து முடிந்தது. எனவே ஊருககு ஊர் தங்களுக்குப் பிடித்தமான ஊர் தெய்வத்திற்கு கோயில்களை வழிபடத் தொடங்கினர். இந்த வழிபாடுதான்

அவரக்ளுக்கு ஏற்படும் நன்மை தீமைகளுக்கு காரணமாக இருந்துள்ளது என்பதை மக்கள் நம்பினர். மழை பெய்வதற்கும் வயலின் அமோக விளைச்சலுக்கும் இத்தகைய இறைவழிபாடுதான் காரணம் என்பதை அவர்கள் உணர்ந்து அத்தகைய வழிபாட்டினைத் தொடர்ந்து நடத்த விழைந்தார்கள்.

இவ்வாறு மக்களின் வாழ்வின் இரண்டறக் கலந்து விட்ட வழிபாட்டினை படைப்பிலக்கியங்களில் பயன்படுத்துவதன் மூலம் தொன்றுதொட்டு நிலவிவரும் பண்பாட்டுக் கூறுகளை அறிந்துகொள்ள வாய்ப்பாக அமைகின்றது.

**ஊர் வழிபாடு**

'மாங்கோணம்' கிராமத்தில் அறுப்படிப்பு (அறுவடை) காலங்களில் முத்தாரம்மன் கோயிலுக்கு சிறப்பு வழிபாடு செய்வது ஊர் வழக்கமாக இருந்துள்ளது.

> **"சம்பாப் பூவானாலும் வாசறுமிண்டான் பூவானாலும் முப்பது நாட்களுக்குக் குறையாமல் அறுப்பு இருக்கும். தினமும் அறுப்புக் கொத்து அளந்து வாங்கிய பிறகு வெள்ளக்குடிக்கு என்று குறுணி அல்லது படிக்கு நெல் எடுப்பார்கள். அதுபோக கொத்து பங்கு வைக்கும் போது குறுணி நாலுபடி, பதக்கு அஞ்சுபடி என்று மிஞ்சவதை மேலும் பங்கிமால் சேர்த்துப் போடுவார்கள். இப்படிச் சேரும் நெல் கூறுவடி கந்தையா வீட்டில், கோணிச் சாக்குகளில் பொது நெல்லாகச் சேர்த்து வைக்கப்படும். அறுப்பருப்பு முடிந்த பிறகு கூட்டமாய் அவர்கள் செய்வது இரண்டு வேலைகள். ஒன்று செய்தல் உள்ள எல்லோரும் சேர்ந்து வண்டி போட்டுக் கொண்டு முக்கூடல் அவைக்கோ, உலக்கை அமுவிக்கோ, ஔவையாரம்மன் கோயில் காட்டுக்கோ போய், கோழிகள் வாங்கி அடித்து காட்டுப் பொங்கல் பொங்கிச் சாப்பிட்டுவந்து சாயலங்காலந் திரும்புவது இரண்டு அந்தப் பூவின் அறுப்பு வேலை எந்த வித்தியாசம் இல்லாமல் நடந்து முடிந்ததற்காக அம்மனுக்கு சிறப்பு நடத்துவது "[21]**

இவ்வாறு ஊரில் உழவு வேலை, வயல்வேலை செய்பவர்கள் அம்மனுக்குகென்று தனியாக வழிபாடு செய்வதோடு அதனைத் தொடர்ந்து செய்தும்

வந்தனர். இத்தகைய இறை உணர்வு மிகப் பழமையான காலத்திருந்து வருகின்றது என்பதை நாட்டுப்புற இலக்கியங்கள் தெளிவுறச் சுட்டுகின்றன.

என்றைக்கு மாந்தர் தோன்றினானோ அன்றைய நாளிலிருந்தே இயற்கை தரும் இன்னல்களால் அவன் அச்சம் கொண்டான். தன்னைவிட மிஞ்சிய ஆற்றல் உடைய ஞாயிறு, திங்கள், இடி, மின்னல்கள், தீ, முதலியவற்றை எண்ணி கவலைப்படத் தலைப்பட்ட மனிதன், நாளடைவில் பாம்பு, மரம் முதலியவற்றை வணங்கலானான். மாந்தனின் இச்செய்கை வழிபாட்டிற்கு வித்திட்டது.

> **"இறைவனின் கருணையைப் பெறுவதற்கும், அவன் திருவுள்ளம் அறிதற்கும் மனிதனோடு இறைக்குமுள்ள தொடர்பைச் சுட்டவும், ஒன்றுபடுவதற்கும், நெறிமுறையான வாழ்விற்கும், ஆன்மிகச் சிந்தனைக்கும் சமயம் உதவுகிறது எனலாம்."**[22]

இந்த வகையில் ஏற்பட்ட இறைவழிபாட்டுச் சிந்தனை காலப்போக்கில் பல்வேறு மாற்றங்களைப் பெற்றள்ளது. வழிபாட்டால் நன்மை கிடைக்கும் என்பதே மக்களின் முக்கிய நம்பிக்கையாக உள்ளது.

**ஊர்க் கூட்டம்**

கிராமப்புறங்களில் ஊர்க்கூட்டம் நடைபெறும் நிகழ்வு முக்கிய நிகழ்வுகளில் ஒன்றாகும். கிராமத்திற்கு தலைவர் என்றொருவர் இருப்பார். இவரை கிராம மக்கள் நாட்டாண்மை (நாட்டாமை) என்று அழைப்பார்கள். ஊரில்நடைபெற இருக்கும் மங்கள, அமங்கள நிகழ்வுகளுக்கும், கோயிலுக்கும் கூழ் ஊற்றல், திருவிழா நடத்துதல் போன்ற நிகழ்வுகளுக்கும், ஊர்ப் பஞ்சாயத்து நடத்துவதற்கும் இத்தகைய ஊர்க்கூட்டம் நடைபெறுவது உண்டு. மாங்கோணம் கிராமத்தில் இத்தகைய ஊர்க்கூட்டம் நடைபெறுவதே இயல்பு நிலையில் புதினம் முழுவதிலும் படைத்துக் காட்டியுள்ளார்கள். நாஞ்சில் நாடன் மாங்கோணம் கிராமத்தில் நாட்டாண்மை கங்காதரம்பிள்ளை, அம்மனுக்கு குடைகூத்தும் நிகழ்வு நடைபெற வேண்டும் என்பதற்காக அன்றைய கூட்டம் கூட்டப்பட்டது. ஊரில் உள்ள பெரியவர் வைரவன்

என்பவர் கனவு ஒன்று கண்டிருப்பதால், குடை நடத்துதல் அவசியம் என்று பேச கங்கா தரம்பிள்ளை முடிவு செய்திருந்தார்.

> **“இப்பம் என்னத்துக்கு ஊருகூட்டம் வச்சிருக்குன்னு அநேகம் எல்லாருக்கும் தெரியும். இருந்தாலும் ஒருங்கக்கூடி தெரியாதவளுக்கு சொல்லிப் போடுவேன். நேற்றைக்கு ராத்திரி நம்ம வைரவன் கொண்டாடி –சொப்பனம் கண்டிருக்காரு. ஒரு பொம்பளை பொட்டி நிறைய நெல்லு வச்சிக்கிட்டு ஊருக்குள்ள இறங்கி வந்தது போலேயும், அம்மன் போய்ச் செறுத்தது போலேயும், மாசி மாசம் மட்டும் இறங்கு வந்தது போலேயும் அது மட்டுமல்லாமல் பக்கத்திலே எல்லாம் வைசூர் நடமாடுற… வெக்கையும் அதிகமாட்டுததான் இருக்கு… நல்ல காலமா நம்ம ஊரிலே இதுவரைக்கும் ஒண்ணும் இல்லே… இப்படி இருக்கையில் வைரவன் சாமி கொண்டாடிக்கு ஒரு சொப்பனமும் காட்டியிருக்கதினாலே கொடை களிக்கலாமான்னு ஆலோசனை போடுறதுக்குத்தான் இந்தக் கூட்டம். அம்மனுக்கு கொண்டை நடந்து வருசம் மூணு நாலு ஆருன்னு உங்களுக்கு நான் சொல்லாடம். மேல்கொண்டு யாராருக்கு என்னென்ன தோறுகோ அதை ஒத்தொத்தரா சொல்லுங்கே”[23]**

என்று ஊர் கூட்டத் தலைவர் கூட்டம் கூட்டப்படுவதற்கான காரணத்தைகூடி, அது குறித்து ஊர் மக்கள் தங்கள் கருத்துக்களை முன்வைப்பதும் ஊர்த்தலைவரின் கருத்துக்கு உடன்படுவதும் முரண்படுவதுமான எனக் கூட்டத்தில் கருத்து பகிர்தல் நடைபெறும். ஆனால். இறுதியாக ஊர்த்தலைவர் எடுக்கும் முடிவுக்கு ஓரளவுக்கு ஊர்பக்கம் கட்டுப்படுவர். சில வேளைகளில் வாக்கெடுப்பு நடத்துதலும் உண்டு. கருத்து மோதல்கள் நடைபெறும் போது இத்கைய வாக்கெடுப்பு நிகழ்வுகள் நடைபெறும். அன்றைக்கு குடை நடத்தும் நிகழ்விற்கு எதிர்ப்பு தெரிவித்து பலரும் தங்கள் கருத்துக்களை முன் வைத்துப் பலரையும் சிந்திக்கத் தூண்டியது. கூட்டம் நடந்து கொண்டிருந்தபோது செல்லம்பிள்ளை என்பவர் எழுந்து தம் கருத்தை முன்வைத்தார்.

**“அம்மனுக்கு தொகை நடத்தி மூணு வருசம் ஆச்சுது வாஸ்தவம்தான். ஆனா போன கொடைக்கு வாங்கின கடன் இப்பத்தான் தீர்ந்திருக்கு. இப்படி கொடைகளிச்சு, கடன்தீந்து, மறுபடி கொடைகளிச்சு கடந்தீந்து இது என்ன செத்த ஏற்பாடுடே? ரெண்டு வருசம் சென்று கழிச்சாப் போகும்... வைரவங் கொண்டாடி சொப்பனம் கண்டருன்னா அவுரு அம்மனுக்குப் பாயாசம் வைக்கப்படும். இப்படி ஒவ்வொரு சாமி கொண்டாடியும் சொப்பனம் கண்டதுக்கு கொடை அளிக்க ஆரம்பிச்சா வருசம் ஆறுகொடை அளிக்க வேண்டியதுதான். பொறவு அம்மனுக்கு அவையரரைக் கோட்டையா விக்க வேண்டியதுதான்”**[24]

என்று குடைகழிப்பதற்கு எதிர்ப்புத் தெரிவித்தார். ஊரில் சாமியாடி என்ற பெயரில் ஒருவர் கனவு கண்டதற்கே இப்படிப்பட்ட பெரிய விழா ஏற்பாடுகள் நடைபெற்றுள்ளன என்பதை அறிய முடிகின்றது. ஆனால் அதற்கு எதிர்வினையாக எந்தத் கருத்தையும் ஊரில் ஆலோசனைகூட எடுத்துக் கொள்ளாமல் சாமியின் பெயரால் எல்லாம் கட்டுப்படுத்தப் பட்டுள்ளன.

**எதிர்வினை**

இறைநம்பிக்கை என்ற பெயரில் தன் உழைப்பு முழுவதையும் விழாக்கள் குடையிடத்துதல் என்று செலவு செய்வதில் உடன்பாடு இல்லாத ஊரில் உள்ள சிலர், அதுபோன்ற நிகழ்வுகளுக்கு எதிர்ப்பு தெரிவப்பதோடு வசூலிக்கக்கூடிய பணத்தில் ஆக்கப்பூர்வமாக செலவுகள் செய்யலாமே என்ற கருத்தையும் முன் வைக்கின்றனர். ஆனால் மூடப்பழக்கவழக்கங்கள் மூழ்கிக் கிடக்கின்ற மக்கள் கோவில் விழாக்களையும் அதனால் இயற்றிய சில மகிழ்ச்சிகளையே விரும்புகின்றனர்.

அனைவரும் கொடை நடத்தியே ஆக வேண்டும் என்று உறுதியாக இருக்க தந்தையா, கொடை நடத்துவதற்குப் பதிலாக பள்ளிக்குச் சுவர் கட்டலாம் என்று ஆலோசனைக் கூறினார்.

**“மலையப்பபிள்ளை வம்புக்கு ஆடினாருன்னு இப்ப யாரும் சொல்லல்லே... இப்ப இருக்க நிலைமையிலே கொடை நடத்த முடியு மாண்ணுதான்**

**கேள்வி. ரெண்டாயிரம் ரூவா உண்டு சர்க்காரே மேற்கொண்டு ரெண்டாயிரம் வாங்கி பள்ளிக்கூடத்துக்கு காம்பவுண்டு செவுரு கட்டலாம். பயமில்ல பிள்ளைகள் விளையாடும்... அதை விட்டு போட்டு கொடை நடத்தி குடிச்சுக்கிட்டு ஆடுறதிலே புண்ணியம் இல்லே"[25]**

என்ற கருத்திற்கு ஊரில் ஆதரவு குறைவாகவே இருந்தது. பக்தியின் பெயரால் காலம் காலமாக ஏற்படுத்தபபட்ட பயத்திலிருந்து மனிதன் விடுபடுவதற்குத் தயாராகவே இல்லை. சிந்திக்க மறுக்கும் மக்களிடத்தில் புதுமைக் கருத்துக்கள் உட்புக முடியாது என்பதற்கு அந்தக் கிராமத்து மக்கள் எடுத்துக்காட்டாக விளங்குகின்றார்கள். தந்தையின் பேச்சிற்கு மறுப்பு தெரிவித்த கங்காதரபிள்ளை.

**"கொடை களிச்சாலும் ஒண்ணுதான். களிக்காட்டாதும் ஒன்னுதான். ஆனாலும் பின்னாலே அம்மனுக்குக் கோபம் வந்து ஒணணு தெரக்க ஒண்ணு ஆயிட்டா... அவ கோபம் நமக்குத் தெரியாததில்லே... விளையாட்டுத்தனப் பேசிப் போடலாம்... ஆனால் பொண்டு பிள்ளைகள் பற்றியும் யோசிக்கனும். அதனாலே இப்போது கொடைகளிக்கலாமோ வேண்டாமான்னு ஓட்டுககு விட்டிராம்."[26]**

என்று கொடை நடத்துவதற்காக வாக்கெடுப்பிற்கு விடப்பது பயத்தில் பெயரால் பக்தி பரவலாக்கப்பட்டது. இதன் மூலம் உறுதியாகிறது. மேலும் ஊர்க்கூட்டத்தின் நிகழ்வுகள் நடத்துவது குறித்து பிரச்சினைகள் எழும்போது அது வாக்கெடுப்பிற்கு விடப்பட்டு பெரும்பான்மை கருத்துகளுக்கு மதிப்பளிக்கப்பட்டது.

**கொடைவிழா**

ஊரில் கொடைவிழா தொடங்கியதும் கோயிலுக்கு 'மாமிசம் படைப்பு' வைப்பதற்காக ஆட்டுக்குட்டி, கோழிகள் குளத்து மீன்கள் என்று சேகரித்துள்ளார்கள். அதனைச் சமைத்து பீடங்களின் முன் படைத்துள்ளார்கள். மேலும் இதைப்போன்ற விழாக்கள் நடத்துவதென்று முடிவெடுத்துவிட்டால் கோயில் முன் பல்வேறு வகைப்பாடு சாமான்களும் வந்து குவிந்துள்ளன.

**"வண்டி மாடு பூட்டிக்கொண்டு போய் வெஞ்சன சாமான்கள் வந்தன. விறகு வந்து குவிந்தது. காய்கறிகள் வந்தன. பழங்குலைகள் – சிங்கன், மட்டி, செந்துளுவர், வெள்ளைத் துளுவன், பாளையங் கோட்டான், நெய்க்கதலி, ரசகதலி, என்று பந்தயப் புரையில் உறைபோட்டு, கட்டித் தூக்கப்பட்டன. பலா, மா, அன்னாசி, வெள்ளரி, மாதுளை பழங்கள் மணம் மணந்தன. கடையில், சந்தனம், வெட்டிவேர் வாசனைகள் சூழ்ந்து கொண்டன."**[27]

என்று கொடை விழாவிற்காக ஏற்பாடுகள் ஊர் மக்களால் தடபுடலாக செய்யப்பட்டுள்ளன என்பதை இதன் மூலம் அறிய முடிகிறது. அந்த விழாவிற்காக கோயில் முழுவதும் அலங்கரிக்கப்பட்டு வெள்ளை அடிக்கப்பட்டது. சாமிகளின் அங்கிகள், கடயிங்கள், திருநீற்றுக் கொப்பரைகள், சலங்கைகள், சல்லடங்கள், வெட்டரிவாள், வேல், சூல், குந்தம் என அனைத்தும் தூய்மைச் செய்யப்பட்டன.

என விழாவிற்காக சாமிப்பொருள்கள் தூய்மை செய்யப்பட்டு ஊர் மக்கள் உண்டு மகிழ்வதற்காக உணவும் விழாக் குழுவினரால் சிறப்பாக ஏற்பாடு செய்யப்பட்டது. மேலும் கண்களுக்கும் செவிகளுக்கும் நன்றாக விருந்தளிக்கும் வகையில் மேளங்களும், கும்ப ஆட்டக்காரக் குழுக்களும் வில்லுபாட்டுக் கூட்டம் எனப் பல குழுக்கள் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

முத்தாரம்மன் கோயில் கொடை விழா நடைபெறும் போது ஊரில் உள்ள மற்ற சாமிகளுக்கும் விடிவு வந்து அவையும் அலங்கரிக்கப்பட்டு வழிபாட்டுக்குத் தயார் செய்யப்பட்டிருக்கும்.

**வேலைவாய்ப்பின்மையும் பொழுது போக்குகளும்**

தமிழ்ச்சமூகத்தில் இளைஞர்களிடையே எழும்மிக முக்கியமான வாழ்வியல் கூறுகளில் ஒன்றாக இருப்பது வேலைவாய்ப்பின்மை என்பதாகும். படித்து முடித்து பட்டம் பெற்றிருக்கும் இளைஞர்கள் வேலைதேடி அலைவதும்; தகுதிக்கேற்ற வேலையில்லாமல் தவிப்பதும், குடும்பம், உறவுகள், சமூகம் என்று அனைத்தும் புறக்கணிப்பிற்கு எழும் சூழல் ஏற்படுகின்றது. நாஞ்சில் நாடனின் படைப்புகள்

அனைத்திலும் படித்த இளைஞர்கள் வேலை வாய்ப்பிற்காக அலைந்து திரிவது பதிவு செய்யப்பட்டுள்ளது. படித்த இளைஞர்கள் வேலையற்றச் சூழ்நிலையில் ஊரில் சுற்றி அலைவதும் ஏதாகிலும் வேலைவாய்ப்பிற்காக கடிதம் வருமா? என்று தபால்காரர்களை எதிர்ப்பார்ப்பதும் தேநீர் கடைகளில் தேநீர் குடித்து செய்தித்தாள் படித்து அரசியல் படிப்பதும் அவர்களின் வாழ்வியல் கூறுகளாக அமைகின்றன. 'மிதவை' புதினத்தில் சண்முகம் என்னும் இளைஞர் வாயிலாகக் கதையை எடுத்துரைக்கிறார், நாஞ்சில் நாடன் ஒரு நாளினைப் கழிப்பதற்கு அந்த ஊரில் இளைஞர்களுக்கு மூன்று வழிகள் இருந்தன. ஒன்று திருஞானத்தின் தேநீர் கடை, அடுத்தது தமிழர் நூல் நிலையம்.

> **"திருஞானத்தின் சுக்குக் காப்பிக்கடை, கையில் பத்துகாசு இருந்தால் ஒரு பருப்பு வடையும் தின்று சுக்குக் காப்பியும் குடித்த பின்பு இரண்டரை மணி நேரம் உட்கார்ந்து இருக்கலாம். அப்படி ஹரிபிரியாக வியாபாரம் இல்லையாதலால் அங்கே உட்கார்ந்து இடப்பதைத் திருஞானம் பொருட்படுத்துவது கிடையாது. மேலும் கடைக்காரரும் எம்.ஜி.ஆர் ரசிகர். எனவே பேசுவதற்கு நிறைய விஷயங்கள் இருந்தன. இருவருக்கும் ஒத்த சினிமா கொள்கையும் அது சார்ந்த அரசியல் கொள்கை இருந்தால் சுமார் மூன்று, நான்கு ரூபாய் வரையிலும் கடன் வைக்கலாம்."**[28]

என அவ்வூர் இளைஞர்கள் திருஞானத்தின் தேநீர் கடையில் நேரத்தைக் போக்குவதையும் பொருளியல் சூழலில் இன்னல் ஏற்பட்டால் கடன் வைத்துத் தேநீர் குடித்து நேரம் கழித்ததையும் இயல்பாகப் பதிவு செய்கிறார். மேலும் தமிழர் நூல்நிலையத்தில் கிடைக்கும் நாளிதழ்களும் வார இதழ்களும் அவர்களுக்குப் பொழுதைப் போக்க உதவுகின்றன என்பதை எடுத்துரைக்கின்றார். இவ்வாறுதான் சண்முகத்தின் பொழுது கழிகிறது. வீட்டிற்குள் நுழைந்தால் அப்பா, அம்மாவின் ஏச்சும் பேச்சும் தாங்கிக் கொள்ள முடியாததாக இருந்தது.

> **"அப்பா எப்போதும் குறைந்த பார்வை. அம்மாவுக்கானால் எந்த நேரமும் புறுபுறுப்பு. சோப்பு வாங்க நாலனா கேட்டுவிடப்படாது. போச்சு "இங்க என்ன கெட்டியா வச்சிருக்கு? இல்ல பாட்டனாரு சேத்து வச்ச சொத்து கிடக்கா?**

**தடிமாடு கணக்கா வளந்திருக்கான். ஒரு வேலையைக் கத்துகிட்டு போகத்துப்பிலே. தெருவை அளந்துகிட்டு நடக்கான் மிதவை''[29]**

என்று தினமும் இதைப் போன்றதொரு ஏளனப் பேச்சுக்களை வாங்க வேண்டியதாக இருந்தது. சண்முகத்தின் இத்தகைய வாழ்க்கையின் மூலம் எண்ணற்ற படித்த இளைஞர்களின் உள்ளக்குமுறலை நாஞ்சில் நாடன் உணர்த்திச் சொல்கிறார்.

''என்பிலதனை வெயில் காயும்' புதினத்தில் சுடலையாண்டியும் பட்டம் பெற்று வேலை கிடைக்காத இளைஞனாக வலம் வருகிறான். படித்த படிப்பிறகு வேலை கிடைக்காத சூழ்நிலையில் கிழங்கு வியாபாரம் செய்து பிழைக்க வழிதேடலாம் என்று நினைக்கிறான். அதற்கு முதலீடு செய்ய பணம் கிடைக்காமல், பள்ளி இறுதி வகுப்பில் முதல் மாணவனாகத் தேர்ச்சிப் பெற்றதற்காகக் கிடைத்த தங்க மெடலை விற்பதென முடிவு செய்கிறான். தாத்தாவிற்குத் தெரிந்தால் கோபப்படுவார்களே என்று பயந்து,

**''தாத்தா எங்கோ வெளியே போயிருந்தபோது, ஆத்தா அவர்களையும் கஞ்சி வைத்துக் கொண்டிருக்கையில் கள்ளத்தனமாக பூட்டில்லாத அந்த அலமாரியைத் திறந்து, பெட்டியைத் திறந்து மெடலை எடுத்துப் பத்திரப்படுத்தி, குளித்து உடைமாற்றி கஞ்சி குடித்து, யாரையோ அவசரமாய் பார்க்கப் போவதாகப் பாவனை ஏற்படுத்தி.... பல்கலைக்கழகப் பட்டங்களைப் கூடத்தாளில் அச்சிடாமல் தாமிரத்தகட்டில் பொறித்துத் தந்தால் உபயோகமாக இருக்குமோ?[30]**

என்று நினைக்கும் வகையில் இளைஞர்களின் வாழ்வியல் இருப்பதை உணர்த்துகிறார். இந்த ஊரில் பெரியாரின் தொண்டராக வலம் வரும் மாடசாமியிடம் வேலைக்காக வேண்டி நின்றான் சண்முகம். அந்த ஊரின் ஒன்றியத் தலைவர் மாடசாமியுடன் பயின்றவர் என்ற உரிமையோடு அவரிடம் வேலைக்குச் சிபாரிசு செய்யுமாறு கேட்டான் சண்முகம்.

**''தோவானை பஞ்சாயத்து ஒன்றியத்தில் தற்காலிக வேலை ஒன்று – காலியாயிற்று. யாரோ மகப்பேறு விடுமுறையில் போகிறார்களாம். இரண்டு மாத வேலை என்றாலும் ஆறு மாதங்கள் வரை நீடிக்கும். என்றார்கள்.**

**சுமார் ஐந்நூற்று அறுபது ரூபாய் சம்பளம் கிடைக்கும். அந்தத் தாலுக்கா பூராவும் வேலையில்லாதவன் பேச்சாக இதுவே இருந்தது. எம்.எல்.ஏ.மூலமும் மற்றப் பிரமுகர் மூலமும் பலபேர் முயற்சி செய்வதாகத் தெரிந்தது''[31]**

இவ்வாறு வேலைத்தேடி அலையும் இளைஞர்கள் கூட்டம் அந்தப் பகுதியில் மிகுதியாக இருந்தது. சண்முகம் எங்கு தேடியும் வேலை கிடைக்காததால் அப்பாவிற்குத் தெரிந்தவராக ஒரு பார்ப்பனரின் உதவியோடு பம்பாயில் வேலை தேடிப் புறப்பட்டான். சண்முகத்தின் அப்பா அந்தப் பார்ப்பனரின் விளைநிலங்களைப் பராமரித்து வருபவர். அவருக்குச் சமமான வயதுடையவர் வந்தார். அவர் பார்ப்பனர் என்றாலும் அவரை சாமி என்றே அழைப்பதாக நாஞ்சில் நாடன் பதிவு செய்கிறார். இதன் மூலம் நாஞ்சில் நாடன் இங்கே உணர்த்த விரும்புவது என்ன? என்பதை தெரிந்துகொள்ள முயலவில்லை. அவரிடம் தன் மகனை அறிமுகப்படுத்தும் போது, அந்தப் பார்ப்பான் கேட்கிறான்.

**''ராமசாமி இரு யாருடா? உம் மகனா? என்னலே படிச்சிருக்கே? என்று கேட்க அதற்கு சண்முகம், / பி.ஏ., சாமி என்று அப்பாவின் மொழியை அப்படியே கடன்பொற்று மொழிகிறான். அதற்கு அந்தப் பார்ப்பனர் / ''எப்பப் பாசானே? என்று வினவ / ''சிக்ஸ்டி எய்ட்டிலே'' / என்று பதிலளிக்கிறான் சண்முகம். / உடனே சண்முகத்தின் தந்தை, ''அவனுக்குத்தான் ஒரு வேலை வாங்கிக் குடுங்க சாமி. இங்க எல்லாம் முயற்சிசெய்து பாத்தாச்சு'' / என்று புலம்புகிறான். அதற்கு அந்தப் பார்ப்பனர், ''மூன்று வருஷமா என்னடா செய்தாய்? எனக்கு ஒரு லட்டர் எழுதப்படாதாடா? ஏண்ட உனக்கெல்லாம் புத்தி இருக்கிறதா? இந்த சூனாமானா ராஜ்ஜியத்திலே உனக்கும் எனக்கும் எவனடா வேலை குடுப்பான்?[32]**

என்று பதிலுரைக்கிறார். அறுபத்தெட்டில் திராவிட இயக்கம் தமிழகத்தில் ஆட்சியில் இருக்கிறது. அதற்கு முன்பு வரை பார்ப்பனர்களுக்கும் வேளாளர்களுக்கும்

வேலை சரளமாகக் கிடைத்தது போன்றும் திமுக ஆட்சிக்கு வந்த பிறகு இவர்களுக்குத் திட்டமிட்டே வேலை கொடுக்காமல் இருப்பதைப் போன்றும் அந்தப் பார்ப்பனர் பேசுகிறார். அந்தப் பார்பனரின் மூலமாக நாஞ்சில் நாடன் பேசுகிறார் என்பதே உண்மை. இது எந்த மாதிரியான அரசியல் பார்வை என்பதை உணர்ந்துகொள்ள முடிகிறது. திராவிட இயக்க எதிர்ப்பு அரசியலை இந்தப் புதினம் முழுவதும் முன்வைக்கிறார் நாஞ்சில் நாடன். இங்கே தமிழர்களுக்கு கல்வி, வேலைவாய்ப்பு தாராளமாகக் கிடைக்கப்பெற்றது திராவிட இயக்க ஆட்சியில்தான் என்பதை அறிவு நாணயமுள்ள எந்தத் தமிழரும் ஏற்றுக் கொள்வார்கள். அந்தப் பார்ப்பனர் மேலும் தொடர்கிறார்.

**“ஆகஸ்ட் பதினைந்துக்கு மேலே புறப்பட்டு வா. ரெண்டு சூட்டு ரெண்டு சட்டை. ரெண்டு மாசம் சாப்பாட்டுககு உள்ள பணம் ஒரு நானூறு ரூபாய்... அட்ரஸ் தந்து என்னைப் பாரு... நான் உன்னக்கூட வச்சுக்கிட முடியாது. யாராம் தெரிஞ்சவா இருக்காளாடா.. உங்க ஆள்ல மிதவை”**[33]

என்று வெளிப்படையாகவே தெரிவிக்கிறார். உடன் வைத்துக்கொள்ள முடியாததும் இரண்டு மாதமும் அவன் தன் சொந்த முயற்சியில் தங்கிக்கொள்ள வேண்டும் என்பதும் எந்த விதமான உதவி என்பதை உணர்ந்துகொள்ள வேண்டியுள்ளது

பல்கலைக்கழகம் வழங்கும் பட்டங்களும் தாள்களில் இல்லாமல் தங்கம், வெள்ளிபோன்ற உலோகங்களில் இருந்தால் நல்லது.அதனை விற்றாவது வாழ்க்கையை ஓட்டலாம் என்று நினைக்கும் சூழலில் நாடும் அரசாங்கங்களும் இருந்தன என்பதைப் பட்டவர்த்தனமாகப் படம்பிடிக்கிறது சுடலையாண்டியின் இதே வாழ்வியல் சூழல்.

**“படித்து முடித்த உடன் யாரும் தட்டில் பூ, பழம், தேங்காயோடு வேலையையும் வைத்து நீட்டப் போவதில்லை என்று சுடலையாண்டிக்குத் தெரியும். சன்னல் கம்பிகளை வருடிக்கொண்டு வானத்து நீல வெளியில் இருந்து இறங்கப் போகும் வானவர் வரவை எதிர்நோக்கும்**

**கழுகுகளைப்போல் ஒரு ஒற்றைக்கால் தவம் வாலிபவர்களுக்கு ஏற்பட்டு வருவதை அவன் உணர்ந்தான். ஆறு மாதம் ஓராண்டு, இரண்டாண்டு, அதற்கு மேலுமாக ஏக்க நீட்சிகள், முதல் வகுப்பில் சிறப்புடன் தேறிய எனக்கு எப்ப ஒரு வேலை கிடைக்கும் என்ற நம்பிக்கை வரவில்லை.”**[34]

என்று சுடலையாண்டி நம்பிக்கையோடு காலம் தள்ளுவதே இயல்பாகிப் போனது. ஆனாலும் அந்த நம்பிக்கை பொய்த்துப்போய் வாங்கிய மெடல்களை விற்று சராசரியாக கிழங்கு வியாபாரத்தில் ஈடுபடுவதுதான் ஒரு படித்த இளைஞனின் நிலையாக இருந்தது.

‘தலைகீழ் விகிதங்கள்’ புதினத்திலும் சிவதாணு வேலையில்லாத காரணத்தால் வீட்டோட மாப்பிள்ளையாகப் போகக் கட்டுப்பட்டான். இந்த வேலையில்லாத சூழல் இளைஞர்களை எந்த விதமாக சூழல்களுக்கெல்லாம் ஆளாக்குகிறது என்பதை இந்தப் புதினம் பதிவு செய்கிறது. வேலையில்லாத நிலையை உணர்ந்த ஒரு பணக்காரக் குடும்பம் சிவதாணுவை மாப்பிள்ளை பார்க்க வருகிறது. அந்தச் சூழலை சிவதாணு.

**“நம்மை விலை பேசுவதற்காக வந்த கூட்டம் இது’ என்று அவனுக்குள் புரிந்து போயிற்று. சந்தையில் மாடு பிடிக்க வருகிறவர்களைப் போல இப்போது இவர்கள் மாட்டைப் பார்த்து விட்டுப் போக வந்துள்ளார்கள். இனிமேல் தரகர்கள் மூலம் துவர்த்தினுள் கைபோட்டுப் பேரம் பேசுவார்கள். பேரம் படிந்தால் இந்த மாடு, அவற்றின் வீட்டுக் கிடாரியில் கழுத்தில் தாலிக் கயிற்றைக் கட்டும்”**[35]

என்று இந்தச் சூழல் விவரிக்கப்படுகிறது. வேலை இல்லாததால்தானே நமக்கு இந்த நிலை ஏற்பட்டிருக்கிறது என உள்ளுக்குள் குமுறினாலும் அவனால் ஏதும் செய்ய இயலவில்லை.

**“இரண்டு வருடத்துக்கும் மேலாக முயற்சி செய்யத்தானே செய்கிறேன். வேலை கிடைப்பதற்கான அறிகுறியே தென்பட வில்லையே! பணம்**

**இருந்தால் – ஆமாம் பணம் இருந்தால் ஒரு வேலையை விலைக்கு வாங்கிவிட முடியும். அது இல்லாதபோது"**[36]

என்று தவித்தான். சிவதாணுவின் இந்த நிலையும் எண்ணற்ற இளைஞர்களுக்கு நேர்ந்திருக்கிறது என்பதை புதினம் தெளிவுற பதிவு செய்கிறது. மேலும் அவன்,

**"கெப்ளரின் இயக்க விதிகளையும், சாஷி ரெய்மான் இண்ட்கிரல் சமன்பாடுகளையும் படித்தது காலைதோறும் புல்லறுக்கவா?**
**கார்ல் பியர்ஸன், ஃபிஷர் இவர்களுடைய டிஸ்ட்ரிபியூஷன் படித்ததெல்லாம் ஓரிணை ஏரைப் பிடித்து ஆடி உழுவதற்காகவா?**
**எலக்ட்ரானும், நியூட்ரானும் மாங்கு மாங்கென்று படித்து மூளையைக் கசக்கிப் பிழிந்ததெல்லாம் தளைகொத்தி வைப்பதற்காகவா?**
**முதற் சங்கத்தின் காலம் கே.என். சிவராஜ பிள்ளை சொல்லுகிறபடி இருந்தால் என்ன, சீனிவாச சாஸ்திரி சொல்லுகிறபடி இருந்தால் என்ன? வையாபுரியார் தொல்காப்பியத்தின் காலம் கி.பி. பதிமூன்றாம் நுற்றாண்டேதான் என்றாலும் எனக்கென்ன போங்க?**
**ஷெல்லியின் மேகமும் பைரனின் ஆழியும் ஹைட்ரஜனின் காளையும் விழுந்து விழுந்து படித்தது எட்டு மரக்கால் விதைப்பாட்டுக்கு எவ்வளவு வித்து வைத்தல் வேண்டும் என்று கணக்குப் பார்ப்பதற்கா?**
**மனோன்மணியமும் புறச்சேரி இறுத்த காதையும் குகப்படலமும் இரட்சணிய இடங்களில் யாத்திரிகரும் கிஸ்லியரும் மேக்பெத்தும் என் தலையில் ஏறி உட்கார்ந்துதான் ஆக வேண்டும் என்று என்ன கட்டாயம்"**[37]

என்று இதுநாள் வரையில் படித்துள்ள நூல்களையும் பட்டியலிட்டு மனம் நொந்து கொள்கிறான் சிவதாணு.

நாஞ்சில் நாடனின் புதினங்களில் வாழ்வியலும் வாழ்வியலுக் கிடையிலான போராட்டங்களும் உண்மை நிகழ்வுகளாகப் பதிவு செய்யப்பட்டுள்ளன. நாஞ்சில் நாட்டு

மக்களில் பண்பாட்டுக்கூறுகளும் வாழ்வியல் முறைகளும் புனைவில்லாமல் பதிவு செய்யப்பட்டுள்ளது. ஆனாலும் 'எட்டுத்திக்கும் மதயானை' போன்ற புதினங்களில் புனைவின் ஊடாக பூலிங்கம் என்ற இளைஞரின் வாழ்வில் நடைபெறும் நிகழ்வுகள் இடம்பெற்றுள்ளன. பூலிங்கம் ஊரில் தனக்கு ஏற்பட்ட கசப்பான நிகழ்வின் வெளிப்பாடாக என்பவரின் வைக்கோல் போரை கொளுத்திச் சாம்பலாக்கிவிட்டு, ஊரிலிருந்து தப்பி ஓடிவந்து விடுகிறார். ஓர் இளைஞர் வாழ்வில் இதைப்போன்றதொரு நிகழ்வு நடக்கமேயானால் அவர் தன் வாழ்நாளில் எவையெல்லாம் எதிர்கொள்ள வேண்டுமென்ற எண்ணத்தினை எடுத்துரைத்தார். ஊரை விட்டு ஓடிவந்த பூலிங்கம் குளிப்பதற்கக் கூட இடமில்லாமல் தவித்த தவிப்பினை புதினம் இயல்பாக வெளிப்படுத்துகிறது.

> **"குறையாகப் பல்தேய்த்து மூன்று நாட்கள் ஆயின. கல்லிடுக்கில் வளர்ந்து நின்ற வேப்பங்கன்றின் கிளை ஒடிந்து மென்று பல் துலக்க ஆரம்பித்தான். ஈறுகள் கிழிந்து வலித்தன. கசப்பு அடி நாக்கில் ஆத்திரத்துடன் பரவியது. வேப்பங்குச்சியை வகிர்ந்து நாக்கு வழித்தான். படிக்கட்டில் இறங்கி நின்று கொண்டு சட்டையை, பனியனை, கர்ச்சிப்பை நனைத்து, வாங்கி வந்திருந்த சோப்புக் கட்டித் துண்டால் தேய்க்க ஆரம்பித்தான். கால்களை இலேசாகப் மறித்து வெள்ளப் பேண்டை அவிழ்த்து சோப்புப் போட்டான். வெறும் ஜட்டியுடன் நிற்பது கூச்சமாக இருந்தது. ஒரு துண்டாவது வாங்கி இருக்கலாம் எனத் தோன்றியது. கும்மித் துவைத்து, நன்றாக அலசிப் பிழிந்து காயப் போட்டான். காற்றுப் பறக்காமல் கல் வைத்தான்.**[38]

என்று ஓர்இளைஞன் புலம் பெயர்ந்து தன் வாழ்க்கையைத் தொடங்கும் போது எந்த மாதிரியான இன்னல்களைத் தாங்க வேண்டுமென்ற நிலையை இந்நிகழ்வு உணர்த்தி நிற்கிறது.

வாழ்வில் எத்தகைய சூழ்நிலையில் வந்தாலும் மனநிம்மதியில்லாமல் நிறைவெய்தாத ஒரு வாழ்க்கையைத்தான் மக்கள் வாழ்கிறார்கள் என்ற கருத்தை புதினம் முன்வைக்கின்றது.

ஊரைவிட்டு ஓடிவந்த பூலிங்கம் படுப்பதற்கு இடம் கிடைக்காமல் நடைமேடையில் படுத்துறங்கலாம் என்று எண்ணும்போது அல்லது மக்கள் குவிந்து உறங்கிக் கொண்டிருப்பதை பார்க்கிறான். மக்களின் வாழ்வில் பயணமும் பாதை உறக்கமும் தவிர்க்க முடியாததாக இருப்பதைக் கண்டுணர்கிறான்.

> **“அந்த நேரத்திலுங்கூட உறங்கிக் கொண்டிருந்தனர் சிலர். பல பஸ்கள் உறக்கத்திற்காகவே ஏற்பட்டவை போல, அல்லது அலுப்பு காரணமாக இருக்கலாம். வேலை செய்த உடல் அலுப்பு. ஓடியோடிக் களைத்த அலுப்பு. நெடுங்காலம் வாழ்ந்த அலுப்பு. என்ன வாழ்ந்து என்ன சாதித்தோம் என்ற மனதில் அலுப்பு. ஆனாலும் யாருக்கும் எதுவும் அலுக்கவில்லை. உணவு அலுக்கவில்லை. உறவுகள் அலுக்கவில்லை. பணம் சேர்த்து அலுக்கவில்லை. செலவு செய்து அலுக்கவில்லை. உடலுறவு அலுக்கவில்லை. ஓய்வு அலுக்கவில்லை. உறவுகள் அலுக்க வில்லை. சச்சரவுகள், மனத்தாங்கள் அலுக்கவில்லை. யாருக்கம் எதுவும் நிறையவும் அலுக்கவில்லை. முன்னும் போகவிடாத, பின்னும் போடப்படாத, நின்ற பாவனையில் ஓடிக்கொண்டிருப்பதாகக் கற்பனை செய்து கொள்ளும் சுய நிந்திப்புக்கு உள்ளான வாழ்க்கை”[39]**

என மக்கள் தங்கள் கதைகளை நிறைவேற்றிக்கொள்ள இடையறாது ஓடிக்கொண்டேயிருக்கிறார்கள். வாழ்க்கை முழுவதிலும் எதிலும் நிறைவெய்த முடியாமல் அதனை நிறைவேற்றிக் கொள்ளவதிலேயே வாழ்க்கையைத் தொலைத்து விடுகிறார்கள். வாழ்வில் எதிலும் நிறைவு ஏற்படவில்லையானால் வாழ்க்கை முழுவதிலுமே இவர்களுக்கு அது கிடைக்கப் போவதில்லை என்பதை இதன்முலம் எடுத்துரைக்கிறார்.

**குயவர் வாழ்க்கை**

பூலிங்கம் ஊரைவிட்டு ஓடிவந்த பிறகு தன் தாய் தந்தையாரைப் பற்றி நினைத்துப் பார்க்கின்றான். ஊரில் சட்டி, மண் பாண்டம் செய்து விற்பனை

செய்துபிழைக்கும் அவர்களின் வாழ்வில் எந்த மறுமலர்ச்சியும் ஏற்படப் போவதில்லை என்பதை நினைத்துப் பார்க்கிறான்.

> **“அம்மாவும் அப்பாவும் ஒரு வகையில் தேற்றிக் கொண்டிருப்பார்கள். நபன் குளத்துக் களிமண், புலியூர்க் குறிஞ்சிக் குளத்தங்கரையின் குருமண், போனாவூர்செம்மண் என்று தலைச்சுமடு வழக்கம்போல் அழுத்த ஆரம்பித்திருக்கும்”**[40]

என்று அப்பா, அம்மாவின் வாழ்க்கைச் சூழலை எண்ணி துயறமுறுகிறான். உழைக்கும் பாட்டாளி மக்களின் வாழ்க்கை என்பது எந்நாளும் மாறப்போவதில்லை என்பதை அவன் நினைத்துப் பார்க்கிறான். வீட்டை விட்டு ஓடிவந்த பிறகு பூலிங்கம் கர்நாடக மாநிலத்தில் ஒரு சேட்டின் பழக்கடையில் வேலைக்குச் சேர்கிறான். அந்தப் பழக்கடையில்

> **“அம்பாரமாய்க் குவிந்து கிடந்த ஆரஞ்சுகளை எண்ணிக் கூடைகளில் போட்டுக்கொண்டிருந்தான் ஒருவன். வைக்கோல் பரத்திய கூடைகளில் நான்கு டஜன்களாக அடுக்க ஆரம்பித்தான். சணல் கயிறு போட்டு மூடி பொருந்திய கூடைகளைக் கட்டினான். தள்ளு வண்டிக்காரர் ஒருவனுக்கு நானூறு பழங்களை எண்ணிப் போடச் சொன்னார் சேட். சின்னதும் பெரியதும் பச்சையும் பரந்ததுமாக உடைந்தவற்றை மாத்திரம் ஓரத்தில்போடச் சென்னார். ஐம்பது ஐம்பதாகக் கூடையில் எண்ணி வண்டியில் கொட்டிக் கொண்டிருந்தான்.”**[41]

இவ்வாறு பழக்கடையில் சேர்ந்து பணி செய்யும் அவன் வாழ்வின் சூழல் அவனை மாற்றி வைத்தது. அந்தப் பழக்கடையில் நடைபெறும் நிகழ்வுகள் பல்வேறுபட்ட மக்களின் வாழ்க்கையை எடுத்தியம்பு வனவாக இருந்தன. அந்த நிகழ்வுகள் அவர்களின் வாழ்க்கைச்சூழல், நிலை, பொருளியல் சிக்கல் என அனைத்தையும் வெளிக்காட்டுவனவாக இருந்தன. நாஞ்சில் நாடன் இந்தப் புதினத்தில், ஓர் இளைஞனின் வாழ்வில் இத்தகையச் சூழல் ஏற்பட்டால் அவன் எந்த

மாதிரியான பின்விளைவுகளை எல்லாம் சந்திக்க நேரிடும் என்பதை எடுத்து எச்சரிக்கிறார்.

**பூலிங்கத்தின் இந்தக் கால வாழ்வியல்**

பூலிங்கம் மண்பானை செய்து பிழைக்கும் சாதாரணச் சூழலில் பிறந்தவன். உடன் பயிலும் செண்பகம் ஊர்ப் பெரியவர், உயர் சாதியில் பிறந்தவரான தெய்வநாயகம் பிள்ளையின் ஒரே மகள். சில சமயங்களில் அவளுடன் பூலிங்கம் பேசுவதைத் தவறாகப் புரிந்து கொண்ட அவன் உறவினர்களும் அவனைத் தாக்க பலமாக காயங்களும் ஏற்படுகின்றன. எந்தத் தொடர்பும் இல்லாமல் தன்னைத் தாக்கியவர்களுக்குப் பாடம் கற்பிக்க வேண்டும் என்று எண்ணுகிறான். அதனால் அவன் தெய்வாநயகம் பிள்ளையின் வைக்கோல் போரை கொளுத்துகிறான். அந்தப் போரை அவன் கொளுத்த முயற்சிக்கும்போது நாஞ்சில் நாடன் ஊரில் நடைபெறும் பல்வேறு சம்பவங்களை அடுக்கிச் செல்கிறார். அவன் போரை கொளுத்த முயன்றபோது முப்பிடாரி அம்மனுக்கு தீபாராதனை நடைபெறுகிறது.

> **“இருள் சன்னஞ்சன்னமாக அடர்ந்து வந்தது. மாசி மாதம் காற்றுக்கு ஈரம் கிடையாது, தணுப்புக் கிடையாது. வேகம் கிடையாது. அன்று செவ்வாய்கிழமை முப்பாரி அம்மன் கோயிலில் வாரச்சிறப்பு. எட்டரை மணிக்கு மேல் தீபாராதனைக்கு மணி அடிப்பார்கள். ஏற்கனவே சிறுவர், சிறியோர் கோயில் வாசலில் கிளியாந்தட்டு மறித்துக் கொண்டோ, பாண்டி ஆறக்கொண்டோ சலம்பில் கிடந்தனர். சேண்டைமணி கேட்டதும் பெண்களும் ஆடவரும் கோயிலுக்கு நடந்தனர். மாசி செவ்வாய்கிழமை சிறப்புகளில் கோயிலில் புட்டுடன், சுண்டல் வகை எல்லாம் உண்டு. நடக்க முடியாத கிழடுகளையும் சமைந்த குமரிகளையும் வீட்டு விலக்கம் வந்த பெண்களையும் தவிர கோயில் மண்டபத்தினுள் ஆண் பெண் தனி வரிசைகளாகக் குவிந்து கிடந்தார்கள்.”**[42]

என்று அந்த ஊரின் புகழ்பெற்ற கோயிலும் அங்கு நடைபெறும் பூசையும் அந்தக் கோயிலுக்கு வரும் மக்களின் நிலையையும் நன்கு விவரிக்கப்படுகிறது.

அந்தக் கிராமத்து மக்களின் வாழ்க்கையோடு ஒன்றிப்போக முப்பிடாரி அம்மன் கோயில் வாரவாரம் மக்களின் ஆராதனைக்கு உட்படுகிறது என்பதை வெளிப்படுத்துகிறார். அந்த ஆராதனை நடைபெறும் நேரத்தில் காண்டாமணியும் ரெண்டையும் சேந்து முழங்கும் சந்நிதிகளில் தேவாரம் படித்து திருநீறு, களபம் வழங்கி, பிரசாதங்கள் வழங்கினர். இந்த நேரத்தில்தான் பூலிங்கம் தெய்வநாயகம் பிள்ளையின் வைக்கோல் போரைக் கொளுத்துகிறான் பூலிங்கத்தின் இந்தச் சொல் தெய்வநாயகம் கூட்டத்தினருக்கு தெரியவர அவன் அந்த ஊரை விட்டுக் கிளம்பினான். அந்த ஊரில் அவன் இருந்தால் பேராபத்து நிகழும் என்பதை அறிந்த அவன் எங்கு செல்வது என்று தெரியாமல் தொடர்வண்டியில் செல்லாமல் காற்றைப் போன்று ஓரிடத்தில் நில்லாமல் எங்கெங்கோ சுற்றித்திரிந்தான்.

நாஞ்சில்நாடனின் 'எட்டுத்திக்கும் மதயானை' இளைஞர்களுக்கு பல்வேறு படிப்பினை கற்றுத்தரக் கூடிய புதினமாகத் திகழ்கிறது. இளங்கன்று பயமறியாது என்ற வகையில் இளைஞர்கள் எதிர்வரும் பிரச்சினைகள் எதையும் கொள்ளாமல் அந்த நேரத்தில் மனது சொல்லும் முடிவுகளை எடுப்பதனால் வாழ்க்கையில் எந்த மாதிரியான எல்லைகளை எல்லாம் தொட வேண்டும் என்பதனை அறிவுறுத்தி நிற்கிறது.

**வாழ்க்கையும் பயணமும்**

நாஞ்சில் நாடன் புதினங்களில் பெரும்பான்மையும் பயணங்கள் இடம் பெற்றுள்ளன. பெரும்பாலான இளைஞர்கள் வேலை தேடிச் செல்வதாக அமைந்துள்ளன. 'சதுரங்கக் குதிரை', புதினத்தில் நாராயணன் மிதவை புதினத்தில் சண்முகம், 'தலைகீழ் விகிதங்கள்' புதினத்தில் சிவதாணு போன்றோர் வேலைக்காக ஊர்விட்டுஊர் சென்றுள்ளார்கள். இதில் சிவதாணு தமிழகத்தில் இருக்கின்ற நகரங்களுக்குள் பயணிக்க, நாராயணன் சண்முகம் போன்றோர் வட இந்தியாவிற்கு பயணம் செய்துள்ளனர். இத்தகைய பயணங்களின் மூலமாக பல்வேறு மக்களின் பண்பாடு, கலாச்சாரம், பழக்கவழக்கங்கள், உணவு, உடை போன்ற நடைமுறை பழக்கவழக்கம் மொழி, வாழ்வியல் முறை எனப் பல்வேறு வகைப்பட்ட வாழ்வியலை உணர்ந்து கொள்ளவும் உணர்த்தவும் வாய்ப்பாக அமைகின்றது,

நாராயணன் தாயின் இறப்பிற்கு வருகை தந்து மீண்டும் பம்பாய் புறப்படுகிறான். அந்தச் சூழல் அவன் வாழ்வியல் நிலையோடு நன்கு விவரிக்கப்படுகிறது. நாராயணன் வண்டியில் ஏறும்போது

> **“முழு வண்டியும் காலியாக இருந்தது. ஏர்–பேக்கையும் சூட்கேசையும் கால்களுக்கு அடியில் தள்ளிவிட்டு, தண்ணீர்பாட்டிலையும் சோற்றுப்பைகளையும் சாயாமல் வைத்துவிட்டு சன்னலோடு இருக்கையில் அமர்ந்தான். வண்டி நகர குத்தாலத்துககும் பால்ராஜுக்கும் கைகாட்டி விட்டு வெளியே பார்க்க ஆரம்பித்தான்.**
>
> **இனி வழிநெடுகத் திருவனந்தபுரம், கொல்லம், காலங்குளம், கோட்டாயம், எர்ணாகுளம் என்று வண்டி நிறைந்து நிறைந்து, பாலக்காட்டில் பொங்கி வழியும் இரண்டு பகல்களை பிரயாணத்தில் தாங்குவது என்பது லேசான காரியமில்லை குடும்பத்தோடு வருபவருக்கு அவரவர் காரியம் இருக்கும். குழுக்களாக வருபவர்கள் சீட்டுக் களிப்பார்கள்!”**[43]

என்று இயல்பாக ஒரு தொடர்வண்டி பயணம் பதிவாகிறது. வண்டி நகர ஆரம்பித்ததும், புகைப்பிடிப்பதும், பாடல்களை தாளால் தாளம் போடுவதும் எனப் பயணிகளின் குதூகலம் தொடங்கிவிடுகிறது. வழிநெடுகிலும் தொடர்வண்டி நிறுத்தங்களில் இறங்கித் தேநீர் குடிப்பதும் எனப் பயணங்கள் வாழ்வின் ஒரு கடனாகவே மாறிவிடுகின்றது. வெளிமாநிலங்களில் வேலை செய்பவர்களின் பாதி வாழ்க்கை இவ்வாறு பயணங்களிலேயே கழிந்து விடுகிறது. அதனை நாஞ்சில் நாடன் வாழ்வின் ஒரு கூறாகவே பதிவு செய்கிறார். அதைப்போன்றே மிதவையில் சண்முகம் வேலைதேடி பம்பாய் செல்கிறார். உள்ளூரின் வேலைதேடி அலுத்துப்போன அவன் பம்பாய்க்குச் செல்வதென முடிவெடுத்து தாதர் விரைவு வண்டியில் புறப்படுகிறான். சண்முகத்தின் பார்வையில் அவன் பயணத்தை விவரிக்கும்போது

> **“சென்னைக்கு வந்ததைப் போல இல்லாமல் கேள்விப்படாத பெயர்களாக நீங்கிக் கொண்டே போயின. அரக்கோணம், ரேணிகுண்டா, குண்டக்கல் என பெயர்ப்பலகைகளில் ஆங்கிலம், இந்தி, அந்தந்த மாநில மொழி என**

**தமிழ்போலவே ஆனால் வளைவுகள் பழக்கமில்லாத விதத்தில் கன்னடமாக இருக்கலாம். தெலுங்காக இருக்கலாம், சில பெயர்கள் விசித்திரமாகக் கூட இருந்தன.**

ஊர்கள் வேறுபட்டன, ஊரின் தன்மைகள், வீடுகளின் அமைப்புகள், கலப்பைகள், வண்டிகள், பெண்கள், ஆண்களின் முக அமைப்புகள் உடைவிதங்கள்.

**எட்டு முழ வேட்டியை முறுக்கி பிரிவனைபோல் தலைப்பாகை கட்டிக்கொண்டிருந்தனர். பெண்கள் முழங்கை வரை வெள்ளையாக வளையல்கள் அடுக்கிக் கொண்டிருந்தார்கள். காதுகளில் குலுங்கா வளையல்கள் போல வெள்ளியில் தொங்கின. முதுகுப்புறம் திறந்து முன்புறம் கண்ணாடிச் சில்லுகள் வைத்துத் தைத்த ரவிக்கைகள் அணிந்திருந்தனர்.”**[44]

என்று ‘மிதவை’ புதினத்தில் சண்முகம் என்னும் கதைமாந்தரின் வழியாகப் பயணங்களில் வரும் ஊர்களும் அந்தந்த ஊரின் மொழிகளும் அந்த ஊர் மக்களின் உணவு, உணவுப் பழக்கங்கள் என அனைத்தையும் பதிவு செய்கிறார். இந்தியா என்பது பல்வேறு மொழி பேசும் மக்களின் கூட்டுத் தேசமாகும். எனவே இதனை வரலாற்று அறிஞர்கள் தேசிய இனங்களின் ஒன்றியம் என வரையறுத்திருக்கிறார்கள். இதைப்போன்ற பயணங்களில் ஊடாக நாஞ்சில் நாடன் இந்தியாவின் பல்வேறுபட்ட பழக்கவழக்கங்களை, கலாச்சாரங்களை அறிமுகம் செய்கிறார்.

‘எட்டுத்திக்கும் மதயானை’ புதினத்தில் பூலிங்கத்தோடு பயணமே வாழ்க்கையாகிப் போனது. இதனை ஆந்திரா, பம்பாய் என்று பல நகரங்களுக்கும் பயணித்து அங்குள்ள மொழிகளும் பேசி, மக்களோடு பழகி அ;ஙகு கிடைக்கும் உணவு வகைகளை உண்டு வாழும் வாழ்க்கையை வாழ்கிறான்.

பூலிங்கம் ஊரைவிட்டு வந்த பிறகு எங்கே செல்வது, எப்படி வாழ்வது என்று கலங்கிய மனதுடன் தொடர்வண்டியில் பயணிக்கிறான். வண்டி தமிழ்நாட்டைத் தாண்டிய பிறகு மக்கள் என்ன மொழி பேசுகிறார்கள், யார் இவர்கள், எண்ணம்போல்

இவர்களோ! இவர்களைபோல் நானோ இல்லையே ஏன்? என்ற வினாக்களோடு பயணிக்கிறான்.

> **“தெலுங்கு தெலிசி லேது, இந்தியை அரக்கி என்று ஆரம்பப் பாடத்திலே துரத்திவிட்டார்கள். ஆங்கிலத்தில் முயற்சி செய்து பார்க்க வேண்டும். தனக்குத் தெரிந்த ஆங்கிலத்தில் அடுத்தவர்க்கும் புரியும் ஆங்கிலத்தில்”[45]**

என்று மொழி குறித்த சிந்தனையோடு அவன் அந்த ஊருக்குள் நுழைந்தான். ஒரே நாடு, ஒரே மொழி என்ற சொல்லாடல்கள் எல்லாம் வெற்றுக் கூச்சல்களாக இருக்குமே தவிர அப்படி ஒரு சூழல் இந்த ஒன்றியத்தில் ஏற்பட வாய்ப்பே இல்லை என்பதை புதினம் பல வகையிலும் முன்வைக்கிறது. கர்நாடகாவில் சிறிது நாட்கள் வாழ்ந்து முடிந்த பூலிங்கம் அங்கே நடைபெற்ற கசப்பான சில நிகழ்வுகளின் மூலமாக அங்கிருந்து இடம்பெற வேண்டிய சூழல் ஏற்பட்டது. மீண்டும் அவன் பயணம் தொடர்ந்தது.

> **“ரயில் பெட்டியில் அதிகக் கூட்டமில்லை. காய்ந்து போயிருந்த கன்னடக் கிராமத்தில் சனங்கள், தார் பாய்ச்சிய வேட்டிக் கட்டும் தலைப்பாகையும் செம்மண் நிறத்தில் இருந்தன. கிராமத்து மண் உடைகளில் வீசியது. எல்லா ஸ்டேஷனங்களிலும் நின்று எந்த அவசரமும் இன்றி பாசஞ்சர் போய்க் கொண்டிருந்தது. கை வசம் நிறையப் பணம் இருக்குமானால், இந்த தேசம் முழுவதும் பாசஞ்சர் ரயில்களில் ஏறிச் சுற்றி வரலாம்.**
>
> **தூரத்தையும் வேகத்தையும் கணக்கிட்டுப் பார்த்தால் உத்தேசமாக போய்ச் சேர மத்தியானம் மூன்று மணி ஆகும் போலிருக்கிறது. பம்பாய் நோக்கிப் போகும் பெருவழிப் பாதைகளின் நிலையங்கள் போலன்றி மிகவும் வறுமைப்பட்டுப் போனவயாக இருந்தன.”[46]**

என்று பூலிங்கத்தின் லோண்டா பயணமும் அதன் மூலம் கர்நாடக மாநிலத்தின் சிறிய ஊர்களும் இந்தப் புதினத்தின் மூலம் காணக்கிடைக்கிறது.

நாஞ்சில் நாடன் ‘எட்டுத்திக்கும் மதயானை’ புதினத்தில் பூலிங்கத்தின் வாயிலாக பல்வேறு மாநிலங்களுக்கும் படிப்பவர்களை அழைத்துச் செல்லும் புதிய உத்தியைக் கையாண்டுள்ளார். உலகின் அதிக மக்கள் தொகையைக் கொண்ட இரண்டாவது பெரிய நாடாக விளங்கும் இந்தியா பரந்துபட்ட நிலப்பரப்பை உடையதாக உள்ளது. அதன் அடையாளங்களை உணர்த்துகொள்ள, அந்தந்த மாநில மக்களின் வாழ்வியல் கூறுகளை அறிந்துகொள்ள இந்தப் புதினம் மிகுதியும் பயன்தரத் தக்கதாக உள்ளது.

# தொகுப்புரை

- ❖ மனித சமூகம் ஒருங்கிணைந்து வாழத்தொடங்கிய பிறகு தன் மகிழ்ச்சி, உள்ள எழுச்சியைக் கொண்டாடும் வகையில் பல்வேறு வகைப்பட்ட விழாக்களையும் பண்டிகைகளையும் சடங்குகளையும் பழக்க வழக்கங்களையும் ஏற்படுத்திக் கொண்டனர். அவை வாழ்வில் நீண்ட நெடுந்தூரம் பயணிக்கக்கூடிய வாழ்வியல் கூறுகளாக மனப்பதிவுகளாகப் பதிந்துபோயின.

- ❖ குடும்பம், கிராமம், நாடு என மக்கள் திரள் பரவலான போது இந்தப் பழக்கவழக்கங்களும் பண்டிகைகளும் சடங்குகளும் பரவலாயின. சடங்குகள் என்பது தனித்த குடும்பம் சார்ந்ததாகவும் விழாக்கள் பண்டிகைகள் என்பவை பொதுமை சார்ந்ததாகவும் வரையறுக்கப் பெற்றன. இவற்றுடன் தனிதனி வாழ்வும் அவன் எதிர்கொள்ளும் வாழ்வியற் கூறுகளாக இடம் பெற்றன.

- ❖ திருமணத்திற்கு முன்பு நடைபெறும் நிகழ்வாக வரவேற்பு நிகழ்வு உள்ளது. வரவேற்பு நிகழ்வு சிறப்பாக முடிந்தால் திருமணம் பெரும்பான்மையும் சிறப்பாக நடந்தேறியதாக இருக்கும். இந்த நிகழ்வில் உற்றார், உறவினர், சுற்றத்தினர், நண்பர்கள், உடன் பணிபுரிவோர் என அவைனரும் வருகை தந்து, அன்பின் வெளிப்படையாக பல பரிசுப் பொருட்களை வழங்கிவிட்டுச் செல்வார்கள். அந்த நிகழ்வில் அவரவர் தகுதிக்கு தக்கவாறு இசைநிகழ்சிகளும் பல்வேறு வகைப்பட்ட இலக்கியங்களின் சங்கமங்களும் இருக்கும். சிவதாணு, பார்வதி திருமண வரவேற்பில் தண்டபாணி தேசிகரின் தாமரைப் பூத்த தடாகமதில் பாடல் நாதசுரக் கலைஞரால் இனிமையாக இசைக்கப்பட்டது. இந்தப் பாடலின் மூலமாக (இசையும்) தமிழ் இனத்தின் மாண்பும் தமிழிசையின் பெருமையையும் எழுத்தாளர் நிலை நாட்டியுள்ளதை அறிய முடிகிறது.

- ❖ கிராமப்புறங்களில் கோவில் திருவிழா வெகு சிறப்பாகக் கொண்டாடப்படும். தமிழகத்தில் இருக்கும் கிராமங்களில் ஏராளமான குலசாமிகளும் அவற்றிற்கான திருவிழாக்களும் நடைபெற்று வருகின்றன. 'என்பிலதனை

வெயில் காயும்' புதினத்தில் சூரன்குளத்தில் நடைபெற்ற திருவிழாக்கள் குறித்து பதிவு செய்கிறார் நாஞ்சில் நாடன்.

- ❖ நாஞ்சில் நாட்டிற்கே உரிய பல பழக்கவழக்கங்கள் அனைத்தும் ஆசிரியரின் நாவலில் சுட்டப்பெறுகின்றன. தனித்துவமான சமூக நிகழ்வுகள் காட்டப்பட்டு பொதுவான தமிழர்களின் வாழ்வியல் சார்ந்த ஒழுக்கங்கள் பேனப்படவேண்டும் என்ற முனைவப்புடைய படைப்பாளியாக இணங்காணப்படுகிறார் நாஞ்சில் நாடண்.

# அடிக்குறிப்புகள்

1. ச.கனகலட்சுமி, தமிழர் வாழ்வியல், ப.50
2. மேலது, ப.51
3. நாஞ்சில் நாடன், தலைகீழ் விகிதங்கள், ப.86
4. மேலது, ப.86
5. பி.நசீம்தீன், இடுக்கி மாவட்ட பழங்குடி மக்களின் வழக்காற்றியல், ப.51
6. க.காந்தி, தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.18
7. நாஞ்சில் நாடன், தலைகீழ் விகிதங்கள், பக். 84,85.
8. மேலது, ப.88
9. நாஞ்சில் நாடன், என்பிலதனை வெயில்காயும், ப.6
10. மேலது, ப.8
11. மேலது, ப.70
12. மேலது, ப.78
13. மேலது, ப.114
14. மேலது, ப.115
15. மேலது, ப.115–116
16. க.காந்தி, தமிழில் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.13
17. நாஞ்சில் நாடன், மாமிசப் படைப்பு, பக்.38–39
18. மேலது, ப.39
19. நாஞ்சில் நாடன், மாமிசப்படைப்பு, ப.42
20. அ.நா.பெருமாள், நாட்டுப்புறவியல் சிந்தனைகள், ப.198
21. நாஞ்சில் நாடன், மாமிசப்படைப்பு, ப.75
22. மேலது, ப.120
23. மேலது, ப.121

24. மேலது, பக். 121–122

25. மேலது, ப.123

26. மேலது, ப.152

27. நாஞ்சில் நாடன், மாமிசப்படைப்பு, ப.136

28. நாஞ்சில் நாடன், மிதவை, ப.8

29. மேலது, ப.12

30. நாஞ்சில் நாடன், என்பிலதானை வெயில் காயும், ப.86

31. நாஞ்சில் நாடன், மிதவை, ப.39

32. மேலது, ப.43

33. மேலது, ப.44

34. நாஞ்சில் நாடன், என்பிலதனை வெயில் காயும், ப.181

35. நாஞ்சில் நாடன், தலைகீழ் விகிதங்கள், ப.13

36. மேலது, ப.21

37. மேலது, ப.21

38. நாஞ்சில் நாடன், எட்டுத்திக்கும் மதயானை, ப.34

39. மேலது, ப.37

40. மேலது, ப.45

41. மேலது, ப.54

42. மேலது, ப.1

43. நாஞ்சில் நாடன், சதுரங்கக் குதிரை, ப.84

44. நாஞ்சில் நாடன், மிதவை, ப.45

45. நாஞ்சில் நாடன், எட்டுத்திக்கும் மதயானை, ப.26

46. மேலது, ப.86

# முடிவுரை

- **'நாஞ்சில் நாடன் நாவல்கள் – மதிப்பீடு'** என்னும் தலைப்பில் ஆராயப்பட்ட இவ்வாய்வேட்டின் ஆய்வு முடிவுகள் தொகுநிலையில் ஆய்வு உலகின் அறிவுப்பார்வைக்கு பணிவுடன் முன்வைக்கப்படுகின்றன.

- நாஞ்சில் நாடன் அவர்கள் இயற்பெயர் மு.க.சுப்பிரமணியம் பிறந்த நாள் **31.12.1947** கிராமம் வீரநாரணமங்களம், கன்னியாக்குமரி மாவட்டம் சுதந்திரம் கிடைத்த அதேயாண்டில் படைப்பாளரின் பிறப்பும் அமைகிறது. சுதந்திரப்பறவையாக இந்தியாவின் பலப்பகுதிகளுக்கும் சென்று தன்கிராமத்தின் வேரினை மறக்காமல் நாவலில் இழையோடவிடும் பன்முகப்படைப்பு ஆளுமையாக இலக்கிய உலகில் அறியப்படுகிறார்.

- நாவல், சிறுகதை, கட்டுரை, கவிதை என இலக்கிய உலகில் தன் தனித்துவமான எழுத்து நடையால் ஒரு இலக்கிய வாசக வட்டத்தை தமிழ் சூழலில் ஏற்படுத்தி அழுத்தமான படைப்புக்களின் வழியாக பெரும்புகழ் பெற்றுள்ளார். ஐம்பது ஆண்டுகளுக்குமோலாக வற்றாத சிந்தனையோட்டம் இவர் எழுத்தில் காணக்கிடைக்கிறது.

- இன்றைய நாவல் என்னும் வடிவத்தில் அவர் படைத்த ஆறு நாவல்கள் **1.** தலைகீழ் விகிதங்கள், **2.** மாமிசைப்படைப்பு, **3.** மிதவை, **4.** சதுரங்கக் குதிரை, **5.** என்பிலதனை வெயில் காயும், **6.** எட்டுத்திக்கும் மதயானை இந்நாவல்களை ஆய்வுப்பொருளாக எடுத்துக்கொண்டு ஆய்ந்ததில் நாஞ்சில் நாடன் எழுத்துக்கள் தமிழ் சமூகத்தின் வரலாற்று ஆவணங்களுள் ஒன்றாக கருத்த தக்க நிலையில் எழுதப்பட்டுள்ளன. குறிப்பாக தமிழ் மண் தமிழர்களின் வாழ்வியல், சமூக பழக்கவழக்கங்கள், மனிதர்கள் சந்திக்க கூடிய சாதிய ஏற்றத்தாழ்வுகள், சமூக ஒழுங்குகள் போன்றவற்றை அழுத்தமாக பதிவுசெய்கிறார். எளிமையும், கருத்துச்செறிவும், அடர்த்தியான கதைஉள்ளடக்கமும் அதை வெளிப்படுத்தும் பாங்கும் கதாப்பாத்திரங்களை கட்டமைத்த திறனும், துணைமைமாந்தர்களை படைத்த முறையும் மிகச்சிறப்பாக நாவலுக்குரிய அனைத்து கட்டமைப்புகளும் இவரின் நாவல்களின் ஊடே பொருந்திப் போகிறது.

❖ நாஞ்சில் நாட்டுக் கலாச்சாரத்தில் பிறந்து, வளர்ந்து, அதன் வேரினை அறிந்தவர் கதாசிரியர், நாஞ்சில் நாடனின் படைப்புகள் எதார்த்தமாக அமைந்துள்ளன. நாஞ்சில் நாட்டு மண்ணையும் மக்களையும் அங்குள்ள சாதிச் பிரச்சினைகளையும் ஆசிரியர் துல்லியமாகப் படம்பிடித்துள்ளார். நாஞ்சில் நாட்டு மண்வாசனையோடு கூடிய வட்டார வழக்கையும் மரபையும் சடங்கு, சம்பிரதாயங்களையும் ஒவ்வொரு புதினத்திலும் விரிவாக ஆசிரியர் விளக்குகின்றார்.

❖ நாஞ்சில் நாடன் மண்ணில் விளையும் பயிர்களையும், பறவைகளையும், பூக்களையும் கூட விட்டு வைக்கவில்லை. நாஞ்சில் நாடன் படைப்புக்களில் மிகுதியும் வேளாளப் பிள்ளைமார்களின் பழக்கவழக்கங்கள் வெகுவாகப் பதிவு செய்யப்பட்டுள்ளன. அக்கலாச்சாரத்தோடு நாஞ்சில் நாடன் ஊறித் திளைத்திருப்பது அவரின் படைப்புகளில் தெரிய வருகின்றது. உளவியல் ரீதியாகவும், வட்டார மண்வழக்கோடும் ஆசிரியர் ஒவ்வொரு கதாப்பாத்திரங்களையும் படைத்துள்ளார்.

❖ வேலையின்றி அலையும் இளம் பட்டதாரிகளே கதையின் நாயகர்களாகப் படைக்கப்பட்டுள்ளார்கள். வாழ்க்கைத் தேவையும் வறுமையும் அவமானமும் பொருளதார நிர்பந்தங்களும் அக்கதாபாத்திரங்கள் மூலம் வெளிப்படையாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. **‘தலைகீழ் விகிதங்கள்’** என்ற புதினத்தில், கதாநாயகன் சிவதாணுவின் வாழ்வியல் போராட்டம் சித்தரிக்கப்பட்டுள்ளது. வேலையில்லாப் பட்டதாரியான சிவதாணு தனது தங்கையின் திருமணத்திற்காகவும், குடும்பச் சூழ்நிலைக்காகவும் வீட்டோட மாப்பிள்ளையாகப் போய்விடுகிறான். வீட்டு வேலைகளைக் கவனிக்கத் தனக்கொரு அடிமை வேண்டும் என நினைத்தே சிவதாணுவின் மாமனார். அவனை வீட்டோட மாப்பிள்ளையாக ஏற்றுக் கொள்கிறார். சிவதாணு பணக்கார இடத்தில் மாப்பிள்ளையாகி, அவமானப்படுவதை ஆசிரியர் துல்லியமாக விளக்குகிறார். மாமனாரும் மனைவியுமே தன்னைக் கேவலமாக நினைப்பதை எண்ணி சிவதாணு கூனிக் குறுகிப் போகிறான். பொருளாதார வசதி இல்லையெனில், எந்த இளைஞனும் எந்தச் சூழ்நிலையிலும் அவமானத்திற் குள்ளாவான் என்பதனை

ஆசிரியர் உணர்ச்சி பூர்வமாக எடுத்துரைக்கின்றார். இந்நாவலின் திரைக்கதை வடிவமே 'சொல்ல மறந்த கதை' சேரன் நடிப்பில் இயக்குநர் தங்கர் பச்சான் இயக்கத்தில் வெளிவந்து பெருவெற்றியை குவித்தது.

- நாவலின் இறுதியில் சிவதானு புழுவல்ல என்பதை நிருபிக்கிறான். உழைத்து உயர்நிலை எய்தி சமூகத்தில் சுயமரியாதை உடைய மனிதனாக உயர்கிறான். தன் நாவலின் இறுதியில் தன் நண்பன் திருமணத்திற்கு சென்ற போது தன் மனைவியும் மகளும் ஓடிவந்து காரினுல் ஏரி மூவரும் புதியவாழ்க்கைப் பயணத்தை தொடங்குகின்றனர். தம் மகள் மாதவியை வாரி அனைத்து முத்தமிட்டு, தன் மனைவி பார்வதியின் முதுகை ஆதரவாக பற்றி நல்வாழ்க்கை அமைந்த மகிழ்வோடு நிறைவடைகிறது.

- **'என்பிலதனை வெயில் காயும்'** என்ற புதினத்தில் சுடலையாண்டியின் அவமானத்தை எடுத்துரைக்கின்றார். சுடலையாண்டியின் தந்தை வேளாள குலமாகவும் அவன் தாய் ஈழவ குலமாகவும் இருந்ததால், சுடலையாண்டி பள்ளிப் பருவத்தில் இருந்து கடைசிவரை அவதூறுகளை ஏற்கவேண்டியுள்ளது. கீழ்ச்சாதி ரத்தம் எந்த விதத்தில் ஒருவனுக்கு இருப்பினும் அவனை இச்சமூகம் இழிவுபடுத்தும் என்று ஆசிரியர் ஆணித்தரமாக எடுத்துரைக்கின்றார்.

- சுடலையாண்டி நாவலின் இறுதிவரை வேலை தேடி அலையும் கதாப்பாத்திரமாக படைக்கப்பட்டிருந்தாலும் தான் காண்கின்ற அத்தனை மனிதமுகங்களில் எல்லாம் தன் அம்மாவின் சாயல் ஏதேனும் காணக்கிடைக்கிறதா என்று தேடுகின்றவனாகவும், உறவை நினைத்து ஏங்கும் நிலையிலேயே படைக்கப்பட்டுள்ள தன்மை நாவலை வாசிக்கும் அனைவரும் பிற மனிதர்களை நேசிக்கவேண்டும் என்பதை ஆசிரியர் வலியுறுத்துகிறார்.

- **'மாமிசப் படைப்பு'** புதினத்தில் கூலி விவசாயியான கந்தையாவிற்கும் நிலச்சுவான்தாரர்களான கங்காதரம் பிள்ளை, விக்கிரமசிங்கம் பிள்ளைக்கும் நடக்கும் போராட்டத்தை ஆசிரியர் எடுத்துரைக்கின்றார். பண்ணையார்களின் அதிகாரத்திற்கு முன்னால், கந்தையாவின் நியாயங்கள் எடுபடாமலேயே போய்விடுகின்றன என்று நாஞ்சில் நாடன் விவரிக்கின்றார். கந்தையா கதாப்பாத்திரம் இறுதியில் தன் வாழை தோட்டத்தில் திருட வந்தவனை பிடித்த

கொடுக்க முற்பட்டபோது பின்புறமிருந்து கத்தி முதுகில் இறங்கியது. சூலை பிடாரிக்கும், சந்தனமாரிக்கும் மாமிசப்படைப்பு போடும் பொழுது எழுந்த மணம் கோயில் முழுவதும் நிறைந்தது என துயரத்தில் முடிகிறது. முடிவில், கந்தையா நிலச்சுவான்தாரர்களின் சூழ்ச்சிக்கு இரையாகி இறந்து போகிறான். நிலச்சுவான்தாரர்களைத் எதிர்த்துத் தனிமனிதனாகப் போராடமல், மக்களின் எழுச்சியோடு போராடினால் மட்டுமே தீர்வு கிடைக்குமென்ற உண்மையை ஆசிரியர் வலியுறுத்துகின்றார்.

❖ '**மிதவை**' புதினத்தில் சண்முகம் வேலைதேடி மும்பைக்குச் சென்று அங்கேயும் பல்வேறு அனுபவங்களைப் பெற்று, ஊர் திரும்புகிறார். வேலையில்லாத இளைஞர்கள் வேலைக்குச் சென்ற போதும், வருமானம் பற்றாக் குறையாக இருப்பதால், தங்கள் வாழ்வில் நிம்மதியை இழக்கிறார்கள் என்று நாஞ்சில் நாடன் விவரிக்கின்றார். சண்முகம் கதாப்பாத்திரம் வழியாக நாஞ்சில்நாடன் உழைத்து வாங்கிய ஊதியத்தில் இருந்து பம்பாயில் இருந்து அம்மாவிற்கும் உறவுகளுக்கும் துணிமணிகள், திண்பண்டங்கள் வாங்கிச் செல்வதில் தனிச் சுகம் இருக்கும் நிலையைக் காட்டுகிறார். வேறு மாநிலங்களுக்கும் சென்ற போதிலும் வாழ்க்கையின் பொருளாதாரப் பிரச்சினை தீர்வதில்லை என்பதனையே ஆசிரியர் கூறுகின்றார்.

❖ '**சதுரங்கக் குதிரை**' புதினத்திலும் கதாநாயகன் நாராயணன் வடஇந்தியாவில் வேலை செய்து, வாய்க்கும் வயிற்றுக்குமாக வாழ்க்கையினை ஓட்டவேண்டிய சூழல் நிலவுகிறது. வாழ்க்கைச் சூழலின் நெருக்கடியால் தனது தாயின் சவ அடக்கத்திற்குக் கூட அவனால் வர இயலாமல் போகின்றது என்ற அவலத்தை ஆசிரியர் பதிவு செய்கிறார். நாராயணன் வாழ்வில் ஏக்கங்களே மிஞ்சின. ஏதோ ஆனாலும் ஏதோ ஒருவகையில் நல்வாழ்க்கை அமையும் என்ற நம்பிக்கையில் வாழ்க்கை நகர்த்தும் கதாப்பாத்திரமாக ஆசிரியர் படைத்துள்ளார்.

❖ '**எட்டுத்திக்கும் மதயானை**' புதினத்தில், கதாநாயகனாக வரும் பூலிங்கம் குயவர் குலத்தில் பிறந்தவனாகச் சித்தரிக்கப்படுகின்றான். செண்பகத்தை பூலிங்கத்தோடு தொடர்பு படுத்திப் பேசப்பட்டதால், பூலிங்கம் மும்பை செல்கிறான்.

முடிவில் செண்பகம் இல்லற வாழ்க்கைக்குத் தகுதி இல்லாத ஒருவனை மணந்து, தனது வாழ்வைப் பறிகொடுத்து முடிவில் பூலிங்கத்தோடு சேர்ந்து விடுவதாக ஆசிரியர் கூறுகின்றார்.

❖ ஆய்விற்கு உட்பட்ட ஆறு புதினங்களிலும் நாஞ்சில் நாட்டு மண்வாசனை பதிவு செய்யப்பட்டுள்ளது. சூழ்நிலை வருணனைகளும் சடங்கு, சம்பிரதாய வருணனைகளும் இயல்பாக அமைந்துள்ளன. கதைகளின் கதாநாயர்கள் அனைவரும் ஒரேவிதமாகவே சித்தரிக்கப்பட்டுள்ளனர். மேல் சாதிகாரர்களான வேளாளப் பிள்ளை மார்களின் ஆதிக்கமும் அடக்குமுறையும் தெளிவாகக் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. வேலை தேடி அலையும் இளைஞர்களின் அவலத்தையே பெரும்பாலும் ஆசிரியர் பதிவு செய்கின்றார். திராவிட இயக்கத்தையும் அதன் கொள்கைகளையும் நாஞ்சில் நாடன் தேவைப்படும் பொழுதெல்லாம் பயன்படுத்தியுள்ளார். இடதுசாரி சிந்தனைகளைக் கதையில் ஆங்காங்கே கூறுகிறார். வேலையில்லா இளைஞர்கள் எங்கோ சென்று வேலையைத் தேடிக் கொண்டாலும் அங்கும் நிம்மதியாக வாழ இயலவில்லை என்பதனையே எடுத்துரைக்கின்றார்.

❖ நாஞ்சில் நாடன் கதைகளில் வட்டார வழக்கும், நடைமுறை யதார்த்தங்களும், அம்மண்ணின் கலாச்சாரங்களும் நுட்பமாகப் பதிவு செய்யப்பட்டுள்ளன. பெண் கதாபாத்திரங்கள் சோகத்துடனும் அவலத்துடனுமே படைக்கப்பட்டுள்ளன. வாழ்க்கைப் பிரச்சினைகளிலும், பொருளாதாரச் சிக்கல்களிலும் பெண் கதாபாத்திரங்கள் தங்களைக் கரைத்துக் கொள்கிறார்கள். பண்ணையார்களின் அதிகாரமும் அத்துமீறலும் அடாவடித்தனமும் அப்பட்டமாக விவரிக்கப்பட்டுள்ளன. இதனை எதிர்கொள்ளும் கதாபாத்திரங்கள் அவர்களின் அட்டூழியங்களை எதிர்த்து வெல்லமுடியாதவர்களாகவே காட்டப்பெறுகின்றனர்.

❖ இச்சமூக அமைப்பில், வருண பேதமும் வர்க்க பேதமும் புரையோடிப் போயிருக்கின்றன என்பதனை ஆசிரியர் மறைவாகவே கூறியுள்ளார். வாழ்வியல் எதார்த்தங்களும் முரண்களும் தெளிவாக உணர்த்தப்பட்டிருப்பினும் அவலங்கள்

மட்டுமே எல்லாப் புதினங்களிலும் தேங்கி உள்ளன என்றே கூறவேண்டியுள்ளது. வட்டார வழக்கும் நாஞ்சில் நாட்டுக் கலாச்சாரமும் மலையாள நடைமுறையும் புதினங்களின் நிரம்பியுள்ளன.

❖ நாஞ்சில் நாட்டுக்கே உரிய மென்மையும் இயல்பும் புதினங்களில் அடிநாதமாக ஒலிக்கின்றன. நாஞ்சில் நாடனின் புதினங்கள் படிக்க வைக்கத் தூண்டுவன; உணர வைக்கத் தூண்டுவன. அதே வேளையில், அவரது புதினங்களில் அனைத்தும் எழுச்சியூட்டுபவையாக உள்ளன என்றே கூற வேண்டும். நாஞ்சில் நாடன் தனது புதினங்களில், சம்பவங்களை விவரிப்பதில் வல்லவராக உள்ளார். அவை காட்சி ஓட்டங்களை மனதில் பதிய வைக்கின்றன. வாழ்வியல் எதார்த்தக் கூறுகளையும், வட்டார மொழியையும் துல்லியமாகக் கையாள்கிறார். நாஞ்சில் நாடன் மும்பையில் நீண்ட காலம் வாழ்ந்ததால், அதன் பாதிப்புகள் புதினங்களில் வெளிப்படுகின்றன. வெளிமாநிலக் கலாச்சாரங்களும் பழக்கவழக்கங்களும் நன்கு விவரிக்கப்பட்டுள்ளன. நாஞ்சில் நாட்டு மண்ணையும், பண்பையும், மரபையும், தொன்மையையும் தனது எழுத்துக்களில் நாஞ்சில் நாடன் திறம்படக் கையாண்டுள்ளார்.

❖ நாஞ்சில் நாட்டில் நிகழ்ந்த வீரச் செயல்களையும் எழுச்சிகளையும் தமிழ்க் கலாச்சாரம் மாறாமல் பிரச்சினையை மையப்படுத்தி பெரும்பாலான புதினங்கள் அமைந்துள்ளன. இறுதியாக நாஞ்சில் நாடன் புதினங்கள் தமிழ்ச் சமூகத்திற்கு பல்வேறு வாழ்வியல் நெறிமுறைகளை உணர்த்தும் போக்கில் படைக்கப்பட்டுள்ளன. மனித மனங்களில் ஊறிக்கிடக்கும் அன்பு, பாசம், பிறர் துன்பம் போக்கல், எளியமனிதர்களின் உள்ள கிடக்கை, பணக்காரர்களின் சுயநலப்போக்கு, அதனால் ஏழைகள் அடையும் வேதனைகள், சமூக ஏற்றத்தாழ்வுகள், சாதியச்சிக்கல்கள் என வாழ்வின் அத்தனை பிரச்சனைகளையும் மையப்படுத்தி எழுதும் பாங்கின் வழியாக மனிதசமூகத்திற்கு கூறவிளைவது மனிதர்கள் பிரச்சனையைக் கண்டு விலகிச்செல்ல தேவையில்லை. வாழ்வின் எதார்த்தப்போக்கோடு அணுகினால் வெற்றி பெறலாம். ஒழுக்கமான நேர்கோடான வாழ்க்கையை அமைத்துக்கொண்டு மனிதன் வாழ்வதற்கான மன எழுர்ச்சியையும் ஊக்கத்தையும் நாஞ்சில்நடனின்

எழுத்துக்கள் சமூகத்திற்கு ஏற்படுத்தி உந்து சக்தியை அளிக்கின்றன என்பதை வாழ்வின் உண்மையாகும். இக்கருத்தை முன்வைத்து ஆய்வு நிறைபெறுகிறது.

**எதிர்கால ஆய்வுக்கலங்கள்**

1. நாஞ்சில் நாடன் புதினங்களில் நாஞ்சில் நாட்டின் பண்பாட்டுக்கூறுகள்
2. நாஞ்சில் நாடன் புதினங்களில் மொழி நடைத்திறனும், வட்டாரவழக்கும்
3. நாஞ்சில் நாட்டின் வேளாண் குடிமக்களின் வாழ்வியற் கூறுகள்

போன்ற தலைப்புக்களில் எதிர்காலத்தில் ஆராய்ச்சி மேற்கொள்ளலாம்.



# துணைநூற்பட்டியல்

## முதன்மை ஆதாரம்

1. **நாஞ்சில் நாடன்** — **தலைகீழ் விகிதங்கள்,**
விஜயா பதிப்பகம்,
கோயம்புத்தூர்,
ஆறாம் பதிப்பு, 2010.

2. **நாஞ்சில்ல நாடன்** — **என்பிலதனை வெயில் காயும்,**
விஜயா பதிப்பகம்,
கோயம்புத்தூர்,
மூன்றாம் பதிப்பு, 2007.

3. **நாஞ்சில் நாடன்** — **மாமிசப் படைப்பு,**
விஜயா பதிப்பகம்,
கோயம்புத்தூர்,
நான்காம் பதிப்பு – 2010.

4. **நாஞ்சில் நாடன்** — **மிதவை,**
விஜயா பதிப்பகம்,
கோயம்புத்தூர்,
மூன்றாம் பதிப்பு – 2008.

5. **நாஞ்சில் நாடன்** — **சதுரங்கக் குதிரை,**
விஜயா பதிப்பகம்,
கோயம்புத்தூர்,
நான்காம் பதிப்பு – 2005.

6. **நாஞ்சில் நாடன்** — **எட்டுத்திக்கும் மதயானை,**
விஜயா பதிப்பகம்,
கோயம்புத்தூர்,
நான்காம் பதிப்பு, 2015.

**துணைமை ஆதாரம்**

**அம்பேத்கர், பி.ஆர்.,** — **சாதியை அழித்தொழித்தல்,**
காலச்சுவடு பதிப்பகம்
நாகர்கோவில், 2016.

**இராமலிங்கம், மா.,** — **நாவல் இலக்கியம்,**
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை, 2014.

| | |
|---|---|
| **கனகலட்சுமி முனைவர் ச.,<br>இராசேந்திரன் முனைவர் இரா.,** | **தமிழர் வாழ்வியல்**<br>நந்தினி பதிப்பகம்,<br>சென்னை, 2011 |
| **காந்தி. க.,** | **தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்,**<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,<br>சென்னை, 1980. |
| **கீதா, கோ.வே.,** | **தமிழ் நாவல்கள் – ஓர் ஆறிமுகம்,**<br>அணியகம் வெளியீடு,<br>சென்னை, 1979. |
| **கைலாசபதி. க.,** | **தமிழ் நாவல் இலக்கியம்,**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி)<br>லிமிடெட்,<br>சென்னை, 1987. |
| **சக்திவேல். சு.,** | **நாட்டுப்புற இயல் ஆய்வு,**<br>மணிவாசகர் பதிப்பகம்,<br>சிதம்பரம், 1983. |
| **சுந்தரராஜன், பெ.கோ.,<br>சிவபாதசுந்தரம், சோ.,** | **தமிழ் நாவல் நூற்றாண்டு வரலாறும்**<br>வளர்ச்சியும்,<br>கிறிஸ்தவ இலக்கியச் சங்கம்,<br>சென்னை, 1977. |
| **ஞானசம்பந்தன். அ.ச.,** | **இலக்கியக்கலை** |
| **ஞானமூர்த்தி, தா.ஏ.,<br>மோகன், இரா.,** | **இலக்கியத்திறனாய்வியல்**<br>டாக்டர் மு.வ. வின் நாவல்கள்,<br>மணிவாசகர் நூலகம்,<br>சிதம்பரம், 1981. |
| **சோமசுந்தரம், ச.,** | **தமிழ் இலக்கியக் கொள்கைகள்,**<br>அணியகம்,<br>சென்னை, 1981. |
| **தோதாத்ரி, எஸ்.,** | **சோசலிச யதார்த்தவாதத்தின்,**<br>அடிப்படைகள் – ஓர் அறிமுகம்,<br>கியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிமிடெட்<br>சென்னை, 1984. |

| | |
|---|---|
| **டாக்டர் நசீம்தீன், பி.,** | **இடுக்கி மாவட்டப் பழங்குடி மக்களின் வழக்காற்றியல்,** அன்னம் (வி.உ), சிவகங்கை,1989. |
| **நடராசன், தி.சு.,** | **தமிழ் அழகியல்,** காலச்சுவடு பதிப்பகம், நாகர்கோவில், 2012. |
| **நாஞ்சில் நாடன்** | **பனுவல் போற்றுதும்,** தமிழினி, சென்னை, 2011. |
| **நாஞ்சில் நாடன்** | **நஞ்சென்றும் அமுதென்றும் ஒன்று தமிழினி** சென்னை, 2012. |
| **நாஞ்சில் நாடன்** | **காவலன் காவான் எனின் தமிழினி,** சென்னை, 2012. |
| **பச்சையப்பன் டாக்டர் ம.வீ** | **தமிழ் நாவல்களில் நனவோடைக் கோட்பாடுகள்,** அருவி பதிப்பகம், சென்னை, 1982. |
| **பஞ்சாங்கம், பேராசிரியர், க.,** | **கி. ராஜநாராயணனின் புனைகதைகளும் இயற்கையை எழுதுதலும்**, அன்னம், தஞ்சாவூர், 2012. |
| **பெருமாள் எஸ்.ஏ., (தொ.ஆ)** | **எஸ்.ராமகிருஷ்ணனின் எழுத்துலகம்,** உயிர்மை பதிப்பகம், சென்னை, 2011. |
| **மனோகரன்** | **எதார்த்தவாதம்,** தோப்பிலின் பிரதிகளுடான வரைவு புலம், சென்னை, 2010. |
| **முத்துச்சண்முகன் & பெரியகருப்பன். இராம.,** | **அகிலன் கருத்தரங்கம் ஆய்வுரைகள்** தமிழ்த்துறை, மதுரைப்பல்கலைக்கழகம், மதுரை, 1976. |

**பலசுப்பிரமணியன், முனைவர் இரா.,** **நாவல் கலையியல்,**
உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 2004.

. **வேங்கடாசலபதி, ஆ.இரா.,** **நாவலும் வாசிப்பும்,**
காலச்சுவடு பதிப்பகம்,
நாகர்கோவில், 2003.

**வீராசாமி. தா.வே.,** **தமிழ் நாவல் இயல்,**
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை, 1986.

**வீராசாமி. தா.வே.,** **தமிழில் சமூக நாவல்கள்,**
தமிழ்ப் புத்தகாலயம்,
சென்னை, 1978.

**ஜெகநாதன், கி.வா.,** **தமிழ் நாவலின் தோற்றமும் வளர்ச்சியும்,**
தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச்
சங்கம், சென்னை, 1972.

**ஜெயமோகன்** **பூக்கும் கருவேலம்,**
பூமணியின் புனைவுலகு,
விஷ்ணுபுரம் இலக்கியவட்டம்,
கோவை, 2011.

# நாஞ்சில் நாடன்

## வாழ்க்கைக் குறிப்பு

| | | |
|---|---|---|
| பெயர் | : | மு.க. சுப்பிரமணியம் (எ) நாஞ்சில் நாடன் |
| எழுதும் முறை | : | நாவல், சிறுகதை, கவிதை, கட்டுரை |
| பிறந்த நாள் | : | 31 டிசம்பர் 1947 |
| பிறந்த இடம் | : | வீரநாராயணமங்கலம்,<br>தாழக்குடி அஞ்சல், தோவாளை வட்டம்,<br>கன்னியாகுமரி மாவட்டம்,<br>தமிழ்நாடு –629 901. |
| முகவரி | : | நாஞ்சில் ஏஜென்சீஸ்<br>516, ஜீ.வி. ரெசிடென்சி சௌரிபாளையம் அஞ்சல்,<br>கோயம்புத்தூர் – 641 028. தமிழ்நாடு<br>போன் : 0422–2570241 மொபைல் 94430 57024 |

**நாவல்கள்**

1. தலைகீழ் விகிதங்கள்–1977, 1983, 1996, 2001, 2008
2. என்பிலதனை வெயில் காயும் – 1979, 1995, 2007
3. மாமிசப்படைப்பு –1981, 1999, 2006
4. மிதவை – 1986, 2002, 2008
5. சதுரங்கக் குதிரை – 1993, 1995, 1996, 2006
6. எட்டுத்திக்கும் மதயானை –1998, 1999, 2008

**சிறுகதைத் தொகுப்புகள்**

1. தெய்வங்கள் ஓநாய்கள் ஆடுகள் 1981
2. வாக்குப் பொறுக்கிகள் – 1985
3. உப்பு – 1990
4. பேய்க் கொட்டு – 1994, 1996
5. பிராந்து – 2002
6. நாஞ்சில் நாடன் கதைகள் (முழுத் தொகுப்பு) – 2004
7. சூடிய பூ சூடற்க –2007
8. முத்துக்கள் பத்து – 2007
9. கான் சாகிப் – 2010

**கவிதைகள்**

1. மண்ணுள்ளிப் பாம்பு 2001
2. பச்சை நாயகி – 2010

**கட்டுரைகள்**

1. நாஞ்சில் நாட்டு வெள்ளாளர் வாழ்க்கை – 2003, 2004, 2008
2. நஞ்சென்றும் அமுதென்றும் ஒன்று –2003, 2008
3. நதியின் பிழையன்று நறும்புனல் இன்மை – 2006
4. காவலன் களவான் எனின் – 2008
5. தீதும் நன்றும் – 2009
6. திகம்பரம் – 2010

**சிறுதைகள் இடம்பெற்ற தொகுப்புகள்**

| | | | |
|---|---|---|---|
| 1. | ஞாபகம், விரதம் | 1977 | இலக்கியச் சிந்தனை |
| 2. | தீர்வு, வாய் கசந்தது | 1978 | வானதி பதிப்பகம்,<br>சென்னை – 600017 |
| 3. | அற்ப ஜீவிகள், முரண்டு | 1980 | |
| 4. | புதிய தமிழ்ச் சிறுகதைகள்<br>ஒரு இந்நாட்டு மன்னர் | 1984 | நேஷனல் புக் டிரஸ்ட் இந்தியா<br>புதுதில்லி –110 016 |
| 5. | தீபம் கதைகள்<br>வாய் கசந்தது | 1983 | |
| 6. | ஒரு நூற்றாண்டுச்<br>சிறுகதைகள் | 1993 | கலைஞன் பதிப்பகம்<br>சென்னை 600 017 |
| 7. | சிறந்த தமிழச் சிறுகதைகள்<br>பிராந்து | 2000 | |
| 8. | கதை அரங்கம் | 1987 | மீனாட்சி புத்தக நிலையம்<br>மணிக்கதைகள், கரப்பு<br>மதுரை –625001 |
| 9. | புதிய பார்வை சிறுதைகள் | 1994 | புதிய பார்வை<br>சென்னை |
| 10. | நவீன தமிழ்ச் சிறுகதைகள்<br>ஒரு இந்நாட்டு மன்னர் | 2000 | சாகித்ய அகாதெமி<br>புதுதில்லி – 110001 |
| 11. | கடல் தந்த முத்துக்கள்<br>சைவமும் சாரைப் பாம்பும் | 2000 | கோமதி பதிப்பகம்<br>மதுரை – 625001 |
| 12. | நெஞ்சில் நிற்பவை<br>ஊதுபத்தி | 2002 | வானதி பதிப்பகம்,<br>சென்னை – 600017 |
| 13. | 20th Century<br>Tamil Short Stories<br>பேய்க்கொட்டு | 2002 | Natonal Book Trust India<br>New Delhi - 110016 |
| 14. | Anthology of Tamil<br>Short Stories<br>உடைப்பு | 2001 | French Institute<br>Ponndicherry |
| 15. | A place to live. Contemporary<br>Tamil Short Fieton<br>ஒரு இந்நாட்டு மன்னர் | 2004 | Únguin Books India Pvt. Ltd.<br>New Delhi - 110017 |

| | | | |
|---|---|---|---|
| 16. | Writers Workshop<br>ஒரு இந்நாட்டு மன்னர் | 1999 | East West Books P.Ltd.<br>Calcutta |
| 17. | Samakaleen<br>Bharathiya Sahitya<br>ஒரு இந்நாட்டு மன்னர் | 1998 | Sathiya Akademi<br>New Delhi - 110001. |
| 18. | சிறந்த சிறுகதைகள்<br>கிழிசல் | 1998 | கலைஞன் பதிப்பகம்,<br>சென்னை – 600017 |
| 19. | சிறுகதைத் தொகுப்பு<br>ஐந்தில் நான்கு | 1996 | தமிழ்த் துணைப்பாடநூல்,<br>மேல்நிலை இரண்டாம் ஆண்டு<br>தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம்<br>சென்னை–600006<br>(1996 முதல் 2004 வரை) |
| 20. | கதைக்கோவை<br>கிழிசல் | 2005 | துணைப்பாடம்<br>மேல்நிலை இரண்டாம் ஆண்டு<br>தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம்<br>சென்னை–600006. |
| 21. | சிறப்புச் சிறுகதைகள்<br>பின்பனிக்காலம் | 2007 | விகடன் பிரசுரம்<br>சென்னை–600002. |
| 22. | பரிவாரம்<br>ஊதுபத்தி | 1994 | அன்னை ராஜேஸ்வரி பதிப்பகம்,<br>சென்னை – 600011 |
| 23. | Contemporary Tamil Stories<br>கால்நடைகள்<br>கனகதண்டிகன் | 1988 | Writters Workshop<br>Calcutta |
| 24. | The Vision -More<br>Modern Tamil Stories<br>முரண்டு | 1996 | Writters Workshop<br>Calcutta |
| 25. | Modern Tamil Stories<br>விரதம் | 1991 | Writters Workshop<br>Calcutta |
| 26. | ஜூகல் பந்தி<br>பிணத்தின் முன்<br>அமர்ந்து<br>திருவாசகம் படித்தவர் | 2006 | வடக்குவாசல் வெளியீடு<br>புதுதில்லி – 110025 |
| 27. | மும்பய் சிறுகதைகள்<br>மொகித்தே | 2005 | ராஜம் வெளியீடு<br>சென்னை – 600014. |
| 28. | வானவில் கூட்டம்<br>உலகத் தமிழர் கதைகள்<br>மொகித்தே | 2007 | இருவாட்சி<br>சென்னை – 600011. |
| 29. | சொல்லில் அடங்காத<br>வாழ்க்கை<br>காலச்சுவடு சிறுகதைகள்<br>பிணத்தின் முன்அமர்ந்து<br>திருவாசகம் படித்தவர் | 2008 | காலச்சுவடு பதிப்பகம்,<br>நாகர்கோவில் – 629001 |

**கவிதைகள் இடம் பெற்ற தொகுப்புகள்**

| | | | |
|---|---|---|---|
| 1. | சிற்றகல்<br>மொழி | 2003 | அருந்ததி நிலையம்,<br>சென்னை – 600 017 |
| 2. | Tamil poetry Today<br>உயிர் | 2007 | International Institute of Tamil Studies<br>Chennai–600113. |

**கட்டுரைகள் இடம்பெற்ற தொகுப்புகள்**

| | | | |
|---|---|---|---|
| 1. | புதினப் பூக்களும்<br>எனது நாவல்களும்<br>வட்டார வழக்கும் | 1994 | கருத்தரங்கக் கட்டுரைகள்<br>திருவனந்தபுரம் தமிழ்ச்சங்கம்<br>திருவனந்புரம் –695002. |
| 2. | தமிழில்<br>சிறுபத்திரிகைகள்<br>காலச்சுவடு | 1998 | கருத்தரங்கக் கட்டுரைகள்<br>திருவனந்தபுரம் தமிழ்ச்சங்கம்<br>திருவனந்தபுரம் – 695002. |
| 3. | கடிகாரம் அமைதியாக<br>எண்ணிக்கொண்டிருக்கிறது<br>இற்று வீழ்கின்றன<br>வாகுவலயங்கள் | 2006 | உயிர்மை பதிப்பகம்<br>சென்னை–600018 |
| 4. | பிள்ளை கெடுத்தாள்<br>வினை<br>Should the author be killed? | 2006 | காலச்சுவடு பதிப்பகம்<br>நாகர்கோவில் –629001. |

**பரிசுகள்**

| | | | |
|---|---|---|---|
| 1. | தமிழ்நாடு அரசு பரிசு<br>தமிழ் வளர்ச்சித்துறை, சென்னை | : | 1993 ஆம் ஆண்டின் சிறந்த நாவல், முதல் பரிசு<br>சதுரங்கக்குதிரை |
| 2. | கஸ்தூரி சீனிவாசன் அறக்கட்டளை<br>கோவை | : | 1993 1994 ஆம் ஆண்டுக்கான சிறந்த தமிழ் நாவல்<br>சதுரங்கக்குதிரை |
| 3. | புதிய பார்வை – நீலமலைத் தமிழ்ச்சங்கம் பரிசு, சென்னை | : | 1993ன் சிறந்த நாவல்<br>சதுரங்கக்குதிரை |

| | | | |
|---|---|---|---|
| 4. | லில்லி தேவசிகாமணி<br>இலக்கியப்பரிசு, கோவை | : | 1994ன் சிறந்த சிறுகதைத் தொகுப்பு<br>பேய்க்கொட்டு |
| 5. | தெய்வத் தமிழ்மன்றம் பரிசு<br>மயிலாடுதுறை | : | 1986ன் சிறந்த நாவல்<br>மிதவை |
| 6. | பம்பாய்<br>தமிழ் எழுத்தாளர் சங்கம் பரிசு | : | 1986ன் சிறந்த நாவல்<br>மிதவை |
| 7. | கல்கத்தா தமிழ்மன்றம் பரிசு<br>கல்கத்தா | : | வெள்ளிவிழா சிறுகதைப் போட்டி,<br>முதல் பரிசு : 1977<br>தெய்வங்கள் ஓநாய்கள் ஆடுகள் |

8. மாதத்தின் சிறந்த சிறுகதை பரிசு :
1975 ஜூலை, இலக்கியச் சிந்தனை, சென்னை, விரதம்
1977 ஜூலை, இலக்கியச் சிந்தனை, சென்னை
வாய் கசந்தது, 1979 நவம்பர், இலக்கியச் சிந்தனை, சென்னைமுரண்டு

| | | | |
|---|---|---|---|
| 9. | அமுதன் அடிகள் இலக்கியப் பரிசு | : | 1999 ஆம் ஆண்டுக்கு வாழ்நாள்<br>இலக்கியச் சாதனை |
| 10. | தமிழ் இலக்கியத் தோட்டம் கனடா<br>உலகத் தமிழாசிரியர்கள்<br>நினைவுப்பரிசு | : | நதியின் பிழையன்று<br>நறும்புனல் இன்மை<br>புனைவு இலக்கியம் – 2017 |
| 11. | திருப்பூர் தமிழ்ச் சங்கம் | : | சிறந்த சிறுகதைத் தொகுப்பு –1994<br>பேய்க்கொட்டு |
| 12. | கண்ணதாசன் விருது | : | 2008 கண்ணதாசன் கழகம் |
| 13. | கலைமாமணி விருது | : | தமிழ்க அரசு –2009 |
| 14. | சாகித்திய அகாதெமி விருது | : | 2010 நடுவன் அரசு |

**பிற மொழிகளில் பெயர்க்கப்பெற்ற சிறுகதைகள், கவிதைகள், நாவல்**

## I. ஒரு இருநாட்டு மன்னர்

In English - ‘An Election in the Village’

A) Aside - December 1983
B) National Book Trust India, New Delhi -1984
(In all Indian Languages)
C) Penguin Books, 2004 -A Place to live - Contemporary Tamil Short Fiction.
D) Writters Workshop East West Books Pvt.Ltd. Calcutta - 1999
E) Samakaleen Barathiya Sathiya, Sahitya Akademi, New Delhi-1998.

2. நேர் விகிதம்

In Malayalam - சரிவிகிதம்

Youth Express - Malayalam Weekly -26th April 1983

3. விரதம்

In English -Vengeance

A) The illustrated Weekly of India -27th July 1996

B) Modern Tamil Stories, Published by writters Workshop, Calcutta-1991.

C) Express Week End 4th March - 1989.

4. முரண்டு

In English - Pride

A) The vision - More Modern Tamil Stories Published by Writters Workshop Calcutta-1986

B) Contemporary Tamil Stories Published by Writters Workshop Calcutta -1988

C) The Heritage - September -1998

5. கால்நடைகள் கனகதண்டிகள்

In English -Insolent Might

A) Contemporary Tamil Stories Published by Writters Workshop Calcutta -1988

B) Indian Literature May - June 1994.
Bi-Monthly Journal,Sathiya Academy
B-Monthly Journal, Sahitya Academy.

6. உயிர் துப்ப...(கவிதை)

A) The Mosaic
A Quarterly Bulletin of Indian Poetry in English (JAN-MAR 1997)

B) PratibaIndia
Journal of Indian Art, Culture & Literature Vol.XV No.3

7. உயிர் (கவிதை)

In English -The Life

A) Tamil Poetry Today
International Institute of Tamil Studies-2007

8. மிதவை (நாவல்)

பத்து இந்திய மொழிகளில் (அச்சில்)

National Book Trust, India.

9. பேய்கொட்டு

In English
20th Century Tamil Short Stories
National Book Trust, India 2002.

10. உடைப்பு

In French
Anthology of Tamil Short Stories
French Instiute of Pondicherry 2001.

11. பாம்பு

In Malayalam
Mathru Bhoomi, January 2004

12. கதை எழுதுவதன் கதை

In Malayalam
Mathru Bhoomi December 2006.

13. எட்டுதிக்கும் மதயானை

In English against all odds.

**பல்கலைக்கழகப் பாடத்திட்டங்களில் இடம்பெற்ற**

**நாவல்கள் – சிறுகதைத் தொகுப்புகள்**

**A. தலைகீழ்விகிதங்கள் –நாவல்**

1. தில்லிப் பல்கலைக்கழகம் – B.A.,
2. திருவேங்கடவன் பல்கலைக்கழகம் – B.Com.,
3. கேரளப் பல்கலைக்கழகம் – B.Com.,
4. மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம் – M.A.,
5. தியாகராஜா கல்லூரி, மதுரை – B.A., B.Sc.,

**B. என்பிலதானை வெயில் காயும் – நாவல்**

1. கேரளப் பல்கலைக்கழகம் – M.A.,
2. மதுரை காமராசர் பல்கலைக்கழகம் – M.A.,

**C. மாமிசப் படைப்பு**

1. கள்ளிக்கோட்டை பல்கலைக்கழகம் – B.A.,
2. தியாகராஜர் கல்லூரி, மதுரை – B.Sc.,

**D.. தெய்வங்கள் ஓநாய்கள் ஆடுகள்– சிறுகதைகள்**

1. கள்ளிக்கோட்டை பல்கலைக்கழகம் – B.A.,

**E. மிதவை – நாவல்**

1. பாரதியார் பல்கலைக்கழகம் – M.A.,
2. கள்ளிக்கோட்டை பல்கலைக்கழகம் – B.A.,

**F. உப்பு – சிறுகதைத் தொகுப்பு**

1. கேரளப் பல்கலைக்கழகம் – M.A.,
2. கள்ளிக்கோட்டை பல்கலைக்கழகம் – B.A.,

**G. சதுரங்கக் குதிரை – நாவல்**

1. கேரளப் பல்கலைக்கழகும் – M.A.,
2. கள்ளிக்கோட்டைப் பல்கலைக்கழகம் –
3. பாரதியார் பல்கலைக்கழகம் – B.A.,/B.Sc.,II Part

**H. பேய்க்கொட்டு –சிறுகதைத் தொகுப்பு**

1. மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம் – B.A.,
2. பாரதியார் பல்கலைக்கழகம் – M.A.,

**1 ஐந்தில் நான்கு – சிறுகதை**

சிறுகதைத் தொகுப்பு (தமிழ்த் துணைப்பாடநூல்)
மேல்நிலை இரண்டாம் ஆண்டு – பகுதி 1
தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம், சென்னை 1996 – 2004

**கிழிசல் – சிறுகதை மலர்கள்**

தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம், சென்னை 2005 – 2008
கதைக் கோவை, தமிழ்த் துணைப்பாடநூல்
மேல்நிலை இரண்டாம் ஆண்டு பகுதி 1

**நேர்காணல்**

| | |
|---|---|
| சுப மங்களா | – ஜூன் 1995 |
| சீர்வரிசை, பம்பாய் | – 1996 |
| போல்டு இந்தியா தமிழ் நியூஸ், பம்பாய் | – 30.04.1989 |
| இனிய உதயம் | – ஏப்ரல் 2005 |
| ஆனந்த விகடன் | – 23.01.2008 |
| தீராநதி | – ஏப்ரல் 2008 |
| அகில இந்திய வானொலி, கோவை | – 26.05.1999 |
| உலகத் தமிழ் இதழ் தொகுப்பு சிறப்பு மலர் | – 2002 |
| அகில இந்திய வானொலி திருவனந்தபுரம் | – 26.08.1997 |

**பங்கேற்றவை**

1. தமிழ்ச் சிறுகதை 'முரண்டு'
   அகில இந்திய தொலைக்காட்சி, சென்னை – 08.06.1993
2. எனது நாவல்களும் வட்டார வழக்கும் – கட்டுரை
   அகில இந்திய வானொலி திருவனந்தபுரம் – 10.10.1993
3. இலக்கியச் சாளரம் – இலக்கியத் திறனாய்வு மாறிவரும் போக்குகள்
   அகில இந்திய வானொலி, கோவை – 24.09.1995

4. நாவல் ஒலிபரப்பு – சதுரங்கக் குதிரை
   அகில இந்திய வானொலி, கோவை 1997
5. நாவல் ஒலிபரப்பு – எட்டுத்திக்கும் மதயானை
   அகில இந்திய வானொலி, கோவை 2005
6. சிறுகதை வாசிப்பு – காலக்கணக்கு
   சாகித்ய அகாதமி, சென்னை – 17.09.1996

**பங்கேற்ற கருத்தரங்குகள், விழாக்கள், வெளியீட்டு விழாக்கள், கட்டுகரை வாசித்த கருத்தரங்குகள் என பல பன்முகத்தன்மை**

**ஆராய்ச்சிப் பட்ட மாணவர் ஆய்வுகள்**

1. திரு. வல்சகுமார், M.Phil., – நாஞ்சில் நாடனின் வட்டார வழக்கு
2. திருமதி G. ராதாபாய், M.Phil., – நாஞ்சில் நாடனின் பெண்பால் பாத்திரங்கள்
3. திரு.ஆபத்துக் காத்தபிள்ளை M.Phil.,– நீல பத்மநாபன் – நாஞ்சில் நாடன் வட்டார வழக்கு ஒப்பாய்வு
4. திருமதி E. பகவதி Ph.D., – நாஞ்சில் நாட்டு எழுத்தாளர்களின் பாத்திரப் படைப்புகள்
5. திருமதி ஓமனா குமாரதாஸ் M.Phil., – நாஞ்சில் நாடனின் மூன்று நாவல்கள்
6. திரு. P.அலெக்சாண்டர், Ph.D., – நாஞ்சில் நாடனின் நான்கு நாவல்கள்
7. திரு அரங்கநாதன், M.Phil., – நாஞ்சில் நாடனின் நாவல் 'சதுரங்கக் குதிரை'
8. திரு.மணிக்குமார், Ph.D., – நாஞ்சில் நாடனின் சிறுகதைகள்
9. திருமதி தங்கமணி, ஞா.னு., – நாஞ்சில் நாடன் படைப்புகள்
10. நாஞ்சில் நாடன், Ph.D., – நாஞ்சில் நாடன் சிறுகதைகள்
11. திருமதி P.அருள், Ph.D., – நாஞ்சில் நாடன்
12. சாயிரா பானு, Ph.D., – நாவல்களில் நாஞ்சில் நாட்டு மக்கள், பாரதிதாசன் பல்ககைக்கழகம்
13. நாகராசன், Ph.D., – நாஞ்சில் நாடன் நாவல்களில் நயப்பியம் அண்ணாமலை பல்கலைக்கழகம்
14. ஆனந்தவள்ளி, Ph.D., – நாஞ்சில் நாடனின் படைப்புகளில் உளவியல் பார்வை பெரியார் பல்கலைக்கழகம்